بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

I. நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள்

II. ஈஸால் ஸவாப்

III. இஸ்லாத்தின் பார்வையில் நாளிதழ் செய்திகள்

IV. செயல்களும் அதன் விளைவுகளும்

வட அமெரிக்காவில் உள்ள சில சமூகங்கள் பாவத்திற்கு பரிகாரமாகவும்,பேரழிவுகளைத் தடுக்கவும் உண்ணாவிரதம் இருந்தன.
பெருவின் இன்காக்கள் மற்றும் மெக்சிகோவின் பூர்வீக அமெரிக்கர்கள் தங்கள் கடவுள்களை திருப்திப்படுத்த விரதங்களை அனுசரித்தனர்.
அசிரியர்கள் மற்றும் பாபிலோனியர்கள் போன்ற முன்னாள் நாடுகள் உண்ணாவிரதத்தை ஒரு தவம் என்று கருதினர்.

யூதர்கள் ஆண்டுதோறும் பாவ நிவாரண நாள் என்று உண்ணாவிரதத்தை சுத்திகரிப்பு மற்றும் தவம் செய்வதாகக் கடைப்பிடிக்கின்றனர் . இந்த நாளில் உணவு மற்றும் பானங்கள் அனுமதிக்கப்படாது.
முதல் இரண்டு நூற்றாண்டுகளில் ஆரம்பகால கிறிஸ்தவர்கள் , உண்ணாவிரதத்தை சுத்திகரிப்பு மற்றும் தவம் ஆகியவற்றுடன் தொடர்புபடுத்தினர்.
ஞானஸ்நானம் மற்றும் புனித ஒற்றுமைக்கான சடங்குகளைப் பெறுவதற்கும், பாதிரியார்களின் நியமனத்திற்காகவும் கிறிஸ்தவ தேவாலயம் உண்ணாவிரதத்தை தன்னார்வத் தயாரிப்பாகச் செய்தது. பின்னர், அவை கட்டாயமாக்கப்பட்டன மற்றும் பிற நாட்கள் பின்னர் சேர்க்கப்பட்டன.
நோன்பு 6 ஆம் நூற்றாண்டில் 40 நாட்களுக்கு விரிவாக்கப்பட்டது, அங்கு ஒவ்வொரு நாளும் ஒரு உணவு அனுமதிக்கப்பட்டது.

ஒவ்வொரு ஆண்டும் உலகம் முழுவதும் கோடிக்கணக்கான முஸ்லிம்கள் நோன்பு இருக்கின்றனர்.
நோன்பு இருக்கும் போது நம் உடலுக்கு என்னவெல்லாம் நிகழ்கின்றன என்பதை உடல் கூறு மருத்துவர்கள் கூறுவது:
எடுத்தவுடனே நம் உடலானது நோன்பு நிலைக்கு சென்றுவிடாது. கடைசியாக நாம் உண்ட உணவின் சத்துகளானது நம் உடலில் தங்கி இருக்கும். இது முதலில் உடல் இயக்கத்திற்கு உதவி புரியும்.
முதலில் நம் கல்லீரலில் சேமித்து வைக்கப்பட்ட குளுக்கோஸில் நம் உடல் இயங்கும். இந்த குளுக்கோஸ் தீர்ந்த பின், கொழுப்பானது நம் உடல் செயல் இயக்கத்திற்கு பயன்படும்.
கொழுப்பில் உடல் இயங்கும் போது, உடல் எடை குறைய தொடங்கும், கொலஸ்ட்ரால் அளவு குறையும். நீரழிவு நோய் அபாயமும் குறையும். ஆனால், அதே நேரம் ரத்தத்தில் சக்கரை அளவு குறைவது உடலை பலவீனப்படுத்தும்.

இந்த காலக்கட்டத்தில் நீங்கள் தலைவலி, தலைசுற்று மற்றும் குமட்டல் ஆகியவற்றை உணரலாம். பசி அளவு மிக அதிகமாக இருக்கும் போது நிச்சயம் இவற்றை உணரலாம்.
நோன்பின் மூன்றாவது நாளிலிருந்து உடல் வறட்சி குறித்து கவனம் கொள்ளல் வேண்டும்.தொடர்ந்து நாம் நோன்பு இருக்கும் போது, கொழுப்பு உடைந்து, கரைந்து, ரத்தம் சக்கரையாக மாற்றம் அடையும்.
இரண்டு நோன்புகளுக்கிடையே ஆகாரம் உண்ணும் காலக்கட்டத்தில், நீராகாரம் நிறைய எடுத்துக் கொள்ளல் வேண்டும். இல்லையென்றால் தொடர்ந்து வியர்ப்பது உடல் வறட்சிக்கு வழிவகுக்கும்.
நோன்பு காலக்கட்டம் இடையே நீங்கள் எடுத்துக் கொள்ளும் உணவில், சரியான அளவில் கார்போஹைட்ரேட் மற்றும் கொழுப்பு இருத்தல் வேண்டும்.

நோன்பு தொடங்கி எட்டாம் நாளிலிருந்து உங்கள் உடல் நோன்பிற்கு ஏற்றார்போல உடல் முழுமையாக தகவமைத்துக் கொள்ளும்.

நாம் சாதாரண நாட்களில் அதிகளவிலான கலோரிகள் எடுத்துக் கொள்வோம். இது நமது உடலானது பிற பணிகள் செய்வதிலிருந்து தடுக்கும். குறிப்பாக உடல் தம்மை தாமே சரி செய்துக் கொள்வது இதனால் தடைப்படும்.
ஆனால், நோன்பு காலக்கட்டத்தில் குறைவாக கலோரிகள் எடுத்துக் கொள்வதால் இந்த குறையானது சரியாகும். நோன்பானது நோய்களிலிருந்து தற்காத்துக் கொள்ளவும், நோய் தொற்றுகளுக்கு எதிராக போராடவும் பேருதவி புரிகிறது.
நோன்பின் இறுதி 15 நாட்கள், நோன்பு செயல்முறைக்கு உங்கள் உடல் முற்றும் முழுவதுமாக தகவமைத்துக் கொள்ளும்.
உங்கள் பெருங்குடல், கல்லீரல், சிறுநீரகம் மற்றும் தோல் ஆகியவை இந்த காலக்கட்டத்தில் உடல் நச்சுகளை அகற்ற தொடங்கும்.
இந்த தருணத்தில், உங்களுடைய உடல் உறுப்புகள் உச்சபட்சமாக செயல்படும் அதன் பழைய நிலைக்கு திரும்பும். உங்களது நினைவாற்றல், கவனிக்கும் திறன் மேம்படும்
நமது உடலானது புரதத்தை ஆற்றலாக மாற்ற கூடாது. முற்றும் முழுவதுமாக பட்டினி கிடக்கும் போதுதான் இது நிகழும். அதாவது பல வாரங்கள் சாப்பிடாமல் பசியுடன் இருக்கும் போது இது நிகழலாம். ஆற்றலுக்காக தசைகளை பயன்படுத்திக் கொள்ள நேரலாம்.
ஆனால் ரமலான் மாதத்தில் சூரியன் உதிக்கும் மற்றும் அஸ்தமிக்கும் காலக்கட்டத்திற்கு இடையேதான் நாம் நோன்பு இருக்கிறோம். பின் அரோக்கியமான உணவு மற்றும் நீர் ஆகாரங்களை உண்கிறோம். இது நம் தசைகளை காக்கும்.

நோன்பு இருத்தல் உடல்நலத்திற்கு நல்லதுதான். நாம் என்ன சாப்பிடுகிறோம், எப்போது சாப்பிடுகிறோம் என்பதில் கவனமாக இருக்க நோன்பு உதவி செய்கிறது.
ஒரு மாதகாலம் என்பது நோன்பிற்கு சிறந்ததுதான் என்றாலும், தொடர்ந்து நோன்பு இருத்தல் அறிவுறுத்தத்தக்கது இல்லை என்கிறார்.
தொடர்ந்து நோன்பு இருக்கும் போது, கொழுப்பு ஆற்றலாக மாறுவது நின்று, நம் உடலானது தசைகளை ஆற்றலாக மாற்றும் நிலைக்கு செல்லும். இது பசி பட்டினி நிலை. இது உடல்நலத்திற்கு நல்லது அல்ல என்கிறார் மருத்துவர்.
அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.
நபி(ஸல்) அவர்கள் நோன்பு திறக்காமல் தொடர் நோன்பு வைத்தார்கள்; மக்களும் அவ்வாறு தொடர் நோன்பு வைத்தார்கள். இது மக்களுக்குச் சிரமமாக இருந்தது.
அப்போது நபி(ஸல்) அவர்கள், மக்கள் தொடர் நோன்பு நோற்கத் தடை விதித்தார்கள். நபித்தோழர்கள், 'நீங்கள் (மட்டும்) தொடர் நோன்பு நோற்கிறீர்களே!' என்று கேட்டார்கள்.
நபி(ஸல்) அவர்கள், 'நான் உங்களைப் போன்றவன் அல்லன்; (இறைவன் தரப்பிலிருந்து) உண்ணவும் பருகவும் எனக்கு வழங்கப்படுகிறது!' என்று பதிலளித்தார்கள்.ஸஹீஹ் புகாரி : 1922.
"காலமெல்லாம் நோன்பு நோற்பவர் நோன்பு நோற்கவே இல்லை" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிப்பாளர் அப்துல்லாஹ் பின் அம்ரு (ரலி) நூல்கள்: புகாரி, முஸ்லிம், அஹ்மத்
கடந்த சில ஆண்டுகளாக, வட துருவத்தில் கோடை காலத்தில்தான் ரமலான் நோன்பு வருகிறது. அதாவது, இந்த காலக்கட்டத்தில் வெம்மையான வானிலையும், பகல் பொழுது நீளமானதாகவும் இருக்கும்.
அப்படியானால், நார்வே போன்ற சில நாடுகளில், ஒரு நாளுக்கு 20 மணி நேரத்திற்கு மேல் நோன்பு இருத்தல் வேண்டி இருக்கும். ஃபின்லாந்தில் கோடைக்காலத்தில் நள்ளிரவிலும் சூரியன் வானில் தென்படும்.
ஃபின்லாந்தின் தலைநகர் ஹெல்சின்கிக்கு 800 மைல் வடக்கிலிருக்கும் ரொவானியெமி நகரம் கடுமையான இயற்கைச் சூழல் கொண்ட ஒரு இடம் என்றுதான் சொல்ல வேண்டும்.

ஆர்க்டிக் வடதுருவ வட்டத்தை ஒட்டியிருக்கும் இந்த இடத்தில் குளிர் மிகவும் கடுமையாக இருக்கும். தவிர இங்கு குளிர்காலத்தில் சூரியன் சொற்ப நேரத்துக்குத் தான் வெளியில் தலைகாட்டும். அதுவே வெயில் காலம் என்றால் ஒரு நாளில் இருபது மணிநேரத்துக்கும் கூடுதலாக சூரியன் வானில் பிரகாசித்துக்கொண்டிருக்கும்.

முஸ்லிம்கள் நோன்பிருக்க வேண்டிய ரமலான் மாதத்தில் பகல் பொழுது மிகவும் நீளமாக இருப்பதென்பது இந்த ஊரில் வாழக்கூடிய முஸ்லிம்களுக்கு ஒரு பெரிய பிரச்சினைதான்.

இங்கு இரவு பனிரெண்டு மணி நெருக்கத்துக்குத்தான் அஸ்தமித்த சூரியன் பிறகு ஒரு சில மணி நேரங்களில் மீண்டும் உதயமாகிவிட்டிருந்தது.

இங்கு நோன்புப் பிடிக்கும் முஸ்லிம்கள் இந்த குறுகிய இரவுப் பொழுதில் மட்டுமே நீரருந்தவோ உணவு உண்ணவோ முடியும்.

ரொவானியெமி நகரில் வாழும் வங்கதேசப் பிரஜையான மியா மசூத், ஒரு நாளில் இருபது மணி நேரம் நோன்பு வைப்பதால் தான் மிகவும் சோந்துபோவதை ஒப்புக்கொள்கிறார். ஆனால் பசியையும் சோர்வையும் பொறுத்துக்கொண்டு நோன்பு வைப்பதிலும் ஒரு திருப்தி இருப்பதாக இவர் கூறுகிறார்.

வளைகுடா நாடுகளில் ரமலான் நோன்பு வைக்காதவர்களின் நாள் எப்படிச் செல்கிறது?

வளைகுடா நாடுகளில், நோன்பு காலத்தில் பொது இடங்களில் உணவு உண்பதும், பானங்கள் அருந்துவதற்கும் தடை விதிக்கப்பட்டுள்ளது, யாராவது அந்தக் கட்டுப்பாட்டை மீறினால், அவர் உடனே நாட்டை விட்டு வெளியேற்றப்படுவார் என்று உள்ளூர் ஊடகங்கள் கூறுகின்றன.

ஏனெனில் இஸ்லாமிய நாடுகளில் பெரும்பாலான மக்கள் இஸ்லாமியர்களாக இருப்பதால், தவிர்க்க முடியாத காரணம் இல்லாத பட்சத்தில், ரமலான் நோன்புகள் அனைத்தையும் தவறாமல் வைப்பார்கள். அங்கு கட்டுப்பாடுகளும் அதிகம்.

இதுபோன்ற நிலைமையில், அங்கு வசிக்கும் மற்ற மதத்தினர் வேலைக்காக அங்கு சென்றவர்களாகவே இருப்பார்கள்.

துபாயில் `சிஸ்டம் அனலிஸ்டாக பணிபுரியும் துஷ்யந்த் சிங், முஸ்லிம் அல்லாதவர்களின் நிலை குறித்த தன் எண்ணங்களை பகிர்ந்துக்கொள்கிறார்.

இந்தியாவில் புலந்த்ஷகரைச் சேர்ந்த துஷ்யந்த், மூன்று ஆண்டுகளாக துபாயில் பணிபுரிகிறார்.

"அதிகாலையில் நோன்பு தொடங்கிய பிறகு, நாங்கள் காபி, டீ அல்லது உணவுப் பொருட்கள் எதையும் எடுத்துக் கொண்டு பொது இடத்திற்கு வரமுடியாது."

வெளியிடங்களில் உணவுப் பொருட்கள் விற்பதற்கும், உண்பதற்கும் தடை விதிக்கப்பட்டுள்ளது.

காலையில் நோன்பு துவங்கிய பின்பும், மாலையில் நோன்பு துறப்பதற்கு முன்பும், எங்கள் அறைக்குள்தான் சாப்பிடவேண்டும்.

பொது இடங்களில் சாப்பிடுவது மட்டுமல்ல, சிகரெட் புகைப்பதும், குளிர்பானம் அருந்துவதும்கூட தடை செய்யப்பட்டது.

உணவகங்களுக்கு உள்ளே சென்றும் சாப்பிடமுடியாது, ஆனால் அவை மூடியிருக்காது. அங்கிருந்து உணவுகளை வாங்கிக்கொண்டு வீட்டில் வைத்து சாப்பிடலாம்.

சில உணவகங்களில் உள்ளே அமர்ந்து சாப்பிடலாம், ஆனால், வெளியில் சாப்பாட்டுப் பொட்டலங்களை எடுத்துச் செல்ல அனுமதிக்கமாட்டார்கள். மூடிய வாகனங்களுக்குள் அமர்ந்து சாப்பிடலாம்.

இந்தக் கட்டுப்பாடுகளால் எங்களுக்கு பிரச்சனைகள் ஏதும் இல்லை. சொல்லப்போனால், நோன்பு காலம் எங்களுக்கு மிகவும் பிடித்தமானது. எங்களது வேலை நேரமும் குறைந்துவிடும்.

நோன்பு வைத்திருப்பவர்களின் முன் சாப்பிட நாங்களும் விரும்புவதில்லை. தவறுதலாக, சாப்பிட்ட கையோடு அவர்கள் முன் சென்றுவிட்டால், அது எங்களுக்கு உறுத்தலாக இருக்கும் என தெரிவிக்கிறார் துஷ்யந்த்.

ஆதமுடைய வழித் தோன்றல்களுக்கு, ஒவ்வொரு நற்செயலுக்கும் அது போன்ற பத்து முதல் எழுநூறு (பிரதி பலன்கள்) வரை அதிகரிக்கப்படுகின்றது - நோன்பைத் தவிர,

ஏனெனில் நோன்பு எனக்குரியது. எனவே அதற்குரிய பலனை நானே அளிப்பேன். காரணம் எனக்காகவே நோன்பாளி தன் இச்சைகளையும். தன் உணவையும் விட்டொதுங்குகிறான் என்று அல்லாஹ் கூறுகிறான் என்றும்,

நோன்பாளிக்கு இரு மகிழ்ச்சி, அவர் நோன்பு திறக்கும் போது ஒரு மகிழ்ச்சி (நிலை)யும், தன் இறைவனைச் சந்திக்கும் போது ஒரு மகிழ்ச்சி (நிலை)யும் உண்டு என்றும்,

நோன்பாளியின் வாயில் ஏற்படும் வாடை இறைவனிடம் கஸ்தூரியின் மணத்தை விட மிகவும் மேலானதாகும் என்றும் ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நோன்பின் காலத்தில் தன்னடக்கம், வெகுளாமை, நாவடக்கம், உணவுக்கட்டுப்பாடு, சமூக நலம் பேணுதல் போன்ற நல்ல விளைவுகள் ஏற்படுகின்றன. இவைகளால் நோன்பு நோற்கும் ஒவ்வொரு ஆன்மாவும் தூய்மை அடைகிறது

ரமலான் நோன்பின் பலன்கள் குறித்து திருக்குர்ஆனின் இரண்டாம் அத்தியாயம் 183 ஆம் வசனத்தில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.

"இறை நம்பிக்கை கொண்டோர்களே ! உங்களுக்கு முன் இருந்தவர்கள் மீது நோன்பு கடமை ஆக்கப்பட்டது போல உங்கள் மீதும் நோன்பு கடமையாக்கப்பட்டுள்ளது. அதன் மூலம் நீங்கள் தூய்மையுடையோர் ஆகலாம்" என்பதே அந்த வசனம் ஆகும்.

இங்கு " தூய்மை " என்று குறிப்பிடப்படுவது உடல் தூய்மை மட்டுமல்ல; ஆன்மாவும் தூய்மையடைகிறது .

ரஹ்மத் ராஜகுமாரன்

## ரஹ்மத் ராஜகுமாரன் **(64)** 12-4-2022




குகைத் தோழர்கள் குகையில் முன்னூறு வருடங்கள் தங்கியிருந்தனர் என்றும், இன்னும் அதற்கு மேல் ஒன்பதை அதிகப்படுத்தித் தங்கினார்கள் என்றும் சிலர் கூறுகின்றனர்.

"நபியே ! நீர் கூறுவீராக, 'அவர்கள் அதில் தங்கி இருந்த காலத்தை அல்லாஹ்தான மிக்க அறிந்தவன் " .

குர்ஆன் (18 ; 25 , 26)

குகைத் தோழர்கள் குகையில் தங்கி இருந்தது

300 வருடங்களா ? , 309 வருடங்களா ?

இன்றைய விஞ்ஞானம் இரண்டுமே சரிதான் என்கிறது !

சூரிய காலண்டர் கணக்கின்படி
1 வருடத்திற்கு = 365 நாட்கள்
சந்திர காலண்டர் கணக்கின்படி
1 வருடத்திற்கு = 354 நாட்கள்
அதாவது 1 வருடத்திற்கு 11 நாட்கள் குறைவு.
இந்த 11 நாட்கள் 300 வருடத்திற்கு 11 X 300 = 3300 நாட்கள்
அதாவது 3300 / 365 = 9 வருடங்கள்
எனவே ...
குகைத் தோழர்கள் சூரிய கணக்கின்படி 300 வருடங்கள் குகையில் தங்கி இருந்தார்கள்.
குகைத் தோழர்கள் சந்திர கணக்கின்படி 309 வருடங்கள் குகையில் தங்கி இருந்தார்கள்.
இரண்டுமே சரிதான்.
நீங்கள் காலத்தின் கணக்கை அறிவதற்காகச் சூரியனையும் சந்திரனையும் ஆக்கினான். குர்ஆன் ( 6 : 96 )
இன்ஷா அல்லாஹ் நீங்கள் 100 வருடங்கள் வாழும் போது, சூரிய கணக்கின்படி உங்கள் வயது 100.
சந்திரக் கணக்கின்படி உங்கள் வயது 103
இப்போது உங்க வயதை சந்திரக் கணக்கின் படி கணக்கிட்டுப் பார்த்தாகி விட்டதா ? இதோ ...
12-ஏப்ரல்-2022. செவ்வாய் 10-ரமலான் - ஹிஜ்ரி 1443 ( இன்று )
06- மார்ச்-1960 ஞாயிறு , 10-ரமலான் - ஹிஜ்ரி 1379 (அன்று)
.................................................................................
என் பிறந்த நாள் (இன்று) 10-ரமலான் - 64 years #old
.................................................................................
குறிப்பு : பதிவிலுள்ள புகைப்படம் 28 நாட்கள் நிலவின் நிலைகளை ஒவ்வொரு புகைப்படமும் அதே இடத்தில் ஒவ்வொரு நாளும் எடுக்கப்பட்டது.
புகைப்படக்கலைஞர் : ஜியோஜியா ஹோஃபர்

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 1

للَّهُمَّ صَلِّ عَلَى مُحَمَّدٍ وَعَلَى آلِ مُحَمَّدٍ كَمَا صَلَّيْتَ
عَلَى إِبْرَاهِيْمَ وَعَلَى آلِ إِبْرَاهِيْمَ إِنَّكَ حَمِيْدٌ مَجِيْدٌ
اَللَّهُمَّ بَارِكْ عَلَى مُحَمَّدٍ وَعَلَى آلِ مُحَمَّدٍ كَمَا بَارَكْتَ
عَلَى إِبْرَاهِيْمَ وَعَلَى آلِ إِبْرَاهِيْمَ إِنَّكَ حَمِيْدٌ مَجِيْدٌ

( நண்பர்களின் வேண்டுகோளுக்கிணங்க நபி ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சுன்னத்துக்களை தொகுத்து ஒரு தொடர் பதிவாக எழுதினால்,தெரிந்து கொண்டு அவைகளைப் பின்பற்ற ஏதுவாக இருக்குமே என்று சொல்ல ...)

சுன்னத் என்றால் என்ன?

குர்ஆனை ஓதிக்காட்டுவதுடன் நபியவர்கள் நின்றுவிடவில்லை.அதன் சட்டங்களுக்கு செயல்விளக்கம் தந்தார்கள்.அதனைத்தான் சுன்னத்துகள் என்கிறோம்.

அகராதியில் சுன்னத் என்பதற்கு பாதை என்று பொருள். ஷரீஅத்தில், மார்க்கத்தில் நடைமுறைப் படுத்தப்பட்ட நபியவர்களால் வழமையாகச் செய்யப்பட்ட, கட்டாயமில்லாத செயலுக்கு சுன்னத் என்று சொல்லப்படும். (நூல்:ரத்துல் முஹ்தார் 1/103)

சுன்னத்தை விட்டவர் பாஸிக் ஆவார் அதை மறுப்பவர் பித்அத்வாதியாவார்.தல்வீஹ் என்ற நூலில் கூறப்பட்டுள்ளது.

முஅக்கதா(கட்டாயம் பேண வேண்டிய) சுன்னத் அதை விடுவது ஹராமுக்கு நெருங்கிய குற்றமாகும். அதன்மூலம் நபி ஸல்லல்லாஹுஅலைஹிவஸல்லம் அவர்களின் ஷபாஅத் மறுமையில் கிடைக்காமல் போய்விடுகிறது.

சுன்னத்தைப் பின்பற்றி நடப்பது நேர் வழியாகும்.அதனை விட்டு விடுவது வழிகேடாகும்.அதனை எடுத்துநடப்பதன் மூலம் தீன் பரிபூரணமடையும்.அதனை விட்டுவிடுவது தீனில் குறைபாடும்தீங்கும் ஏற்படக்காரணமாகும்.

எனது உம்மத்தில் சுன்னத்துகள் மங்கிப்போன குழப்பமான காலத்தில் எனது சுன்னத்தை யார் கடைபிடித்து வருவாரோ அவருக்கு நூறு ஷஹீதுகளுடைய நன்மை கிடைக்கும். (தப்ரானி)

எனது சுன்னத்தை உயிர்ப்பித்தவர் என்னை உயிர்ப்பித்தவராவார்.என்னை உயிர்ப்பித்தவர் என்னோடு சுவனத்தில் இருப்பார்.(திர்மிதி)

قُلْ اِنْ كُنْتُمْ تُحِبُّوْنَ اللّٰهَ فَاتَّبِعُوْنِىْ يُحْبِبْكُمُ اللّٰهُ وَيَغْفِرْ لَـكُمْ ذُنُوْبَكُمْ وَاللّٰهُ غَفُوْرٌ رَّحِيْمٌ

(நபியே!) நீர் கூறும்: “நீங்கள் அல்லாஹ்வை நேசிப்பீர்களானால், என்னைப் பின் பற்றுங்கள்; அல்லாஹ் உங்களை நேசிப்பான்; உங்கள் பாவங்களை உங்களுக்காக மன்னிப்பான்; மேலும், அல்லாஹ் மன்னிப்பவனாகவும், மிக்க கருணை உடையவனாகவும் இருக்கின்றான். (குர்ஆன் : 3:31)

நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 2

(உணவின் நடுவில் அபிவிருத்தி (பரக்கத்) இறங்குகிறது)



செங்கிஸ்கானின் வழி தோன்றல்கள் பலரும் இஸ்லாமின்பால் வந்தனர். தைமூர், பாபர் என இந்த லிஸ்ட் பெரியது என்பதும், மிகப்பெரிய நிலப்பரப்புகளை அவர்கள் ஆண்டனர் என்பதும் நாம் எல்லாம் நன்கறிந்த வரலாறு.

தைமூர் பரம்பரை தார்த்தாரிய சமூக தலைவர் தைமூர் சமர்கந்த் ஆட்சியைக் கைப்பற்றும் முதல் முயற்சியில் தோல்வியுற்று ஒரு கிழவியின் குடிசையில் ஒளிந்தார்.

அந்த குடிசையில் வாழ்ந்த கிழவி தைமூருக்கு ஒரு தட்டில் கூழ் கொடுத்தாள். பசியில் பரிதவித்த தைமூர் தடாலடியாய் தட்டின் நடுவில் கையை வைத்தார், சூடு தாங்காமல் அலறி கையை உதறினார்.

இதைப் பார்த்து பதறாமல் பாட்டி சொன்னாள், "தட்டின் நடுவில் கை வைத்தால் சுடாமல் சுகமாகவா இருக்கும்? ஓரத்திலிருந்து சாப்பிட வேண்டும் என்பது கூட தெரியாதா ?"

கூழைக் குடித்தபின் தைமூர் அமைதியாய் அமர்ந்து அல்லாஹ்விற்கு நன்றி நவின்று ஆற அமர யோசித்தார். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சாப்பாட்டிற்குள் விரல் முழுவதையும் நுழைக்கமாட்டார்கள் என்ற நினைவு வந்தது. பசியில் பத்தும் பறந்து போகும் என்றபடி எத்தனை சுன்னத்துகளைப் பின்பற்றாமல் விட்டுவிட்டோம் என்ற எண்ணமும் எழுந்தது.

"அல்லாஹ்வைப் புகழ்ந்து துதித்து உணவு உண்ண வேண்டும்'' அறிவிப்பவர்- ஹுதைபா (ரலி) நூல்- முஸ்லிம், அபூதாவூத்.

"உணவின் நடுவில் அபிவிருத்தி (பரக்கத்) இறங்குகிறது. எனவே, உணவின் இரு ஓரங்களில் கீழ்ப்பகுதியிலிருந்து உண்ணுங்கள், உணவின் நடுப்பகுதிலிருந்து உண்ணாதீர்கள்'' அறிவிப்பவர்- இப்னு அப்பாஸ் (ரலி) நூல்- அபூதாவூத், நஸஈ.திர்மிதி , இப்னுமாஜா

இந்த நபி மொழிகள் சாப்பாட்டிற்கு மட்டுமல்ல சகல காரியங்களுக்கும் பொருந்தும் என்று தைமூர் எண்ணினார். அட ,சண்டித்தனமாக சட்டென்று அரண்மனைக்குள் அடாவடியாக புகுந்து ஆட்சியைக் கைப்பற்ற முடியாது என்பதை உணர்ந்த தைமூர் கைக்கருகில் உள்ள கீழ்ப்புறத்திலிருந்து சாப்பிட துவங்குவது போல எந்த ஓரத்திலிருந்து எந்த பகுதியைத் தாக்கத் துவங்கினால் எளிதாக வெற்றி கிட்டும் என்று திட்டமிட்டு சமர்கந்தைப் பிடித்து ஆட்சியில் அமர்ந்து, பின்னர் தோல்வி காணாது 35 ஆண்டுகளில் 27 நாடுகளை பரக்கத்தாக வென்றார்.

பாரசீக நாட்டின் பேரரசரான தைமூர் ஒரு பொழுதும் தன்னைப் பேரரசர் என்று சொன்னதே இல்லை. பெருமானார் நபி (ஸல்) அவர்கள் வழியில் அல்லாஹ்வின் அடிமையாகிய தைமூர் கூறுவதாக அனைத்து ஆவணங்களிலும், கட்டளைகளிலும் கடிதங்களிலும் எழுதினார் தைமூர்.

நாமும் நபி வழியை நன்கறிந்து சுன்னத்தின் உன்னதத்தை உணர்ந்து நடந்து உயர்வு பெறுவோம்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 4

( உத்தம நபியின் உணவு முறைகள் 2 )



நபியவர்கள் மாலைநேரத்தில் காலைக்குரிய உணவையும், காலை நேரத்தில் மாலைக்குரிய உணவையும் எப்போதும் எடுத்து வைக்க மாட்டார்கள்.
நபியவர்கள் சால்னாவின் அடிப்பகுதியை மிகவும் விரும்புவார்கள். பெரும்பாலும் அதைக் கடைசியில் பருகி விடுவார்கள்.
நபியவர்கள் வீட்டுக்கு இறைச்சி கொண்டு வந்து கொடுக்கும் போது, " இதில் குருமா வையுங்கள் அண்டை வீட்டாருக்கும் இதில் இருந்து கொஞ்சம் கொடுக்கவேண்டும்" என்று கூறுவார்கள்.
உண்ணும் பொருளிலோ, பருகும் பொருளிலோ நபியவர்கள் ஊத மாட்டார்கள். அப்படி ஊதுவதை கெட்டதெனக் கருதினார்கள்.

இறைச்சிக் கறியில் உள்ள எலும்புகளில் விலா எலும்பை மிகவும் விரும்புவார்கள்.
விருந்தாளிக்கு உணவு கொடுத்தால், " இன்னும் உண்ணுங்கள் ! இன்னும் உண்ணுங்கள் ! என்று பலமுறை கூறுவார்கள். எந்த அளவுக்கு என்றால், விருந்தாளி கடுமையாக மறுக்க ஆரம்பிக்கும் போதுதான் நபியவர்கள் தமது வற்புறுத்தலை விடுவார்கள்.

எந்தக் கூட்டத்திலாவது உணவு உண்ணக்கூடிய வாய்ப்பு கிடைத்தால், ஆகக் கடைசியாக நபியவர்களே எழுந்திருப்பார்கள். காரணம் சிலர் வெகுநேரம் உணவு உண்ணக்கூடிய பழக்கம் உள்ளவர்களாக இருப்பார்கள். இவர்கள் பிறர் எழுவதைப் பார்த்தால் வெட்கத்தினால்தான் தாமும் எழுந்து விடுவார்கள். ஆகவே இத்தகையவர்களைக் கவனத்தில் கொண்டு நபி (ஸல்) அவர்கள் கொஞ்சமாக உண்டு கொண்டே இருப்பார்கள்.
உணவருந்திய பின் கைகளை கழுவிக் கொள்வார்கள். கைகளில் உள்ள ஈரத்தை தமது கரங்கள், முகம், மற்றும் முபாரக்கான தலையில் தேய்த்து காயவைத்து கொள்வார்கள்.
கோழி இறைச்சியை உண்ண வேண்டியிருந்தால், " அதை வெளியே சுற்றித்திரிய விடாதீர்கள் " என்று பல நாட்களுக்கு முன்பே கட்டளை விடுவார்கள் .பிறகு அதை அறுத்து சமைத்து சாப்பிடுவார்கள்.
கறிக்குழம்பு ஊறவைக்கப்பட்ட ரொட்டி நபியவர்களுக்கு மிகப் பிடித்தமான உணவாக இருந்தது.
நபியவர்கள் கிச்சடியை மிகவும் விரும்பி வந்தார்கள் .

நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 5

( உத்தம நபியின் உணவு முறைகள் 3 )

ஹஜ்ரத் வஹ்ஷிய்யிப்னு ஹர்ப் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: "ஸஹாபிகளில் சிலர், யாரஸூலல்லாஹ் ! நாங்கள் சாப்பிடுகிறோம், ஆனால் வயிறு நிரம்புவதில்லை' எனச் சொன்னார்கள்,
நீங்கள் தனித்தனியாகச் சாப்பிடுகிறீர்கள் போலும்? என்று ரஸூலுல்லாஹி (ஸல்) அவர்கள் கேட்டார்கள்,
அவர்கள் ஆம்' என்றார்கள், நீங்கள் சாப்பிடும் போது ஒன்று கூடி, அல்லாஹுதஆலா வின் பெயர் சொல்லிச் சாப்பிடுங்கள். உங்கள் உணவில் பரக்கத் உண்டாகும்' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அபூதாவூத்)
'ஒரு தையல்காரர் தாம் தயாரித்த விருந்துக்காக நபி (ஸல்) அவர்களை அழைத்தார். நானும் நபி (ஸல்) அவர்களுடன் அந்த விருந்துக்குச் சென்றேன். அவர் ரொட்டியையும் உலர்ந்தி போடப்பட்ட குழம்பையும் நபி (ஸல்) அவர்களின் முன்னே வைத்தார்;
நபி (ஸல்) அவர்கள் தட்டின் ஓரங்களில் சுரைக்காயைத் தேடுவதை பார்த்தேன். அன்றிலிருந்து நான் சுரைக்காயை விரும்பக் கூடியவனாகி விட்டேன்!" புஹாரி : 2092 அனஸ் (ரலி)
பாதாம் பருப்பின் சத்து மாவு நபியவர்களின் சமூகத்தில் கொண்டுவரப்பட்டபோது, "இது செல்வந்தர்களின் உணவு " என்று கூறி அதை உண்ண மறுத்து விட்டார்கள்.
தேன் கலக்கப்பட்ட பாலையும் நபி (ஸல்) அவர்கள் அருந்த மாட்டார்கள். இரு சால்னாக்கள் ஒரே பாத்திரத்திலா ? என்பார்கள். அதாவது இது வீண் விரயம் ஆயிற்றே ! என்பார்கள்
தோல் நீக்கப்பட்ட கோதுமையில் தயாரான ரொட்டியை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சாப்பிட்டதுண்டா? என்று நபிகள் நாயகத்தின் பணியாளர்களில் ஒருவரான ஸஹ்ல் பின் ஸஅத் (ரலி) யிடம் கேட்டேன்.
அதற்கு அவர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை இறைவன் தனது தூதராக அனுப்பியது முதல் அவர்கள் மரணிக்கும் வரை சலிக்கப்பட்ட மாவில் தயாரான ரொட்டியைச் சாப்பிட்டதேயில்லை என்றார்.
நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் காலத்தில் உங்களிடம் சல்லடைகள் இருந்தனவா? என்று கேட்டேன்.
அதற்கவர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை அல்லாஹ் தனது தூதராக அனுப்பியது முதல் அவர்கள் சல்லடையைப் பார்த்ததில்லை என்றார்.

தோல் நீக்கப்படாத கோதுமை மாவைச் சலிக்காமல் எப்படிச் சாப்பிடுவீர்கள்? என்று நான் கேட்டேன்.
அதற்கவர் தீட்டப்படாத கோதுமையைத் திருகையில் அரைப்போம். பின்னர் வாயால் அதை ஊதுவோம். உமிகள் பறந்து விடும். எஞ்சியதைத் தண்ணீரில் குழைத்துச் சாப்பிடுவோம் என்று விடையளித்தார். அறிவிப்பவர்: அபூ ஹாஸிம் புகாரி 5413
ஆபிஸ் இப்னு ரபீஆ அல்கூஃபீ(ரஹ்) கூறினார்
நான், ஆயிஷா(ரலி) அவர்களிடம் '(ஈதுல் அள்ஹா' பெருநாளில் அறுக்கப்படும்) குர்பானி இறைச்சியை மூன்று நாள்களுக்கு மேல் வைத்துச்சாப்பிடுவதை நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்களா?' என்று கேட்டேன்.
அவர்கள், 'மக்கள் (பஞ்சத்தால்) பசி பட்டினியோடு இருந்த ஓர் ஆண்டில் தான் அவர்கள் அப்படி(த் தடை) செய்தார்கள்.
அப்போது நபி(ஸல்) அவர்கள் (பட்டினியைப் போக்க) வசதி உள்ளவர், ஏழைக்கு உணவளிக்க வேண்டும் என்று விரும்பினார்கள்.
(பிறகு) நாங்கள் ஆட்டுக் காலை எடுத்து வைத்துப் பதினைந்து நாள்களுக்குப் பிறகும் கூட அதைச் சாப்பிட்டுவந்தோம்' என்று பதிலளித்தார்கள்.
'உங்களுக்கு இப்படிச் செய்ய வேண்டிய கட்டாயம் என்ன வந்தது?' என்று ஆயிஷா(ரலி) அவர்களிடம் கேட்கப்பட்டது.

அதற்கு அவர்கள் சிரித்துவிட்டு, 'முஹம்மத்(ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் சென்று சேரும் வரை அவர்களின் குடுமபத்தார் தொடர்ச்சியாக மூன்று நாள்கள் கூட (கறிக்) குழம்புடன் வெள்ளைக் கோதுமை ரொட்டியை வயிறு நிரம்பச் சாப்பிட்டதில்லை' என்று கூறினார்கள். ஸஹீஹ் புகாரி : 5423

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 6

( அண்ணல் நபியின் அருந்தும் முறைகள் 1 )




பாத்திரத்தில் வாய் வைத்து ஓசையின்றி மெதுவாக நீரை உறிஞ்சி குடிப்பார்கள் உத்தம நபி (ஸல்) அவர்கள்.
நபி (ஸல்) அவர்கள் மண், செம்பு, மரம், பளிங்கு பாத்திரங்களில் நீர் அருந்துவார்கள்.
பாத்திரங்களை மூடி வைக்கவும் நீர் பைகளைக் கட்டி வைக்கவும் கருணை நபி (ஸல்) அவர்கள் கட்டளை இட்டதை இயம்புகிறார் ஜாபிர் (ரலி) நூல் -புகாரி, முஸ்லிம், அபூதாவூத்.
இது தூசு பாத்திரத்தில் பையில் விழாமலும் நீர் மாசுறாமலும் இருப்பதற்காக இயம்பியது. நீரில் உள்ள தூசியைக் களைய நீரில் வாயால் ஊத கூடாது. தூசி படர்ந்த பகுதியை மட்டும் கீழே ஊற்றியபின் எஞ்சிய நீரைப் பருகி விஞ்சிய தாகத்தைத் தணித்தார்கள் தாஹா நபி (ஸல்) அவர்கள் என்று எடுத்துரைக்கிறார் அபூகதாதா (ரலி) நூல் - புகாரி, முஸ்லிம், திர்மிதீ, நஸஈ.

நின்று நீர் அருந்துவதை நபி (ஸல்) அவர்கள் தடை செய்த தகவலைத் தருகிறார் அனஸ் (ரலி) நூல்- முஸ்லிம், திர்மிதீ.
இன்றைய மருத்துவம் நின்று கொண்டு நீர் அருந்துவதால் குடல் இறக்கம், விதை வீக்கம் ஏற்படுவதாக கூறுகிறது.
ஒட்டகம் ஓர் இழுப்பில் ஒரே மூச்சில் நீர் குடிக்கும். அவ்வாறு குடிப்பது கூடாது. மூச்சுவிட்டு மூன்று முறையில் நீர் குடிக்க கூறினார்கள் நபி (ஸல்) அவர்கள் என்று அறிவிக்கிறார் அனஸ் (ரலி) நூல்- புகாரி, முஸ்லிம், அபூதாவூத், திர்மிதீ.
அவ்வாறு மூச்சுவிடும் பொழுது நீருள்ள பாத்திரத்தில் மூச்சு விடாது பாத்திரத்தை வாயிலிருந்து நகர்த்தி கொண்டு மூச்சுவிட நபி (ஸல்) அவர்கள் மொழிந்ததை அறிவிக்கிறார் அபூதர்தா (ரலி) நூல் -புகாரி, முஸ்லிம், திர்மிதீ, நஸஈ.
நீர் பாத்திரத்தில் மூச்சு விடுவதால் கரியமில வாயு நீரில் கலக்கும்.
ஒரே இழுப்பில் ஒரு மூச்சில் நீர் குடிப்பது விலங்குகளின் பழக்கம். மனிதர்கள் விலங்கினும் வேறுபட்டு மேலான ஆறறிவு படைத்தவர்கள். அதற்கேற்ப ஆரோக்கியமான பழக்கங்களைக் கடைப்பிடிக்க வேண்டும்.
கோபம் கொண்டவர் குளிர்ந்த நீர் பருகினால் கோபத்திற்குக் காரணமான கழுத்து நரம்புகள் முறுக்கேறி சூடான உடல் கட்டுக்குள் அடங்கி கோபம் குறையும். படுத்தவாறு நீர் பருகுவது நரம்பு தளர்ச்சியை உண்டாக்கும்.

பாலில் நீர் கலந்து பருகினார்கள் அருமை நபி (ஸல்) அவர்கள். அவ்வாறு பருகுவது உடல் நலத்திற்கு உகந்தது என்று உரைத்ததை அறிவிக்கிறார் ஜாபிர் (ரலி) நூல்- புகாரி. பருகும்
பானங்களில் மேலானது இனிப்பு உள்ளதும் குளிர்ந்து உள்ளதும் என்று கூறியதைக் கூறுகிறார் அன்னை ஆயிஷா (ரலி) நூல்- திர்மிதீ
எவர் தங்கம், வெள்ளிப் பாத்திரத்தில் குடிப்பாரோ அவர் தன் வயிற்றில் நரகத்தின் நெருப்பையே விழுங்குகிறார்' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: உம்முஸலமா (ரலி), முஸ்லிம்.
"வெள்ளி (அல்லது தங்க)ப் பாத்திரத்தில் அருந்துகிறவன் தன்னுடைய வயிற்றில் மிடறுமிடறாக நரக நெருப்பையே விழுங்குகிறான்." அறிவிப்பவர்: உம்மு ஸலமா(ரலி), புகாரி
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"உங்களில் எவரது பானத்திலாவது ஈ விழுந்து விட்டால் (முதலில்) அதை அவர் (அதிலேயே) முக்கட்டும். பிறகு அதை வெளியே எடுத்துப் போட்டு விடட்டும். ஏனெனில் அதன் இரு இறக்கைகளில் ஒன்றில் நோயும் மற்றொன்றில் நிவாரணமும் இருக்கின்றது" - அபூ ஹுரைரா (ரலி) நூல்: புகாரி

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 7

( அண்ணல் நபியின் அருந்தும் முறைகள் 2 )

நபி (ஸல்) அவர்களுக்கு மதுரமான நீர் நபியவர்களுக்கு மிகவும் பிடித்தமானது தூர தூரமான இடங்களிலிருந்து அதாவது இரண்டு மூன்று நாட்கள் தொலைதூரத்தில் இருந்தும் நீர் கொண்டுவரச் செய்து அருந்துவார்கள். பரிசுத்த மனைவியரில் ஆயிஷா (ரலி) அவர்களுடன் நபி (ஸல்) அவர்களுக்கு தனிப்பட்ட அன்பு இருந்துவந்தது ஆகையால் நபி (ஸல்) அவர்கள் ஆயிஷா ரலி அவர்கள் அருந்திய பாத்திரத்தில் அவர்கள் அருந்திய இடத்தில் தமது வாயை வைத்து அருந்துவார்கள்.

சில சமயங்களில் நபியவர்கள் தோல் பை அல்லது வாளியில் வாய் வைத்து நீர் அருந்துவார்கள்.
ஒரு சபையில் ஏதேனும் ஒரு பானத்தை வழங்கிட வேண்டியிருந்தால், முதலில் வயதில் மூத்தவரிடமிருந்து சுற்றை ஆரம்பிக்க வேண்டும் என நபி ஸல் அவர்கள் கட்டளை இடுவார்கள்.
ஒரு சபையில் ஏதேனும் ஒரு பானம் கொடுக்கப்பட்டு வரும் போது அடிக்கடி குவளையை கொண்டுவரப்பட்டால், இரண்டாவது சுற்றில் குவளை வரும்போது முதல் சுற்று ஆரம்பித்த இடத்தில் இருந்தே இரண்டாவது சுற்றையும் ஆரம்பிக்க வேண்டும் என நபி (ஸல்) அவர்கள் கட்டளை இடுவார்கள்.
நபி (ஸல் ) அலை அவர்கள் தமது தோழர்களுக்கு ஏதேனும் ஒரு பானத்தை பருகத் தரும்போது. நபியவர்கள் தான் கடைசியில் அருந்துவார்கள். மேலும் " பருகத் தருபவர் கடைசியில்தான் அருந்த வேண்டும்" என்பார்கள்.
நபி (ஸல்) அவர்கள் பொது உபயோகத்தில் இருக்கும் நீர்த்தேக்கங்கள் உதாரணமாக ஆறு அல்லது குளங்கள் போன்றவற்றில் இருந்து நீர் எடுத்து வரச் சொல்லி அதை அருந்துவார்கள். பொது முஸ்லிம்களின் கைப்பட்ட பரக்கத்தை தானும் பெற வேண்டும் என்பது தான் இதற்குக் காரணம்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 8

(உத்தம நபியின் உடை அணியும் முறைகள் 1)

நபி (ஸல்) அவர்களின் விருப்பமான ஆடை, சட்டையாக இருந்தது! அறிவிப்பவர் அன்னை உம்மு ஸலாமா (ரலி) (நூல்கள் - திர்மிதீ 1684. அபூதாவுத், நஸயீ, இப்னுமாஜா)

நபி (ஸல்) அவர்களின் சட்டையின் கை மணிக்கட்டு வரை நீண்டிருந்தது! அறிவிப்பவர் அஸ்மா பின்த் யஸீத் (ரலி) - (நூல்கள் - திர்மிதீ 1687. அபூதாவுத், நஸயீ)
நபி (ஸல்) அவர்கள் இரு கைகள் இறுக்கமான இத்தாலி நாட்டு குளிராடை அணிந்திருந்தார்கள்! அறிவிப்பவர் முகீரா பின் ஷுஃபா (ரலி) (நூல்கள் - திர்மிதீ 1690. புகாரி, முஸ்லிம்)
திஹ்யா அல்கல்பீ (ரலி) அவர்கள், நபி (ஸல்) அவர்களுக்கு இரண்டு காலுறைகளை அன்பளிப்பாக வழங்கினார். அவற்றை நபி (ஸல்) அவர்கள் அணிந்து கொண்டார்கள்! அறிவிப்பவர் முகீரா பின் ஷுஃபா (ரலி)
(நூல் - திர்மிதீ 1691)
சிவப்பான முழு ஆடை அணிந்து தோள் புஜத்தைத் தொடும் தலைமுடியுடன் நபி (ஸல்) அவர்கள் அழகுடன் இருந்தது போல் வேறெவரையும் நான் பார்த்ததில்லை. அவர்களின் தலைமுடி தோள் புஜத்தைத் தொட்டுக் கொண்டிருக்கும், இரண்டு தோள் புஜங்களுக்கும் இடைப்பட்ட தொலைவு அதிகமாக இருக்கும். (அந்த அளவுக்கு அகன்று இருக்கும்) அவர்கள் குட்டையாகவோ நெட்டையாகவோ இருக்கவில்லை. அறிவிப்பவர் பராவு (ரலி) (நூல்கள் - முஸ்லிம், திர்மிதீ 1646)

ஆயிஷா (ரலி) அவர்கள் ஒட்டுப் போட்ட ஒரு போர்வையையும் கடினமான ஒரு வேட்டியையும் எங்களிடம் காட்டி ''இவ்விரண்டையும் அணிந்த நிலையில் தான் நபி (ஸல்) அவர்கள் மரணமடைந்தார்கள்'' என்று கூறினார்கள். அறிவிப்பவர் அபூபுர்தா (நூல்கள் - புகாரி, முஸ்லிம், திர்மிதீ 1655)
(மக்கா) வெற்றி நாளன்று நபி (ஸல்) அவர்கள் மக்காவில் நுழையும்போது கருப்புத் தலைப்பாகை அணிந்திருந்தனர். அறிவிப்பவர் ஜாபிர் (ரலி) (நூல்கள் - முஸ்லிம், திர்மிதீ 1657, நஸயீ, அபூதாவுத், இப்னுமாஜா)
''நபி (ஸல்) அவர்கள் தலைப்பாகை அணிந்தால் இரு தோள்களுக்கிடையே தொங்கவிடுவார்கள்'' அறிவிப்பவர் இப்னு உமர் (ரலி) (நூல் - திர்மிதீ 1658)

**நபிகளாரின் சுன்னத்துகள் ஆயிரம்**

ரமலான் மாதம் நிறைவடைவதற்குள் " திருக்குர்ஆனின் இலக்கிய ரசம் " எழுதலாமென முடிவு செய்து, அதற்குரிய ஆய்த்தப் பணியைத் தொடங்கும் போது, நண்பர்கள் நபிகளாரின் சுன்னத்துகள் எழுத வேண்டினர். அதுவும் சரிதான் ஏனெனில் ..
ஒரு முறை ஆயிஷா(ரலி) அவர்களிடம் நபி (ஸல்) அவர்களின் வாழ்கையைப் பற்றி கேட்ட போது . . .
" நபிகளாரின் வாழ்வு குர்ஆனாக இருந்தது " என்று அன்னையவர்கள் பதில் அளித்தார்கள்.
பிரதி ஓரிடத்தில் அன்னை அவர்களிடம், குர்ஆனைப் பற்றி கேட்ட போது, "குர்ஆன் நபி (ஸல்) அவர்களின் வாழ்க்கையாக இருந்தது " என்று பதில் அளித்தார்கள்.
ஆக,நபிகளாரின் சுன்னத்துகள் எழுதினாலும்,திருக்குர்ஆனின் இலக்கிய ரசம் எழுதினாலும் எல்லாம் ஒன்றுதான் திருக்குர்ஆனின் இலக்கிய ரசமே நபிகளாரின் சுன்னத்துகள் தானே என்றெண்ணி ,
இன்ஷா அல்லாஹ் "நபிகளாரின் சுன்னத்துக்கள் 1000 ஆயிரத்தை - " நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் " என்ற தலைப்பில் ரமலான் மாதம் முழுவதும் எழுத நாடி தொடர்ந்து எழுதிக் கொண்டிருக்கிறேன்.
ஒரு நாளைக்கு 35 சுன்னத்துகள் என்று ரமலான் 30 நாளைக்குள் பதிந்தாக வேண்டும் என்ற எண்ணிக்கை காலக் கணக்கோடு பதிந்து வருகிறேன் .
நண்பர்கள் தொடர்ந்து படித்து அதைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று முதலாவதாக எனக்கும், உங்களுக்கும் வேண்டிக் கொள்கிறேன் .

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 9

(உத்தம நபியின் உடை அணியும் முறைகள் 2 )

மற்ற ஆடைகளை விட நபி (ஸல் ) அவர்களுக்கு குர்தா (நெஞ்சு பட்டை உள்ள நீளமான சட்டை ) பிடித்தமானதாக இருந்தது.
குர்தாவின் கைகள் மிக இறுக்கமாகவும் இல்லாமல்,மிக விசாலமாகவும் இல்லாமல், நடுத்தரமானதாக இருந்தன.
சட்டைக் கைகளை மணிக்கட்டு வரை வைப்பார்கள்.
நபி (ஸல்) அவர்கள் பயணத்தில் அணியும் குர்தா, ஊரில் இருக்கும்போது, அணியும் குர்தாவை விட நீளமாகவும் கைகள் சற்று சிறியதாகவும் இருந்தன.
நபி (ஸல்) அவர்களுடைய சட்டையின் கழுத்துப் பகுதி நெஞ்சில் இருந்தது .
நபியவர்கள் சில சமயம் தமது சட்டைக் கழுத்தைத் திறந்து வைத்திருப்பார்கள். அதனால் புனித நெஞ்சம் தெளிவாக வெளியே தெரியும். அதே நிலையில் தொழுவார்கள்.
நபியவர்கள் சட்டை அணியும் போது, முதலில் வலது கரத்தை வலது சட்டைக்கையில் நுழைப்பார்கள். பிறகு இடது கரத்தை இடது சட்டைக்கையில் நுழைப்பார்கள்.

நபியவர்கள் எப்போதுமே பைஜாமா அணிந்ததில்லை. கீழாடையே ( கைலி) என்றும் அணிந்து வந்தார்கள்.
நபியவர்கள் எப்போதுமே கீழாடையை தொப்புளிலிருந்து கெண்டைக்காலின் பாதி வரை கட்டிக்கொள்வார்கள்.
நபி (ஸல்) அவர்கள் கைலியின் முன்பகுதி, பின்பகுதியை விட பெருமளவு தாழ்ந்து இருந்தது.
நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் ஒரு பெண்மணி போர்வை ஒன்றைக் கொண்டு வந்து இதை உங்களுக்கு அணிவிப்பதற்காக என் கையால் நெய்து கொண்டு வந்துள்ளேன் என்றார்.
அவர்களுக்கு அது தேவையாக இருந்ததால் அதைப் பெற்றுக் கொண்டனர். பின்னர் அதை வேட்டியாக அணிந்து கொண்டு எங்களிடம் வந்தனர் என ஸஹ்ல் (ரலி) அறிவிக்கிறார் புகாரி 1277, 2093, 5810
நபியவர்கள் போர்த்துகின்ற போர்வை நான்கு கஜ நீளமும் இரண்டு கஜம் ஒரு சாண் அகலமும் இருந்தது. ( ஒரு கஜம் என்பது சுமார் 92 செ.மீ ஆகும்)

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஓரிரு சந்தர்ப்பங்களில் இறுக்கமான கம்பளிக் குளிராடை அணிந்திருந்ததாகவும், மிகச் சில நேரங்களில் தைக்கப்பட்ட சட்டை அணிந்திருந்ததாகவும் சான்றுகள் உள்ளன.
இதைத் தவிர மற்ற சந்தர்ப்பங்களில் ஒரு போர்வையை மேலே போர்த்திக் கொள்வார்கள். இரு கைகளும் வெளியே இருக்கும் வகையில் போர்வையின் வலது ஓரத்தை இடது தோளின் மீதும், இடது ஓரத்தை வலது தோளின் மீதும் போட்டுக் கொள்வார்கள்.
இதனால் அவர்களின் அக்குள் வரை முழுக் கைகளும் வெளியே தெரியும். பெரும்பாலும் அவர்களின் மேலாடை இதுவாகத் தான் இருந்துள்ளது. போர்வை சிறியதாக இருந்தால் கீழே ஒரு போர்வையைக் கட்டிக் கொள்வார்கள்.
நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தொழும் போது (ஸஜ்தாவில்) தமது அக்குள் தெரியும் அளவுக்கு கைகளை விரித்து வைப்பார்கள். புகாரி 390, 807, 3654
சில சமயங்களில் வலது அக்குள் வழியாக போர்வையை மேலே கொண்டு வந்து இடது தோள் மீது போட்டுக் கொள்வார்கள்.
நபி (ஸல்) அவர்கள் தாம் அணிகின்ற ஆடைகளிலே - உதாரணமாக குர்தா, கைலி, போர்வை அல்லது செருப்பு போன்றவை எதிலும் அதிகப்படியான ஜோடியை உபரியாக வைத்துக் கொள்ளவில்லை.
நபி (ஸல்) அவர்கள், புத்தாடை அணிவதாக இருப்பின் ஜும்ஆ நாளன்று அணிவார்கள்.
வெண்ணிற ஆடை நபி (ஸல்) அவர்களுக்கு மிகவும் பிடித்தமானது. இருப்பினும் வண்ண ஆடைகளில் பச்சைநிறம் அவர்களுக்கு பிடித்தமானதாக இருந்தது.

முழுமையான கருஞ்சிவப்பு ஆடை அவர்களுக்கு மிக வெறுப்பானதாக இருந்தது.
ஒருவருக்கு உதவி செய்வதற்காக முப்பது படி கோதுமைக்காக நபி (ஸல் ) அவர்கள் தமது கவச ஆடையை ஒரு யூதரிடம் அடமானம் வைத்திருந்தார்கள். அதை மீட்காமலே மரணித்ததாக ஆயிஷா ( ரலி) அவர்கள் கூறினார்கள்.
புகாரி : 2068, 2096, 2200, 2251 ,2386

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 10

( தாஹா நபியின் தலைப்பாகையும், தொப்பியும் )

நபி (ஸல்) அவர்கள் தலைப்பாகை அணிந்து வந்தார்கள்.
தலைப்பாகை இல்லாத சமயம் தமது முபாரக்கான தலை மற்றும் நெற்றியின் மீது ஒரு பட்டியை கட்டிக் கொள்வார்கள்.
நபி (ஸல்) அவர்களின் தலைப்பாகை கிட்டத்தட்ட ஏழு கஜம் இருந்தது.
நபியவர்கள் தலைப்பாகை அணியும் போது அவசியம் ஷம்லா (வால்) விட்டுக் கொள்வார்கள். சில சமயங்களில் தலைப்பாகையும் நடுப்பகுதியை தாடைக்கு கீழே கழுத்து வழியே விட்டுக் கொள்வார்கள்.
நபியவர்கள் தலைப்பாகையின் ஷம்லாவை கிட்டத்தட்ட ஒரு சாண் அளவு விட்டுக் கொள்வார்கள்.
நபியவர்கள் தலைப்பாகையின் ஷம்லா இரு தோள்களுக்கு மத்தியிலே பின்புறமாக விடப்பட்டிருந்தது.
தலைப்பாகை கட்டி முடித்ததும், அதன் கடைசி நுனியை முன்புறத்திலிருந்து பின்புறத்தில் செருகி கொள்வார்கள்.
சூரிய வெப்பத்தின் காரணமாக சில சமயங்களில் தலைப்பாகையின் ஷம்லாவை தங்களது முபாரக்கான தலையின் மீது போட்டுக் கொள்வார்கள்.
நபி அவர்கள் தலைப்பாகைக்குள் அவசியம் தொப்பி அணிவார்கள்.
நபி(ஸல்) அவர்கள் (மக்கா வெற்றியின் போது) கறுப்புத் தலைப்பாகை அணிந்தவர்களாக மக்காவில் நுழைந்தனர்" அறிவிப்பவர் : ஜாபிர் இப்னு அப்துல்லா (ரழி) - முஸ்லிம்
(அதே மக்கா வெற்றியின் போது) "நபி(ஸல்) அவர்கள் கறுப்புத் தலைப்பாகை அணிந்த நிலையில் மக்களுக்கு சொற்பொழிவு நிகழ்த்தினார்கள்"ஜஃபர் இப்னு அம்ரு (ரழி) முஸ்லிம்
"நபி(ஸல்) அவர்கள் ஒளூ செய்யும் போது தன் தலைப்பாகையின் மீது மஸஹ் செய்தார்கள்" அனஸ் (ரழி) அபூதாவூத், இப்னு மாஜா

நபி (ஸல்) அவர்கள் ஷஹீத்களின் (உயிர்த்தியாகிகள்) அந்தஸ்தை வர்ணிக்கும் போது , மறுமை நாளில் அவர்கள் உயர்ந்த இடத்தில் இருப்பதை மக்களெல்லாம் 'இப்படி' அன்னாந்து' பார்ப்பார்கள் என்று கூறி, தங்கள் தலையை உயர்த்திக் காட்டினார்கள். அப்போது அவர்களின் தொப்பிக் கீழே விழுந்தது. (இதை உமர்(ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.
இந்த இடத்தில் உமர்(ரழி) அவர்களின் தொப்பி கீழே விழுந்ததா? அல்லது நபி(ஸல்) அவர்களின் தொப்பி கீழே விழுந்ததா? என்பதில் இறுதி அறிவிப்பாளர் ஐயம் கொள்கிறார். நீண்ட ஹதீஸின் ஒரு பகுதி. நூல் : திர்மிதி
ஆக நபிகளாரும், நபித்தோழர்களும் எப்போதும் தொப்பி அணிந்திருந்தனர் என்பது தெளிவாகிறது.
நபி (ஸல்) அவர்கள் வெள்ளை நிறத்தில் தொப்பி அணிவார்கள்.
நபி (ஸல்) அவர்கள் உள்ளூரில் இருக்கும்பொழுது தலையோடு ஒட்டிய தொப்பியை அணிவார்கள்.
நபியவர்கள் பயணத்தில் அணியும் தொப்பி உயரமானதாக பார்டர் உடையதாக இருந்தது. சிலவேளை அதை தொழும்போது, தங்களுக்கு முன்பாக (மறைப்பாக) வைத்துக்கொள்வார்கள்.

தையல் வேலைப்பாடு செய்யப்பட்ட தடித்த தொப்பியையும் நபியவர்கள் அணிந்துள்ளார்கள்

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 11

(நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மோதிரம்)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மோதிரம் எவ்வாறான அமைப்பில் இருந்தது, எந்த அமைப்பில் அதை அவர்கள் அணிந்திருந்தார்கள் என்பது பற்றிய ஸஹீஹான ஹதீஸ்கள் பதிவாகியுள்ளன. அவற்றில் சிலவற்றை இங்கு நாம் குறிப்பிட்டுள்ளோம்.

1.நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அணிந்திருந்தது வெள்ளி மோதிரமாகும். அதில் முஹம்மதுர் ரஸூலுல்லாஹ் என்று பதியப்பட்டிருந்தது.

இப்னு உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கின்றார்கள்: நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வெள்ளி மோதிரம் ஒன்றைத் தயாரித்து அணிந்து கொண்டார்கள். அது (அவர்களின் வாழ்நாளில்) அவர்களது கையில் இருந்தது.
பிறகு அபூபக்கர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் கையில் அது இருந்தது. பிறகு உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் கையில் அது இருந்தது. பிறகு உஸ்மான் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் கையில் இருந்தது.
பின்பு அது உஸ்மான் ரழியல்லாஹு அன்ஹு அவர்களிடமிருந்து "அரீஸ்" என்ற கிணற்றில் விழுந்துவிட்டது. அதில் பொறிக்கப்பட்ட இலச்சினை 'முஹம்மதுர் ரஸூலுல்லாஹ்" என்று இருந்தது. (புஹாரி, முஸ்லிம்)

2. இப்னு உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கின்றார்கள்: நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்க மோதிரம் ஒன்றைத் தயாரித்து அணிந்து கொண்டார்கள். பிறகு அதை(க் கழற்றி) எறிந்தார்கள். பிறகு வெள்ளி மோதிரம் ஒன்றைத் தயாரித்து (அணிந்து) கொண்டார்கள். அதில் "முஹம்மதுர் ரஸூலுல்லாஹ்" எனும் இலச்சினையை பொறித்தார்கள்.
மேலும், "எனது மோதிரத்தில் பொறிக்கப்பட்டிருப்பதைப் போன்று வேறு யாரும் இலச்சினை பொறிக்க வேண்டாம்" என்று கூறினார்கள். அதை அவர்கள் அணியும்போது அதன் பெறுமதிமிக்க கல் (ஹபஷா - எத்தியோப்பியா நாட்டு கல்) உள்ளங்கை பக்கமாக அமையும்படி அணிவார்கள். (முஸ்லிம்)

3. அனஸ் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கின்றார்கள்: நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அரேபியர் அல்லாதவர்களுக்குக் கடிதம் எழுத விரும்பியபோது, "அரேபியர் அல்லாதவர்கள் முத்திரை இல்லாத கடிதம் எதையும் ஏற்கமாட்டார்கள்" என்று அவர்களிடம் கூறப்பட்டது.
எனவே, அவர்கள் வெள்ளி மோதிரம் ஒன்றைத் தயார் செய்துகொண்டார்கள். அவர்களது கையில் அந்த மோதிரத்தின் வெண்மையை இப்போதும் நான் பார்ப்பதைப் போன்றுள்ளது. (புஹாரி, முஸ்லிம்)
4.ஸாபித் அல்புனானீ ரஹிமஹுல்லாஹ் அவர்கள் அறிவிக்கின்றார்கள்: நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இந்த விரலில் மோதிரம் அணிந்திருந்தார்கள் என்று அனஸ் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறித் தனது இடக்கையின் சுண்டு விரலை நோக்கி சைகை செய்தார்கள். (முஸ்லிம்)

5. அனஸ் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கின்றார்கள்: நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மோதிரம் வெள்ளியால் ஆனதாக இருந்தது. அதன் (கல் பதிக்கும்) இடமும் வெள்ளியில் ஆனதாகவே இருந்தது. (புஹாரீ)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மோதிரத்தில் 'முஹம்மதுர் ரஸூலுல்லாஹ்" என்ற வார்த்தை எந்த அமைப்பில் எழுதப்பட்டுள்ளது என்பது குறித்து இப்னு ஹஜர் ரஹிமஹுல்லாஹ் அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள்:
"'நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மோதிரத்தில் கீழிருந்து மேல்நோக்கியே (முஹம்மதுர் ரஸூலுல்லாஹ்) எழுத்தப்பட்டிருந்தது என்று சில அறிஞர்கள் கூறிய கருத்தைப் பொறுத்தவரையில் அதாவது மூன்று வரிகளிலும் அல்லாஹ்வின் பெயர் உயரத்தில் இருந்ததாகவும் முஹம்மத் என்ற பெயர் கடைசியில் இருந்ததாகவும் சில அறிஞர்கள் கூறிய கருத்தைப் பொறுத்தவரையில் எந்த ஹதீஸ்களிலும் இதுபற்றிய தெளிவை நான் காணவில்லை.
மாறாக, அல்இஸ்மாஈலீ என்பவரின் அறிவிப்பு இதன் வெளிரங்கமான கருத்துக்கு முரண்படுகின்றது. அந்த அறிவிப்பில் முஹம்மத் முதலாவது வரியில் இருந்ததாகவும் ரஸூல் இரண்டாவது வரியில் இருந்ததாகவும் அல்லாஹ் மூன்றாவது வரிசையில் இருந்ததாகவும் இடம்பெற்றிருக்கின்றது." (பத்ஹுல் பாரீ: 10/341)
" முஹம்மதுர் ரசூலுல்லாஹ் " - என்று எழுதப்பட்ட ஒரு மோதிரத்தை நபி (ஸல்) அவர்கள் அணிந்திருந்தார்கள். கழிவறைக்குப் போகும்போது அதைக் கழற்றி வைப்பார்கள் " புகாரி , முஸ்லிம், அபூதாவூத், திர்மிதி

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 11

( காருண்யா நபியின் காலணி )
நபியவர்களின் காலனி கட்டையால் செய்யப்பட்டிருந்தது. விரல்கள் பிடித்துக்கொள்ள அதில் ஒரு பிடியும் இருந்தது.
செருப்பு அணியும் போது முதலில் வலது காலை வலது புறத்து செருப்பிலும், பிறகு இடது காலை இடது புறத்து செருப்பிலும் நுழைப்பார்கள்.கழற்றும்போது முதலில் இடது காலை செருப்பில் இருந்து எடுத்து பிறகு வலது காலை எடுப்பார்கள்.
சில சமயங்களில் நின்றவாறும் சில சமயங்களில் அமர்ந்தவாறும் செருப்பு அணிவார்கள் .
நபியவர்கள் செருப்பை எடுக்கும் போது இடது கையின் ஆட்காட்டி விரலால் எடுப்பார்கள்.
நபியவர்கள் தமது செருப்பில் இரண்டு வார்களை வைத்திருந்தார்கள். ஒரு வார் பெருவிரல் ஆட்காட்டி விரலிலும், மற்றொரு வார் மோதிர விரல் சுண்டு விரலிலும் இருக்கும்.
நபியவர்களின் செருப்பின் நீளம் ஒரு சாண் இரண்டு அங்குலமும் ,உள்ளங்களுக்கு அருகிலிருந்து ஏழு அங்குல அகலமும் இருந்தது. இரு வார்களுக்கிடையே விரல் பகுதியில் இரண்டு அங்குல இடைவெளி இருந்தது.
முஹம்மது நபி ஸல்லல்லாஹ் அலைஹி வஸல்லம் அவர்கள் பயன்படுத்திய செருப்பு
(டாப்காப்பி அருங்காட்சியகம், இஸ்தான்புல்-துருக்கி)
(LEATHER SANDALS OF PROPHET MUHAMMED -Topkapi Museum, Istanbul - Turkey)

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 12

( உத்தம நபியின் உறக்கமும், விழிப்பும் )

நபி (ஸல்) அவர்கள் இரவின் ஆரம்பப் பகுதியில் ஓய்வெடுத்துக் கொண்டு நடு இரவில் முதல் பகுதியில் எழுந்து விடுவார்கள்.

யாரேனும் குப்புறப்படுத்திருந்தாலோ,குப்புறப்படுத்து உறங்குவதைப் பார்த்தாலோ மிகுந்த அதிருப்தியை வெளிப்படுத்துவார்கள். மேலும் தமது காலால் அவரைத் தட்டி எழுப்பி விடுவார்கள்.

நபி (ஸல்) அவர்கள் பேரிச்சை ஓலைகள் நிரப்பப்பட்ட தோல் தலையணை, பாய், சாக்கு, நார்களால் ஆன கட்டில் மீதும், வெறும் தோலின் மீதும், கருப்பு ஆடையின் மீதும் ,சில வேளை வெறுந்தரையிலும் ஓய்வெடுத்துள்ளார்கள்.

நபியவர்கள் சாக்கை மடித்து விரிக்கக் கட்டளையிடுவார்கள். அதிலேயே ஓய்வு எடுப்பார்கள் .தூங்கும் பொழுது சன்னமாக குறட்டை விடும் பழக்கம் இருந்தது.

நபி (ஸல்) அவர்கள் சில சமயங்களில் மல்லாந்துப் படுத்து கால்மேல் கால் வைத்தவாறு ஓய்வெடுத்து உள்ளார்கள். ஆனால், இவ்வாறு உறங்கும்போது மறைவிடம் வெளிப்பட்டு விடக்கூடாது, மறைவிடம் வெளிப்படுகின்ற பயமிருந்தால், இவ்வாறு படுத்து உறங்குவதை நபி (ஸல்) அவர்கள் தடுத்துள்ளார்கள்.

இஷாவுக்கு முன் எப்பொழுதும் நபி ( ஸல் ) அவர்கள் உறங்கியதில்லை.

விளக்கேற்றப்படாத வீட்டில் நபி (ஸல்) அவர்கள் இரவில் ஓய்வெடுக்க மாட்டார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஜனாபத் (குளிப்பு கடமையான) நிலையில் ஓய்வெடுக்க விரும்பினால், முதலில் அசுத்தமான இடத்தை கழுவி விட்டு, பிறகு உலூச் செய்து கொண்டு உறங்குவார்கள்.

தூங்குவதற்கு முன் ஒரு உலூச் செய்து விட்டு தூங்குவது நபி (ஸல்) அவர்களின் பொதுவான வழக்கமாக இருந்தது.

இரவில் இடையில் விழித்துவிட்டால் சுய தேவையை நிறைவேற்றி விட்டு, முகம், கைகளை மட்டும் கழுவிக்கொண்டு உறங்குவார்கள்.

தூங்கும் முன் ஆடையை மாற்றிக்கொள்வார்கள். கைலியை அணிந்து கொள்வார்கள். மேலாடையைக் கழற்றி மாட்டி விடுவார்கள். பிறகு ஓய்வு எடுப்பார்கள்.

இரவில் நபி (ஸல்) அவர்கள் ஓய்வெடுக்கும்பொழுது, அவர்களின் கட்டிலின் கீழே மரத்தாலான குவளையொன்று வைக்கப்படும்.இரவில் விழித்தால் அதில் சிறுநீர் கழிப்பார்கள்.

நபியவர்களின் தலைப் பக்கம் சுர்மா கூடு ஒன்று வைக்கப்பட்டிருக்கும். தினமும் இரவில் உறங்கும் போது, சுர்மா இட்டுக் கொள்வார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கருப்பு நிறத்தில் சுர்மா கூடு வைத்திருந்தார்கள்.

நபி ( ஸல் ) அவர்கள் சுர்மா இடும் பொழுது ஒவ்வொரு கண்ணிலும் மூன்று முறை சுர்மா இடுவார்கள். சில சமயங்களில் ஒவ்வொரு கண்ணிலும் இரண்டிரண்டு முறையில் கடைசியில் ஒரு முறை இரு கண்ணிலும் விட்டுக் கொள்வார்கள்.

நபி (ஸல் ) அவர்கள் தூங்கும் போது தமது வீட்டாருடன் சிறிது நேரம் ஏதேனும் பேசிக்கொள்வார்கள். சில சமயங்களில் வீட்டைப் பற்றியும், சில சமயங்களில் பொதுவான முஸ்லிம்களைப் பற்றியும் பேசுவார்கள்.

ஒவ்வொரு இரவிலும் நபி ஸல் அவர்கள் தலையணையில் தலை தலையை வைத்து சூரா இக்லாஸ் , சூரா பலக், சூரா நாஸ் ஆகிவற்றை ஒவ்வொருமுறை ஓதி விட்டு இரு உள்ளங்கைகளையும் குவித்து அதில் ஊதிக்கொள்வார்கள். பிறகு கைகளை திறந்து எதுவரை கை செல்லுமோ அதுவரை உடம்பு முழுவதும் தடவிக் கொள்வார்கள். கைகளை தலை மற்றும் முகத்தில் இருந்து கீழ் நோக்கி தடவத் தொடங்குவார்கள். இவ்வாறு மூன்று முறை செய்வார்கள்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 13

( நபிகளாரின் நறுமணம் )

இரவின் இறுதியில் நபி (ஸல்) அவர்கள் நறுமணம் பூசிக் கொள்வார்கள்.
தூங்கி எழுந்ததும் சுய தேவையை நிறைவேற்றி விட்டு உளூச் செய்வார்கள். பிறகு நறுமணத்தை கொண்டு வரச் செய்து பூசிக்கொள்வார்கள்.

நபிகளாரின் திருச்சமூகத்தில் நறுமணப்பொருட்கள் அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டால் அவசியம் அதை ஏற்றுக் கொள்வார்கள். நறுமணப் பொருளை வேண்டாம் என்று திருப்பித் தருவதை வெறுத்தார்கள்.
" ரைஹான் "(குங்குமப் பூ) என்ற வாசனைப் பொருளை நபியவர்கள் விரும்பி வந்தார்கள் .
நபி (ஸல்) அவர்கள், " ரைஹான் " வாசனைப்பொருள் யாருக்காவது வழங்கப்பட்டால் ,அதனை மறுக்காது பெற்றுக்கொள்ளுங்கள் ஏனெனில் அது சுவாசிப்பதற்கு இலகுவானதாகவும், நல்ல வாசனையுடையதாகும் இருப்பதினாலாகும்.
மருதாணி மரத்துப் பூவை நபி (ஸல்) அவர்கள் மிகவும் விரும்புவார்கள்.
நபி (ஸல்) அவர்களுக்கு " முஸ்க்" (கஸ்தூரி ) மற்றும் '' ஊத்" (ஒருவித வாசனைக் குச்சி) உடைய நறுமணம் எல்லாவற்றையும் விட மிகவும் பிடித்தமானதாக இருந்தது.
நபியவர்கள் தனது முபாரக்கான தலையின் மீதும் வாசனைப் பொருளைத் தடவி வந்தார்கள்.
நபி(ஸல்) அவர்களின் உள்ளங்கையை விட மென்மையான பட்டையோ, (பூ வேலைப்பாடு செய்யப்பட்ட) தூய்மையான பட்டையோ நான் தொட்டதில்லை.
நபி (ஸல்) அவர்களின் (உடல்) மணத்தை விட சுகந்தமான ஒரு நறுமணத்தை நான் நுகர்ந்ததேயில்லை.புஹாரி 3561 அனஸ் (ரலி).

(என் தாயார்) உம்மு சுலைம் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்காக (அவர்கள் மதிய ஓய்வெடுக்கும் பொருட்டு) தோல் விரிப்பு ஒன்றை விரிப்பார்கள். அந்த விரிப்பில் நபி(ஸல்) அவர்கள் மதிய ஓய்வெடுப்பார்கள்.
நபி(ஸல்) அவர்கள் உறங்கிவிட்டால் அவர்களின் (உடலிலிருந்து வழிகின்ற) வியர்வைத் துளிகளையும் (ஏற்கனவே தம்மிடமுள்ள) நபியவர்களின் தலைமுடியையும் எடுத்து ஒரு கண்ணாடிக் குடுவையில் சேகரிப்பார்கள்.
பிறகு அதனை வாசனைப் பொருளில் வைப்பார்கள். (இதையெல்லாம்) நபி (ஸல்) அவர்கள் உறங்கும்போதே (செய்து முடிப்பார்கள்).
புஹாரி : 6281 துமாமா (ரலி).

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 14

(தூய்மை)

அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், “சாபத்திற்குரிய இரு செயல்களைத் தவிர்த்து விடுங்கள்” என்று கூறினார்கள்.
மக்கள், “சாபத்திற்குரிய அவ்விரு செயல்கள் என்ன, அல்லாஹ்வின் தூதரே?” என்று கேட்டார்கள் அதற்கு, “மக்களின் நடைபாதையில், அல்லது அவர்களின் (ஓய்விடங்களான) நிழல்களில் மலம் கழிப்பதுதான்” என்று அல்லாஹ் வின் தூதர் (ஸல்) அவர்கள் விடையளித்தார்கள். முஸ்லிம் : 448
இப்னு அப்பாஸ் (ரலி) கூறியதாவது: நபி (ஸல்) அவர்கள் இரு சவக்குழிகளைக் கடந்து சென்றார்கள். அப்போது “இவர்கள் இருவரும் வேதனை செய்யப்படுகிறார்கள். ஒரு பெரும் (பாவச்) செயலுக்காக இவர்கள் இருவரும்

வேதனை செய்யப்படவில்லை; இவ்விருவரில் ஒருவரோ, சிறுநீரிரிருந்து (தம் உடலையும் உடையையும்) மறைக் காமலிருந்தார்; மற்றவரோ, கோள் சொல்லிரித் திரிந்துகொண்டிருந்தார்” என்று கூறினார்கள்.
பிறகு ஒரு பச்சை பேரீச்ச மட்டையைப் பெற்று அதை இரண்டாகப் பிளந்து ஒவ்வொரு சவக்குழியின்மீதும் ஒன்றை ஊன்றினார்கள். அது பற்றி மக்கள், “ஏன் இவ்வாறு செய்தீர்கள், அல்லாஹ்வின் தூதரே?” என்று கேட்டார்கள். “இவ்விரு மட்டைகளும் காயாத வரை இவ்விருவரின் வேதனை குறைக்கப்படலாம்” என்று நபி (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள் புகாரி : 218

அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது: ஒரு முறை நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் பள்ளிவாசரில் இருந்தோம். அப்போது கிராமவாசியொருவர் வந்து பள்ளி வாசலுக்குள் நின்று சிறுநீர் கழித்தார். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய தோழர்கள் “நிறுத்து! நிறுத்து!’ என்று கூறினர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் “(அவர் சிறுநீர் கழிப்பதை) இடைமறிக்காதீர்கள். அவரை விட்டுவிடுங்கள்” என்று கூறினார்கள். எனவே, நபித்தோழர்கள் அவரை விட்டுவிட்டனர். அவர் சிறுநீர் கழித்து முடித்தார்.
" முஹம்மதுர் ரசூலுல்லாஹ் " - என்று எழுதப்பட்ட ஒரு மோதிரத்தை நபி (ஸல்) அவர்கள் அணிந்திருந்தார்கள். கழிவறைக்குப் போகும்போது அதைக் கழற்றி வைப்பார்கள் " புகாரி , முஸ்லிம், அபூதாவூத், திர்மிதி
பிறகு அவரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அழைத்து
“இந்தப் பள்ளிவாசல்கள் சிறுநீர் கழித்தல்,அசுத்தம் செய்தல் ஆகியவற்றுக்குரிய இடமல்ல. இவை இறைவனை நினைவு கூர்ந்து போற்றுவதற்கும் தொழுவதற்கும், குர்ஆனை ஓதுவதற்கும் உரியதாகும்” என்றோ, அல்லது இந்தக் கருத்திலமைந்த வேறு வார்த்தைகளையோ அவரிடம் கூறினார்கள்.
பிறகு மக்களில் ஒருவரிடம் ஒரு வாளித் தண்ணீர் கொண்டுவரச் சொல்லி அதை அந்தச் சிறுநீர்மீது ஊற்றச் செய்தார்கள். முஸ்லிம் (480)

அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறியதாவது: (ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள், “நீங்கள் சாலைகளில் அமர்வதைத் தவிர்த்து விடுங்கள்” என்று கூறினார்கள்.
.மக்கள், “அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் அங்கு அமராமல் இருக்க இயலாது. அங்கு (அமர்ந்து தான் பல விஷயங்களை) நாங்கள் பேசிக் கொள்கிறோம்” என்று கூறினார்கள்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள், “(அங்கு) நீங்கள் அமர்ந்துதான் ஆக வேண்டும் என்றிருந்தால், சாலைக்கு அதன் உரிமையைக் கொடுத்துவிடுங்கள்” என்று கூறினார்கள்.
மக்கள், “சாலையின் உரிமை என்ன?” என்று வினவினர்.
நபி (ஸல்) அவர்கள், “(அந்நியப் பெண்களைப் பார்க்காமல்) பார்வையைத் தாழ்த்திக்கொள்வதும், (பாதசாரிகளுக்குச் சொல்லாலோ செயலாலோ) துன்பம் தராமரிருப்பதும், முகமனுக்கு (சலாம்) பதிலுரைப்பதும், நன்மை புரியும்படி கட்டளையிடுவதும், தீமையிரிருந்து தடுப்பதும் (அதன் உரிமை) ஆகும்” என்று பதிலளித்தார்கள்.நூல் : புகாரி 2465

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 15.

( தாஹா நபியின் தலை வாருதலும், எண்ணெய் தேய்த்தலும்)

நபி (ஸல்) அவர்கள் தூங்கும்போது மிஸ்வாக் செய்வார்கள். உளூச் செய்வார்கள்.மேலும் தமது முபாரக்கான தலை மற்றும் தாடியை வாரிக் கொள்வார்கள்.

நபி ( ஸல் ) அவர்கள் பயணத்திலிருந்தாலும், உள்ளூரில் இருந்தாலும் எப்போதும் தூங்கும்போது அவர்களின் தலை பக்கத்தில் இந்த ஏழு பொருட்கள் வைக்கப்பட்டிருக்கும்.
1) எண்ணெய், 2) சீப்பு, 3) சுர்மாக் கூடு 4 ) கத்திரிக்கோல்
5) மிஸ்வாக் 6) கண்ணாடி 7) சிறியதொரு குச்சி இதைக் கொண்டு தலை போன்றவற்றை சொரிந்து கொள்வார்கள்.
நபியவர்களின் சீப்பு தந்தத்தால் செய்யப்பட்டு இருந்தது.
நபியவர்கள், முதலில் தாடியிலும் பிறகு முபாரக்கான தலையிலும் எண்ணெய் தடவுவார்கள். பிறகு சீப்பால் வாருவார்கள்.
முபாரக்கான தாடியில் எண்ணெய் தடவும்போது கழுத்தோடு சேர்ந்துள்ள தாடியிலிருந்து தொடங்குவார்கள்.
தலையில் எண்ணெய் தேய்க்கும் பொழுது முதலில் நெற்றிப் பகுதியிலிருந்து ஆரம்பிப்பார்கள்.
நபியவர்கள், வாழ்வின் பெரும்பகுதி தலைமுடி வைத்திருந்தார்கள். சில சமயங்களில் காதின் சோனைக்கு மேல் வரையிலும், சில சமயங்களில் காதின் சோனை வரையும், சில சமயங்களில் அதை விடக் கீழே தோள்பட்டை வரையும் முடி வைத்திருந்தார்கள்.
.
துவக்கத்தில் நபியவர்கள் வாங்கு எடுக்காமல் அப்படியே சீவி விட்டு வைத்திருந்தார்கள். ஆனால் பிற்காலத்தில் வாங்கு எடுத்து சீவலானார்கள்.
தலைமுடிக்கு அதிகமாக எண்ணெய் தேய்க்கும் பழக்கம் இருந்தது. இதனாலேயே பெரும்பாலான நேரங்களில் எண்ணெய் பிசுபிசுப்பு ஆடையில் படக்கூடாது என்பதற்காக தமது முபாரக்கான தலையில் ஒரு துணியை போட்டுக் கொள்வார்கள். இந்தத் துணி எண்ணெய் பிசுபிசுப்பால் எந்நேரமும் நனைந்திருக்கும் .
நபியவர்கள் தண்ணீரால் நனைத்தும் தலை முபாரக்கான தாடியில் சீவிக் கொள்வார்கள்.
நபியவர்கள் கண்ணாடியில் தமது ஒளிமயமான முகத்தை பார்க்கும்போது பின்வரும் வார்த்தைகளால் முபாரக்கான நாவில் தவழும்.
" யா அல்லாஹ் என் படைப்பை (தோற்றத்தை) அழகாக்கியது போல் எனது குணத்தையும் அழகாக்கி வைப்பாயாக ! என் ரிஜ்கை ( உணவை) விசாலமாக்கி வைப்பாயாக !"

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 16.

(நபிகளார் நகம் வெட்டும் முறை)

நபி (ஸல்) அவர்கள் நகம் வெட்டும் பொழுது முதலில் வலது கையின் கலிமா விரலிருந்து வெட்ட ஆரம்பித்து,வலது கையின் சின்ன விரல் வரைக்கும் வெட்டி, அதன் பிறகு வலது கையின் பெருவிரல் வெட்ட வேண்டும்.
அதன் பிறகு இடது கையின் சின்ன விரலிருந்து வெட்ட ஆரம்பித்து அதன் பெருவிரல் வரை வெட்ட வேண்டும்.
அதேபோன்று கால்களில் முதலில் வலது காலின் சின்ன விரலிருந்து வெட்ட ஆரம்பித்து, இடது காலின் சின்ன விரல் வரை வெட்ட வேண்டும்.
இவ்வாறு வெட்டுவது நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் காட்டிய சிறந்த வழிமுறை ஆகும்.
மேலும் நகம் வெட்டிய பிறகு தன் கைகளை உடனே சுத்தம் செய்து கொள்ளவேண்டும் .அவ்வாறு சுத்தம் செய்யாமல் உடலின் அரிக்கின்ற இடத்தில் சொரிந்தால், சொறி, படர்க்கை நோய் ஏற்படுவதற்கு அதிக வாய்ப்புகள் உள்ளன.
(ஆதாரம் : கிதாபுத் துஹ்ஃபா , 2 ம் பாகம் பக்கம் 476)
வியாழன், வெள்ளி மற்றும் திங்கள் ஆகிய தினங்களில் பகல் நேரத்தில் நகம் வெட்டுவது சிறந்ததாகும்.

(கிதாபுஜ்ஜம்மல் 2-பாகம், பக்76)
வெட்டிய நகத்தை புதைப்பது சுன்னத்தாகும்.
(கிதாபுன் நிஹாயா 2- பாகம் பக்கம் 341)
நகம் வெட்டிய பிறகு ஒளுகு செய்வது சுன்னத்தாகும்.
(கிதாப் புஸ்ரல் கரீம், 2- பாகம், பக் 10)
மேலும் கைகளிலோ அல்லது கால்களிலே குறிப்பிட்ட நகங்களை மாத்திரம் வெட்டுவது, அல்லது குறிப்பிட்ட நகங்களை மாத்திரம் வெட்டாமல் இருப்பது மக்ரூஃ (வெறுக்கத்தக்க செயல் ஆகும் )
அதே போன்று இரு கை நகங்களை வெட்டி, கால் நகங்களை வெட்டாமல் இருப்பதும் கூடாத செயலாகும்.
(கிதாபுத் துஹ்ஃபா , 2 ம் பாகம் பக்கம் 475)
நபி (ஸல்) அவர்கள் 15 நாட்களுக்கு ஒரு முறை நகம் வெட்டுவார்கள்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 17

(நபிகளாரின் நடை)
நபி (ஸல்) அவர்கள் நடந்து செல்லும்போது தமது உடலை சற்று முன்புறம் சாய்ந்தவர்களாக மேடான பகுதியிலிருந்து பள்ளத்திற்கு ஒருவர் நடந்து வருவது போல் நடப்பார்கள்
நபியவர்கள் நீள நீளமான எட்டுகளை வைத்து நடப்பார்கள்.
பாதத்தை எடுத்து எடுத்து வைத்து நடப்பார்கள் இழுத்தவாறு நடக்க மாட்டார்கள்.
எவ்வளவு விரைவாக நடப்பார்களென்றால், சாதாரணமாக நடந்து செல்பவர் அவர்களுடன் நடந்து இயலாமலாகி ஆகிவிடுவர்.
நபியவர்கள் ஸஹாபா பெருமக்களோடு நடக்கும்போது, எல்லோருக்கும் பின்னால் கடைசியாக நடப்பார்கள்.
தம்முடைய தோழர்கள் அனைவரையும் முன்னே நடக்க விடுவார்கள். மேலும் எனக்குப் பின்னால் மலக்குமார்களை நடக்க விடுங்கள் என்று கூறுவார்கள்
நபியவர்கள் நடக்கும்போது உடலைத் தளர விட மாட்டார்கள் மாறாக உடலை சுறுசுறுப்பாகவும் சேர்ந்தவாறும் (அதாவது கம்பீரமாகவும் ) வைத்திருப்பார்கள்.
நடக்கும் போது வலது இடது புறங்களில் எப்போதும் பார்க்க மாட்டார்கள். இதனால்தான் சில சமயம் நபியவர்களின் போர்வை மரத்திலோ வேறு ஏதேனும் ஒரு பொருளிலோ சிக்கிக்கொண்டு விடும்.
நபியவர்கள், நடக்கும் போது ஏதேனும் ஒரு பொருளைத் திரும்பிப் பார்க்க வேண்டுமானால், முழு உடலையும் திரும்பி பார்ப்பார்கள் .வெறும் கழுத்தையோ, பார்வையையோ திருப்ப மாட்டார்கள்.
நடக்கும் போது சில சமயம் தமது தோழர்களுடைய கையைப் பிடித்தவாறு நடப்பார்கள்.
நடக்கும் போது நபியவர்கள் தமது கீழாடையை பின்புறமாக (சிறிதளவு ) உயர்த்திக் கொள்வார்கள்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 18

(உளூவின்போது ஒளிரும் உறுப்புகள், உதிரும் பாவங்கள்)

இறை நம்பிக்கையாளர்களே! நீங்கள் தொழுகைக்குத் தயாராகு
ம் போது உங்கள் முகங்களையும் முழங்கைகள் வரை உங்கள் இரு கைகளையும் கழுவிக் கொள்ளுங்கள். உங்கள் தலைகளை (ஈரக் கையால்) தடவி (மஸஹ் செய்து) கொள்ளுங்கள். உங்கள் கால்களை இரு கணுக்கால் வரை (கழுவிக் கொள்ளுங்கள்) (குர்ஆன்:5:6.)

இந்த வசனத்தில் தொழுகைக்காக உளூச் செய்வதை அல்லாஹ் கடமையாக்கியுள்ளான்.எனவே தொழுகை எனும் வணக்கத்தை உளூவின்றி செய்யக் கூடாது. உளூவின்றி செய்தால் தொழுகை நிறைவேறாது. .
அல்லாஹ் மேற்கண்ட வசனத்தில் இட்ட கட்டளையை நபி (ஸல்) அவர்கள் செயல்படுத்திக் காட்டும் போது ஒவ்வொரு உறுப்பையும் மூன்று தடவை கழுவிக் காட்டியிருக்கிறார்கள்.
ஒரு அடியான் உளூ செய்யும்போது, வாய் கொப்பளித்தால் வாயிலிருந்து பாவங்கள் வெளியேறுகின்றன.
மூக்கில் தண்ணீர் செலுத்தினால் மூக்கிலிருந்து பாவங்கள் வெளியேறுகின்றன.
முகத்தைக் கழுவினால், கண்களால் பார்த்துச் செய்த பாவங்கள் அனைத்தும் (முகத்தைக் கழுவிய) நீருடன் அல்லது நீரின் கடைசித் துளியுடன் முகத்திலிருந்து வெளியேறுகின்றன.
அவர் கைகளைக் கழுவும்போது கைகளால் பற்றிச் செய்திருந்த பாவங்கள் அனைத்தும் (கைகளைக் கழுவிய) தண்ணீருடன் அல்லது தண்ணீரின் கடைசித் துளியுடன் வெளியேறுகின்றன.
அவர் கால்களைக் கழுவும்போது, கால்களால் நடந்து செய்த பாவங்கள் அனைத்தும் (கால்களைக் கழுவிய) நீரோடு அல்லது நீரின் கடைசித்துளியோடு வெளியேறுகின்றன.
இறுதியில், அவர் பாவங்களிலிருந்து தூய்மை அடைந்தவராக (அந்த இடத்திலிருந்து) செல்கிறார். என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்)அவர்கள் கூறினார்கள். அபூஹுரைரா (ரலி), முஸ்லிம்-412 மற்றும் நஸாயீ , இப்னு மாஜா
உஸ்மான் (ரலி), உளூச் செய்யும்போது ‘‘நான் ஒரு ஹதீஸை உங்களுக்குச் சொல்லட்டுமா? ஒரு வசனம் மட்டும் இல்லையானால் அதை நான் உங்களுக்குச் சொல்லியிருக்க மாட்டேன்’’ என்று கூறிவிட்டு,
‘‘ஒரு மனிதன் அழகிய முறையில் உளூ செய்து, தொழவும் செய்வானாயின் அவன் தொழுது முடிக்கும் வரை அவனுக்கும் தொழுகைக்கும் இடையிலுள்ள பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன" என்று நபி(ஸல்) அவர்கள் கூறியதை கேட்டிருக்கிறேன்’’ என்றார்கள். இதை ஹும்ரான் அறிவித்தார்.
அது எந்த வசனம் என்று குறிப்பிடும்போது, ‘நாம் அருளிய தெளிவான அத்தாட்சிகளையும், நேர் வழியையும் அதனை நாம் வேதத்தில் மனிதர்களுக்கும் விளக்கிய பின்னரும் மறைப்பவர்களை அல்லாஹ் சபிக்கிறான்; மேலும் அவர்களைச் சபிப்பவர்களும் சபிக்கிறார்கள்’ (குர்ஆன் 02:159) என்ற வசனமாகும்’ என உர்வா கூறினார்.உஸ்மான் (ரலி)யின் அடிமை ஹும்ரான்,புகாரி-160
உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்கள் கூறினார்கள்: ‘‘அல்லாஹ்வின் கட்டளைக்கேற்ப யார் முழுமையாக உளூ செய்கின்றாரோ அவர் தொழும் கடமையாக்கப்பட்ட தொழுகைகள் (ஒவ்வொன்றும்) அவற்றுக்கு இடையே ஏற்படும் (சிறு) பாவங்களுக்குப் பரிகாரமாகும்’’ என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். ஹும்ரான் பின் அபான்,முஸ்லிம்-391

‘நபி (ஸல்) அவர்களுடன் நாங்கள் ஒரு பயணத்தில் இருந்தபோது நபி(ஸல்) அவர்கள் எங்களை விட்டும் பின்தங்கிவிட்டார்கள். நாங்கள் அஸர் நேரத்தை அடைந்தபோது எங்களிடம் வந்து சேர்ந்தார்கள்.
அப்போது நாங்கள் உளூ செய்து கொண்டிருந்தோம். (கால்களைக் கழுவாமல்) கால்களில் ஈரக்கையால் தடவிக் கொண்டிருந்தோம். அப்போது, ‘இத்தகைய குதிங்கால்களை நரகம் தீண்டட்டும்’ என்று இரண்டு அல்லது மூன்று முறை உரத்த குரலில் நபி(ஸல்) கூறினார்கள்’ என அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.புகாரி-163,165, முஸ்லிம் 405
ஒரு முறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ‘‘(உங்கள்) தவறுகளை அல்லாஹ் மன்னித்து, தகுதிகளை உயர்த்தும் செயல்கள் சிலவற்றை உங்களுக்கு நான் சொல்லட்டுமா?’’ என்று கேட்டார்கள்.
மக்கள், ‘‘ஆம்; (சொல்லுங்கள்) அல்லாஹ்வின் தூதரே!’’ என்று கூறினர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ‘‘துக்கமான சூழ்நிலைகளிலும் அங்கத் தூய்மையை முழுமையாகச் செய்வதும், பள்ளிவாசல்களை நோக்கி அதிகமான காலடிகளை எடுத்துவைத்துச் செல்வதும், ஒரு

தொழுகைக்குப் பின் அடுத்த தொழுகையை எதிர்பார்த்துக் காத்திருப்பதும் ஆகும். இவைதாம் கட்டுப்பாடுகளாகும்'' என்று கூறினார்கள். அபூஹுரைரா (ரலி),முஸ்லிம்-421
ஆதம் நபி முதல் இறுதி நபி முஹம்மத் (ஸல்) அவர்கள் வரை அனைவரது சமுதாயங்களும் நிறைந்து நிற்கின்ற மறுமை நாளில், நபி (ஸல்) அவர்கள் தமது சமுதாயத்தை அடையாளங்காண அரியதொரு அடையாளமாக அமைவது நாம் செய்கின்ற உளூ தான்.
தொழுகைக்காக உளூ செய்து கொண்டிருந்த அபூஹுரைரா (ரலி) அவர்களுக்குப் பின்னால் நான் இருந்து கொண்டிருந்தேன். அப்போது அவர்கள் தமது கையை அக்குள் வரை நீட்டிக் கழுவினார்கள்.
நான், ''அபூஹுரைரா அவர்களே! இது என்ன உளூ?'' என்று கேட்டேன்.
அதற்கு அவர்கள், ''ஃபர்ரூகின் மக்களே! (பாமரர்களான) நீங்கள் இங்குதான் இருந்தீர்களா? நீங்கள் இங்குதான் இருக்கிறீர்கள் என்று நான் அறிந்திருந்தால் இவ்வாறு உளூ செய்திருக்கமாட்டேன். என் உற்ற தோழர் (ஸல்) அவர்கள், ''இறைநம்பிக்கையாளரின் உறுப்புகளில் எங்கெல்லாம் உளூவின் நீர் படுகிறதோ அங்கெல்லாம் வெண்மை பரவும்'' என்று கூறுவதை நான் கேட்டுள்ளேன் என்றார்கள். அபூஹாஸிம், நூல்: முஸ்லிம்-420
இந்த ஹதீஸின் மூலம் உளூவின் சிறப்பையும் அது மறுமையில் நமக்கு அடையாளமாகத் திகழ்வதையும் விளங்கிக் கொள்ளலாம். அதனால் அந்த உளூவை நாம் நிறைவாகச் செய்யவேண்டும். நாளை மறுமையில் முஹம்மத் (ஸல்) அவர்களின் உம்மத்தினர் 'குர்ரன் முஹஜ்ஜிலீன்' அதாவது முகம் கைகால்கள் ஒளிமயமானவர்கள் என்று அழைக்கப்படுவார்கள் என்பதைப் பின்வரும் புகாரி ஹதீஸ் விவரிக்கின்றது.
பள்ளிவாசலின் மேல்புறத்தில் அபூஹுரைரா (ரலி) அவர்களுடன் நானும் ஏறிச் சென்றேன். அபூஹுரைரா (ரலி) உளூச் செய்தார். (உளூச் செய்து முடித்ததும்)
'நிச்சயமாக என்னுடைய சமுதாயத்தவர்கள் மறுமை நாளில், உளூவின் சுவடுகளால் முகம், கை கால்கள் ஒளிமயமானவர்களே! என்று அழைக்கப்படுவார்கள். எனவே, உங்களில் விரும்பியவர் தம் ஒளியை அதிகப்படுத்திக் கொள்ளட்டும்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதைச் கேட்டிருக்கிறேன்' என்றார்கள் நுஐம் அல் முஜ்மிர்,புகாரி-136

மறுமை நாளில் ஒளிமயமானவர்களாக வருவார்கள் என்று அல்லாஹ் கூறும் வசனங்களுக்கு இந்த ஹதீஸ் விளக்கமாகவும் உறுதிப்படுத்தக் கூடியதாகவும் அமைகின்றது.
يَوْمَ تَرَى الْمُؤْمِنِيْنَ وَالْمُؤْمِنٰتِ يَسْعٰى نُوْرُهُمْ بَيْنَ اَيْدِيْهِمْ وَبِاَيْمَانِهِمْ بُشْرٰٮكُمُ الْيَوْمَ جَنّٰتٌ تَجْرِىْ مِنْ تَحْتِهَا الْاَنْهٰرُ خٰلِدِيْنَ فِيْهَا‌ؕ ذٰلِكَ هُوَ الْفَوْزُ الْعَظِيْمُ‌ۚ
நம்பிக்கை கொண்ட ஆண்கள், மற்றும் பெண்களின் ஒளி அவர்களுக்கு முன்னேயும் வலப்புறமும் விரைவதை நீர் காணும் நாள்! இன்று சொர்க்கச் சோலைகளே உங்களுக்குரிய நற்செய்தி. அவற்றின் கீழ்ப்பகுதியில் ஆறுகள் ஓடும். அதில் நிரந்தரமாக இருப்பீர்கள். இதுவே மகத்தான வெற்றி.
(குர்ஆன்:57:12).

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 19

(உத்தம நபியின் உரையாடல் )

நபி ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்கள் உரையாடும்போது, எந்தளவு நிறுத்தி நிறுத்திப் பேசுவார்களென்றால், கேட்பவர் மிக எளிதான முறையில் அவற்றை மனனம் செய்து கொள்வார்கள் . அதுமட்டுமல்ல, யாரேனும் நபியவர்களின் வார்த்தைகளை எண்ணிப் பார்க்க விரும்பினாலும் எண்ணி விட முடியும். அந்த அளவிற்கு மிக நிதானமாக பேசுவார்கள்.
உரையாடும்போது பெரும்பாலும் வார்த்தைகளை மூன்று முறை திருப்பித் திருப்பிச் சொல்வார்கள்.

நபியவர்கள் பேசும் போது அடிக்கடி வானத்தின் பக்கம் தன் பார்வையை உயர்த்திப் பார்ப்பார்கள்.
எந்த விஷயத்தையாவது விளக்கிச் சொல்வது அநாகரிகமாக கருதினால், அதனை நபியவர்கள் இலைமறை காயாக (சாடையாகக்) கூறுவார்கள்.
எந்த விஷயத்தையாவது வலியுறுத்திக் கூற வேண்டியிருந்தால், அச்சமயம் நபியவர்கள் சாய்ந்து கொண்டிருந்தால் , உடனே எழுந்து நேராக அமர்ந்து கொண்டு குறிப்பான அந்த வார்த்தை அல்லது அந்த வாக்கியத்தை திரும்பத் திரும்ப கூறுவார்கள்.
உரையாடும்போது நபி (ஸல்) அவர்கள் புன்னகை புரிவார்கள். மேலும் மிகுந்த முக மலர்ச்சியோடு பேசுவார்கள்.
சபையினரை எந்த விஷயத்தைப் பற்றியாவது எச்சரிக்க வேண்டியிருந்தால் , முபாரக்கான நாவால் வார்த்தைகளை மொழிவதோடு கையையும் பூமியிலே தேய்ப்பார்கள் .
நபியவர்கள் பேசும்போது ஒரு விஷயத்தைச் சுட்டிக் காட்ட வேண்டியிருந்தால், முழு கையாலும் சுட்டிக் காட்டுவார்கள். வெறும் விரல்களால் மட்டும் சுட்டிக்காட்ட மாட்டார்கள்.
நபி (ஸல்) அவர்கள் பேசிக் கொண்டிருக்கும்போது எந்த விஷயத்திலாவது ஆச்சரியப்பட்டார்கள் என்றால், உள்ளங்கையை திருப்பிக் கொள்வார்கள்.

சில சமயம் பேச்சின் இடையே ஆச்சரியப்படும் பொழுது வலது உள்ளங்கையை இடது கை கட்டை விரலில் உள்பகுதி மீது அடிப்பார்கள்.
நபியவர்கள் ஆச்சரியப்படும் போது முபாரக்கான தமது தலையை அசைப்பார்கள். மேலும், பற்களால் உதடுகளை அழுத்திக் கொள்வார்கள்.
நபியவர்கள் ஆச்சரியப்படும் பொழுது கையால் தொடை மீது அடிப்பார்கள்.
சிந்தனை வயப்படும் போதோ யோசிக்கும்போதோ குச்சியால் பூமியே கீறுவார்கள்.
ஒரு விஷயத்தை மிகவும் தெளிவுப்படுத்த வேண்டியிருந்தால், கையாலோ ,விரலால் சுட்டிக் காட்டியோ அதைத் தெளிவுப் படுத்துவார்கள்.
உதாரணமாக இரு பொருட்கள் சேர்ந்திருப்பதைத் தெளிவுபடுத்தும்போது ஆட்காட்டி விரலை நடுவிரலோடு சேர்த்து சாடைக் காட்டுவார்கள்.
அல்லது ஒரு பொருளுடைய உறுதியைக் கூறும்போது ஒரு கைவிரல்களை மறு கையின் விரல்களிலே நுழைத்துக் கொள்வார்கள்.
முக்கியமான விஷயத்தைப் பேசும்போது சாய்ந்து கொள்வார்கள். வலக்கையை இடக்கையின் மீது வைத்து, வலது கை விரல்களை இடது கை விரல்களிலே பின்புறமாக நுழைத்துக் கொள்வார்கள்.
நபி (ஸல்) அவர்கள் தெள்ளத் தெளிவாக இலக்கிய நயத்துடன் மொழிபவர்களாக இருந்தார்கள். இதனால் மக்களில் மிக உயர்ந்த அந்தஸ்தில் இருந்தார்கள்.மக்களில் யாரும் அவர்களை அறியாமல் இருக்க முடியாது. நல்லியல்பு பெற்றவர்கள். அவர்களுடைய பேச்சு சரளமாகவும், சொல் தெளிவாகவும், கருத்து சரியானதாகவும் இருக்கும். ஆனால், அதற்காக சிரமம் எடுத்துக் கொள்ள மாட்டார்கள்.
அவர்களது சொல்லாக்கம் முழுமை பெற்றதாக இருக்கும். நூதனமான நுட்பங்களால் சிறப்பிக்கப்பட்டவர்கள். அரபிய மொழிகளின் பல வகைகளைத் தெரிந்திருந்தார்கள்.

ஒவ்வொரு இனத்தாரிடம் அவரவர் பாணியில் அவரவர் தொனியில் உரையாற்றுவார்கள். நகரவாசிகளைப் போல் இலக்கியமாகவும், கிராமவாசிகளைப் போல் எளிய முறையிலும் அவரவர் நடைக்கேற்ப பேசுவார்கள். நன்மையானவற்றைத் தவிர வேறெதுவும் பேசமாட்டார்கள் அவர்கள் பேசினால் சபையோர்கள் அமைதி காப்பர்கள் தங்களின் தலைமீது பறவை அமர்ந்திருப்பது போல் அசையாமல் இருப்பார்கள்.

நபி (ஸல்) அமைதியானால் தோழர்கள் பேசுவார்கள் நபியின் முன் பேசும்போது தோழர்கள் போட்டியிட்டுக் கொள்ள மாட்டார்கள். யாராவது பேசத் தொடங்கினால் அவர் முடிக்கும் வரை அவருக்காக அமைதி காப்பார்கள் முதலில் பேசியவன் பேச்சை ஏற்பார்கள்.
மக்கள் சிரிப்பதைக் கண்டு தானும் சிரிப்பார்கள்.மக்கள் ஆச்சரியப்படுபவற்றைக் கண்டு தானும் ஆச்சரியப்படுவார்கள். புதியவன் முரட்டுப் பேச்சை சகித்துக் கொள்வார்கள். தேவையுடையோரை நீங்கள் பார்த்தால் அவர்களின் தேவையை நிறைவேற்றுங்கள் என்பார்கள் உதவி உபகாரம் பெற்றவர் நன்றி கூறினால் மட்டும் ஏற்றுக் கொள்வார்கள். (ஷமாயிலுத் திர்மிதி, அஷ்ஷிஃபா)

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 20

( உத்தம நபியின் உயரிய பண்புகள் )

சகித்துக் கொள்வதும், பொறுத்துப் போவதும், சக்தியிருந்து மன்னிப்பதும், சிரமங்களைத் தாங்கிக் கொள்வதும் அல்லாஹ் நபி (ஸல்) அவர்களுக்கு வழங்கிய இயற்கைப் பண்புகளாகும். எத்தனையோ அறிவாளிகள், மேதாவிகள் சமயத்தில் சருக்கலாம்.
பொறுமைசாலிக்கும் சமயத்தில் கோபம் தலைக்கேறலாம். இடையூறு அதிகமான போது நபி (ஸல்) அவர்களின் சகிப்புத் தன்மை அதிகரித்தது. மூடனின் வரம்பு மீறல் நபி (ஸல்) அவர்களுக்குப் பொறுமையைத்தான் தந்தது.
ஆயிஷா (ரழி) கூறுகிறார்கள்: இரண்டு வாய்ப்புகள் கொடுக்கப்பட்டால் நபி (ஸல்) அவர்கள் அதில் மிக எளிதானவற்றையே எடுத்துக் கொள்வார்கள். ஆனால், அது பாவமாக இருக்கக் கூடாது. அது பாவமானதாக இருந்தால் அதை விட்டு வெகு தூரம் சென்று விடுவார்கள்.
நபி (ஸல்) அவர்கள் தங்களுக்காகப் பழிவாங்கியதில்லை. எனினும், அல்லாஹ்வின் கண்ணியம் பாழாக்கப்பட்டால் அல்லாஹ்வுக்காக பழிவாங்குவார்கள். மெதுவாக கோபம் வரும். விரைவாக மகிழ்ச்சி அடைவார்கள்.
கணக்கிட முடியாத அளவு தான தர்மங்களை வழங்கி வந்தார்கள். வறுமைக்கு அஞ்சாமல் ஏழை எளியோருக்கு தேவையுடையோருக்கு செலவு செய்தார்கள்.(ஸஹீஹுல் புகாரி)

இப்னு அப்பாஸ் (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் மக்களில் மிகக் கொடைத் தன்மையுடையவர்களாக விளங்கினார்கள். வானவர் ஜிப்ரீல், நபி (ஸல்) அவர்களை ரமழான் மாதத்தில் சந்திக்கும் நாட்களில் மிக அதிகம் நபி (ஸல்) கொடையளிப்பார்கள்.
ஜிப்ரீல் ரமழானுடைய ஒவ்வொரு இரவிலும் நபி (ஸல்) அவர்களைச் சந்தித்து குர்ஆனை பரிமாறிக் கொள்வார்கள். அக்காலங்களில் விரைந்து வீசும் காற்றின் வேகத்தை விட செல்வங்களை வாரி வழங்குவார்கள். (ஸஹீஹுல் புகாரி)
ஜாபிர் (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்களிடம் ஏதாவதொன்று கேட்கப்பட்டு, அவர்கள் அதை இல்லை என்று சொன்னதில்லை. (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)
நபி (ஸல்) அவர்களின் வீரமும் துணிவும் யாரும் அறியாத ஒன்றல்ல. நபி (ஸல்) அவர்கள் மக்களில் மிகுந்த துணிச்சல் கொண்டவர்களாக விளங்கினார்கள்.
எத்தனையோ அபாயமான நிலைகளைச் சந்தித்துள்ளார்கள். தங்களிடமுள்ள வாள் வீச்சு வீரர்களும், அம்பெறியும் வீரர்களும் அவர்களைத் தனிமையில் பலமுறை விட்டுவிட்டு சென்றுவிட்ட போதிலும் நிலைகுலையாமல், தடுமாற்றமில்லாமல், புறமுதுகுக் காட்டாமல், எதிரிகளை எதிர்த்து நின்றார்கள்.

எத்தனையோ வீரர்கள் ஒரு சில நேரங்களில் புறமுதுகு காட்டி ஓடி இருக்கின்றார்கள். ஆனால் நபி (ஸல்) அவர்கள் ஒருபோதும் அவ்வாறு செய்ததில்லை.
அலீ (ரழி) கூறுகிறார்கள்: போர் சூடுபிடித்து கண்கள் சிவந்து விடும்போது, நாங்கள் நபி (ஸல்) அவர்களுக்கருகே சென்று எங்களைப் பாதுகாத்துக் கொள்வோம். எதிரிகளுக்கு அருகில் நபி (ஸல்) அவர்களைத் தவிர எங்களில் எவரும் நெருக்கமாக இருந்ததில்லை. (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம், ஸுனன் அபூதாவூது, ஸுனனுத் திர்மிதி)

அனஸ் (ரழி) கூறுகிறார்கள்: மதீனாவாசிகள் ஒரு நாள் இரவு சப்தத்தைக் கேட்டு பயந்து விட்டனர். சப்தம் வந்த திசையை நோக்கி மக்கள் விரைந்து செல்கையில் அதற்கு முன்பே நபி (ஸல்) அவர்கள் சென்று விவரத்தை அறிந்து திரும்பிக் கொண்டிருந்தார்கள்.
நபி (ஸல்) அவர்கள் கழுத்தில் வாளை தொங்கவிட்டுக் கொண்டு அபூதல்ஹாவுக்குரிய குதிரையில் எவ்வித சேனம் கடிவாளம் ஏதுமின்றி சென்று வந்தார்கள். மக்களைப் பார்த்து 'நீங்கள் அஞ்ச வேண்டியதில்லை பயப்பட வேண்டியதில்லை' என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)
நபி (ஸல்) அவர்கள் மிகக் கூச்சச் சுபாவமுள்ளவராக இருந்தார்கள்.
அபூ சயீத் குத் (ரழி) கூறுகிறார்கள்: திரை மறைவிலுள்ள கன்னிப் பெண்களை விட அதிக நாணமுள்ளவர்களாக நபி (ஸல்) அவர்கள் இருந்தார்கள்.
ஏதாவது பிடிக்காவிட்டால் அதை அவர்களது முகத்திலிருந்து அறிந்து கொள்ளலாம். எவரது முகத்தையும் ஆழமாக உற்று நோக்கியதில்லை. பார்வையைக் கீழ்நோக்கி வைத்திருப்பார்கள். நபி (ஸல்) அவர்கள் மேல் நோக்கி பார்ப்பதை விட கீழ்நோக்கி பார்ப்பதே அதிகம். பெரும்பாலும் கடைக்கண்ணால் பார்ப்பார்கள். வெட்கத்தினாலும் உயர்ந்த பண்பின் காரணத்தாலும் யாரையும் வெறுப்பூட்டும்படி பேச மாட்டார்கள். (ஸஹீஹுல் புகாரி)

ஒருவரைப் பற்றி விரும்பாத செய்தி தங்களுக்குக் கிடைத்தால் அப்போது நபி (ஸல்) அவர்கள் 'சிலர் ஏன் இவ்வாறு செய்கிறார்கள்?' என்பார்கள். அவருடைய பெயரைக் குறிப்பிட்டு சங்கடப்படுத்த மாட்டார்கள்.
'நாணத்தால் பார்வையைத் தாழ்த்துகிறார் ! அவர் மீது பயத்தால் பார்வை குனிகிறது. அவர் புன் முறுவல் பூத்தால்தான் அவருடன் பேச முடியும்.' என்ற ஃபரஸ்தக்கின் கவிக்கு நபி (ஸல்) அவர்களே மிகத் தகுதியுள்ளவர்கள்.
நபி (ஸல்) அவர்கள் மக்களில் 'மிக்க நீதவானாக, ஒழுக்க சீலராக, உண்மையாளராக, நம்பிக்கையாளராகத் திகழ்ந்தார்கள். நபி (ஸல்) அவர்களின் இப்பண்புகளை உடன் இருந்தவர்கள் மட்டுமல்ல எதிரிகள் கூட நன்கு அறிந்து வைத்திருந்தனர்.
நபித்துவம் கிடைக்கும் முன்பே அவர்களை நம்பிக்கைக்குரியவர் (அல்அமீன்)| என்று மக்கள் அழைத்தனர். இஸ்லாம் வருவதற்கு முன்பே அறியாமைக் காலத்தில் கூட மக்கள் தங்களின் பிரச்சனைகளுக்குத் தீர்வு நாடி அவர்களிடம் வருவார்கள்.
அலீ (ரழி) கூறுகிறார்கள்: ஒருமுறை நபியவர்களை பார்த்த அபூஜஹ்ல் 'நாங்கள் உங்களை பொய்ப்பிக்கவில்லை. நீங்கள் சொல்கின்ற மார்க்கத்தைத் தான் பொய்ப்பிக்கிறோம்' என்றான்.
இது விஷயமாக அல்லாஹ் கூறுகிறான்:
(நபியே! உங்களைப் பொய்யரென) அவர்கள் கூறுவது, நிச்சயமாக உங்களுக்குக் கவலையைத் தருகின்றது என்பதை உறுதியாக நாம் அறிவோம். நிச்சயமாக அவர்கள் உங்களைப் பொய்யாக்கவில்லை. ஆனால், இந்த அநியாயக்காரர்கள் அல்லாஹ்வின் வசனங்களையே (பொய்யாக்கி) நிராகரிக்கின்றனர். (அல்குர்ஆன் 6:33)
(மிஷ்காத், ஸுனனுத் திர்மிதி)

அன்றொரு நாள் மன்னன் ஹிர்கல் (ஹெர்குலிஸ்) அவையிலே அபூ ஸுஃப்யான் எதிரியாக இருந்தும் நபியவர்களைப் பற்றிக் கூறிய உரையாடல் நினைவுகூறத் தக்கது.

''அவர் (நபி) இஸ்லாமைப் பற்றிக் கூறுவதற்கு முன்பு, பொய் பேசியுள்ளார் என்று அவர் மீது நீங்கள் பழி சுமத்தி இருக்கிறீர்களா?'' என்று மன்னன் கேட்க, அதற்கு அபூ ஸுஃப்யான், 'அவ்வாறு அவர் ஒருபோதும் பொய் பேசியதில்லை' என்று கூறினார்.

நபி (ஸல்) மற்றவர்களை விட அதிகம் பணிவுடையவர்களாகவும், பெருமை கொள்வதை விட்டு விலகியவர்களாகவும் இருந்தார்கள். மக்கள் அரசர் முன்பு எழுந்து நிற்பது போன்று தன் முன் எழுந்து நிற்பதைத் தடை செய்தார்கள்.

நலிந்தோர்களையும், நோயாளிகளையும் நலம் விசாரிப்பார்கள். ஏழைகளுடன் சேர்ந்திருப்பார்கள். அடிமை விருந்துக்கு அழைத்தாலும் இன்முகத்துடன் ஏற்றுக் கொள்வார்கள். தங்களுடைய தோழர்களுடன் அவர்களில் ஒருவராக அமர்ந்திருப்பார்கள்.

ஆயிஷா (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) தங்களது காலணிகளையும், தங்களது ஆடைகளையும் தாங்களே தைத்துக் கொள்வார்கள். உங்களில் ஒருவர் வீட்டில் வேலை செய்வது போன்றே நபியவர்களும் தங்களுடைய வீட்டில் வேலை செய்வார்கள்.

மனிதர்களில் ஒருவராகவே இருந்தார்கள். தங்களது ஆடைகளைத் தானே சுத்தம் செய்வார்கள். தனது ஆட்டில் தானே பாலைக் கறப்பார்கள். தங்களது வேலைகளைத் தானே செய்து கொள்வார்கள். (மிஷ்காத்)

மற்றெவரையும் விட அதிகம் நபி (ஸல்) வாக்குகளை நிறைவேற்றுபவர்களாக இருந்தார்கள். உறவினர்களுடன் சேர்ந்து நெருக்கமாக வாழ்ந்தார்கள். மக்கள் மீது மிக்க அன்பும் பாசமும் கருணையும் கொண்டவர்களாக இருந்தார்கள். அவர்களுடன் மிக அழகிய முறையில் ஒழுக்கத்துடன் நடந்து கொண்டார்கள்.

மக்களில் மிக உன்னதமான குணம் பெற்றிருந்தார்கள். அவர்களிடம் எந்தக் கெட்ட குணமும் இருந்ததில்லை. அருவருப்பான சொல், செயல் ஏதும் அவர்களிடம் இருந்ததில்லை. சபிக்கும் வழக்கமோ, கடைத் தெருக்களில் கூச்சல் போடும் பேதைமையோ கிடையாது. கெட்டதைக் கெட்டதை கொண்டு நிவர்த்தி செய்ய மாட்டார்கள். மாறாக, அதனை மன்னித்து மறந்து விடுவார்கள்.

எவரையும் தனக்குப் பின்னால் நடக்க அனுமதிக்க மாட்டார்கள். உடையிலோ ஆடையிலோ தங்களுடைய அடிமைகளைக் காட்டிலும் தம்மை உயர்வாக காட்டிக் கொள்ள மாட்டார்கள்.

தங்களுக்கு பணிவிடை செய்தவர்களுக்குப் பணிவிடை செய்வார்கள். தங்களதுப் பணியாளரை சீ..! என்று கூட கூறியதில்லை. ஒரு செயலை செய்ததற்காகவோ, செய்யாமல் போனதற்காகவோ யாரையும் கண்டித்ததில்லை.

நபி (ஸல்) தோழர்களை அதிகம் நேசித்து, அவர்களுடன் அதிகம் பழகுவார்கள். அவர்களுடைய ஜனாஸாக்களிலும் கலந்து கொள்வார்கள். ஏழையை அவரது இல்லாமையினால் இளக்காரமாகப் பார்க்க மாட்டார்கள்.

ஒரு பயணத்தின் போது ஆடு ஒன்றை அறுத்து சமைக்கும்படி கூறினார்கள். ஒருவர் நான் அறுக்கிறேன் என்றார் ஒருவர் உரிக்கிறேன் என்றார் ஒருவர் சமைக்கிறேன் என்றார் நபி (ஸல்) 'அதற்காக நான் விறகுகளை சேர்த்து வருவேன்' என்றார்கள்.

அதற்கு தோழர்கள் 'அல்லாஹ்வின் தூதரே! உங்களுக்கு ஏன் சிரமம்! நாங்கள் இதைச் செய்து கொள்கிறோம்' என்றனர்.

அப்போது நபி (ஸல்) 'உங்களால் செய்ய முடியும் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். இருந்தாலும் உங்களில் என்னைத் தனியே உயர்த்திக் காட்ட விரும்பவில்லை. ஏனெனில், ஒருவர் தனது தோழர்களில் தனியாக வேறுபடுத்திக் காட்டுவதை அல்லாஹ் வெறுக்கிறான்' என்று கூறி விறகுகளைச் சேகரிக்கச் சென்றார்கள். (குலாஸத்துஸ் ஸியர்)

'நபி (ஸல்) நிரந்தரச் சிந்தனையுடையவர்கள்.அவர்களுக்கு ஓய்வு கிடையாது . முரட்டுக் குணம் கொண்டவரும் இல்லை அற்பமானவரும் இல்லை. அல்லாஹ்வின் அருட்கொடை குறைவாக இருந்தாலும் அதை நிறைவாக மதிப்பார்கள் எதையும் இகழமாட்டார்கள் உணவுகளைப் புகழவோ குறைகூறவோ மாட்டார்கள்.
சத்தியத்திற்கு பங்கம் விளைவித்தால் அவர்களுடைய கோபத்திற்கு முன் யாரும் நிற்க முடியாது. பழிவாங்கியே தீருவார்கள். தங்களுக்காக கோபப்படவோ, பழிவாங்கவோ மாட்டார்கள் சந்தோஷம் மிகுந்தால் தங்களது பார்வையைத் தாழ்த்திக் கொள்வார்கள்.
பெரும்பாலும் புன்முறுவலாகவே சிரிப்பார்கள் சிரிக்கும் போது பற்கள் பனிக்கட்டிகளைப் போல் காட்சியளிக்கும் தேவையற்றதைப் பேசாமல் தங்களது நாவைப் பாதுகாத்துக் கொண்டு தேவையானவற்றையே பேசுவார்கள்.

தங்களது தோழர்களிடையே நட்பை ஏற்படுத்துவார்கள் பிரிக்க மாட்டார்கள் ஒவ்வொரு சமுதாயத்தின் சிறப்புக்குரியோர்களைத் தானும் கண்ணியப்படுத்திச் சிறப்பிப்பார்கள். அவரையே அவர்களின் நிர்வாகியாக நியமிப்பார்கள்.
ஒருவர் செய்த தீங்கினால் அவரிடமிருந்து பாதுகாப்பாக இருப்பார்கள், முற்றிலும் அவரை விட்டு முகத்தைத் திருப்பிக் கொள்ள மாட்டார்கள் காணாத தங்களின் தோழர்களைப் பற்றி அக்கரையாக விசாரிப்பார்கள் மக்களிடம் அவர்களின் நிலவரங்களைப் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொள்வார்கள் நல்லதை நல்லது என்றும் சரியானதென்றும் கூறுவார்கள் கெட்டதைக் கெட்டதென்று உரைத்து அதனைப் புறக்கணித்து விடுவார்கள். நடுநிலையாளர்கள் முரண்பட மாட்டார்கள். மக்கள் மறந்து விடுவார்கள் என்பதால் அவர்கள் எதையும் மறவாமல் இருப்பார்கள்.எல்லா நிலைகளிலும் ஆயத்தமாக இருப்பார்கள் சத்தியத்தில் குறைவு செய்யவோ அதை மீறவோ மாட்டார்கள்.

மக்களில் சிறந்தவர்தான் நபியவர்களுடன் இருப்பர். நபியவர்களிடம் மிகச் சிறப்பிற்குரியவர்கள் யாரெனில், மக்களுக்கு அதிகம் நன்மையை நாடுபவர்கள்தான் அதிகம் மக்களுக்கு உதவி உபகாரம் புரிபவர்கள்தான் நபியிடம் மிக்க கண்ணியத்திற்குரியவராக இருப்பர்.
அமர்ந்தாலும் எழுந்தாலும் அல்லாஹ்வையே நினைவு கூர்வார்கள் சபைகளில் தனக்காக இடத்தைத் தெரிவு செய்து கொள்ள மாட்டார்கள் சபைக்குச் சென்றால் சபையின் இறுதியிலேயே அமர்ந்து கொள்வார்கள் அவ்வாறே பிறரையும் பணிப்பார்கள்.

தன்னுடன் அமர்ந்திருக்கும் ஒவ்வொருவருடனும் உரையாடுவார்கள் தன்னைவிட யாரும் நபியவர்களிடம் உயர்ந்தவர் இல்லை, தானே நபியவர்களிடம் நெருக்கமானவர் என்று ஒவ்வொருவரும் எண்ணுமளவுக்கு நடந்து கொள்வார்கள்.
ஒருவர் ஏதாவது தேவைக்காக வந்தால் அவராகச் செல்லும் வரை அவருடன் நபி (ஸல்) இருப்பார்கள் தேவையை கேட்கும் போது அதனை நிறைவேற்றித் தருவார்கள் அல்லது அழகிய பதிலைக் கூறுவார்கள்.
நபி (ஸல்) தங்களது தயாளத் தன்மையையும் நற்குணங்களையும் அனைத்து மக்களுக்கும் விசாலப்படுத்தியிருந்தார்கள். எனவே, மக்களுக்கு ஒரு தந்தையைப் போல் திகழ்ந்தார்கள். உரிமையில் அவர்களிடம் அனைவரும் ஒருவருக்கொருவர் நெருக்கமாக இருந்தார்கள். இறையச்சத்தைக் கொண்டே மக்களுடைய சிறப்புகள் நிர்ணயிக்கப்பட்டன.

கல்வி, கண்ணியம், பொறுமை, சகிப்புத் தன்மை, வெட்கம், நம்பிக்கை அனைத்தும் நிறைந்ததாக அவர்களது சபை இருந்தது. அங்கு உரத்த குரல்கள் ஒலிக்காது கண்ணியம் குலைக்கப்படாது தவறுகள் நிகழாது இறையச்சத்தால்

ஒருவருக்கொருவர் பிரியத்துடன் நடந்துகொள்வர்.
பெயரிவருக்கு கண்ணியமும், சிறியவர்களுக்கு இரக்கமும் காட்டுவார்கள். தேவையுடையோருக்கு உதவி செய்வார்கள் புதியவர்களுடன் நட்புடன் நடந்து கொள்வார்கள். எப்பொழுதும் மலர்ந்த முகமும், இளகிய குணமும், நளினமும் பெற்று இருப்பார்கள்.
கடுகடுப்பானவரோ, முரட்டுக் குணம் கொண்டவரோ, கூச்சலிடுபவரோ, அருவருப்பாகப் பேசுபவரோ, அதட்டுபவரோ, அதிகம் புகழ்பவரோ அல்லர் விருப்பமற்றதைக் கண்டுகொள்ள மாட்டார்கள் நிராசையாகவும் மாட்டார்கள்.
மூன்று குணங்களை விட்டு தங்களைப் பாதுகாத்துக் கொண்டார்கள்:
1) முகஸ்துதி, 2) அதிகம் பேசுவது, 3) தேவையற்றவற்றில் ஈடுபடுவது.
மக்களைப் பற்றி மூன்று காரியங்களைத் தவிர்த்துக் கொண்டார்கள்:
1) பிறரைப் பழிக்க மாட்டார்கள், 2) பிறரைக் குறைகூற மாட்டார்கள், 3) பிறரின் குறையைத் தேடமாட்டார்கள்.
காஜா இப்னு ஜைத் (ரழி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) சபையினில் கண்ணியத்திற்குரிய வர்களாக தோற்றம் அளிப்பார்கள் தங்களது உடல் உறுப்புகளில் எதையும் வெளிக்காட்ட மாட்டார்கள் அதிகம் மௌனம் காப்பார்கள். தேவையற்றதைப் பேசமாட்டார்கள் அழகிய முறையில் உரையாடாத வரை புறக்கணித்து விடுவார்கள் அவர்கள் புன்முறுவலாகவே சிரிப்பார்கள் அவர்களின் பேச்சு தெளிவாக இருக்கும் தேவையை விட அதிகமாகவோ குறைவாகவோ இருக்காது நபியவர்களின் கண்ணியத்தை முன்னிட்டும் அவர்களைப் பின்பற்ற வேண்டும் என்பதற்காகவும் அவர்களுக்கு முன் தோழர்கள் புன்முறுவலாகவே சிரிப்பார்கள். (அஷ்ஷிஃபா)
சுருங்கக் கூறின் நபி (ஸல்) முழுமை பெற்ற தன்மைகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தார்கள். நற்பண்புகளில் அவர்களுக்கு நிகர் கிடையாது. அல்லாஹ் நபியவர்களுக்கு மிக அழகிய முறையில் ஒழுக்கங்களைக் கற்றுக் கொடுத்தான்.

'நிச்சயமாக நீங்கள் நற்குணமுடையவராகவே இருக்கின்றீர்கள்.' (அல்குர்ஆன் 68:4) என்று அவர்களைப் புகழ்ந்து கூறியிருக்கிறான்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 21

(மாநபி பேணிய மலஜல ஒழுக்கங்கள்)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கழிப்பிடத்தில் நுழையும் போது, முதலில் இடது காலை வைப்பார்கள், வெளியேறும்போது வலது காலை வெளியே வைப்பார்கள்.
நபி (ஸல்) அவர்கள் கழிவறைக்குள் நுழையும்போது , "அல்லாஹும்ம இன்னீ அஊது பிக்க மினல் குப்ஸி வல் கபாயிஸி" (இறைவா! ஆண் பெண் ஷைத்தான்களின் தீங்கிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்) என்று கூறுவார்கள். அனஸ் பின் மாலிக் (ரலி) திர்மிதீ 6
நபி (ஸல்) அவர்கள் கழிவறையில் இருந்து வெளியேறும் போது "ஃகுப்ரான(க்)க"((இறைவா!) உன்னிடம் மன்னிப்புத் தேடுகிறேன்) என்று கூறுவார்கள். ஆயிஷா (ரலி) திர்மிதீ 7
தேவையை நிறைவேற்ற அமரும்போது பூமிக்கு மிகவும் நெருக்கமாக ஆகாத வரை தமது மறைவிடத்தை திறக்க மாட்டார்கள்.
சுய தேவையை நிறைவேற்ற காட்டுப் பகுதிக்குச் சென்றால் மக்களுடைய பார்வை எட்டாத படி வெகு தூரம் சென்று விடுவார்கள்.
அது மட்டுமல்ல சில சமயம் ஊரை விட்டு இரண்டு மைல் தூரம் கூட சென்று விடுவார்கள் பிறகு தான் தேவையே நிறைவேற்ற அமர்வார்கள்.

நபியவர்கள் சிறுநீர் கழிக்க விரும்பினால் மிருதுவான பகுதியை தேடுவார்கள். மிருதுவான பகுதி கிடைக்கவில்லையென்றால் குச்சியாலோ வேறு ஏதேனுமொரு பொருளாலோ கடினமான பகுதியைக் குத்தி மிருதுவாக்கி விட்டு, சிறுநீர் கழிப்பார்கள்.
நபியவர்கள் கழிப்பிடம் செல்லும்போது செருப்பு அணிந்து கொண்டும், தலையை மறைத்துக் கொண்டும், மோதிரத்தை கழற்றிவிட்டு செல்வார்கள்.
நபியவர்கள் தமது பரிசுத்த மனைவியரில் யாருடனாவது வீடு கூடினாலும் தமது முபாரக்கான தலையை அவசியம் மூடிக் கொள்வார்கள் .
சிறுநீர் கழிப்பதற்காக குத்த வைத்து அமர்வார்கள். அப்போது இரு தொடைகளுக்கு இடையே மிகுந்த இடைவெளி விடுவார்கள்.
தண்ணீரால் சுத்தம் செய்த பிறகு இடது கையை மண்ணில் தேய்த்துக் கழுவி சுத்தம் செய்வார்கள்.
தேவையை நிறைவேற்ற அமரும்போது, மணல் அல்லது மண் மேடையோ அல்லது கற்குவிலையோ, அல்லது பேரிச்சம் மரம் போன்றவற்றையும் தனக்கு மறைப்பாக ஆக்கிக் கொள்வது மிகவும் விரும்புவார்கள்.
நபி (ஸல்) அவர்கள் தேவையை நிறைவேற்ற அமரும் போது கிப்லாவை நோக்கி அமர மாட்டார்கள். கிப்லாவை பின்னோக்கவும் மாட்டார்கள். வடக்கு நோக்கியோ தெற்கு நோக்கியோ அமர்வார்கள்.
தேவையை நிறைவேற்றிய பிறகு சுத்தப்படுத்த மண் கட்டியை அவசியம் எடுத்துச் செல்வார்கள். அதை எப்போதும் ஒற்றைப் படையான எண்ணிக்கையில் இருக்கும்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 22

(கழிப்பறை ஒழுக்கங்கள்)

" மலஜலம் கழிக்கும் முறை உட்பட உங்களின் நபி உங்களுக்கு கற்றுக்கொடுத்து விட்டார்களா என ஸல்மான் (ரலி) அவர்களிடத்தில் யூத மதத்தை சேர்ந்த ஒருவர் கேட்டபோது,
" ஆம். மல ஜலம் கழிக்கும் போது கிப்லாவை நாங்கள் முன்னோக்கக் கூடாதென்றும், வலது கையினால் சுத்தம் செய்யக்கூடாதென்றும், மூன்று கற்களுக்கு குறைந்த கற்களைக்கொண்டு சுத்தம் செய்யக்கூடாதென்றும், இன்னும் எலும்பு (மிருகங்களின்) விட்டைகளைக் கொண்டு சுத்தம் செய்யக்கூடாதென்றும் எங்கள் நபி எங்களைத் தடை செய்தார்கள்" என ஸல்மான்(ரலி) அவர்கள் விடையளித்தார்கள்.(ஆதாரம்-முஸ்லிம்)
அன்புள்ள சகோதர, சகோதரிகளே! சிந்தித்துப்பாருங்கள்! மல ஜலம் கழிக்கும் முறையைக் கூட நபி (ஸல்) அவர்கள் கற்றுத் தந்திருக்கின்றார்கள் என்றால் இஸ்லாத்தில் கற்றுத்தரவேண்டிய எதையாவது நபியவர்கள் கற்றுத்தராமல் விட்டிருப்பார்களா? இல்லவே இல்லை.
ஆகவே நபியவர்களின் ஒவ்வொரு சுன்னத்துக்களையும் நாம் பேணி நடக்கும் போது மல ஜலம் கழிப்பது கூட நற்கூலிக்கான ஒன்றாக கருதப்படும். நபியவர்களின் ஒவ்வொரு சுன்னத்துக்களையும் பேணி நடப்பதற்கு நம் அனைவருக்கும் அல்லாஹ் வாய்ப்பளிப்பானாக.
முறைகள் :
1. கிப்லாவை முன்னோக்கியோ பின்னோக்கியோ மல ஜலம் கழிக்கக்கூடாது (திறந்த வெளியில்) நீங்கள் மல ஜலம் கழிக்கும் போது கிப்லாவை முன்னோக்கவும் வேண்டாம், பின்னோக்கவும் வேண்டாம் என நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள். (ஆதாரம் - நஸயி)

2. கட்டிடத்திற்குள் கிப்லாவை முன்னோக்கி, பின்னோக்கி மல ஜலம் கழிப்பதில் தவறில்லை.

ஒரு நாள் ஹஃப்ஸா(ரலி) அவர்களின் வீட்டிற்கு மேல் நான் ஏறினேன், அப்போது நபி(ஸல்) அவர்கள் ஷாம் தேசத்தை முன்னோக்கியும், கிப்லாவை பின்னோக்கியும் மல ஜலம் கழிப்பதை நான் பார்த்தேன் என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். (ஆதாரம் - திர்மிதி)

3.கழிவறைக்குள் நுழையும் போது இடது காலை முன் வைத்து பின் வரும் துஆவை ஓத வேண்டும்
اَللَّهُمَّ إِنِّـيْ أَعُوْذُ بِكَ مِنَ الْـخُبْثِ وَالْـخَبَائِث
அல்லாஹும்ம இன்னி அஊது பி(க்)க மினல் குபுஸி வல் கபாயிஸி
பொருள்:- இறைவா! ஆண் பெண் ஷைத்தான்களின் தீங்குகளை விட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.

4.கட்டடமில்லாத வெளி இடங்களில் மல ஜலம் கழிக்கும் போது மற்றவர்கள் பார்க்காத அளவுக்கு தூரமாகிக் கொள்ள வேண்டும்.
நபி (ஸல்) அவர்கள் மலம் கழிக்கச் சென்றால் மற்ற யாரும் அவர்களை பார்க்காத அளவுக்கு (தூரமாக) செல்வார்கள். (ஆதாரம் - அபூதாவூத்)
நபியவர்கள் மல ஜலம் கழிக்க விரும்பினால் பூமியை (அவ்விடத்தை) நெருங்கும் வரைக்கும் தன் ஆடையை உயர்த்தமாட்டார்கள். (ஆதாரம் - திர்மிதி, அபூதாவூத்)

5.வலது கரத்தால் சுத்தம் செய்யக்கூடாது.
உங்களில் ஒருவர் மல ஜலம் கழிக்க நுழைந்தால் தன் ஆண் உறுப்பை தன் வலது கையினால் தொடக்கூடாது என நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள். (ஆதாரம் - அபூதாவூத், நஸாயி)

6.கற்களைக் கொண்டும் சுத்தம் செய்யலாம். ஆனால் தண்ணீரைக் கொண்டு சுத்தம் செய்வதே சிறந்தது.
உங்களில் ஒருவர் மல ஜலம் கழிக்கச் சென்றால் சுத்தம் செய்யக்கூடிய மூன்று கற்களைக் எடுத்துச் செல்லட்டும், அது சுத்தம் செய்வதற்குப் போதுமானது என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (ஆதாரம் - அபூதாவூத்)
தண்ணீரைக் கொண்டு சுத்தம் செய்த குபா வாசிகளை அல்லாஹ் புகழ்ந்து கூறுகிறான்.
" பரிசுத்தமாக இருப்பதையே விரும்பும் (சிறந்த) மனிதர்கள் அதில் இருக்கின்றனர், அல்லாஹ்வும் (இத்தகைய) பரிசுத்தமாக இருப்போரை நேசிக்கின்றான்.குர்ஆன் (9:108)
நபி(ஸல்) அவர்கள் கழிப்பறைக்குள் நுழைந்தால் நானும் என்னைப் போன்ற ஒரு சிறுவரும் நபியவர்களுக்கு தண்ணீர் பாத்திரத்தை சுமந்து செல்வோம். நபியவர்கள் அதைக் கொண்டு சுத்தம் செய்வார்கள். (ஆதாரம் - நஸாயி)

7.மூன்று கற்களை விட குறைந்த கற்களைக் கொண்டும் சுத்தம் செய்யலாம் (மூன்று கற்கள் கிடைக்காதபோது)
நபி(ஸல்) அவர்கள் மல ஜலம் கழிப்பதற்கு செல்லும்போது மூன்று கற்களைக் கொண்டு வரும்படி என்னிடம் கூறினார்கள், நான் இரண்டு கற்களையும் ஒரு விட்டையையும் கொண்டு வந்தேன். இரண்டு கற்களை எடுத்துக் கொண்டு விட்டையை (பார்த்து இது) அசுத்தமான தென்று வீசிவிட்டார்கள் என அபூ உபைதா(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். (ஆதாரம் - திர்மிதி)
8.உட்கார்ந்து கொண்டு மல ஜலம் கழிக்க வேண்டும் (நிர்ப்பந்தமான சூழ்நிலைகளில் தவிர)
நபி(ஸல்) அவர்கள் நின்று கொண்டு சிறுநீர் கழித்ததாக யாராவது உங்களுக்கு கூறினால் அதை நீங்கள் நம்ப வேண்டாம், நபியவர்கள் உட்கார்ந்து கொண்டுதான் சிறுநீர் கழித்திருக்கிறார்கள் என ஆயிஷா(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். (ஆதாரம் - நஸாயி)

9.நிர்ப்பந்தமான சூழ்நிலைகளில் நின்று கொண்டு சிறுநீர் கழிக்கலாம்
நபி(ஸல்) அவர்கள் ஒரு கூட்டத்தாரின் குப்பை மேட்டுக்கு வந்து அதன் மீது நின்று கொண்டு சிறுநீர் கழித்தார்கள். (ஆதாரம் - திர்;மிதி, அபூதாவூத்)

10.மனிதர்கள் களைப்பாறும் இடம், நடைபாதை, மர நிழல் போன்ற இடங்களில் மல ஜலம் கழிக்கக்கூடாது.
மனிதர்கள் களைப்பாறும் இடம், நடைபாதை, நிழல் (போன்ற) இம் மூன்று இடங்களில் மல ஜலம் கழித்து (அதனால் மக்களின்) சாபத்தை பெறுவதை தவிர்ந்து கொள்ளுங்கள் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். (ஆதாரம் - அபூதாவூத்)

11.குளிப்பறையில் சிறுநீர் கழிக்கக்கூடாது.
குளிக்கக்கூடிய குளிப்பறையில் உங்களில் ஒருவர் சிறுநீர் கழிக்கக்கூடாது என நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள். (ஆதாரம் - அபூதாவூத்)
உளு செய்யக்கூடிய குளிப்பறையில் உங்களில் ஒருவர் சிறுநீர் கழிக்கக்கூடாது, காரணம் அதன் மூலமாகத்தான் அதிகமான வஸ்வாஸ் (சந்தேகங்கள்) ஏற்படுகின்றன என நபி(ஸல்) கூறினார்கள். (ஆதாரம் - அஹ்மத்)

12.தேங்கிக் கிடக்கும் தண்ணீரில் சிறு நீர் கழிக்கக்கூடாது.
உளு செய்யக்கூடிய, அல்லது குளிக்கக்கூடிய தேங்கிக் கிடக்கும் தண்ணீரில் சிறுநீர் கழிக்கக் கூடாது என நபி (ஸல்) அவர்கள் தடை செய்துள்ளார்கள். (ஆதாரம் - நஸாயி)

13.மல ஜலம் கழித்த பின் கையை சுத்தம் செய்து கொள்ள வேண்டும்.
நபி(ஸல்) அவர்கள் மல ஜலம் கழித்து (சுத்தம் செய்த) பின் மண்ணில் தன் கையை தேய்த்து (சுத்தம் செய்தார்கள்) (ஆதாரம் - நஸாயி)

14.சிறுநீர் கழிக்கும் போது ஸலாம் சொல்லப்பட்டால் அதற்கு விடையளிக்கக்கூடாது
நபி(ஸல்) அவர்கள் சிறுநீர் கழித்துக் கொண்டிருக்கும் போது அவர்களுக்கு பக்கத்தில் சென்று கொண்டிருந்த ஒரு மனிதர் நபியவர்களுக்கு ஸலாம் கூறினார், அதற்கு நபியவர்கள் விடையளிக்கவில்லை. (ஆதாரம் - நஸாயி)

15.சிறுநீர் கழித்து சுத்தம் செய்யாததினால் கிடைக்கும் தண்டனை.
நபி(ஸல்) அவர்கள் இரண்டு கப்ருகளுக்கு பக்கத்தில் சென்று கொண்டிருக்கும் போது அவ்விரு கப்ருகளிலுள்ளவர்களும் வேதனை செய்யப்படுகின்றார்கள், (ஆனால்) பெரும் விஷயத்தில் அவ்விருவரும் வேதனை செய்யப்படவில்லை, அதில் ஒருவர் சிறுநீர் கழித்தால் சுத்தம் செய்ய மாட்டார், மற்றவர் கோள் செல்லித் திரிபவராக இருந்தார் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். (ஆதாரம் - நஸாயி)

16.கழிப்பறையிலிருந்து வெளியாகும் போது வலது காலை முன்வைத்து பின் வரும் துஆவை ஓத வேண்டும்
غُفْرَانَكَ
பொருள்:- உன்னிடம் பாவ மன்னிப்புத் தேடுகிறேன்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 23

(தூய நபியின் தும்மல்)

எவர் அல்லாஹ்வின் பக்கம் (மக்களை) அழைத்து, ஸாலிஹான (நல்ல)அமல்கள் செய்து: "நிச்சயமாக நான் (அல்லாஹ்வுக்கு முற்றிலும் வழிபட்ட) முஸ்லிம்களில் நின்றும் உள்ளவன் என்று கூறுகின்றாரோ, அவரைவிட சொல்லால் அழகியவர் யார்?" (இருக்கின்றார்?) (ஸூரத்து ஹாமீம் ஸஜ்தா குர்ஆன் 41:33 )

தும்மல் வந்தால் தும்மிய பின்

اَلْحَمْدُ لِلّٰهِ

"அல்ஹம்துலில்லாஹ் "எனக் கூற வேண்டும்.

இதன் பொருள் :எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே.

"அல்ஹம்துல்லாஹ்" என தும்மியவர் கூறுவதைக் கேட்டவர்

يَرْحَمُكَ اللّٰهُ

"யர்ஹமு(க்)கல்லாஹ்"எனக் கூற வேண்டும்.

இதன் பொருள் :அல்லாஹ் உனக்கு அருள் புரிவானாக!

இதைக் கேட்டதும் தும்மியவர்

يَهْدِيكُمُ اللّٰهُ وَيُصْلِحُ بَالَكُمْ

"யஹ்தீ(க்)குமுல்லாஹு வயுஸ்லிஹ் பா(B)ல(க்)கும் "

எனக் கூற வேண்டும்.

இதன் பொருள் : அல்லாஹ் உங்களுக்கு அருள் புரிவானாக! உங்கள் காரியத்தைச் சீராக்குவானாக!

நபி (ஸல்) அவர்களுக்கருகில் இரண்டு மனிதர்கள் தும்மினர். அப்போது அவர்களில் ஒருவருக்கு நபி (ஸல்) அவர்கள் ('யர்ஹமுகல்லாஹ் – அல்லாஹ் உமக்குக் கருணை புரிவானாக' என்று) மறுமொழி கூறினார்கள். மற்றொருவருக்கு மறுமொழி கூறவில்லை. அப்போது அவர்களிடம் (இது குறித்துக்) கேட்கப்பட்டது. அதற்கவர்கள், 'இவர் (தும்மியவுடன்) 'அல்ஹம்துலில்லாஹ்' என்று இறைவனைப் புகழ்ந்தார். அவர், 'அல்ஹம்துலில்லாஹ்' என்று இறைவனைப் புகழவில்லை. (எனவே, இவருக்கு மறுமொழி பகர்ந்தேன். அவருக்கு மறுமொழி பகரவில்லை)" என்று பதிலளித்தார்கள். -அனஸ் (ரலி).புஹாரி 6221

நபியவர்கள் தும்பும்போது சத்தத்தை மிகவும் குறைத்துக் கொள்வார்கள் இப்படி செய்வதையே விரும்பினார்கள் நபியவர்கள் தும்பும்போது தமது முபாரக்கான கரத்தை தனது வாயில் வைத்துக்கொள்வார்கள். சில சமயம் வாயில் மீது துணியை வைத்துக் கொள்வார்கள்.

தும்மியவருக்கு இரண்டு தடவை வரை தும்மலுக்கு பதில் கூறுவார்கள் அதற்குப் பிறகும் அவர் தும்மினால், "இந்த மனிதருக்கு ஜலதோஷம் ஏற்பட்டுள்ளது" என்று சொன்னார்கள். (ஆகையால் இவருக்கு பதில் கூறத் தேவையில்லை) சலமா பின் அல்அக்வஉ (ரலி),முஸ்லிம் 5717, திர்மிதி, அபூதாவூத், நஸயீ.

யாரையேனும் தும்மிய பிறகு "அல்ஹம்துலில்லாஹ்" கூறவில்லையென்றால் நபி (ஸல்) அவர்கள் அவருடைய தும்மலுக்கு பதில் கூற மாட்டார்கள். அவர் இதை முறையிட்டாலும், " சகோதரரே..! நீர் தும்மிய பிறகு அல்லாஹ்வை மறந்து விட்டீர் . அதனால் நாமும் உம்மை மறந்து விட்டோம் " என்று பதில் சொல்லிவிடுவார்கள்

முதல் தும்மலின் வரலாறு...

முதல் மனிதர் நம் பாவா ஆதம் (அலை) அவர்களை படைக்கும்போது ,இறைவன் மண்ணுருவியின் தலையில் தன் ஆவியை ஊதினான் என்றும் அதன் தொப்பூழில் ஊதினான் என்றும் இரு விதமாகக் கூறப்படுகிறது ."நான் என் ரூஹி லிருந்து அவரில் ஊதினேன்" என்றே இறைவன் கூறுகிறான்.

அது தலையிலே நுழைந்தது. என்ன வியப்பு ! அது உடனே சதையும் எலும்புமாக ஆகிவிட்டது. பின்னர் அது நெற்றி, செவி, நாவு ஆகியவற்றிற்கு வந்து பின்னர் உடலிற்குள் புகுந்து, முதுகு வழியாக இடுப்புக்கு வந்தது. அதற்கு மேல் செல்ல வழியில்லாது மீண்டும் மேலே வந்து கண்களிலே இறங்கியது. அவ்வளவுதான். கண்கள் ஒளி பெற்றன. அதன் பின் மூக்கில் இறங்கியது. ஆதம் (அலை) அவர்கள் தும்மினர்கள். அப்பொழுது இறைவன் ஜிப்ரீலை நோக்கி, "ஜிப்ரீலே ..! அந்தத் தும்மலைப் பிடித்து வைத்துக் கொள்ளும் ! நான் அதைக் கொண்டு என் நல்லடியார் ஈஸாவைப் படைக்க விரும்புகிறேன்" என்று கூறினான்.

ஆதம் (அலை) தும்மும் போது "அல்ஹம்து லில்லாஹ் ! "எல்லாப் புகழும் இறைவனுக்கே " என்று கூறியதும் , "ஆதமே ! உம் மீது என் அருள்பொழியட்டும் ! " இதற்காகவே நாம் உம்மைப் படைத்தோம் " என்று கூறினான். ஆதமின் தும்மலிருந்த பிடித்து வைத்த ரூஹைக் கொண்டு ஈஸா (அலை ) அவர்களைப் படைக்கும் போது அவருடைய தாயிடம் ஊதப்பட்டதாக குர் ஆனில் அல்லாஹ் ..
وَالَّتِىْٓ اَحْصَنَتْ فَرْجَهَا فَنَفَخْنَا فِيْهَا مِنْ رُّوْحِنَا وَ جَعَلْنٰهَا وَابْنَهَاۤ اٰيَةً لِّلْعٰلَمِيْنَ
தன் கற்பைக் காத்துக்கொண்ட (மர்யம் என்ப)வரை(யும் நீங்கள் ஞாபகமூட்டுங்கள். நம்முடைய தூதர்) ஜிப்ரீல் மூலம் அவருடைய கர்ப்பத்தில் நாம் ஊதினோம். அவரையும் அவருடைய மகனையும் உலகத்தாருக்கு ஓர் அத்தாட்சியாகவும் ஆக்கினோம். (குர்ஆன் : 21:91)

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 24

(தூக்கத்தின் ஒழுக்கங்கள் )
இரவில் தூங்காமல் அதிக நேரம் விழித்திருப்பவர்களும் காலையில் எழ முடியாமல் அவதிப்படுவோரும் இளம் வயதிலேயே மரணமடைய அதிக வாய்ப்பு உண்டு என்று ஓர் ஆய்வில் தெரியவந்துள்ளது.
பிரிட்டனைச் சேர்ந்த 4,30,000 க்கும் அதிகமானோர் பங்கேற்ற அந்த ஆய்வில் இரவில் தூங்காமல் விழித்திருப்போர் சீக்கிரமாகவே மரணமடைய 10 விழுக்காடு அபாயம் அதிகம் என்று தெரியவந்துள்ளது.
எனவே இரவு என்பதே ஓய்வுக்குதான் என்று அல்லாஹ் குர்ஆனில் கூறுகின்றான்
மேலும், அவனே உங்களுக்கு இரவை ஆடையாகவும், உறக்கத்தை அமைதியாகவும் பகலை உயிர்த்தெழும் வேளையாகவும் ஆக்கினான்.(குர்ஆன் : 25:47)

பொதுவாகவே உறங்கும் போது ஒரு சிலர் சிறிய மின்விளக்கை ஆன் செய்துவிட்டு உறங்குவார்கள் ஒருசிலர் பளிச்சென்று லைட் ஆன் செய்துவிட்டு உறங்குவார்கள்..வேறு சிலர், உறங்கும் போது எந்த வெளிச்சமும் இருக்ககூடாது என்பார்கள்...
இதெல்லாம் ஒருபக்கம் இருக்க இரவு நேரத்தில், லைட் ஆன் செய்து விட்டு, அந்த வெளிச்சத்தில் உறங்கினால் எந்த பாதிப்பை ஏற்படுத்தும் என்பதை ஆய்வில் தெரியவந்துள்ளது.

அமெரிக்கன் அகாடெமி ஆப் ஸ்லீப் மேடிசின் என்ற நிறுவனம் மின்விளக்கை அணைக்காமல் உறங்கினால் ஏற்படும் பாதிப்புகளை குறித்து 20 நபர்களிடம் ஆராய்ச்சி மேற்கொண்டது இதில் 18 முதல் 40 வயது கொண்ட நல்ல ஆரோக்கியமான நபர்களை கொண்டு ஆராய்ச்சி மேற்கொள்ளப்பட்டது.
மூன்று பகல் இரண்டு இரவு நடத்தப்பட்ட இந்த ஆய்வில், மின்விளக்கு அணைக்காமல் உறங்கும் நபர்களுக்கு இன்சுலின் சரிவர சுரக்காமல் இருப்பதை கண்டுபிடிக்கப்பட்டு உள்ளது.

இன்சுலின் சரிவர சுரக்கவில்லை என்றால் அவர்களுக்கு மிக எளிதில் சர்க்கரை நோய் வரும் அபாயம் உள்ளது என தெரியவந்துள்ளது. இதன் காரணமாகத்தான் நபி (ஸல்) அவர்கள் தூங்கும் போது விளக்கை அனைத்துவிட சொல்கிறார்கள்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'

இரவில் நீங்கள் தூங்கும்போது விளக்குகளை அணைத்துவிடுங்கள். கதவுகளைத் தாழிட்டுக் கொள்ளுங்கள். புகாரி 6296

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'

தண்ணீர்ப் பைகளை சுருக்கிட்டு மூடிவிடுங்கள். உணவையும் பானத்தையும் மூடிவையுங்கள் என ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

'குச்சியை (குறுக்காக) வைத்தேனும் உணவையும் பானத்தையும் மூடிவையுங்கள்' என்று (இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் புகாரி 6296

கேஸ் சிலிண்டரை ஆப் செய்யுங்கள்

அபூமூசா (ரலி) அவர்கள் கூறியதாவது:

மதீனாவில் ஒரு வீடு இரவில் (தீ விபத்துக்குள்ளாகி) வீட்டாரோடு எரிந்துவிட்டது. அவர்களின் நிலை குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தெரிவிக்கப்பட்ட போது, "இந்த நெருப்பு உங்களுக்கு ஆபத்தானதே ஆகும். ஆகவே, நீங்கள் உறங்கச் செல்லும்போது நெருப்பை அணைத்து விடுங்கள்" என்று சொன்னார்கள். முஸ்லிம் 4104

ஹள்ரத் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : யார் உளூவுடன் இரவில் உறங்குகிறாரோ அவருடைய உடலருகே ஒரு மலக்கு இரவைக் கழிக்கிறார். அவர் தூக்கத்திலிருந்து விழிக்கும் பொழுது அல்லாஹ்வே உனது இந்த அடிமையை மன்னிப்பாயாக! ஏனெனில் இவர் உளூவுடன் தூங்கினார் என்று அந்த மலக்கு துஆ செய்கிறார் என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (நூல் : இப்னு ஹிப்பான்)

உழைத்துக் களைத்து தரையில் படுத்தால் கூட நன்றாக உறக்கம் வரும்தான். ஆனால் வெறும் தரையில் படுக்கக் கூடாது. பாய் அல்லது ஏதாவது ஒரு மெல்லிய விரிப்பையாவது பயன்படுத்தவேண்டும்.

ஆயிஷா(ரலி) அறிவித்தார்கள்

பேரீச்சம் நாறினால் நிரப்பப்பட்ட பதனிடப்பட்ட தோலே இறைத்தூதர்(ஸல்) அவர்களின் படுக்கை விரிப்பாக இருந்தது.

ஸஹீஹ் புகாரி 6456

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'

நீங்கள் படுக்கைக்குச் சென்றால் உங்கள் கீழங்கியின் ஓரத்தால் விரிப்பைத் தட்டி விடுங்கள். ஏனெனில், அதில் என்ன (விஷ ஜந்து) ஒளிந்திருக்கிறது என்பது உங்களுக்குத் தெரியாது.

ஆயிஷா(ரலி) கூறினார்கள்:

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் படுக்கைக்குச் சென்றால் குல்ஹுவல்லாஹு அஹத், குல்அஊது பிரப்பில் ஃபலக், குல் அஊது பிரப்பின்னாஸ் ஆகிய பாதுகாப்புக் கோரும்

(112, 113, 114) அத்தியாயங்கள் மூன்றையும் ஓதித் தம் உள்ளங்கைகளில் ஊதி அவற்றால் தம் முகத்தையும், தம் இரண்டு கரங்கள் உடலில் எங்கெல்லாம் படுமோ அந்த இடங்களையும் தடவிக் கொள்வார்கள்.

அவர்கள் நோயுற்றபோது நான் அவர்களுக்கு அதைச் செய்து விடும்படி என்னைப் பணிப்பார்கள். புகாரி 5748, 5018, 6319.

தலைகுப்புற கவிழ்ந்து படுப்பது கூடாது. பல மணி நேரம் அசைவில்லாமல் நாம் உறங்குவதால், சிறுநீரிலுள்ள கால்சியம், அமிலம் ஆகியவை திரண்டு சிறுநீரக கற்கள் உருவாவதாக தெரிய வந்துள்ளது. குப்புறப் படுக்கும் போதே அதிகமாக சிறுநீரகக் கற்கள் உருவாகின்றன என்பது குறிப்பிடத்தக்கது
ஒருமனிதர் தன்னுடைய வயிற்றின் மீது (குப்புறப்) படுத்திருப்பதை நபியவர்கள் பார்த்தார்கள். இவ்வாறு படுப்பதை அல்லாஹ் விரும்ப மாட்டான் என்று கூறினார்கள். (அறிவிப்பவர் அபூ ஹூரைரா ரளியல்லாஹு அன்ஹு, நூல் திர்மிதி (2692) அஹ்மது (7524, 7698)

ஹள்ரத் திக்பதுல் ஃகிபாரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நான் பள்ளிவாசலில் குப்புறப்படுத்திருப்பதைக் கண்டு இது என்ன? ஏன் இப்படி படுக்கிறீர்கள்? இது அல்லாஹ்விற்கு பிடிக்காத மேலும் அல்லாஹ் கோபப்படுகின்ற தூக்கமுறையாயிற்றே! என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் என்னைக் கண்டித்தார்கள். (நூல் : இப்னு மாஜா)

ஹள்ரத் அபூதர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : இது (குப்புறப்படுப்பது) நரக வாசிகளின் படுக்கை என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (நூல் : இப்னுமாஜா)
குப்புறப்படுப்பதால் அந்நேரத்தில் செரிமான உறுப்புகள் மற்றும் தலையிலுள்ள சிறு சிறு உறுப்புகள் முறையற்று மாறிவிடுகிறது. எனவே இவ்வாறு தொடர்ந்து படுக்கும் வழமையிருந்தால் அம்மனிதன் எதையுமே மாற்றமாக சிந்திக்கும் பழக்கம் உடையவனாக மாறிவிடுகிறான். (நூல்:சுன்னதே நபவீ அவ்ர் ஜதீத் சையின்ஸ்)
மல்லாக்க படுப்பது மிகவும் நல்லது. இப்படி தூங்குவது தலை, கழுத்து, தண்டுவடம் மற்றும் ஒட்டுமொத்த உடலுக்கும் மிகவும் நல்லது. ஒருவர் இந்த நிலையில் தூங்குவதால் கழுத்து வலி, முதுகு வலி தடுக்கப்படுவதோடு, அமில சுரப்பு குறைவதோடு, உடல்வாகும் நல்லபடியாக இருக்கும். முக்கியமாக இந்த நிலையில் தூங்குபவர்கள் உறுப்புக்கள் ஆரோக்கியமாக இருக்கும் என்று டாக்டர்கள் கூறுகிறார்கள்.

ஹள்ரத் ஹுதைஃபா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :
“நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இரவில் நீங்கள் தூங்கும் போது உங்கள் வலது கையை வலது கன்னத்தில் வைத்துக் கொள்ளுங்கள்” என்றும், வேறொரு அறிவிப்பில் வலது புறமாக நீங்கள் ஒருக் கணித்துப்படுங்கள் என்றும் கூறினார்கள். (நூல் : புகாரி)
இருதயம் மனிதனின் இடது பக்கம் தான் உள்ளது. இடது பக்கம் ஒருக்கணித்து படுப்பதால் (Blood Circulation) இரத்த ஓட்டம் மந்தமாகிவிடுகிறது. வலது பக்கம் ஒருக்கணித்து படுப்பதால் இந்த பிரச்சனை ஏற்படாது மட்டுமின்றி இருதயம் மற்றும் வயிற்றுக் கோளாறிலிருந்து மனிதன் பாதுகாக்கப்படுவதாக யூ.கே. வின் ஓர் ஆராய்ச்சி நிலையம் தகவல் கொடுத்துள்ளது.
மேலும் வலது புறம் ஒருக்கணித்து படுப்பதால் இதயம் தொங்கவிடப்பட்ட பொருளைப் போன்று இருக்கிறது. இதனால் மனிதனுக்கு வரம்பு கடந்த ஆழ்ந்த தூக்கம் ஏற்படுவதில்லை. சிறு சப்தம் கேட்டாலே எழுந்து விடுவான். (நூல் : சுன்னத்தே நபவீ அவ்ர் ஜதீத் சையின்ஸ்)
அப்துல்லாஹ் பின் ஸைத் பின் ஆஸிம் (ரலி) அவர்கள் கூறியதாவது: "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு காலின் மீது மற்றொரு காலைப் போட்டுக்கொண்டு பள்ளிவாசலில் மல்லாந்து படுத்திருப்பதை நான் கண்டேன் " முஸ்லிம் 4266
தூங்கி எழுந்தவுடன் ஓதும் துஆ
اَلْحَمْدُ للهِ الَّذِيْ أَحْيَانَا بَعْدَ مَا أَمَاتَنَا وَإِلَيْهِ النُّشُوْرُ

அல்ஹம்து லில்லாஹில்லதீ அஹ்யானா பஃதமா அமா(த்)தனா வ இலைஹின் னுஷூர்
இதை தூங்கி எழுந்தவுடன் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறுவார்கள். புகாரி 6312, 6314, 6324, 6325, 7395

பொருள்: எங்களை மரணிக்கச் செய்த பின் உயிர்ப்பித்த அல்லாஹ்வுக்கே புகழனைத்தும். மேலும் அவனிடமே (நமது) திரும்பிச் செல்லுதல் உள்ளது.
உங்களில் ஒருவர் விழித்தெழுந்தால் அவர், தாம் உளூச் செய்யும் தண்ணீரில் தம் கையை நுழைப்பதற்கு முன்னர் கழுவிக் கொள்ளட்டும். ஏனென்றால், (தூங்கத்தில்) தம் கை எங்கே இருந்தது என்பதை உங்களில் எவரும் அறியமாட்டார்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். புகாரி 162.
அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்கள்
நீங்கள் தூக்கத்திலிருந்து எழுந்து உளூச் செய்தால் மூன்று முறை (நீர் செலுத்தி) நன்கு மூக்கைச் சிந்தி (தூய்மைப்படுத்தி)க் கொள்ளுங்கள். ஏனெனில், நீங்கள் (தூங்கும் போது) மூக்கின் உட்பகுதிக்குள் ஷைத்தான் தங்கியிருக்கிறான் -அபூ ஹுரைரா(ரலி) புகாரி 3295
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்: நபி(ஸல்) அவர்கள் இரவில் (உறங்கி) எழுந்ததும் பல் துலக்குவார்கள். புகாரி 889. முஸ்லிம் 427

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 25

( பாச நபியின் பயணம் முறைகள் )

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தாம் பயணம் செய்தாலோ, பிறரை அனுப்பி வைத்தாலோ வியாழக்கிழமையன்று கிளம்புவது பொருத்தம் எனக் கருதினார்கள்.
பெரும்பாலும் நபி (ஸல்) அவர்கள் பயணத்தில் விரைவாக வாகனத்தை ஓட்டுவதே விரும்பினார்கள். பயணம் நீண்டதாக இருப்பதாகக் கருதினால் இன்னும் வேகத்தை கூட்டிக் கொள்வார்கள்.
பயணத்தில் எங்கேனும் தங்கிவிட்டு கிளம்ப வேண்டியதிருந்தால்,சுபுஹ் (அதிகாலை) நேரத்தில் கிளம்புவது நபியவர்களின் வழக்கமாக இருந்தது.
பயணத்தில் எவ்வளவு குறுகிய நேரம் தங்கினாலும் இரண்டு ரக்ஆத் தொழாதவரை, அங்கிருந்து கிளம்ப மாட்டார்கள்.
நபி (ஸல்) அவர்கள் வீட்டில் நுழைந்தாலோ , பயணத்தில் எங்கேனும் தங்கினாலோ இரண்டு ரக்ஆத் தொழாத வரை அமர மாட்டார்கள்.
இரவின் ஆரம்பப் பகுதியில் எங்கேனும் தங்கி ஓய்வெடுக்க விரும்பினால், வலப்புறமாக ஒருக்களித்து வலது உள்ளங்கையில் வலது கன்னத்தில் வைத்து உறங்குவார்கள்.
இரவின் பிற்பகுதியில் எங்கேனும் தங்க வேண்டியிருந்தால், வலது முழங்கையை நட்டு வைத்து, அந்தக் கையின் உள்ளங்கையின் மீது முபாரக்கான தலையை வைத்து ஓய்வு எடுப்பார்கள்.
யாரேனும் ஒரு பயணி தமது பயணத்தை முடித்துவிட்டு நபியவர்களின் சமூகத்திற்கு வந்தால், நபியவர்கள் அவரை கட்டித்தழுவி 'முஆனகா' செய்து நெற்றியில் முத்தமிடுவார்கள்.
யாரையேனும் ஒருவரை பயணத்திற்கு வழியனுப்பினால், நபியவர்கள் அவரிடம் துஆச் செய்ய வேண்டிக் கொண்டு,
"சகோதரரே ! உங்கள் துஆவில் எம்மை மறந்து விடாதீர்கள் " என்று கூறுவார்கள்.
நபியவர்கள் பயணத்தை முடித்துவிட்டு, இரவு நேரத்தில் வந்தால், வீட்டிற்கு ஒருபோதும் செல்லமாட்டார்கள். வழியில் எங்கேனும் தங்கிவிட்டு, காலை நேரத்தில்தான் வீட்டிற்குச் செல்வார்கள்.
பயணத்தில் நபியவர்கள் தமது தோழர்களுடன் இருக்கும்பொழுது, ஏதேனும் ஒரு வேலையை அனைவரும் செய்ய வேண்டி இருந்தால் ( உதாரணமாக சமையல் செய்தல் முதலிய வேலைகள்) நபியவர்கள் அவசியம் அதில் பங்கு எடுப்பார்கள்.

ஒரு பயணத்தில் ஓரிடத்தில் தங்கியிருந்தபோது, தோழர்கள் உணவு சமைக்க நாடினார்கள். ஒவ்வொருவரும் தத்தமது பொறுப்பில் ஒரு வேலையை எடுத்துக் கொண்ட பொழுது நபியவர்கள் விறகு பொறுக்கும் வேலையை தமது பொறுப்பில் எடுத்துக் கொண்டார்கள்.
பயணத்திலிருந்து திரும்பியதும் நேராக வீட்டுக்கு செல்லாமல், முதலில் பள்ளிக்குச் சென்று இரண்டு ரக்அத் தொழுது விட்டு பிறகு இல்லம் திரும்புவார்கள்.
பயணத்தை முடித்துவிட்டு ஊருக்குள் நுழைந்ததும் குழந்தைகள் தென்பட்டால், அவர்களை நபியவர்கள் தமது வாகனத்தில் ஏற்றிக் கொள்வார்கள்.சிறிய குழந்தைகளை தமக்கும் முன்னாலும், பெரிய குழந்தைகளை தமக்குப் பின்னாலும் அமர வைத்துக் கொள்வார்கள்.

நபி ( ஸல் ) அவர்கள் பயணத்திலோ, ஜிஹாதிலோ சென்றால், தினமும் தமது தோழர்களில் ஒருவரை தம்முடைய வாகனத்தில் வாகன கூட்டாளியாக வைத்துக்கொள்வார்கள்.
நபி (ஸல்) அவர்கள் பயணம் புறப்படும்போது,வாகனத்தில் நன்றாக அமர்ந்து கொண்டதும்,மூன்று தடவை "அல்லாஹு அக்பர் " கூறிவிட்டு பின்வரும் துஆவை ஓதுவார்கள் .
பயணத்தின் போது ஓதும் துஆ
அல்ஹம்துலிலாஹ் என்று மூன்று தடவை கூறி பின் அல்லாஹ் அக்பர் என்று மூன்று தடவை கூறி பின் அதை தொடர்ந்து
**சுப்ஹானல்லதீ ஸக்கரலனா ஹாதா வமாகுன்னா லஹூ முக்ரினீன் வஇன்னா இலா ரப்பினா லமுன்கலிபூன்**
**அறிவிப்பவர் : இப்னு உமர் (ரலி)**
பொருள்:- இதன் மீது (செல்ல) சக்தியற்றவர்களாக இருந்த எங்களுக்கு இதனை வசப்படுத்தித் தந்த இறைவன் மிக்க பரிசுத்தமானவன். மேலும் நிச்சயமாக நாம் நம்முடைய இறைவனிடத்தில் திரும்பிச் செல்பவர்கள்.
இறைவா! இந்த பயணத்தில் நிச்சயமாக நன்மையையும், இறையச்சத்தையும் உன்னிடத்தில் கேட்கிறோம்.
இன்னும் செயல்களில் நீ பொருந்திக் கொள்ளக்கூடிய செயலையும்கேட்கிறோம்.
இறைவா! இப்பயணத்தை எங்களுக்கு இலேசாக்கி வைப்பாயாக! அதன் தூரத்தை எங்களுக்கு சுருக்கி வைப்பாயாக!
இறைவா நீதான் பிரயாணத்தில் எங்களுக்கு தோழன்.எங்கள் குடும்பத்தில் நீயே பாதுகாவலன்.
யா அல்லாஹ்! பிரயாணத்தின் கஷ்டங்களை விட்டும் கவலைகளை விட்டும், எங்கள் செல்வம்,குடும்பம்,பிள்ளைகள் ஆகியவற்றில் ஏற்படும் தீமைகளை விட்டும் உன்னிடம் பாது காவல் தேடுகிறோம்.
பயணத்தை முடித்து விட்டு திரும்பியதும் இதே துஆவை மீண்டும் ஓதுவார்கள்.அத்துடன் இந்த வார்த்தைகளையும் சேர்த்துக் கொள்வார்கள்.
பொருள்: "நாங்கள் திரும்ப கூடியவர்கள். தவ்பாச் செய்யக்கூடியவர்கள். வணங்கக் கூடியவர்கள். எங்கள் இரட்சகனை புகழை கூடியவர்கள்.
பயணத்தில் மேடான பகுதியில் வாகனம் ஏறும் பொழுது மூன்று முறை "அல்லாஹ் அக்பர் என்றும், பள்ளமான பகுதியில் இறங்கும் பொழுது மூன்று முறை "சுபஹானல்லாஹ் " கூறுவார்கள் .
பயணத்தில் இரவாகிவிட்டால் , இந்த துஆவை ஓதுவார்கள்
'பொருள் : " பூமியே ! என் இரட்சகனும், உன் இரட்சனும் அல்லாஹ்தான். உன் தீங்கை விட்டும், உன்னில் படைக்கப்பட்டுள்ளவற்றின் தீங்கை விட்டும், உன் மீது ஊர்ந்து செல்பவற்றின் தீங்கை விட்டும், அல்லாஹ்விடம் நான் பாதுகாவல் தேடுகிறேன்.

மேலும், சிங்கத்தை விட்டும்,கருநாகத்தை விட்டும், பாம்பு, தேள் ஆகியவற்றை விட்டும், ஊரில் குடியிருப்பவற்றின் தீங்கை விட்டும், தந்தையின் தீங்கை விட்டும், அவர் பெற்றெடுத்ததின் தீங்கை விட்டும், அல்லாஹ்விடம் நான் பாதுகாவல் தேடுகிறேன்'' என்று துஆ செய்வார்கள்
தாம் உங்க போகின்ற ஊர் தூரத்திலேயே தென்பட்டு விட்டால்,
"யா அல்லாஹ் ! இவ்வூரில் எங்களுக்கு பரக்கத் செய்வாயாக என்று மூன்று முறையும்,
அவ்வூரில் நுழையும்போது, " யா அல்லாஹ் ! இவ்வூரின் பழங்களை எங்களுக்கு உணவாக தருவாயாக ! இவ்வூர் வாசிகளுக்கு எங்களைப் பிரியம் உள்ளவர்களாக ஆக்குவாயாக! இவ்வூரிலுள்ள நல்லோர்களை எங்களுக்கும் பிரியமானவர்களாக ஆக்குவாயாக ! என்று துஆ கேட்பார்கள்
யாரையேனும் பயணத்திற்கு வழியனுப்பினால்,

பொருள் : உமது தீனையும், உமது அமானிதப் பொருள்களையும், உமது பணிகளின் முடிவுகளையும் அல்லாஹ்விடமே நான் ஒப்படைக்கிறேன்" என்று துஆ செய்து அனுப்பி வைப்பார்கள் .
நபி ( ஸல் ) அவர்கள் பயணத்திலிருந்து திரும்பி தமது வீட்டாரிடம் செல்லும்போது..இந்த துவாவை ஓதுவார்கள்.
பொருள்: " நாங்கள் (பாவங்களுக்கு) துவா செய்கிறோம். எங்கள் இரட்சகனிடம் தவ்பாச் செய்கிறோம். நாங்கள் திரும்பி வந்துள்ளோம். அவன் எங்களுக்கு எந்தப் பாவத்தையும் மன்னிக்காமல் விட்டு வைக்க மாட்டான் " என்று கூறுவார்கள்.

## பத்ரு ஸஹாபாக்களின் சிறப்புகள்

ஷுஹதாக்களின் மகத்துவம்

وَلَا تحسبن الذين قتلوا فى سبيل الله اموانا بل احيآء عند ربهم يرزقون

'அல்லாஹ்வுடைய பாதையில் வெட்டுப்பட்டு ஷஹீதானவர்களை இறந்தவர்கள் என எண்ணாதீர்கள். அவர்கள் தங்களின் இறைவனின் சன்னிதானத்தில் உயிருள்ளவர்களாவும், உணவளிக்கக் கூடியவர்களாகவும் இருக்கிறார்கள். (அல்குர்ஆன் 2: 154)

அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் மேற்கூறிய வசனம் குறித்து விளக்கம் கேட்'ட போது நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அறிவித்ததாக கீழ்காணும் ஹதீதை குறிப்பிட்டார்கள்:
'ஷுஹதாக்களுடைய உயிர்களானது சுவர்க்கத்தில் உள்ள பச்சை நிற பறவையின் வயிற்றில் வைக்கப்பட்டு, சுவர்க்கத்தில் நினைத்த இடங்களை சுற்றி வரும். பிறகு இறைவனின் சிம்மாசனத்தில் தொங்க விடப்பட்ட தங்கக் கூண்டில் தஞ்சமடையும் என்று கூறினார்கள். இத்தகைய மாபெரும் பாக்கியம் பத்ரு ஸஹாபாக்களுக்கும் கிடைத்தது.
நூல்: புகாரி, முஸ்லிம்.
மேலும் ஷுஹதாக்களைப் பற்றி நபிகளார், ' ஷுஹதாக்களை இறைவன் ஐந்து சிறப்புக்களை கொண்டு கண்ணியம் செய்திருக்கிறான். அதுபோன்ற சிறப்பை நான் உட்பட எந்த நபிமாரும் பெறவில்லை. அவையாவன:
1.எல்லா நபிமார்களின் உயிர்களையும் மௌத்தின் அதிபதி இஸ்ராயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள்தான் கைப்பற்றுவார்கள். ஆனால் ஷுஹதாக்களின் உயிர்களை அல்லாஹ்வே கைப்பற்றுவான்.
2.அனைத்து நபிமார்களும் மரணமானபின் குளிப்பாட்டப்படுவார்கள். அவ்வாறே நானும் குளிப்பாட்டப்படுவேன். ஷுஹதாக்கள் குளிப்பாட்டப்பட மாட்டார்கள். வெட்டுண்ட காயங்களுடன் அடக்கப்படுவார்கள். இந்த உலகின் தண்ணீர் பக்கம் அவர்கள் தேவையாக மாட்டார்கள்.

3. எல்லா நபிமார்களும் மரணித்த பின்பு கஃபனிடப்படுவார்கள். நானும் கஃபனிடப்படுவேன். ஆனால் ஷுஹதாக்கள் கஃபனிடப்பட மாட்டார்கள். அவர்கள் போரில் அணிந்திருந்த உடைகளுடனே அடக்கம் செய்யப்படுவார்கள்.
4. எல்லா நபிமார்களும் மரணித்த பின்பு அவர்களை மரணித்தவர்கள் என்று கூறப்படும். நானும் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மரணித்து விட்டார்கள் என்று கூறப்படும். ஆனால் ஷுஹதாக்கள் மரணித்து விட்டால் அவர்களை மரணித்தவர்கள் என்று சொல்லாதீர்கள் என்று ஒரு திருமறைவசனத்திலும், மரணித்தவர்கள் என்று எண்ணாதீர்கள் என்று மேற்கூறிய வசனத்திலும் இறைவனே கூறுகிறான்.
5. எல்லா நபிமார்களுக்கும் மறுமைநாளில் சிபாரிசு செய்யும் உரிமை வழங்கப்படும். ஆனால் ஷுஹதாக்கள் ஒவ்வொரு நாளும் சிபாரிசு செய்து கொண்டு இருக்கிறார்கள் என நபி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். –நூல்: தப்ஸீர் குர்துபி 15183
சிறிது நேரம் இறைவன் பாதையில் சண்டை செய்வது 50 தடவை நபிலான ஹஜ்ஜு செய்வதை விட சிறந்தது. –அல்ஹதீது.

பத்ரு போர் நடக்க காரணங்கள்:-
நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மதீனாவில் இருந்த போது அவர்களுடன் முனாபிக்குகள் என்னும் நயவஞ்சகர்கள் (உள்ளொன்று வைத்து புறமொன்று பேசுபவர்கள்) ஸஹாபாக்கள் போல் நடித்து கொண்டு இருந்தார்கள்.
இவர்கள் மக்காவிலுள்ள குறைஷிகளுக்கு நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மக்காவை நோக்கி படை எடுக்க ஆயத்தமாகிக் கொண்டிருக்கிறார்கள் என்று பொய்யான செய்திகளை அனுப்பிக் கொண்டிருந்தனர். இதனால் மக்கத்து குறைஷிகள் போருக்குத் தக்க தருணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.
இதுசமயத்தில் குறைஷித் தலைவர்களில் ஒருவரான அபூசுப்யான் மக்காவாசிகளான முப்பது பேருடன் வியாபார நிமித்தமாக சிரியா சென்று பெரும் பொருட்களோடு மக்கா திரும்பிக் கொண்டிருந்தார். அவரது குழுவை வழிமறித்து முஸ்லிம்கள் கொள்ளை அடிக்கப் போவதாக வதந்தி நிலவியது.
இதனையறிந்த அபூசுப்யான் மக்காவிற்கு தூதனுப்பி பாதுகாப்பு கேட்டிருந்தார். இவர்கள் மக்காவிற்கு மதீனாவின் வழியாக செல்லும் வழமையான வழியை விட்டு வழியை மாற்றி செங்கடல் வழியாக சென்று மக்காவை சென்றடைந்தனர்.
வர்த்தகக் குழுவிற்கு பாதுகாப்பு தேவை என்ற செய்தி குறைஷி காபிர்களுக்கு நல்ல வாய்ப்பாக அமைய ஆயிரம் பேர் கொண்ட படையை திரட்டி வர்த்தக பாதுகாப்புக் குழு என்ற பெயரில் புறப்பட்டார்கள். எவ்வித இடையூறுமின்றி வழியை மாற்றி மக்கா சென்றடைந்த அபூசுப்யான் 'மக்காவிற்கு திரும்பி விடுங்கள்' என்று செய்தியனுப்பினார். அபூஜஹல் அதை நிராகரித்து பத்ரில் படையை இறக்கினான்.
குறைஷிகள் படை திரட்டி வருகிறார்கள் என்ற செய்தி கேள்விப்பட்டவுடன் பெருமானார் அவர்களும் தற்பாதுகாப்புக்காக 313 ஸஹாபாக்களைக் கொண்டு படை ஏற்படுத்தி புறப்பட்டார்கள். படை பத்ரில் பாளையம் இறங்கியது. இது ஹிஜ்ரி இரண்டாம் ஆண்டு ரமலான் பிறை 17 அன்று நடைபெற்றது. இஸ்லாத்தில் நடைபெற்ற முதல் போர் இது.
முஸ்லிம்களின் படைப்பிரிவில் 3 குதிரைகளும், 9 உருக்குச் சட்டைகளும், 8 வாளாயுதங்களும், 70 ஒட்டகங்களும் இருந்தன.
எதிரிகள் படையில் 100 குதிரைகளும், 700 ஒட்டகங்களும் ஏராளமான யுத்த தளவாடங்களும் இருந்தன.
இரண்டு தரப்பினர்களின் பலங்களையும் சீர்தூக்கி பார்த்து விட்டு, நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இறைவனிடம் வெற்றிக்காக பிரார்த்தனை செய்தார்கள். அல்லாஹ் அவர்களின் துஆவை ஏற்றுக் கொண்டான். இப்போரில் சொந்த பந்தம் என்று பார்க்காமல் முஸ்லிம்கள், காபிர்கள் என்றே பார்க்கப்பட்டது.

நோன்பு கடமையாக்கப்பட்ட பிறகு நடைபெற்ற இப்போரில் முஸ்லிம்கள் நோன்பு நோற்றிருந்தார்கள். போhக்களத்தில் ஐவேளைத் தொழுகை,திக்ரு, பிக்ரு, தராவீஹ் தொழுகை மற்ற இபாதத்துக்கள் தவறாமல் நடைபெற்று வந்தன.
இப்போரில் அல்லாஹ் வெற்றியை முஸ்லிம்களுக்கு கொடுத்தான். முஸ்லிம்கள் தரப்பில் 14 பேர் ஷஹீதானார்கள். அவர்களின் திருநாமங்கள்:

1. முபஷ்ஷிர் இப்னு அப்துல் முன்கதிர் ரலியல்லாஹு அன்ஹு
2. ரபீஃஉ இப்னு முஅல்லா ரலியல்லாஹு அன்ஹு
3. ஸஃது இப்னு கய்சமா ரலியல்லாஹு அன்ஹு
4. யஜீது இப்னு ஹாரிஸ் ரலியல்லாஹு அன்ஹு
5. உபைதா இப்னு ஹாரிது ரலியல்லாஹு அன்ஹு
6. ஆகில் இப்னு புகைரு ரலியல்லாஹு அன்ஹு
7. உமைர் இப்னு ஹுமாம் ரலியல்லாஹு அன்ஹு
8. முஅவ்விது இப்னு ஹாரிஸ் ரலியல்லாஹு அன்ஹு
9. திஷ்ஷிமாலைன் இப்னு அம்து அம்ரு ரலியல்லாஹு அன்ஹு
10. மிஹ்ஜா இப்னு சாலிஹ் ரலியல்லாஹு அன்ஹு
11. உமைர் இப்னு அபீவக்காஸ் ரலியல்லாஹு அன்ஹு
12. ஹாரிஸா இப்னு சுராக்கா ரலியல்லாஹு அன்ஹு
13. சஃப்வான் இப்னு வஹப் ரலியல்லாஹு அன்ஹு
14. அவ்ஃப் இப்னு ஹாரித் ரலியல்லாஹு அன்ஹு.

குறைஷிக் காபிர்களில் 70 பேர் மடிந்தார்கள். இந்த சடலங்களை பத்ரு என்ற கிணற்றில் போட்டு மறைக்கும்படி பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கட்டளையிட்டார்கள். அதன்படி செய்யப்பட்டது. இரண்டு நாட்களுக்குப் பின் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அக்கிணற்றுக்கு சென்று செத்த மய்யித்துகளிடம் பேசினார்கள்.

அபூஜஹலே, உமையாவே, உத்பாவே எங்களுக்கு எங்கள் நாயன் சொன்ன வாக்குறுதியை உண்மையாகவே பெற்றுக் கொண்டோம். உங்களின் கடவுள்களின் வாக்குறுதியை நீங்கள் பெற்றுக் கொண்டீர்களா? நீங்கள் எங்களுக்கு செய்த பலவித இன்னல்கள் துன்பங்கள் இவைகளுக்குரிய தண்டனையை இப்பொழுது பெறுகிறீர்கள். இப்பொழுதாவது என்னைப் பற்றியும் நான் சொன்ன ஆண்டவனைப் பற்றியும் நீங்கள் விளங்கிக் கொண்டீர்களா? என்று கேட்ட போது,
அவர்கள் அருகில் நின்ற உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் நாயகமே! மரணித்து விட்டவர்கள் எப்படி உங்கள் வார்த்தையைக் கேட்பார்கள்? என்று வினவ அதற்கு நாயகம் அவர்கள் உங்களுக்கு பதில் சொல்ல முடியும். அவர்களுக்கு பதிலுரைக்க முடியாது. இதுதான் உங்களிருவருக்கும் உள்ள வித்தியாசம் என்று சொன்னார்கள்.

பத்ரில் ஏற்பட்ட சம்பவங்கள்:
ஹழரத் ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பத்ரு யுத்தம் நிகழ்வதற்கு முன் அந்தப் போரில் இறந்து போகக் கூடிய சிலரின் பெயர்களையும் அவர்கள் பத்ரு களத்தில் இன்ஷாஅல்லாஹ் இன்னின்ன இடங்களில் இறப்பார்கள் என்பதையும் தங்களின் கையிலுள்ள அசாவினால் கோடு போட்டுக் காட்டினார்கள்.

இதை ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள்: முதல் நாள் நபி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எதிரிகளில் யார் யார் எவ்விடங்களில் கொல்லப்படுவார்கள் என்பதைக் கோடு போட்டுக் காண்பித்தார்களோ அவரவர்கள் அவ்வவ்விடங்களில் கொல்லப்பட்டார்கள். இதை என் கண்ணால் பார்த்தேன் என்று உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் உரைத்தார்கள்.
ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கோடிட்டுக் காட்டிய இடங்களிலிருந்து ஒரு சிறு துரும்பளவாவது கூட கொல்லப்பட்ட இடங்கள் மாறவில்லை. இதுவும் பத்ரு யுத்தத்தில் நடந்த மிகப் பெரிய ஆச்சரியங்களில் ஒன்றாகும். – முஸ்லிம்.

பத்ரு யுத்தத்தின் போது நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் , ஒரு கூடாரத்தில் அமர்ந்து கொண்டு தமது தோழர்களை நோக்கி, 'எழுந்திருப்பீராக! வானத்தையும், பூமியையும் விட விசாலமானதும் தக்வா கொண்டவர்களுக்கென்றே தயாரிக்கப்பட்டதுமான சுவர்க்கத்தின்பால் விரைவீராக!' என்று கூறினார்கள்.
இதனைக் கேட்டுக் கொண்டிருந்த ஹழ்ரத் உமைர் இப்னு ஹம்மாம் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் 'ஆஹா, ஆஹா' என்றனர். அண்ணலார் அவர்கள் உமைரை நோக்கி, எதற்காக ஆஹா ஆஹா என்று கூறினீர் என்றார்கள். அதற்கு அவர்கள், 'அல்லாஹ்வின் தூதர் அவர்களே! அத்தகையவர்களில் நானும் ஒருவனாக இருக்க விருப்பப்படுகின்றேன்' என்று பதில் கூறினார். உடனே அண்ணலார் அவர்கள் நீரும் அவர்களில் ஒருவராயிருக்கிறீர்கள்' என்றார்கள்.

ஹஜ்ரத் உமைர் ரலியல்லாஹு அன்ஹு ஒரு பையிலிருந்து சில பேரீத்தங்கனிகளைப் பசியின் கொடுமையைத் தணிக்கத் தின்றார்கள். ஓரிரண்டு கனிகளைத் தின்றதும் அவர்கள் கையிலிருக்கும் கனிகளைத் தின்று தீர்க்கும் வரை காத்திருப்பதென்பது இவ்வுலகில் நீண்ட காலம் ஜீவித்திருப்பதைப் போலிருக்கிறது. எனக்கு அதுவரை என்னால் எப்படிப் பொறுத்துக் கொண்டிருக்க முடியும்' என்று கூறியவாறு கையிலிருந்த கனிகளை தூர எறிந்து விட்டு கரத்திலே வாளேந்தி பத்ரு போரிலே உடலை விட்டு உயிர் பிரியும் வரை போராடி ஷஹீதாய் விட்டார்கள்.
பத்ரு போரில் முதன் முதலாக ஷஹீதானவர் மிஹ்ஜஹ் என்ற கறுப்பு நிற அடிமையாகும். உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கறுப்பு நிற மனிதர்களுக்கு தலைமைப் பதவி கொடுத்து கௌரவியுங்கள். ஏனெனில் நான்கு கறுப்பு நிற மனிதர்கள் சொர்க்கத்தில் தலைவராக இருப்பார்கள்.

1.எத்தியோப்பியா நாட்டு அதிபரான கருப்பர் இன மக்களின் மன்னர் நஜ்ஜாஷி
2. லுக்மானுல் ஹகீம் அலைஹிஸ்ஸலாம்.
3. பிலால் ரலியல்லாஹு அன்ஹு
4. பத்ருப் போரில் முதலில் ஷஹீதான மிஹ்ஜஹ் ரலியல்லாஹு அன்ஹு ஆகியோர் எனக் கூறினார்கள். – நூல்: தப்ஸீர் இப்னு கதீர்.
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பத்ரு போருக்கு தயாரான போது கைஃஸமா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தன்னுடைய மகனான ஸஃது இப்னு கைஃஸமா ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் 'மகனே! நீ உம் மனைவி மக்களுடன் தங்கிவிடு. நான் போரிடப் போகிறேன்' என வேண்டினார்கள்.
அதற்கு ஸஃதிப்னு கைஃஸமா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தந்தையைப் பார்த்து என் அருமை தந்தையே! இது சுகப் பிரச்சனை அல்ல. சொர்க்கப் பிரச்சனை. சொர்க்கம் அல்லாத வேறு விஷயமாக இருப்பின் உங்களுக்காக நான் விட்டுக் கொடுத்திருப்பேன். இது சொர்க்கத்தையே கூலியாக பெறும் பேராகும். இதில் யாருக்கும் விட்டு கொடுக்க மாட்டேன் என்று கூறி குடும்பத்துடன் தங்குவதற்கு மறுத்து விட்டார்கள்.
அதன் பிறகு இருவரில் யார் போருக்கு செல்வது என்பதில் கடும் போட்டி ஏற்பட்ட போது சீட்டுக் குலுக்கி போட்டார்கள். அதில் ஸஃதிப்னு கைஃஸமா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் பெயரே வந்தது. இவர்கள் பத்ருப்

போருக்காக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் புறப்பட்டார்கள். இவர்கள் ஆசைப்பட்டது போல் உயிர்த்தியாகம் செய்து சொர்க்கத்தை அடையும் நற்பேற்றினை இறைவன் அவர்களுக்கு வழங்கினான். அவர்கள் அம்ரிப்னு அப்து உத்து என்ற எதிரியால் வெட்டப்பட்டு ஷஹீதானார்கள்.
பத்ரீன்களின் திருநாமத்தின் பிரயோஜனங்கள்:
இமாம் புகாரி நாயகம் அவர்கள் தங்கள் புகாரி கிரந்தத்தில் பத்ரு போர் பற்றிய பாடத்தில் அந்தப் போரில் கலந்துகொண்டவர்கள் அனைவர்கள் பெயரையும் தொகுத்து வழங்கியுள்ளார்கள். அந்தப் பெயர்களை நாம் படிக்கும் பொழுது நம்முடைய நாட்டங்களும், கேட்கும் துஆக்களும் உடனே ஒப்புக் கொள்ளப்படும். இது அனுபவ ரீதியாக கண்டறியப்பட்டுள்ளது. நூல்: தாரீகுல் கமீஸ்402/1

முஅவ்விது இப்னு அஃப்ராவு ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் பத்ரு போரில் கொல்லப்பட்ட ஷுஹதாக்களில் ஒருவராகும். இவர்களின் மகள் ருபைய்யி உபின்த் முஅவ்விது ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள். "ஒரு நாள் லுஹருக்கு முன்பு 'கைலூலா' தூங்குவதற்காக தலையணையில் தலையை வைத்து படுத்திருந்தேன். அப்போது ஒரு கருத்த உருவம் திடீரென என் மேல் உட்கார்ந்து என்னை தொந்தரவு செய்தது. என்னை துன்புறுத்திக் கொண்டிருக்கும் போது வானிலிருந்து மஞ்சள் நிறத்திலான ஒரு பேப்பர் துண்டு பறந்து வந்து என் மேல் அமர்ந்திருந்த கருப்பு உருவத்தின் அருகில் விழுந்தது. அதை அந்த உருவம் படித்துப் பார்த்தது. அதில் பிஸ்மி எழுதப்பட்டு அதன்பின் 'இது மேலான இறைவனிடமிருந்து இறை அடிமையின் பக்கம் எழுதப்பட்டதாகும். ஸாலிஹான பத்ரு ஸஹாபியின் நல்லடியாரின் மகளான என் அடிமைப் பெண்ணை தீங்கு செய்ய உனக்கு எந்த உரிமையுமில்லை' என எச்சரிக்கை செய்யப்பட்டிருந்தது. இதைப் படித்துப் பார்த்ததும் கோபத்தில் என் முட்டில் ஓங்கி அடித்து விட்டு ஓடி விட்டது. அதன் வேதனையை நான் மரணிக்கும் வரை அனுபவித்து வந்தேன் எனக் கூறுகிறார்கள்.

இந்த ஹதீதை பைஹகீ இமாம் தன்னுடைய நூலில் குறிப்பிட்'டு, பிறகு தான் எழுதிய அடிக்குறிப்பில் மேல் கூறிய நிகழ்ச்சியில் பத்ரு ஸஹாபியுடைய பரக்கத்தினால் அவருடைய மகளுக்கு ஏற்பட்ட துன்பத்தை இறைவன் நீக்கியிருப்பது இங்கு குறிப்பிடத் தக்கது எனக் கூறுகிறார்கள். நூல்: பைஹகீ 115/7
பத்ரு ஸஹாபாக்களின் பெயர்கள் இருக்கும் இடங்களில் அல்லாஹ்வின் ரஹ்மத் இறங்குகிறது என்றும், அவர்களின் திருநாமங்களை அவ்ராதாக விடாமல் முறையாக ஓதி வருபவருக்கு விலாயத்தின் அந்தஸ்து கிடைக்கிறது என்றும் மகான்கள் கூறியிருக்கிறார்கள். ஏராளமான சம்பவங்களும், ஆதாரங்களும் இருக்கின்றன. விரிவஞ்சி இத்துடன் முடிக்கிறோம். அல்லாஹ் நம் அனைவருக்கும் பத்ரு ஸஹாபாக்களின் பொருட்டால் அனைத்து நாட்டங்களையும் நிறைவேற்றித் தருவானாக! ஆமீன். (Sufi Manzil பதிவிலிருந்து)

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 26

(நபிமணியும் நகைச்சுவையும் )

நபிகளாரின் வாழ்வு புன்முறுவல் கலந்த ஒன்றாக இருந்தது. வளத்திலும் வறுமையிலும், இன்பத்திலும் துன்பத்திலும், வீட்டிலும் வெளியிலும், பிரயாணத்திலும் போரிலும், பள்ளிவாயிலிலும் ஏன் நோயில் வீழ்ந்திருந்தபோதிலும்! இப்படி எல்லா நிலைகளிலும், சந்தர்ப்பங்களிலும் நபிகளார் சிரிக்க மறந்ததில்லை'' என்கின்றார், நபித்தோழர் அபூ ஹுரைரா (ரலி) (நூல்: பைஹகி)
ஜாபிர் பின் சமுரா (ரலி) அறிவிக்கின்றார்: நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு முன்னால் அவர்களின் தோழர்கள் சில நேரம் கவிதை பாடுவார்கள். சில நேரம் ஜாஹிலிய்யாக் கால விஷயங்களைக் கூறிச் சிரிப்பார்கள். அதை அண்ணலார் ஒருபோதும் தடுத்ததில்லை.

கருணை நபி (ஸல்) அவர்கள் தங்கள் கடைவாய்ப் பல் தெரியுமளவுக்கு சிரித்துள்ளார்கள் என்று இப்னு மஸ்ஊத் (ரலி) கூறுகின்றார்.
கஅப் இப்னு மாலிக் (ரலி) பின்வருமாறு அறிவிக்கின்றார்:
சங்கை நபி (ஸல்) அவர்களுக்கு சந்தோஷமேற்பட்டால் அவர்களது முகம் பிரகாசிக்கும். அது பௌர்ணமி நிலவின் துண்டு போல் ஜொலிக்கும். (புஹாரி, முஸ்லிம்)
நானிலம் போற்றும் நபி (ஸல்) அவர்கள் தங்கள் மனைவிகளுக்கு இடையிலும் மிகப் பெரும் நகைச்சுவையாளராக விளங்கினார்கள் என்று அனஸ் பின் மாலிக் (ரலி) கூறுகின்றார்.
ஆயிஷா (ரலி) அறிவிப்பதைப் பாருங்கள்:
“ஒரு நாள் எனது வீட்டில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும், ஸவ்தாவும் இருந்தனர். நான் ஹரீரா என்ற உணவைச் செய்தேன். அதைக் கொண்டு வந்து ஸவ்தாவிடம் உண்ணும்படி கூறினேன். அதற்கவர் எனக்கு விருப்பமில்லை என்று கூறினார். நீ சாப்பிடாவிட்டால் உனது முகத்தில் பூசுவேன் என்று கூறினேன். இது எனக்கு சாப்பிட்டுப் பழக்கமில்லை என்று கூறினார்.

நான் அந்த மாப்பண்டத்தை எடுத்து அவளின் முகத்தில் பூசினேன். நபி (ஸல்) அவர்கள் எனக்கும் அவளுக்கும் இடையில் அமர்ந்திருந்தார்கள். என்னைப் பிடித்துக் கொள்வதற்காக அவர்களது முழங்கால்களைத் தாழ்த்தினார்கள். நான் அப்பண்டத்தை எடுத்து எனது முகத்திலும் பூசினேன். நபி (ஸல்) அவர்கள் தொடர்ந்து சிரித்துக் கொண்டே இருந்தார்கள்.” (அபூயஃலா)
அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் கூறினார்கள்: ஒரு பயணத்தில் நபி (ஸல்) அவர்களுடன் சென்றிருந்தேன். அப்போது நான் உடல் பெருக்காத மெலிந்த பெண்ணாக இருந்தேன்.
நபி (ஸல்) அவர்கள் தோழர்களிடம் “முன்னே சென்றுவிடுங்கள்” என்று கூறிவிட்டு,
பின்பு என்னிடம் “வா! நாம் ஓட்டப் பந்தயம் வைத்துக் கொள்வோம்” என்றார்கள். அவ்வாறு நாங்கள் ஓடினோம். நபி (ஸல்) அவர்களை நான் முந்திவிட்டேன். அவர்கள் அமைதியாக இருந்துவிட்டார்கள்.
இந்த நிகழ்ச்சியை நான் மறந்துவிட்டேன். பின்பு நான் உடல் பருத்துவிட்டேன். நபி (ஸல்) அவர்களுடன் இன்னுமொரு பயணத்தில் நானும் சென்றிருந்தேன்.
அப்போது நபி (ஸல்) அவர்கள் தோழர்களிடம் “முன்னே சென்றுவிடுங்கள்” என்று கூறினார்கள்.
பிறகு என்னிடம் “வா நாம் ஓடுவோம்” என்றார்கள். நாங்கள் ஓடினோம். ஆனால் அவர்கள் என்னை முந்திவிட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் சிரித்தவர்களாக, “அதற்கு இது (சமமாகி விட்டது)” என்று கூறினார்கள். (முஸ்னத் அஹ்மத்)
“நபி (ஸல்) அவர்களை விட அதிகம் புன்னகைப்பவரை நான் கண்டதில்லை” என்று அப்துல்லாஹ் பின் ஹாரிஸ் (ரலி) கூறுகின்றார். (திர்மிதி, அஹ்மத்)
“உன் சகோதரனின் முகத்தைப் பார்த்து புன்னகை புரிவது உனக்கு நல்லறமாகும்” என்று எம்பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (இப்னு ஹிப்பான், திர்மிதி)
நபி (ஸல்) அவர்களின் காலத்தில் அப்துல்லாஹ் என்ற நபித்தோழர் நபியவர்களுக்கு சிரிப்பூட்டிக் கொண்டே இருந்துள்ளார். சிரிப்பூட்டியதற்காக இவரை நபி (ஸல்) அவர்கள் கண்டிக்கவில்லை.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் காலத்தில் அப்துல்லாஹ் என்றொருவர் இருந்தார். அவர் கழுதை என்ற புனைப் பெயரால் அழைக்கப்பட்டார். அவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களை சிரிக்க வைப்பார்.
அறிவிப்பவர்: உமர் (ரலி) நூல்: புகாரி 6780
ஒரு வயோதிகப் பெண்மணி நபி (ஸல்) அவர்களிடம், “அல்லாஹ்வின் தூதரே! நான் சுவனம் செல்ல அல்லாஹ்விடம் துஆ செய்யுங்கள்” என்றார்.
நபி (ஸல்) அவர்கள் கேலியாக, “இன்னாரின் தாயே! கிழவிகள் சுவனம் புகமாட்டார்கள்” என்றார்கள்.

அம்மூதாட்டி அழுதவளாக திரும்பிச் சென்றாள். நபி (ஸல்) அவர்கள், “அவள் கிழவியாக இருக்கும் நிலையில் சுவனம் செல்லமாட்டாள். குமரியாக சுவனம் செய்வாள் என்பதை அவளிடம் தெரிவித்து விடுங்கள்!” என்று கூறினார்கள்.
பின்பு பின்வரும் இறைவசனத்தை ஓதிக் காட்டினார்கள்: “நிச்சயமாக நாம் அவர்களைப் புதிதாகவே படைத்திருக்கின்றோம். இன்னும் நாம் அவர்களைக் கன்னியர்களாகவே ஆக்கியிருக்கின்றோம்’ (குர்அன் 56:35,36). (ஸன்னனுத் திர்மிதி)
நபி (ஸல்) அவர்களும் தோழர்களும் நகைச்சுவை உணர்வு கொண்டிருந்தார்கள். திருத்தூதரிடம் அந்தப் பண்பைக் கண்ட நபித்தோழர்கள் ஆச்சரியத்துடன்,
“இறைத்தூதரே! நீங்கள் எங்களுடன் நகைச்சுவையாக நடந்து கொள்கிறீர்களே!” என வினவினர்.
அப்போது நபி (ஸல்) அவர்கள், “நான் உண்மையைத் தவிர வெறெதனையும் கூற மாட்டேன்” என்று கூறினார்கள்.
நபி (ஸல்) அவர்கள் நகைச்சுவை இயல்பைப் பெற்றிருந்தார்கள். ஆனால் விளையாட்டாகக் கூட அதில் பொய்யைக் கலந்துவிடாமல் உண்மையையே கூறி வந்தார்கள். நபி (ஸல்) அவர்களின் அடிச்சுவட்டில் நபித்தோழர்களும் அந்த இயல்பைக் கொண்டிருந்தார்கள்.
ஆக, சிரிப்பு நமக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. ஆரோக்கியத்தைத் தருகிறது. நோயைப் போக்குகிறது. மொத்த குணநலனையும் மாற்றிவிடுகிறது.
நல்ல ஆரோக்கியத்திற்கும், நீண்ட ஆயுளுக்கும் நன்றாகச் சிரியுங்கள். அதேவேளையில் தனியாக அமர்ந்தோ, அளவுக்கதிகமாகவோ சிரித்து விடாதீர்கள். நம்மை தவறாகக் கருதிவிடுவார்கள்!

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 27

( சிறப்பான நபியும் ,சிறார்களும் )

பெற்ற குழந்தைகள் மீது நாம் பொழிகின்ற அன்பு மழையில், பரிமாறிக் கொள்கின்ற பாச அலைகளில், அல்லாஹ்வின் அருளை அடைய முடியும் என்று வளமான சிந்தனையை இஸ்லாம் வளர்த்துள்ளது .
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குழந்தைகள் மீது அதிகமான அன்பும் பிரியமும் வைத்திருந்தார்கள். அவர்களுடைய தலையை கையால் தடவி விடுவார்கள். அவர்களை மிகவும் நேசிப்பார்கள். அவர்களுக்கு நன்மை வேண்டி அடிக்கடி துஆ செய்வார்கள்.
குழந்தைகள் அருகில் வந்தால் அவர்களை மடியில் எடுத்து வைத்துக் கொள்வார்கள். மிகுந்த அன்புடன் அவர்களை கொஞ்சுவார்கள். சிலசமயம் குழந்தைகளுக்கு தன் தமது முபாரக்கான நாவை நீட்டுவார்கள் அதனால் குழந்தை சந்தோஷப்பட்டு குதூகலமாகிவிடும்.சிலசமயம் படுத்திருக்கும்போது தமது பாதங்களின் மேல் குழந்தையை வைத்துக் கொள்வார்கள். சில சமயம் பரிசுத்த நெஞ்சின் மீது குழந்தையை உட்கார வைப்பார்கள்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஸன் பின் அலீயை முத்தமிட்டார்கள். அப்போது அவர்களுக்கு அருகில் அமர்ந்து கொண்டிருந்த அக்ரஃ பின் ஹாபிஸ் அத்தமீமி (ரலி), “எனக்குப் பத்து குழந்தைகள் இருக்கின்றன. அவர்களில் ஒருவரைக் கூட நான் முத்தமிட்டதில்லை” என்றார். அவரை ஏறெடுத்துப் பார்த்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், “அன்பு காட்டாதவர் அன்பு காட்டப்பட மாட்டார்” என்று கூறினார்கள்.
அபூஹுரைரா (ரலி), புகாரி 5997
ஒரு கிராமவாசி நபி (ஸல்) அவர்களிடம் வந்து, “நீங்கள் சிறு குழந்தைகளை முத்தமிடுகின்றீர்களா? நாங்களெல்லாம் அவர்களை முத்தமிடுவதில்லை” என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், “அல்லாஹ் உமது இதயத்திலிருந்து அன்பைக் கழற்றி விட்ட பின்னர் உமக்காக நான் என்ன செய்ய முடியும்?” என்று கேட்டார்கள்.
ஆயிஷா (ரலி), புகாரி 5998

நம் உடலுக்குள் பிராண வாயுவின் (ஆக்ஸிஜன்) அளவை சிரிப்புத்தான் அதிகப்படுத்துகிறது.
குழந்தைகள் கள்ளங்கபடமில்லா உள்ளம் கொண்டவர்கள். அவர்களின் சிரிப்பும் அப்படித்தான். குழந்தைகளாக இருக்கும்பொழுது ஒரு நாளைக்கு 300 முதல் 400 தடவை சிரிக்கிறது என்று ஓர் ஆய்வு கூறுகிறது.ஆனால் இதுவோ வயது வந்தவர்களுக்கு ஒரு நாளைக்கு 15 தடவை என்று குறைந்துவிடுகிறது.

நபி (ஸல்) அவர்கள் தமது தோழரின் மகனான "அபூ உமைர்' என்ற சிறுவரிடம் விளையாட்டாக நடந்து கொண்டு பரிகாசம் செய்திருக்கிறார்கள். அந்தச் சிறுவர் குருவி ஒன்றை வளர்த்து வந்தார். அது ஒரு நாள் இறந்து விட்டது. நபி (ஸல்) அவர்கள் அச்சிறுவரைக் கவலை தோய்ந்த முகத்துடன் கண்டார்கள்.
நபி (ஸல்) அவர்கள் அவரிடம், "அபூ உமைரே! உன்னைக் கவலையானவராகக் காண்கிறேனே?" என்றார்கள். அங்கிருந்தோர், "அவர் விளையாடிக் கொண்டிருந்த குருவி இறந்து விட்டது அல்லாஹ்வின் தூதரே!" என்று கூறினார்கள். அதிலிருந்து அவரைக் காணும் போதெல்லாம் நகைச்சுவையாக, "அபூ உமைரே! உமது நுஹைர் (குட்டிக் குருவி) என்னவாயிற்று?" என்று கேட்பார்கள். (ஹயாத்துஸ் ஸஹ்பா)
குழந்தைகளின் பலர் ஓரிடத்தில் ஒன்றுகூடி இருந்தால் நபியவர்கள் அவர்களை வரிசையாக நிற்க வைத்து விட்டு, தனது கரங்களை விரித்தவாறு அமர்ந்து கொள்வார்கள்.
மேலும் "குழந்தைகளே ! நீங்கள் அனைவரும் என்னிடம் ஓடி வாருங்கள். எந்த குழந்தை முதலில் என்னை வந்து தொடுமோ அதற்கு என்னென்ன பரிசுப் பொருளை தருவோம் "என்று சொல்வார்கள்.
குழந்தைகள் நபிகளாரை நோக்கி ஓடி வருவார்கள். வந்ததும் ஒரு குழந்தை அவர்களின் வயிற்றின் மீதும், இன்னொரு குழந்தை நெஞ்சின் மீதும் என நபிகள் அவர்களை சூழ்ந்து கொள்வார்கள் .நபிகளார் அத்தனை குழந்தைகளையும் தன் நெஞ்சோடு அணைத்துக் கொண்டு கொஞ்சுவார்கள்.
ஹஜ்ரத் அப்துல்லாஹ் இப்னு பஷீர் ரலி அவர்கள் கூறுகிறார்கள்: என் சிறுவயது பிராயத்தில் எனது தாயார் என்னிடம் சிறு திராட்சை குலையைக் கொடுத்து, " இதை ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு கொடுத்து வா ! " என்று அனுப்பி வைத்தார்கள்.
நான் அதை எடுத்துக்கொண்டு நபி ஸல் அவர்களின் சமூகம் செல்லலானேன். வழியில் எனது எண்ணம் மாறிவிட, நானே அதை தின்று விட்டேன். பிறகு ஒரு நாள் என்னுடைய தாயார் நபி (ஸல்) அவர்களை சந்தித்தபோது அதைப் பற்றி விசாரித்திருக்கிறார். அதற்கு நபியவர்கள் இல்லை என்று கூறியிருக்கிறார்கள். உடனே நான்தான் அதே வழியிலேயே தின்று இருப்பேன் என்று எனது தாயாரும் நபி (ஸல்) அவர்களும் விளங்கிக் கொண்டார்கள்.
இந்நிகழ்ச்சிக்குப் பிறகு நபியவர்கள் எப்போதும் என்னை வழியில் சந்தித்தாலும், என்னுடைய காதை பிடித்து, "ஏமாற்றுக்காரா..! ஏமாற்றுக்காரா...! " என்று கூறுவார்கள்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 28

(சாந்த நபியின் சகிப்புத்தன்மை)

நமக்குள்ளே பதிலுக்கு பதில் என்ற உணர்வு இயல்பாகவே குடிகொண்டிருக்கும். அவன் பேசிவிட்டால் நாமும் பேசவேண்டும், அவன் அடித்து விட்டால் நாமும் அடிக்க வேண்டும். அவன் மரியாதைக் குறைவாக நடந்து கொண்டால் நாமும் அப்படியே நடந்து கொள்ள வேண்டும் என்று நினைப்பதுதான் பழி வாங்கும் தன்மை. இந்தப் பழி வாங்கும் தன்மையை விட்டுவிட்டால் அதுதான் "சகிப்புத்தன்மை "
1) ஒருமுறை) நான் நபி (ஸல்) அவர்களிடம், "(தாங்கள் காயமடைந்த) உஹுதுப் போரின் காலகட்டத்தை விடக் கொடுமையான காலகட்டம் எதையேனும் தாங்கள் சந்தித்ததுண்டா?'' என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்)

அவர்கள், "நான் உன் சமுதாயத்தாரால் நிறையத் துன்பங்களைச் சந்தித்துவிட்டேன். அவர்களால் நான் சந்தித்த துன்பங்களிலேயே மிகக் கடுமையானது "அகபா (தாயிஃப்) உடைய நாளன்று சந்தித்த துன்பமேயாகும். ஏனெனில், அன்று நான் என்னை ஏற்றுக் கொள்ளும்படி (தாயிஃப் நகரத் தலைவரான கினானா) இப்னு அப்தி யாலீல் பின் அப்தி குலால் என்பவருக்கு எடுத்துரைத்தேன். அவர் நான் விரும்பியபடி எனக்கு பதிலளிக்கவில்லை. ஆகவே, நான் கவலையுடன் எதிர்ப்பட்ட திசையில் நடந்தேன். "கர்னுஸ் ஸஆலிப்' என்னுமிடத்தை நான் அடையும்வரை நான் சுய உணர்வுக்கு வரவில்லை.
அங்கு வந்து சேர்ந்தவுடன் என் தலையை உயர்த்தினேன். அப்போது (அங்கே வானத்தில்) ஒரு மேகம் என் மீது நிழலிட்டுக் கொண்டிருந்தது. நான் கூர்ந்து கவனித்தபோது அதில் ஜிப்ரீல் (அலை) அவர்கள் இருந்தார்கள். அவர்கள் என்னை அழைத்து, "உங்கள் சமுதாயத்தார் உங்களிடம் சொன்னதையும் அவர்கள் உங்களுக்கு அளித்த பதிலையும் அல்லாஹ் கேட்டான். அவர்களை நீங்கள் விரும்பியபடி தண்டிப்பதற்கு ஆணையிடுவதற்காக மலைகளுக்கான வானவரை அல்லாஹ் உங்களிடம் அனுப்பியுள்ளான்'' என்று கூறினார்கள்.
உடனே, மலைகளை நிர்வகிக்கும் வானவர் என்னை அழைத்து எனக்கு சலாம் சொல்லி, பிறகு, "முஹம்மதே! நீங்கள் விரும்பியபடி கட்டளையிடலாம். (இந்த நகரத்தின் இரு மருங்கிலுமுள்ள) இந்த இரு மலைகளையும் அவர்கள் மீது நான் புரட்டிப்போட்டு விட வேண்டுமென்று நீங்கள் விரும்பினாலும் (சரி, உங்கள் கட்டளைப்படி செயல்பட நான் தயாராக உள்ளேன்)'' என்று கூறினார். உடனே, "(வேண்டாம்;) ஆயினும், இந்த (நகரத்து) மக்களின் சந்ததிகளில் அல்லாஹ்வுக்கு எதையும் இணை கற்பிக்காமல் அவனை மட்டுமே வணங்குபவர்களை அல்லாஹ் உருவாக்குவான் என்று நான் நம்புகிறேன் (ஆகவே, அவர்களை தண்டிக்க வேண்டாம்)'' என்று சொன்னேன். - ஆயிஷா (ரலி), நூல்: புகாரி-3231
சத்தியத்தைச் சொன்ன நபியிடம் தாயிஃப் நகர மக்கள் வரம்பு மீறினார்கள். கடுமையான துன்பங்களைக் கட்டவிழ்த்து விட்டார்கள். தூதரையே இழிவுபடுத்திய குற்றத்திற்காக அவர்களைத் தண்டிப்பதற்கு வாய்ப்பு கிடைத்தும் நபிகளார் மறுத்து விடுகிறார்கள்.

2) ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதரிடம், அவர்களுக்குத் தான் கொடுத்த (ஒட்டகத்)தைத் திருப்பித் தரும்படி கேட்டார். அப்போது நபி (ஸல்) அவர்களிடம் அந்த மனிதர் கடுமையாகப் பேசினார். ஆகவே, நபித்தோழர்கள் அவரை தண்டிக்க விரும்பினார்கள்.
அப்போது நபி (ஸல்) அவர்கள் தம் தோழர்களை நோக்கி, "(அவரைத் தண்டிக்க வேண்டாம்;) விட்டு விடுங்கள். ஏனெனில், ஒருவர் தனக்குக் கடன் தர வேண்டியவரிடம் கடுமையாகப் பேச உரிமையுண்டு. அவருக்காக ஓர் ஒட்டகத்தை வாங்கி அவரிடமே கொடுத்து விடுங்கள்'' என்று கூறினார்கள்.
நபித் தோழர்கள், "அவருக்குத் தர வேண்டிய ஒட்டகத்தின் வயதை விட அதிக வயதை உடைய ஒட்டகம்தான் எங்களிடம் இருக்கின்றது'' என்று கூறினார்கள்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அதையே வாங்கி அவருக்குக் கொடுத்து விடுங்கள். ஏனெனில், உங்களில் எவர் நல்ல முறையில் கடனைத் திருப்பிச் செலுத்துகின்றாரோ அவரே உங்களில் சிறந்தவர்'' என்று கூறினார்கள்.
அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி), நூல்: புகாரி-2390

3) அலீ (ரலி) அவர்கள் (யமனிலிருந்து) நபி (ஸல்) அவர்களிடம் சிறிய தங்கக் கட்டி ஒன்றை அனுப்பி வைத்தார்கள். அதை நபி (ஸல்) அவர்கள் அக்ரஉ பின் ஹாபிஸ் அல்ஹன்ழலீ அல்முஜாஷியீ (ரலி), உயைனா பின் பத்ர் அல் ஃபஸாரீ (ரலி), பனூ நப்ஹான் குலத்தவரில் ஒருவரான ஸைத் அத் தாயீ (ரலி) மற்றும் பனூ கிலாப் குலத்தாரில் ஒருவரான அல்கமா பின் உலாஸா அல் ஆமிரி (ரலி) ஆகிய நால்வரிடையே பங்கிட்டு விட்டார்கள்.
அதனால் குறைஷிகளும் அன்சாரிகளும் கோபமடைந்து, "நஜ்து வாசிகளின் தலைவர்களுக்குக் கொடுக்கின்றார்; நம்மை விட்டு விடுகின்றாரே'' என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "இவர்கள் (இப்போது தான்

இஸ்லாத்தை தழுவியிருப்பதால்) அவர்களுடைய உள்ளங்களை (முழுமையாக) இணக்கமாக்குவதற்காக (அவர்களுடன் நேசம் பாராட்டும் விதத்தில்) தான் கொடுத்தேன்'' என்று கூறினார்கள்.
அப்போது கண்கள் பஞ்சடைந்த, கன்னங்கள் தடித்திருந்த, நெற்றியோரங்கள் உயர்ந்திருந்த, அடர்த்தியான தாடி கொண்ட, தலைமுடி மழிக்கப்பட்டிருந்த மனிதர் ஒருவர் முன் வந்து, "முஹம்மதே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்'' என்று கூறினார். உடனே நபி (ஸல்) அவர்கள் "நானே (அல்லாஹ்விற்கு) மாறு செய்தால் வேறெவர்தான் அவனுக்குக் கீழ்ப்படிவார்? பூமியில் வசிப்பவர்கள் விஷயத்தில் அல்லாஹ் என் மீது நம்பிக்கை வைத்திருக்க, நீங்கள் என் மீது நம்பிக்கை வைக்க மாட்டீர்களா?'' என்று கேட்டார்கள்.
அப்போது வேறொரு மனிதர் இப்படி (குறை) சொன்னவரைக் கொல்வதற்கு அனுமதி கேட்டார்.... அனுமதி கேட்ட அவர் காலித் பின் வலீத் (ரலி) அவர்கள் தாம் என்று நினைக்கின்றேன்- அவரை நபி (ஸல்) அவர்கள் (இதைச் சொன்னவரைக் கொல்ல வேண்டாமென்று) தடுத்து விட்டார்கள். (குறை சொன்ன) அந்த ஆள் திரும்பிச் சென்ற போது நபி (ஸல்) அவர்கள், "இந்த மனிதரின் பரம்பரையிலிருந்து.... அல்லது இவரின் பின்னே – ஒரு சமுதாயத்தினர் தோன்றுவர்.
அவர்கள் எத்தகையவர்களாயிருப்பார்கள் என்றால், அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். ஆனால், அது அவர்களுடைய தொண்டைக் குழிகளை தாண்டிச் செல்லாது. அவர்கள் வேட்டையாடப்பட்ட பிராணியின் உடலிருந்து (அதன் மீது எய்தப்பட்ட) அம்பு வெளியேறி விடுவதைப் போல் மார்க்கத்திலிருந்து வெளியேறிவிடுவார்கள்; இஸ்லாமியர்களைக் கொல்வார்கள்; சிலைவணக்கம் புரிபவர்களை விட்டுவிடுவார்கள். நான் அவர்க(ள் வாழும் நாட்க)ளை அடைந்தால் "ஆத்' கூட்டத்தார் அழிக்கப்பட்டதைப் போல அவர்களை நான் நிச்சயம் அழித்து விடுவேன்.'' என்று கூறினார்கள். - அபூசயீத் அல்குத்ரீ (ரலி), நூல்: புகாரி-3344

4) நயவஞ்சகர்களின் தலைவன்) அப்துல்லாஹ் பின் உபை இறந்துவிட்டான். அப்போது அவனது (முஸ்லிமான) மகன், நபி (ஸல்) அவர்களிடம் வந்து "அல்லாஹ்வின் தூதரே! உங்கள் சட்டையைத் தாருங்கள்; அவரை அதில் பிரேத உடை (கஃபன்) அணிவிக்க வேண்டும்; மேலும் நீங்கள் அவருக்கு ஜனாஸாத் தொழுது, அவருக்காகப் பாவமன்னிப்பும் கேட்க வேண்டும் என்று கூறினார். உடனே நபி (ஸல்) அவர்கள் தமது சட்டையை அவருக்குக் கொடுத்துவிட்டு, "(ஆயத்தமானதும்) எனக்குத் தெரிவியுங்கள்; நான் ஜனாஸாத் தொழுவிப்பேன்''என்றார்கள். பிறகு அறிவிக்கப்பட்டதும் நபி (ஸல்) அவர்கள் அவனுக்கு ஜனாஸாத் தொழ நாடியபோது, உமர் (ரலி), நபி (ஸல்) அவர்களை இழுத்து, நயவஞ்சகர்களுக்கு ஜனாஸாத் தொழக் கூடாது என அல்லாஹ் உங்களைத் தடுக்கவில்லையா?'' எனக் கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "(ஜனாஸாத் தொழுவது, தொழமலிருப்பது என) இரண்டில் எதையும் தேர்ந்தெடுத்துக்கொள்ளும் உரிமை எனக்கு உள்ளது'' எனக் கூறிவிட்டு,
"நீர் நயவஞ்சகர்களுக்குப் பாவமன்னிப்புத் தேடினாலும் அல்லது தேடாமலிருந்தாலும் சமமே! நீர் அவர்களுக்காக எழுபது முறை பாவமன்னிப்புத் தேடினாலும் அல்லாஹ் அவர்களை மன்னிக்கப் போவதே இல்லை'' என்ற (9:80ஆவது) இறைவசனத்தை ஓதிக்காட்டிவிட்டு ஜனாஸாத் தொழுதார்கள். உடனே "அ(ந்நய)வ(ஞ்சக)ர்களில் யாரேனும் இறந்தால் அவர்களுக்காக ஒருபோதும் (ஜனாஸாத்) தொழ வேண்டாம்'' எனும் (9:84ஆவது) இறைவசனம் அருளப்பெற்றது.
இப்னு உமர் (ரலி) புகாரி-1269

5) நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நஜ்து நாட்டை நோக்கி ஒரு புனிதப் போருக்காகச் சென்றேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (போரிலிருந்து) திரும்பிய போது அவர்களுடன் நானும் திரும்பினேன். அப்போது முள்மரங்கள் நிறைந்த பள்ளத்தாக்கில் நாங்கள் வந்து கொண்டிருந்தபோது மதிய ஓய்வு கொள்ளும் நேரம் வந்துவிட்டது. உடனே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அங்கு தங்கினார்கள். மக்கள் (ஓய்வெடுப்பதற்காக) மரங்களின் நிழல் தேடி (பல திசைகளிலும்) பிரிந்து போய் விட்டனர்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு (கருவேல) மரத்தின் கீழே தங்கினார்கள். தமது வாளை மரத்தில் மாட்டித் தொங்கவிட்டார்கள். நாங்கள் சற்று நேரம் உறங்கினோம். அதற்குள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களை அழைத்தார்கள். (நாங்கள் கண் விழித்துப் பார்த்தால்) அப்போது அவர்களுக்கு அருகே ஒரு கிராமவாசி இருந்தார். நபி (ஸல்) அவர்கள், "இவர் நான் தூங்கிக்கொண்டிருக்கும்போது (நான் மரத்தில் தொங்கவிட்டிருந்த எனது) வாளை எனக்கெதிராக உருவிக் கொண்டார்.
நான் கண் விழித்துப் பார்த்தபோது இவரது கையில் உறையிலிருந்து உருவிய (எனது) வாள் இருந்தது. இவர், "என்னிடமிருந்து உன்னை யார் காப்பாற்றுவார்?' என்று கேட்டார். நான் "அல்லாஹ்' என்று (மூன்றுமுறை) கூறினேன்'' என்று சொன்னார்கள். அந்தக் கிராமவாசி (அங்கே) அமர்ந்திருந்தும்கூட, அவரை நபியவர்கள் தண்டிக்கவில்லை. _ ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி)
புகாரி-2910 , (2913) (4137) (4139)

6) யூதப் பெண் ஒருத்தி நபி (ஸல்) அவர்களிடம் விஷம் தோய்க்கப்பட்ட ஓர் ஆட்டை அன்பளிப்பாகக் கொண்டு வந்தாள். நபி (ஸல்) அவர்கள் அதிலிருந்து (சிறிது) உண்டார்கள். "அவளைக் கொன்று விடுவோமா?'' என்று (நபி (ஸல்) அவர்களிடம்) கேட்கப்பட்டது. அவர்கள், "வேண்டாம்'' என்று கூறிவிட்டார்கள். நபி (ஸல்) அவர்களின் தொண்டைச் சதையில் அந்த விஷத்தின் பாதிப்பை நான் தொடர்ந்து பார்த்து வந்தேன். அனஸ் (ரலி), நூல்: புகாரி-2617
இவ்வாறு, நபியவர்கள் பழிவாங்காத பண்பாளராக இருந்தார்கள் என்பதற்குச் சான்றாக பல சம்பவங்கள் உள்ளன. இப்பண்பு சத்தியத்தை எதிர்க்கும் மக்களைக் கூட அதற்குரிய ஆதரவாளர்களாக, நேசர்களாக, பாதுகாவலர்களாக ஆக்கியது

**நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 29**
(மாநபியின் ஆடை மலிவானது )

குறிப்பு :-(இந்த ஹதீஸ் வலை தளத்திலிருந்து டவுண்லோடு செய்தேன். இது எந்த கிதாபில் பதிவு செய்யப்பட்டிருக்கிறது என்பதை நண்பர்கள் தெரிவித்தால், அந்த ஆதாரத்தையும் சேர்த்து பதிவு செய்து கொள்கிறேன் )
நபி (ஸல்) அவர்களது ஆடை மலிவானது மற்றும் எளிமையானது. இமாம் ஜஃபர் சாதிக் (ரலி) அவர்கள் ஒருமுறை நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் சட்டை மிக வெளுத்தும், மிகப் பழமையானதாக இருப்பதைக் கண்டார்கள். ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் பன்னிரண்டு திர்ஹம்களைக் காணிக்கையாக்கினார். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் "இந்தத் தொகையை எடுத்து எனக்கு ஒரு சட்டை வாங்குங்கள்." என்று அலீ (ரலி) அவர்களிடம் கூறினார்கள்
அலீ (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: "நான் சந்தைக்குச் சென்று பன்னிரண்டு திர்ஹம்களுக்கு ஒரு சட்டை வாங்கினேன்." நபி (ஸல்) அவர்கள் அதைப் பார்த்து, " மிக உயர்வான இந்தச் சட்டைக் காட்டிலும் மலிவான சட்டை எனக்கு மிகவும் பொருத்தமாக இருக்கும். அலீயே ! கடைக்காரர் அதைத் திரும்பப் பெறுவார் என்று நினைக்கிறீர்களா ?
நான் சொன்னேன்: "எனக்குத் தெரியாது யாரசூல்லாஹ் !"
நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "ஒருவேளை அவர் திரும்ப பெறலாம் " என்றார்கள்

எனவே நான் கடைக்காரரிடம் சென்று, "நபி(ஸல்) அவர்களுக்கு இந்த விலையுயர்ந்த சட்டை பிடிக்காது, விலை குறைவான சட்டையையே விரும்புவார்கள்" என்று கூறினேன்.
உடனே கடைக்காரர் நான் ஒப்படைத்த பன்னிரண்டு திர்ஹங்களையும் அவர் திருப்பிக் கொடுத்தார். பிறகு நபி (ஸல்) அவர்கள் என்னுடன் சந்தைக்கு வந்தார்கள். வழியில் ஒரு அடிமைப் பெண் அழுவதைக் கண்டோம். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவளிடம் விபரம் கேட்டார்கள்
"அல்லாஹ்வின் தூதர் அவர்களே! சந்தையில் இருந்து பொருள்கள் வாங்க என் எஜமானர் எனக்கு நான்கு திர்ஹம் கொடுத்தார், ஆனால் நான் பணத்தை இழந்தேன்.இப்போது என்னால் வீட்டிற்கு செல்ல தைரியம் இல்லை என்றாள்.
நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நான்கு திர்ஹம்களைக் கொடுத்து அவளை வீட்டிற்குச் செல்லும்படி கூறினார்கள்.
பின்னர் நபி (ஸல்) அவர்கள் சந்தைக்குச் சென்று, நான்கு திர்ஹம்களுக்கு ஒரு சட்டையை வாங்கி, அதை அணிந்து, அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தினார்கள்.
திரும்பி வரும்போது, ஒரு நிர்வாண மனிதரைக் கண்டார்கள் "எனக்கு ஒரு ஆடையைக் கொடுப்பவர் சொர்க்கத்தில் அல்லாஹ்வின் ஆடைகளாக இருப்பார்" என்றார்
நபி (ஸல்) அவர்கள் அந்தச் சட்டையை அவருக்குக் கொடுத்தார்கள். பிறகு மீண்டும் சந்தைக்குச் சென்று நான்கு திர்ஹம் கொடுத்து இன்னொரு சட்டையை வாங்கி அணிந்து கடவுளுக்கு நன்றி கூறினார்.
திரும்பி வரும்போது மீண்டும் அந்த அடிமைப் பெண் பாதையில் அமர்ந்திருப்பதைக் கண்டார். ஏன் வீட்டிற்குச் செல்லவில்லை ? என்று அவளிடம் கேட்டார்கள்,
அவள் "அல்லாஹ்வின் தூதர் அவர்களே ! இவ்வளவு தாமதமாக வந்ததற்காக என் எஜமானர் என்னைத் தண்டிப்பார் என்று நான் பயப்படுகிறேன் " .
நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அவளிடம், "முன்னே நடந்து சென்று உன் வீட்டைக் காட்டு" என்று கூறினார்கள். எனவே அவள் முன்னால் சென்று தன் எஜமானரின் வீட்டு வாசலில் நின்றாள்.
நபியவர்களும் அங்கே நின்று, (சற்றே சத்தமாக) "வீட்டில் உள்ளவர்களே, அஸ்ஸலாமு வ அலைக்கும் (உங்களுக்கு சாந்தி உண்டாகட்டும் ) " யாரும் எந்த பதிலும் சொல்லவில்லை. நபி (ஸல்) அவர்கள் ஸலாம் திரும்பத் திரும்பச் சொன்னார்கள் ஆனால் பதிலே இல்லை.
பின்னர் அவர் மூன்றாவது முறையாக ஸலாம் கூறினார்கள் "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களே, அல்லாஹ்வின் கருணையும் அவருடைய ஆசீர்வாதங்களும் உங்கள் மீது சாந்தி உண்டாவதாக" பதில் வந்தது.
நபி (ஸல்) அவர்கள் தனது ஸலாத்திற்கு ஏன் இரண்டு முறை பதிலளிக்கவில்லை என்று கேட்டார்கள்,
அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களே, உங்கள் ஸலாமைக் கொண்டு எங்களுக்கு பரக்கத் அதிகரிக்க வேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம்."
அப்போது நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "இந்த அடிமைப் பெண் தாமதமாக வந்தாள். அவளைப் பணிக்கு எடுத்துக் கொள்" என்றார்.
அதற்கு அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் அவர்களே, உங்களின் வருகையால் எங்களுக்குக் கிடைத்த மகிழ்ச்சிக்கு ஈடாக, நாங்கள் அவளை அடிமைத்தனத்திலிருந்து விடுவித்தோம்" என்று பதிலளித்தார்கள்.
நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "இந்தப் பன்னிரண்டு திர்ஹம்களில் இவ்வளவு மங்களகரமானதை நான் இதற்கு முன் பார்த்ததில்லை, அதன் காரணமாக இரண்டு ஆடை அணியாத உடல்கள் உடுத்தி, ஒரு அடிமைப் பெண் விடுவிக்கப்பட்டாள்!"

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 30

(அண்ணல் நபிகளின் அவையழகு 01 )

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அறிவிப்புகளைக் கேட்க தெளிவு பெற தெளிவின் ஒளிவை வாழ்வில் காண ஆவலோடு அமர்ந்திருப்போர் அவையை அழகாக்க கடைபிடித்த நடைமுறைகளைக் காண்போம்.
அவையில் முன் வந்தோரிடம் பின்னால் வருபவர் இடம் கேட்டால் இடம் கொடுக்க இயம்புகிறது திருமறை குர்ஆனின் 58 :11.வது வசனம்,
"நம்பிக்கையுடையோரே ! எவரும் உங்களிடம் அவையில் அகன்று இடம் கொடுக்க வேண்டினால் நீங்கள் நகர்ந்து இடம் கொடுங்கள். அல்லாஹ் உங்களுக்கு இடத்தை விசாலமாக்குவான்.''
அவைக்கு முன் வந்தவர் தாமதமாக வருபவர் அமர முடியாமல் இடத்தை அடைத்து கொண்டு அமருவது அவைக்கு அழகல்ல.
பின்னால் வந்து நிற்பவர் உட்கார இடம் கொடுப்பவர்களுக்கு இறைவன் இம்மையிலும் உலகில் உயர்ந்த இடங்களை விரிவாக வழங்கி, மறுமையில் இடங்களை ஏற்படுத்தித் தருவதோடு அறிவிலும் ஆற்றலிலும் பரஸ்பரம் போற்றும் நற்குணங்களிலும் பெருக்கத்தைக் கொடுக்கிறான்.
"ஒரு அவையில் அமர்ந்திருப்பவரை எழுந்து செல்ல செய்து மற்றவர் அங்கு அமரக் கூடாது. நெருங்கி உட்கார்ந்து இடத்தை விரிவாக்கி வந்தவருக்கு இடம் கொடுக்க வேண்டும் என்ற ஏந்தல் நபி (ஸல்) அவர்கள் எடுத்துரைத்ததை அறிவிக்கிறார் இப்னு உமர் (ரலி) நூல் - புகாரி, முஸ்லிம், அபூதாவூத், திர்மிதீ.
இருவருக்கு இடையில் அவ்விருவரின் அனுமதியின்றி பிறர் அமர்வதை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தடுத்ததை அம்ருப்னு ஸூஐப் அவரின் தந்தை மூலமும் பாட்டன் மூலமும் அறிந்ததாக அறிவிப்பது அபூதாவூத், திர்மிதீ நூல்களில் உள்ளது.
அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அவைக்குச் செல்லும் நாங்கள் எங்கு இடம் கிடைக்கிறதோ அங்கே அமர்வோம் என்று அறிவிக்கிறார். ஜாபிர் இப்னு ஸமுரா (ரலி) நூல்- அபூதாவூத்.

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அவை நற்குணங்கள் நிரம்பிய நல்லறிவு பளிச்சிடும் தெள்ளிய பண்பு மிளிரும் சகிப்புத் தன்மை உடைய உயரிய முக்கியத்துவ அவையாக அமைந்திருந்தது.
அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அவையில் அமர்ந்திருப்போரையும் வெளிநாட்டு தூதுவர்களையும் கண்ணியப்படுத்துவார்கள். அவைக்கு வரும்பொழுது கண்ணியமான நல்ல ஆடைகளை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அணிவார்கள். வெளிநாட்டு தூதுவர்களைச் சந்திக்கும்பொழுது ஜுப்பா என்ற மேலங்கியை மேன்மை நபி (ஸல்) அவர்கள் அணிவார்கள் என்று அஸ்மா பின்த் அபூபக்கர் (ரலி) அறிவிக்கிறார்கள். நூல் - அல் அதபுல் மப்ரார்.
ஜுப்பா என்பது அகலமான ஆடை. அதனை வழக்கமான ஆடைகளுக்கு மேல் மேலங்கியாக அணிந்து கொள்வார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அவைக்கு வரும் விருந்தினர்களை நேரில் சென்று வரவேற்று அவைக்கு அழைத்து வருவார்கள்.
அப்துல் கைஸ் என்பவரின் தலைமையில் வந்த தூதுக்குழுவை "வருக வருக''என்று கூறி வரவேற்றார்கள். அத்தூதுக்குழு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அன்போடு வரவேற்றதையும், அவர் வசதியான இடம் தந்ததையும், வந்தவர்களை வாழ்த்தி அவர்களுக்காக இறைவனிடம் இறைஞ்சியதையும் நிறைவோடு கூறியது. அஹ்மது நூலில் பதியப்பட்டுள்ளது.
கண்மணி நாயகம் (ஸல்) அவர்களைக் காண வருவோர் அவர்களுக்கு அன்பளிப்பு அளித்தால் அதனினும் மேலான பரிசை அவர்களுக்கு வழங்கி ஒரு நல்ல நடைமுறையை பழக்கப்படுத்தினார்கள். வந்தவர்களுக்குக் காணிக்கை வழங்கி கண்ணியப்படுத்திய பிறகுதான் பேசுவார்கள்.
இதனை,.(குர்ஆன் : 68:4) வசனத்தில்
"மேலும், (நபியே) நிச்சயமாக நீர் மிக உயர்ந்த மகத்தான நற்குணம் உடையவராக இருக்கின்றீர்" என்று இயம்புகிறது.

அவையில் பேசுவதை அமைதியாக கேட்பார்கள். அன்பான அக்கறையும் பூரிக்கும் புன்னகையும் அவையில் நிறைந்து இருக்கும். பூமான் நபி (ஸல்) அவர்கள் புன்னகைக்கும்பொழுது அவையினரும் மகிழச்சியுடன் மலர்ந்து புன்னகைப்பர்.
முஹம்மது நபி (ஸல்) அவர்களின் அவையில் மூத்தோரும் இளைஞர்களும் அமைதியாக கூடியிருப்பார்கள். பெரியவர்களின் அனுபவங்களை சிறியவர்கள் அறிந்து அறிவுரையை ஏற்று செறிவுடன் நடக்க உதவும் உன்னத அவையாக அமைந்தது.
முதியவர்களை முன்னால் அமர வைத்து அவர்களுக்கு அனுசரணை செய்து மரியாதை கொடுப்பார்கள். சிறியவர்களைச் செம்மல் நபி (ஸல்) அவர்கள் அருகில் அமரவைத்து வழங்கப்படும் அறிவுரையை ஒழுங்காக கேட்க துணை புரிவார்கள்.
ஒரு தரம் அவைக்கு வந்த பேரீட்சை பழங்களை அனைவருக்கும் சமமாக பங்கிட்டு கொடுத்தார்கள். வட்டமாக அமர்ந்து அல்லாஹ்வைப் புகழ்ந்து துதிக்கும் அவை (திக்ரு மஜ்லிஸ்) உலகின் சொர்க்க பூங்கா என்ற பதிவு அஹ்மது நூலில் உள்ளது.
அவையில் அமர்ந்திருப்போர் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அவைக்கு வரும்பொழுது எழுந்து நிற்பதைத் தடை செய்ததை அறிவிக்கிறார் அபூஉமாமா (ரலி) நூல் - அபூதாவூத்.
ஒருமுறை பள்ளிவாயிலுக்கு வந்த வள்ளல் நபி (ஸல்) அவர்கள் தோழர்கள் பல பிரிவுகளாக பிரிந்து அமர்ந்திருப்பதைக் கண்டு உங்களுக்கு இடையில் தடை ஏன் ? என்ன நிகழ்ந்தது ? என்று வினவியதை விவரிக்கிறார் ஜாபிர் இப்னு ஸமுரா (ரலி) நூல்- முஸ்லிம், அபூதாவூத்.
அவைகளின் மேன்மை அவற்றின் விசாலத்தைப் பொறுத்தது என்று பூமான் நபி (ஸல்) அவர்கள் புகன்றதை அறிவிக்கிறார் அபூஸஈதில் குத்ரி (ரலி) நூல்- அபூதாவூத்.
இந்நபி மொழிப்படி பரந்த இடத்தில் விரிந்த உள்ளத்துடன் கூடி கலந்து, அவையை அழகாக்கி பழகி, பாசத்தோடு நேசத்தை நிலை நாட்டி ஒற்றுமையாய் வாழ்வோம். ( தொடரும் )

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 31

(அண்ணல் நபிகளின் அவையழகு 02 )

மக்கள் சடைவடைந்து விடாமல் இருக்க நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிரசங்கம், உபதேச சபைகளை இடைவெளி விட்டு நடத்துவார்கள்.
நபியவர்களின் சபைக்கு வராதவரை விசேஷமாகக் கண்ணியப்படுத்த வேண்டியிருந்தால், நபியவர்கள் தமது புனிதப் போர்வையை அவருக்காக விரித்து விடுவார்கள்.
எந்தச் சபையிலாவது நபி (ஸல்) அவர்கள் கலந்து கொண்டால் சபையினரே தமது பேச்சை முடிக்காதவரை சபையினரின் பேச்சில் சம்பந்தமின்றி தமது எண்ணத்தை நுழைக்க மாட்டார்கள்.
ஸஹாபாப் பெருமக்களின் பகுதிக்கு நபியவர்கள் செல்லும்போது, யாரேனும் எழுந்து நின்றால், நபி (ஸல்) அவர்கள் அதை விரும்ப மாட்டார்கள். இது நபியவர்களுக்கு பிடிக்காது என்பதை தெரிந்து கொண்ட ஸஹாபாக்கள் பிறகு, நபியவர்கள் வந்தால், அவர்களுக்காக எழுந்து நிற்க மாட்டார்கள்.
எந்த சபையிலாவது நபி (ஸல்) அவர்கள் கலந்து கொண்டால் , எங்கு சபை முடிகிறதோ அந்த முடிவில் அங்குதான் அமர்வார்கள். சபைக்கு நடுவே சென்று அமர ஒருபோதும் முயற்சி செய்ய மாட்டார்கள்.
நபி (ஸல்) அவர்கள் ஸஹாபாப் பெருமக்களுடன் அமர்ந்திருக்கும்போது, ஏதேனும் ஒரு தேவைக்காக வீட்டிற்கு செல்ல வேண்டியிருந்து, திரும்பி வருகின்ற எண்ணமிருந்தால், அதற்கு அடையாளமாக தமது காலணிகளை சபையிலேயே விட்டுவிட்டு வெறுங்காலுடன் வீட்டிற்குச் செல்வார்கள்.

நபியவர்கள் தமது தோழர்களுடன் அமர்ந்திருக்கும்போது தமது முபாரக்கான தொடையை உடன் அமர்ந்து இருப்போரை விட முன்னால் வைத்திட முயல மாட்டார்கள். தமக்கும் அவர்களுக்கும் வித்தியாசம் ஏற்பட்டு விடக்கூடாது என்பதுதான் அதற்குக் காரணம்.
ஸஹாபாப் பெருமக்கள் சபையில் அமர்ந்துகொண்டு எந்தப் பேச்சில் ஈடுபட்டுள்ளார்களோ, அந்த பேச்சில் நபியவர்களும் அவர்களுடன் இணைந்து கொள்வார்கள்.
தமது தோழர்களுடன் நபியவர்கள் மறுமையைப் பற்றி பேசிக்கொண்டிருக்கும்போது, அந்த விஷயத்தில் சபையோர் குறைவாக கவனம் செலுத்துவதையும், சடைவதையும் அவர்கள் கண்டுகொண்டால்,
( இதை நபியவர்கள் அவர்களுடைய முக பாவனையை வைத்து விளங்கிக் கொள்வார்கள் )
உடனே பேச்சின் திசையை மாற்றி, உலக விஷயங்களைப் பற்றி பேச ஆரம்பித்துவிடுவார்கள். சபையோர் உற்சாகமடைந்தை உணர்ந்ததும், மீண்டும் மறுமையைப் பற்றி பேசத் தொடங்கிவிடுவார்கள்.
யாரேனும் ஒருவர் நின்றவாறே எதைப் பற்றியாவது கேள்வி கேட்டால், நபியவர்கள் அதை விரும்ப மாட்டார்கள். மேலும் ஆச்சரியமாக அவர் பக்கம் பார்ப்பார்கள்.

ஒரு மஸ்அலாவை பற்றி நபியவர்கள் தன் பேச்சின் மூலம் விளக்கிக் கொண்டிருக்கும் போது, அது முடிவதற்கு முன்பே இன்னொருவர் கேள்வி கேட்டால், நபியவர்கள் அவரது பேச்சை செவியறவே இல்லை என்பது போல் தமது பேச்சைத் தொடர்ந்து கொண்டிருப்பார்கள். அப்பேச்சு முடிந்ததும் கேள்வி கேட்டவரிடமிருந்து கேள்வியை தெரிந்துகொண்டு அதற்கு பதில் கூறுவார்கள்.
நபி (ஸல்) அவர்கள் கண்ணியமிகு ஸஹாபா பெருமக்களின் சபையில் ஆரம்பத்திலேயே இருக்கும்போது, நடுவில் அமர்ந்து இருப்பார்கள். ஸஹாபிகள் நபியவர்களின் இருபுறமும் வட்டமாக அமர்வார்கள். நபியவர்கள் உரையாடும் போது சில சமயம் இந்தப் பக்கம் திரும்பிப் பேசுவார்கள்; சில சமயம் அந்தப் பக்கம் திரும்பிப் பேசுவார்கள். சபையில் இருக்கின்ற ஒவ்வொருவரும் நபி (ஸல்) அவர்கள் பேசும்போது, அவர்களுடைய முகத்தை பார்த்துக் கொள்வார்கள்.

நபியவர்கள் சபையே முடித்து விட்டு எழும்போது, கீழ்கண்ட துஆவை ஓதுவார்கள்.
"யா அல்லாஹ் ! உன்னைப் புகழ்வதுடன் உனது தூய்மையை எடுத்துரைக்கிறேன். வணக்கத்திற்குரிய நாயன் உன்னைத்தவிர வேறு யாருமில்லை என்று சாட்சி சொல்கிறேன். மேலும் உன்னிடம் பாவ மன்னிப்புத் தேடுகிறேன். இன்னும் உன்னிடமே மீளுகிறேன்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 32

( நபியே ! ) அவர்களுக்காக உங்கள் உயிரையே மாய்த்துக் கொள்ளும் அளவுக்கு நீங்கள் கவலைப்படாதீர்கள் )
மக்காவிற்கு தென்கிழக்கே எழுபது மைல் தொலைவில் தாயிப் என்ற ஊரில் வாழ்ந்த பனூதகீப் இனத்தினரும் சிலை வணக்க வழிபாட்டில் மூழ்கி இருந்தனர். நபித்துவம் பெற்ற பதினொன்றாம் ஆண்டு ஜமாத்துல் ஆகிர் மாதத்தில் நடந்தே நபி (ஸல்) அவர்களின் வளர்ப்பு மகன் ஜைது (ரலி) அவர்களுடன் தாயிபுக்குச் சென்றார்கள் தாஹா நபி (ஸல்) அவர்கள்.
வழியிலிருந்த ஒவ்வொரு கூட்டதாருக்கும் இஸ்லாமிய அழைப்பு கொடுக்கப்பட்டும் அக்கூட்டதாரில் எவரும் இஸ்லாமிய அழைப்பை ஏற்றுக் கொள்ளவில்லை.

நபி (ஸல்) அவர்கள் தாயிஃபிற்கு சென்றடைந்தபோது, அங்கு வசித்து வந்த ஸகீஃப் கூட்டத்தாரின் தலைவர்களும் அமர் இப்னு உமைர் அஸ்ஸகபி என்பவனின் பிள்ளைகளுமான

1.அப்து யாலில், 2. மஸ்ஊது, 3. ஹபீப் என்ற மூன்று சகோதரர்களிடம் சென்றார்கள். அவர்களிடம் இஸ்லாமைப் பரப்புவதற்கு உதவி செய்ய வேண்டும் என்று கோரினார்கள்.
அவர்களின் ஒருவன் "உன்னை அல்லாஹ் தூதராக அனுப்பியது உண்மையென்றால், நான் கஃஅபாவின் திரைகளை கிழித்து விடுவேன் என்று கூறினான்.
மற்றொருவன் அல்லாஹ்வுக்கு உன்னைத் தவிர நபியாக அனுப்ப வேறொருவர் கிடைக்கவில்லையா? என்று கேட்டான்.
மூன்றாமானவன் அல்லாஹ்வின் மீது ஆணையாக நான் உன்னிடம் ஒருபோதும் பேச மாட்டேன். நீ உண்மையில் தூதராக இருந்தால், உன் பேச்சை மறுப்பது எனக்கு மிக ஆபத்தானதாகும். நீ அல்லாஹ் மீது பொய் கூறுபவராக இருந்தால் உன்னிடம் பேசுவதே எனக்கு தகுதியல்ல என்று கூறினான்.
அப்போது நபி (ஸல்) அவர்கள் இதுதான் உங்கள் முடிவாக இருந்தால் நம் இந்த சந்திப்பை மக்களுக்கு வெளிப்படுத்தாமல் மறைத்து விடுங்கள் என்று கூறினார்கள்.
நபி (ஸல்) அவர்கள் தாயிஃபில் பத்து நாட்கள் தங்கி அங்குள்ள மற்ற எல்லா தலைவர்கள் பிரமுகர்களைச் சந்தித்து இஸ்லாமிய அழைப்பு விடுத்தார்கள்.
ஆனால் அவர்களில் எவரும் இஸ்லாமை ஏற்றுக் கொள்ளாததுடன் தங்கள் ஊரை விட்டு உடனடியாக வெளியேறும்படி கூற, நபி (ஸல்) அவர்கள் ஊரை விட்டு வெளியே செல்ல முயன்றபோது அவர்களை வம்பர்களும் அடிமைகளும் ஒன்று கூடி ஏசிப் பேசினர்.
இறுதியில் மக்கள் கூட்டம் அதிகமாகி அவர்கள் அனைவரும் இரு அணிகளாக நின்று கொண்டு நபி (ஸல்) அவர்கள் மீது கற்களை எறிந்தனர். அதிகமான கற்களால் நபி (ஸல்) அவர்களின் பாதணிகளும் இரத்தக் கறைகளாயின.
நபி (ஸல்) அவர்களுடன் இருந்த அவர்களின் வளர்ப்பு மகன் ஜைது இப்னு ஹாரிஸா நபியவர்களைக் காப்பதற்காக தங்களையே கேடயமாக்கிக் கொண்டார்கள். அதனால் அவரது தலையில் பலத்த காயம் ஏற்பட்டது.
தாயிஃபிலிருந்து மூன்று மைல்கள் தொலைவிலுள்ள ரபீஆவுடைய மகன்களான உத்பா, ஷைபா என்ற இருவருக்குச் சொந்தமான தோட்டம் வரை நபி (ஸல்) அவர்களை அடித்துக்கொண்டே வந்தார்கள். நபி (ஸல்) அந்த தோட்டத்திற்குள் சென்று அங்குள்ள திராட்சை தோட்ட பந்தலின் நிழலில் அமர்ந்தார்கள்.
அப்போதுதான் மிகப் பிரபலமான அந்த பிரார்த்தனையை நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் வேண்டினார்கள்.
நபி (ஸல்) அவர்களின் உள்ளம் அவர்களுக்கு நேர்ந்த கொடுமை அவர்களின் உயிருக்கு ஆபத்தான நிலையில் எவ்வளவு வேதனை அடைந்திருந்தது என்பதையும், தாயிஃப் மக்கள் இஸ்லாமை ஏற்காததனால் எவ்வளவு துக்கத்திற்கு அம்மக்கள் ஆளானார்கள் என்பதையும் இந்த பிரார்த்தனையிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.
நபி (ஸல்) அவர்கள் கேட்ட பிரார்த்தனை:
"அல்லாஹ்வே! என் ஆற்றல் குறைவையும் என் திறமை குறைவையும் மனிதர்களிடம் நான் மதிப்பின்றி இருப்பதையும் உன்னிடமே முறையிடுகிறேன். கருணையாளர்களிலெல்லாம் மிகப் பெரிய கருணையாளனே! நீதான் எளியோர்களைக் காப்பவன். நீதான் என்னைக் காப்பவன்.
நீ என்னை யாரிடம் ஒப்படைக்கிறாய்? என்னைக் கண்டு முகம் கடுகடுக்கும் அந்நியனிடமா? அல்லது என் காரியத்தை நீ உரிமையாக்கிக் கொடுத்திருக்கும் பகைவனிடமா? உனக்கு என் மீது கோபம் இல்லையானால் (இந்த கஷ்டங்களையெல்லாம்) நான் பொருட்படுத்தவே மாட்டேன். எனினும் நீ வழங்கும் சுகத்தையே நான் எதிர்பார்க்கிறேன். அதுவே எனக்கு மிக விசாலமானது.
உன் திருமுகத்தின் ஒளியினால் இருள்கள் அனைத்தும் பிரகாசம் அடைந்தன. இம்மை மறுமையின் காரியங்கள் சீர் பெற்றன. அத்தகைய உன் திருமுகத்தின் ஒளியின் பொருட்டால், உன் கோபம் என் மீது இறங்குவதிலிருந்தும் அல்லது உன் அதிருப்தி என் மீது இறங்குவதிலிருந்தும் நான் பாதுகாவல் கோருகிறேன்.

அல்லாஹ்வே! நீயே பொருத்தத்திற்குரியவன்! நீ பொருந்தி கொள்ளும் வரை கோபத்திலிருந்து பாதுகாப்பு தேடுகிறேன். அல்லாஹ்வே! பாவத்திலிருந்து தப்பிப்பதும் நன்மை செய்ய ஆற்றல் பெறுவதும் உன் அருள் இல்லாமல் முடியாது.

நபி(ஸல்) அவர்களை இந்த நிலையில் பார்த்த ரபிஆவின் மகன்களுக்கு இரக்கம் வந்தது. தங்கள் கிறிஸ்துவ அடிமை அத்தாஸை அழைத்து, "திராட்சைக் குலையை அவருக்கு சென்று கொடு" என்று கூறினர். திராட்சைக் குலைகளை அத்தாஸ் நபி (ஸல்) அவர்களுக்கு முன் வைத்தவுடன் நபி (ஸல்) அவர்கள் 'பிஸ்மில்லாஹ்' என்று கூறி சாப்பிட்டார்கள்.
அதைக் கண்ட அத்தாஸ் இந்த பேச்சு இவ்வூர் மக்கள் பேசும் பேல்லவே. உங்களுக்கு இது எப்படி தெரியும் என் கேட்டார்.
அதற்கு உனக்கு எந்த ஊர்? உன் மார்க்கம் என்ன ? என்று அவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கேட்க ,
அதற்கு அவர் "நீனவாவை சேர்ந்த கிறிஸ்தவன் நான் " என்றார்.
" நல்லவரான யூனுஸ் இப்னு மத்தாவின் ஊரைச் சேர்ந்தவர் தானே? என்று நபி (ஸல்) அவரிடம் கேட்டதற்கு அவர் ஆச்சரியத்துடன்..,
"யூனுஸ் இப்னு மத்தாவைப் பற்றி உங்களுக்கு எப்படி தெரியும்? " என்றார்.
"அவர் என் சகோதரர்; அவரும் ஓர் இறைத்தூதர்தான் என நபி (ஸல்) அவர்கள் பதில் கூறியவுடன் அத்தாஸ் நபி (ஸல்) அவர்களின் தலை, கை மற்றும் கால்களை முத்தமிட்டார்.
இதைப் பார்த்துக் கொண்டிருந்த ரபிஆவின் மகன்களில் ஒருவர் மற்றவரிடம் இதோ உன் அடிமையை முஹம்மது குழப்பி விட்டார் என்று கூறினான்.
அத்தாஸ் திரும்பி வந்தவுடன் உனக்கு என்ன கேடு நேர்ந்தது? என்று அவ்விருவரும் இடித்துரைத்தனர். அதற்கு அத்தாஸ் என் எஜமானர்களே! இவரை விடச் சிறந்த எவரும் இப்பூமியில் இல்லை. இவர் எனக்கு ஒரு விஷயத்தை மிக உறுதியாகக் கூறினார். அதை இறைத்தூதரைத் தவிர வேறெவரும் அறிந்திருக்க முடியாது என்றார்.
அதற்கு அவ்விருவரும் "அத்தாஸே! உனக்கு என்ன கேடு. இவர் உம்மை உமது மார்க்கத்திலிருந்து திருப்பி விடாமல் இருக்கட்டும். உமது மார்க்கம் தான் இவரின் மார்க்கத்தைவிடச் சிறந்தது" என்று கூறினார்.
நபி (ஸல்) அவர்கள் அந்த தோட்டத்திலிருந்து வெளியேறி மிகவும் கவலையுடன் உள்ளம் உடைந்தவர்களாக மக்கா நோக்கித் திரும்பும் வழியில் கர்னுல் மனாஜில் என்ற இடத்தை அடைந்தபோது, அல்லாஹ் அவர்களிடம் ஜிப்ரீலையும் (மலைகளின் வானவர்) மலக்குல் ஜிபாலையும் அனுப்பினான். மலக்குல் ஜிபால் தாயிஃப்வாசிகளாகிய இம்மக்களை இரு மலைகளையும் ஒன்று சேர்த்து நசுக்கி அழித்து விடவா? என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார்.
சாந்த நபி (ஸல்) அவர்கள் அம்மக்கள் பின்னர் திருந்துவர். இவர்கள் திருந்தவில்லை என்றாலும், இவர்களின் பரம்பரை திருந்தும் என்று கூறி மன்னித்தார்கள்.
" எவனுக்குத் தீய காரியங்கள் அழகாகக் காண்பிக்கப்பட்டு, அவனும் அதனை அழகாகக் காண்கிறானோ அவனும், (எவன் தீய காரியங்களைத் தீயனவாகவே கண்டு அதிலிருந்து விலகிக் கொள்கின்றானோ அவனும் சமமாவார்களா? ஒருபோதும் ஆக மாட்டார்கள்)
நிச்சயமாக அல்லாஹ் தான் விரும்பியவர்களைத் தவறான வழியில் விட்டுவிடுகிறான். தான் விரும்பியவர்களை நேரான வழியில் செலுத்துகிறான்.
ஆகவே, (நபியே!) அவர்களுக்காக உங்கள் உயிரையே மாய்த்துக் கொள்ளும் அளவுக்கு நீங்கள் கவலைப்படாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ் அவர்கள் செய்பவைகளை நன்கறிந்தவனாக இருக்கின்றான். (குர்ஆன் : 35:8)
இன்று தாயிப் ஒரு சிறந்த இஸ்லாமிய நகரமாக பொலிவுடன் விளங்குகிறது.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 33

( நம் பெயரில் என்ன இருக்கிறது ? )

"மறுமை நாளில் உங்கள் தந்தையுடைய பெயருடன் உங்களுடைய பெயர் அழைக்கப் படும் ஆகையால் உங்கள் பெயர்களை அழகு படுத்திக் கொள்ளுங்கள் -அபுதர்தா (ரலி) (அஹ்மத் 20704)
என்ற ஹதீஸின் அடிப்படையில் நாம் பெயர்சூட்டும போது
அழகான பெயர்களை சூட்டிக் கொள்ள வேண்டும் . அழகானபெயர் என்னும் பொது அதன் அர்த்தம் அழகாகவும் இஸ்லாத்துக்கும், சமூக அர்த்தங்களுக்கும்
முரண்பாடில்லாமல் இருக்க வேண்டும் என்பதே.
உதாரணமாக சொல்வதானால் நபி ஸல் அவர்கள் அழகான பெயர் என்பதற்கு அவர்கள் உவமை சொல்லும் போது
" அல்லாஹ்வின் பெயருடன் அப்து (அடிமை) என்ற வார்த்தையை சேர்த்து பெயர் வைப்பது அல்லாஹ்விற்கு மிக விருப்பமானதாகும். உங்கள் பெயர்களில் அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமானது, அப்துல்லாஹ் (அல்லாஹ்வின் அடிமை) மற்றும் அப்துர் ரஹ்மான் (அருளாளனின் அடிமை) ஆகியவையாகும். அறிவிப்பவர் : இப்னு உமர் (ரலி) நூல் : முஸ்லிம் (4320) எனக் கூறினார்கள்
பெயர் அழகாகவும் அர்த்தம் உள்ளதாகவும் இருக்க
வேண்டுமா ? ஏனென்றால்நபி (ஸல்) அவர்கள் இந்த
விஷயத்தில் கடும் அக்கறை செலுத்தி உள்ளனர் என்பதை
பின்வரும் ஹதீஸ் சான்று படுத்துகின்றது.
"நபி (ஸல்) அவர்கள் எதற்கும் சகுனம் பார்த்ததில்லை.(வரிவாங்குவதற்கு) அதிகாரியை அவர்கள் அனுப்பும் போது அவருடையப் பெயரைப் பற்றிக் கேட்பார்கள். அவருடையப் பெயர் அவர்களுக்குப் பிடித்திருந்தால் சந்தோஷம்
அடைவார்கள். அவர்களுடைய முகத்தில் அதனால் மகிழ்ச்சி தென்படும்.
அவருடைய பெயரை அவர்கள் வெறுத்தால் அதன் வெறுப்பு அவர்களது முகத்தில் தென்படும். அவர்கள் ஒரு ஊருக்குச் சென்றால் அதன் பெயரைப் பற்றி விசாரிப்பார்கள். அதன் பெயர் அவர்களுக்குப் பிடித்திருந்தால் அதனால் சந்தோஷம் அடைவார்கள். அதனால் அவர்களுடைய முகத்தில் மகிழ்ச்சி தென்படும். அதன் பெயரை அவர்கள் வெறுத்தால் அதன் வெறுப்பு அவர்களின் முகத்தில் தென்படும்."
அறிவிப்பவர் : புரைதா (ரலி) நூல் : அபூதாவூத் (3419)
அதே போன்று இஸ்லாத்தில் தீயவர்களின் பெயர்களை
சூடுவதை நபி ஸல் அவர்கள் தடை செய்தார்கள்.
"நபி (ஸல்) அவர்களின் மனைவியான உம்முசலமாவின்
சகோதரனுக்கு ஒரு ஆண்குழந்தைப் பிறந்தது. அவர்கள்
(உம்முசலமாவின் குடும்பத்தார்கள்) அக்குழந்தைக்கு வலீத்
என்று பெயர் வைத்தார்கள்.
(இதை அறிந்தவுடன்) நபி (ஸல்) அவர்கள் எகிப்து நாட்டு மன்னர்களின் பெயர்களையா அதற்கு வைத்தீர்கள்? இந்த சமுதாயத்தில் ஒரு மனிதன் தோன்றுவான். அவனுக்கு வலீத் என்று சொல்லப்படும் பிர்அவன் அவனது சமுதாயத்திற்கு தீங்கிழைத்ததை விட அவன் இந்த சமுதாயத்திற்கு அதிகம் தீங்கிழைப்பான் என்று கூறினார்கள். அறிவிப்பாளர் : உமர் பின் ஹத்தாப் (ரலி) நூல்:அஹ்மத் (104)
குறிப்பிட்ட சில பெயர்களை வைக்க நபி (ஸல்) அவர்கள் தடை செய்துள்ளனர் .

"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்கள் அடிமைகளுக்கு அஃப்லஹ் (வெற்றியாளன்), ரபாஹ் (இலாபம்), யசார் (சுலபம்), மற்றும் நாஃபிஉ (பயனளிப்பவன்) ஆகிய நான்கு பெயர்களைச் சூட்ட வேண்டாமென எங்களுக்குத் தடை விதித்தார்கள். அறிவிப்பவர் : சமுரா பின் ஜ,ன்தப் (ரலி)
நூல் : முஸ்லிம் (4328)

நபியவர்களின் புனைப் பெயரை மற்றவர்கள் வைப்பதைத் தடை செய்துள்ளார்கள்.அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: என் பெயரைச் சூட்டிக் கொள்ளுங்கள். (அபுல்காசிம் எனும்) என் குறிப்புப் பெயரைச் சூட்டிக்கொள்ளாதீர்கள். ஏனெனில், நானே உங்களிடையே பங்கீடு செய்கின்ற “அபுல்காசிம்’ ஆவேன்.அறிவிப்பவர்: ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி), நூல்: முஸ்லிம் 4323
ஒருவர் அபுல் காசிம் என்ற பெயரை மட்டும் வைத்துக் கொண்டால் அது குற்றம் கிடையாது.
ஏனெனில்நபியவர்கள் தன்னுடைய பெயரான முஹம்மத் என்ற பெயருடன் சேர்த்து அபுல் காசிம் என்ற புனைப் பெயரைவைப்பது கூடாது என்று தான் தடுத்துள்ளார்கள்.
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: என்னுடைய பெயரையும் என்னுடைய குறிப்புப் பெயரையும் இணைத்துவிடாதீர்கள். நிச்சயமாக நானே “அபுல் காசிம்’ ஆவேன். நான் பங்கீடு செய்பவனாக இருப்பதினால் அல்லாஹ்(அதனை) எனக்கு கொடுத்தான். அபூஹுரைரா (ரலி), அஹ்மத் 9226(6186)
சரி எதோ தவறுதலாக நாம் பெயர் வைத்து விட்டோம் என்றால் அது இஸ்லாத்திற்கு மாற்றமாக இருகின்றது என்றால் அதை என்ன செய்வது ? நாம் அதை மாற்ற வேண்டும் என்பதைத்தான் இஸ்லாம் எமக்கு சொல்லித் தருகின்றது
"முஸய்யப் (ரலி) அவர்களின் தந்தை நபி (ஸல்)
அவர்களிடத்தில் வந்த போது நபி (ஸல்) அவர்கள் உங்களது பெயர் என்ன என்று வினவினார்கள். அதற்கு அவர் ஹஸ்ன்(முரடு) என்று சொன்னார். நபி (ஸல்) அவர்கள் (இனிமேல் உமது பெயர்) சஹ்ல் (இலகு) ஆகும் என்று கூறினார்கள்.
அதற்கு அவர் எனது தந்தை எனக்கு இட்டப் பெயரை நான்
மாற்றமாட்டேன் என்று கூறிவிட்டார்.(இந்த ஹதீஸை அறிவிக்கும் முஸைய்யப் அவர்கள் கூறுகிறார்கள்.) இதன் பின்னர் எங்களிடம் (குணநலன்களில்) முரட்டுத்தன்மை தொடர்ந்து இருந்து கொண்டே இருந்தது.
அறிவிப்பவர் : முஸைய்யப் (ரலி) நூல் : புகாரி (6190)

ஸைனப் (ரலி) அவர்களுக்கு (முதலில்) பர்ரா (நல்லவள்) என்ற பெயர் இருந்தது. அப்போது "அவர் தம்மைத் தாமே பரிசுத்தப்படுத்திக்கொள்கிறார்'' என்று (மக்களால்) சொல்லப்பட்டது. ஆகவே, அவருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஸைனப்' என்று பெயர் சூட்டினார்கள்.
அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல் : புகாரி (619)
அஸ்ரம் என்று சொல்லப்பட்ட ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம்
வருகை தந்த நபர்களில் ஒருவராக இருந்தார். நபி (ஸல்) அவர்கள் அவரிடம், " உம் பெயர் என்ன ? " என்று வினவினார்கள்.
(அதற்கு) அவர் என் பெயர் அஸ்ரமாகும் (காய்ந்த செடிக் கொத்து) என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள் மாறாக உன் பெயர் சுர்ஆவாகும் (மணிகள் கொண்ட பசுமையான செடிக்கொத்து) என்று (பெயர்மாற்றிக்) கூறினார்கள்.
அறிவிப்பவர் : உஸாமா பின் அஹ்தரீ (ரலி)
நூல் : அபூதாவூத் (4303)
இந்த அடிப்படையில் நாம் பெயர்களை சூட்டும் பொது மிகவும் யோசித்து அர்த்தமுள்ள இஸ்லாத்துக்கு முரணில்லாத வகையில் அமைத்துக் கொள்ள வேண்டும் .நமது பெயர் அப்படி இஸ்லாத்துக்கு முரணாக

இருந்தால் அவைகளை மாற்ற நடவடிக்கை எடுக்க வேண்டும்.இஸ்லாத்துக்கு மாற்றமில்லாமல் அர்த்தம் இல்லை என்றிருந்தால் அதில் எந்த தப்பும் இல்லை .அல்லாஹ் மிகவும் அறிந்தவன்.

Rahmath Rajakumaran

19 நூற்றாண்டின் இறுதிவரை வலிமார்களின் பெயர்களான அப்துல்காதர் , ஷாஹுல் ஹமீது , காஜாமைதீன் , ரிபாஈ , அலீ பாத்திமா, கதிஜா , உசேன், அசன் போன்ற பெயர்கள் தமிழகத்தில் சூட்டப்பட்டு வந்தது.
20 நூற்றாண்டின் ஆரம்பத்தில் கிரிக்கெட் தலை தூக்கிய காலத்தில் அஸாருதீன் , இம்ரான் கான், அக்தார் , சுஹைல் போன்ற கிரிக்கெட் வீரர்களின் பெயர்கள் அதிகமாக சூட்டப்பட்டன.
உமர் முக்தார் திரைப்படம் வந்து பரபரப்பான சூழ்நிலையில் உமர் முக்தார் பெயரும் ,
ஈராக் யுத்தத்தின் போது சதாம் உசேன் பெயரும் , ஆப்கான் யுத்த தருணத்தில் உசாமா பெயரும் . பாக். அரசியல் சூடு பிடித்திருந்த காலத்தில் பெனாசிர் போன்ற பெயர்களும் சூட்டப்பட்டன.
நவீன காலத்தில் ஆலிம் பெருமக்களின் இடைவிடாது செய்து வரும் பயான்கள் மூலமாக அநேக நபித்தோழர்களின் பெயர்கள் முஸ்அப் , ஹுதைபா போன்ற பெயர்கள் வலம் வந்து கொண்டிருக்கின்றன.
...ஆனால் அந்தந்த ஊர்களில் அடக்கமாகி இருக்கும் இறைநேசர்களின் பெயர்கள் கூட தற்காலத்தில் புறந்தள்ளப்படுகிறது. இது வேதனைக்குரிய விஷயம். அந்த இறைநேசர்களின் தவத்தால் அவர்கள் எட்டிப்பிடித்த கஷ்பு , இறைநெருக்கம் யாருக்கும் தெரியாமல் மறைக்கப்படுகிறது.
இதனால் நம் வாழ்வியல் பண்பாட்டு கலாச்சாரங்களை ஞாபகப்படுத்தப்படாமல், நம் வரலாற்றை நாமே அழித்துக் கொண்டிருக்கிறோம் என்பதையும் கவனத்தில் கொள்வது நல்லது.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 34

( நம் பெயரில் என்ன இருக்கிறது ? - 2 பகுதி)

ஷுரைஹ் என்பாரின் தந்தை ஹானீ அவர்கள் தன்னுடைய கூட்டத்தாருடன் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். (ஹானீ) அவர்களை அவருடைய கூட்டத்தினர் “அபுல் ஹகம்” (நீதிபதியின் தந்தை) என்று புனைப் பெயர் சூட்டி அழைப்பதை நபி (ஸல்) அவர்கள் செவியேற்றார்கள்.
நபி (ஸல்) அவர்கள் அவரை அழைத்து அல்லாஹ்தான் “ஹகம்” (நீதிபதி) ஆவான். அவனிடம் தான் “தீர்ப்பு” உள்ளது. நீர் ஏன் “அபுல் ஹகம்” (நீதிபதியின் தந்தை) என்று புனைப் பெயர் சூட்டிக் கொண்டீர்?” என்று கேட்டார்கள்.
அதற்கவர், “என்னுடைய சமுதாயம் ஏதாவது ஒரு விஷயத்தில் கருத்து வேறுபாடு கொண்டார்கள் என்றால் என்னிடத்தில் வருவார்கள். நான் அவர்களுக்கு மத்தியில் தீர்ப்பளிப்பேன். இரு பிரிவினரும் அதைப் பொருந்திக்கொள்வார்கள்” என்று கூறினார்.
அதற்கு நபி (ஸல்), “இது அழகானதல்ல” எனக் கூறிவிட்டு உனக்கு குழந்தைகள் இருக்கிறார்களா? என்று கேட்டார்கள். அதற்கவர் எனக்கு சுரைஹ், முஸ்லிம் , அப்துல்லாஹ் ஆகியோர் உள்ளனர் எனக் கூறினார். அவர்களில் மூத்தவர் யார்? என்று நபியவர்கள் கேட்டார்கள். அதற்கவர் ஷுரைஹ் என்று பதிலளித்தார். அதற்கு நபியவர்கள் நீ இனி “அபு ஷுரைஹ்” (ஷுரைஹின் தந்தை) என்றுஅவருக்கு பெயர் சூட்டினார்கள்.
நூல்: அபூதாவூத் 4304

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் “ஆஸியா’ (பாவி) எனும் பெயரை மாற்றி விட்டு, “நீ (பாவியல்ல), ஜமீலா(அழகி)” என்று கூறினார்கள்.அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் உமர் (ரலி), நூல்: முஸ்லிம் 4332

இங்கு பாவி என்ற பொருளுக்குரிய அரபி வார்தை ஆஸியா என்பது அய்ன், ஸாத், யா, தா ஆகியஎழுத்துகளை உள்ளடக்கியதாகும்.
அலிஃப், சீன், யா, தா ஆகிய எழுத்துக்களை உள்ளடக்கிய ஆசியா என்ற பெயரை வைத்துக் கொள்ளலாம். இது பிர்அவ்னுடைய மனைவி அன்னை ஆசியா (அலை) அவர்களின் பெயராகும்.
நபி (ஸல்) அவர்களிடத்தில் வந்த நபர்களில் "அஸ்ரம்' .(நன்மைகளை முறிப்பவர்) என்று கூறப்படும் ஒரு மனிதர் இருந்தார்.
அவரிடம் நபி (ஸல்) அவர்கள் "உன் பெயர் என்ன என்று கேட்டார்கள். அதற்கவர் "அஸ்ரம்' (நன்மைகளை முறிப்பவர்) என்று கூறினார்.
அதற்கு நபியவர்கள், இல்லை. நீ "சுர்ஆ" (விளைவிக்கும் பூமி) என்றுகூறி (அவருக்கு பெயர் சூட்டி)னார்கள்)
அறிவிப்பவர்: உஸாமா பின் உஹ்தர் (ரலி), அபூதாவூத் 4303
மக்கா வெற்றியின் போது ஆஸி (இறைவனுக்கு மாறு செய்பவர்) என்ற பெயர் கொண்ட ஒருவர் இஸ்லாத்தைத்தழுவினார்.
நபியவர்கள் அவரின் பெயரை முதீவு (இறைவனுக்கு கட்டுப்படக்கூடியவர்) என்று மாற்றினார்கள். அவருக்கு பெயர் மாற்றம் செய்ததையும், இறைவனுக்கு மாறுசெய்பவர் இஸ்லாத்தை தழுவ மாட்டார்; கட்டுப்படுபவர் தான் இஸ்லாத்தை தழுவுவார் என்பதையும் குறிக்கும் வகையில் நபியவர்கள் பின்வருமாறு கூறுகிறார்கள்.
மக்கா வெற்றி நாளின் போது நபி (ஸல்) அவர்கள் கூற முதீவு (ரலி) அவர்கள் செவியேற்றார்கள்:
(நபியவர்கள் கூறினார்கள்) இந்த நாளுக்குப் பிறகு குரைஷிகள் சித்ரவதையினால் கொல்லப்படமாட்டார்கள். (இறைவனுக்கு) மாறு செய்பவர்களான குறைஷிகளில் இறைவனுக்கு வழிபடக்கூடியவரை "(முதீவு)" தவிர வேறுயாருக்கும் இஸ்லாம் சென்றடையவில்லை.
அவரின் பெயர் "ஆஸி" (இறைவனுக்கு மாறு செய்பவர்) என்று இருந்தது. அவருக்கு நபியவர்கள் "முதீவு" (கட்டுப்படக்கூடியவர்) என்று பெயர் சூட்டினார்கள். நூல்: அஹ்மத் 15446
பஷீர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து தன்னுடைய பெயர் ஸஹ்ம் (நெருக்கடி) என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள் அவருக்கு பஷீர் (நற்செய்தி) என்று பெயர் சூட்டினார்கள் அறிவிப்பவர்: பஷீர் (ரலி), நூல்: அஹ்மத் 20950
சில பெயர்கள் அழகிய பொருளுடையதாக இருந்தாலும் அந்தப் பெயரைக் கூறி அழைக்கும் போது, அவர் இல்லை என்று பதில் வந்தால்,அந்த அழகிய தன்மையே இல்லாமல் போய்விட்டதோ என்று எண்ண வேண்டியநிலை ஏற்படும். இதன் காரணமாக இது போன்ற சில பெயர்களை வைப்பதைத் தடை செய்தார்கள். ஆனால் இதை நபியவர்கள் வாழும் போதே கண்டு கொள்ளாமலும் விட்டிருக்கின்றார்கள்.

நபி (ஸல்) அவர்களின் துணைவியாரான) ஜுவைரியா (ரலி) அவர்களுக்கு (முதலில்) "பர்ரா' என்ற பெயர் இருந்தது. அவருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "ஜுவைரியா' (இளையவள்) எனப் பெயர்மாற்றினார்கள். "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "பர்ரா'விடமிருந்து (நல்லவளிடமிருந்து) புறப்பட்டுவிட்டார்கள்' என்று சொல்லப்படுவதை அவர்கள் வெறுத்தார்கள். அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலி), முஸ்லிம் 4334

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 35

( உத்தம நபியின் உபதேச முறைகள் )

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பள்ளியில் பிரசங்கம் செய்வதாக இருந்தால், முபாரக்கான ஒரு தடியின் மீது சாய்ந்தவாறு நின்று கொள்வார்கள்.
யுத்த களத்தில் உபதேசிக்கும் போது வில்லின் மீது சாய்ந்தவாறு நிற்பார்கள்.

உரை நிகழ்த்தும் போது பரிசுத்த மேனி வலது புறமும் இடது புறமும் திரும்பும். உதாரணங்களை கூறும்போது அவர்கள் விருப்பப்படி கைகளை அசைப்பார்கள். அதனால் சில சமயம் அவர்களுடைய தசைப் பகுதியில் சப்தம் உண்டாகும்.
நபியவர்கள் மிம்பர் மீதும், வாகனத்தின் மீதும் உபதேசம் செய்துள்ளார்கள்.
உபதேசம், பிரசங்கத்துடைய குறிப்பான, சுருக்கமான சபைகள் கிட்டத்தட்ட ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகும் குறிப்பாக பஜ்ரு தொழுகைக்குப் பிறகு நடைபெறும். என்றாலும் பொதுவான பயனை நாடி சிலசமயம் பொதுச் சபைகளையும் கூட்டுவார்கள்.
உபதேசத்திற்கிடையே எந்த விஷயத்தில் அழுத்தம் கொடுக்க வேண்டுமோ அந்த விஷயத்தில் " என் உயிர் எவன் கைவசம் இருக்கிறதோ அவன் மீது சத்தியமாக '' என்ற வார்த்தைகளால் சத்தியமிட்டு கூறுவார்கள்.
............................................................................................... ..... ................................ ....................
நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தனது மருமகன் ஹஜரத் அலீ (ரலி) அவர்களுக்கு உபதேசம் செய்தார்கள்.
" அலீயே..! நீங்கள் ஐந்து விஷயத்தை தினமும் செய்யாமல் உறங்க வேண்டாம்.
01) முழு குர்ஆனையும் ஓதாமல் உறங்க வேண்டாம்.
02) தினமும் 4,000 தினார்கள் தர்மம் செய்யாமல் உறங்க வேண்டாம்.
03) கஃபாவை தவாபு செய்யாமல் உறங்க வேண்டாம்.
04) சொர்க்கத்தில் உங்கள் இடத்தை பாதுகாக்காமல் உறங்க வேண்டாம்.
05) உங்கள் எதிரியை (இச்சை) கொல்லாமல் உறங்க வேண்டாம்.
அதற்கு ஹஸரத் அலி ரலியல்லாஹு அவர்கள் :
"யா ரசூல்லாஹ்..! அனைத்தும் ஒரே இரவில் எப்படி சாத்தியம் ?" என கேட்க...
நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள்

01 சூரத்துல் இக்லாஸ் குல்ஹூவல்லாஹூ சூராவை மூன்று முறை ஓதினால், குர்ஆன் முழுவதும் ஓதிய நன்மை பெறுவீர்.
02) சூரத்துல் பாத்திஹாவை 4 முறை ஓதினால், 4000 தீனார்கள் தர்மம் செய்த நன்மையைப் பெறுவீர்.
03) நான்காம் கலிமாவை 10 முறை ஓதினால் கஃபாவை தவாபு செய்த நன்மை பெறுவீர்கள் .
04) "லாஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹில் அலிய்யுல் அளீம்" - என்று 10 முறை ஓதினால், சுவனத்தில் உமது இடத்தை பாதுகாத்த நன்மை பெறுவீர்.
05) "அஸ்தஃபிருல்லாஹ் அளீம் வஅதூபு இலைஹி " -என 10 முறை ஓதினால், உமது எதிரியை கொன்றதற்குச் சமம் எனக் கூறினார்கள்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 36

(மக்களுடன் மாநபி )

யாரேனும் நபியவர்களின் காதில் ரகசியமாக பேசினால் , அவர் பேச்சை முடித்துவிட்டு, தமது வாயை அகற்றாத வரை நபியவர்கள் தமது முபாரக்கான தலையை விலக்கிக் கொள்ள மாட்டார்கள்.
எவரேனும் முஸாபஹாச் செய்ய நபி அவர்களின் கைகளைப் பிடித்துக் கொண்டால், அவரே தமது கையை எடுக்காத வரை நபியவர்கள் தமது கையை எடுக்க மாட்டார்கள்.

யாரேனும் பேசுவதற்காக அவர்களின் பக்கம் திரும்பினால், அவரே தமது முகத்தை திருப்பாத வரை நபியவர்கள் அவரை விட்டும் முபாரக்கான முகத்தை திருப்பிக் கொள்ள மாட்டார்கள்.
எவரேனும் புத்தாடை அணிந்து அவர்கள் சமூகத்திற்கு வந்தால் நபியவர்கள் அதைப் புகழ்ந்து ( "ஹஸனதுன் ஹஸனா " ) "நிரம்ப அழகு ! நிரம்ப அழகு !! என்று கூறுவார்கள். பிறகு ("அப்லி வ அஹ்லிக் ") - "பழையதாக்கிக் கிழித்து விடு !" என்று கூறுவார்கள்.
அன்பையும் நெருக்கத்தையும் வெளிகாட்ட சிலசமயம் பெயரை சுருக்கி அழைப்பார்கள். உதாரணமாக "அபா ஹுரைரா " என்பதை "அபா ஹுர் " என்றழைப்பார்கள் .
யாருடைய நாவிலிருந்தாவது தகாத வார்த்தை வந்துவிட்டாலோ, அவர் தகாத செயலைச் செய்து விட்டாலோ நபி (ஸல்) அவர்கள் அவருடைய பெயரைச் சொல்லி உச்சரிக்காமல், பொதுவான முறையில் "மக்களுக்கு என்ன ஆகிவிட்டது ? இப்படி சொல்லலாமே ! (அல்லது) இப்படி செய்து இருக்கலாமே !" என்பார்கள்

தீனுடைய விஷயத்தில் யாரேனும் மாறு செய்யக் கண்டு நபிகளாரின் சுபாவத்தில் கடுமையான வெறுப்பு ஏற்பட்டு விட்டால், இரண்டு விதங்களில் வெளிப்படுத்துவார்கள்.
1.மனிதரை விட்டும் தமது முகத்தைத் திருப்பிக் கொள்வார்கள்.
2)அவருடைய ஸலாத்தை ஏற்கமாட்டார்கள். அதாவது ஸலாமுக்கு பதில் சொல்ல மாட்டார்கள்.
நபி (ஸல்) அவர்கள் வழியில் யாரையேனும் சந்தித்தால், தாமே முதலில் ஸலாம் சொல்ல முயற்சிப்பார்கள்.
யாருக்கேனும் ஒரு விஷயத்தை தூது அனுப்பும் அவசியம் ஏற்பட்டால் . அவருக்கு ஸலாம் சொல்லும்படி கூறுவார்கள்.
யாருடைய ஸலாமாவது நபியவர்களுக்கு ஏத்திவிட்டால், ஸலாம் சொல்லி அனுப்பியவருக்கும், அதைக் கொண்டு வந்தவருக்கும் ஸலாத்தின் பதிலை இப்படி கூறுவார்கள் ("அலைக்க வ அலா Fபுலானின் ஸலாம்") - உம் மீதும், அவர் மீதும் ஸலாம் உண்டாவதாக !
நபியவர்களின் ஆடையில் இருந்தோ அல்லது புனித மேனியிலிருந்து யாரேனும் ஏதோ ஒரு பொருளை தட்டிவிட்டால் ( உதாரணமாக சிறு துரும்பு, ஒட்டடை , மண் போன்றவை ) நபியவர்கள் தட்டி விட்ட அவரது செய்கைக்கு நன்றி தெரிவிக்கும் விதத்தில், ("மஸ்ஸஹல்லாஹு அன்க மா தக்ரஹு " ) _அதாவது, " நீர் வெறுக்கின்ற உனக்கு பிடிக்காத விஷயங்களையும் அல்லாஹுத்தஆலா உம்மை விட்டும் தூரமாக்குவனாக !" என்று கூறுவார்கள்
ஒருவருடைய பெயர் தெரியவில்லை. அவரை அழைக்க வேண்டும் எனில் ("யா இப்ன அப்தில்லாஹ் ") - "அல்லாஹு தஆலாவின் அடிமையின் மகனே ! " _என்று கூறுவார்கள்.
தேவை உள்ளவர்கள் யாரேனும் நபிகளாரின் சமூகத்திற்கு வந்தால், அவராகவே எழுந்து செல்லும்வரை, நபியவர்கள் தாமாக எழுந்து விடமாட்டார்கள். மனிதாபிமானமே இதற்கு காரணம்.
ஒருவர் பேசிக் கொண்டிருக்கும்போது, இடையே அவரது பேச்சை வெட்டிவிடுவது எப்போதுமே வழமையாக இருந்ததில்லை. ஆனால் அவர் உண்மைக்குப் புறம்பாக பேசிவிட்டால், நபியவர்கள் அவரை தடுப்பார்கள். அல்லது அங்கிருந்து எழுந்து விடுவார்கள்.
தமது நண்பர்கள் அன்பர்கள் வழங்குகின்ற அன்பளிப்புகளை நபி (ஸல்) அவர்கள் அவசியம் ஏற்றுக்கொள்வார்கள். அதே சமயம் அவர்களுக்கும் அதற்குப் பதிலாக வேறு அன்பளிப்பு வழங்குவதற்கு முயற்சிப்பார்கள்.
நபியவர்கள் இரவு நேரத்தில் யாரிடமாவது சென்றால், விழித்து இருப்பவர் கேட்டுக் கொள்ளும்படி தூங்குபவர் விழித்து விடாதபடி மெல்லிய குரலில் ஸலாம் சொல்வார்கள்.
சந்திக்கும் போது சில சமயம் முஸாபஹா செய்வார்கள். சில சமயம் முஆனாக செய்வார்கள். சில சமயம் நெற்றியில் முத்தமிடவும் செய்வார்கள்.
நபியவர்கள் தமது தோழர்களில் யாருக்காவது கண்வலி இருப்பதை கண்டால்,

"அல்லாஹும்ம மத்திஃனி பி பஸரி வஜ்அல்ஹுல் வாரிச மின்னி வஅரினி பி அதுவி சாரி வன்சுர்னி அலா மன் ளலம்னி"
பொருள் : " யா அல்லாஹ் ! என் கண்ணிற்கு சுகம் தருவாயாக! இவரையும் அதற்கு (சுகத்திற்கு ) வாரிசு ஆக்குவாயாக ! எதிரிகளுக்கு என்னை கம்பீரமாக காட்டுவாயாக ! எனக்கு அநியாயம் செய்தவர்களுக்கு எதிராக எனக்கு உதவி செய்வாயாக ! "என்று கூறுவார்கள்.
நபியவர்களின் திருச்சபையில் அவர்களின் சங்கைமிகு நற்குணத்தால் ஒருவர் செய்த குறை மன்னிக்கப்பட்டு விட்டால், அதற்கு அடையாளமாக தமது முபாரக்கான தலைப்பாகையை அவரிடம் அனுப்பி வைப்பார்கள்.
முக்கியமாக கண்ணியம் வாய்ந்த விருந்தாளிகளுக்கு தாமே முன்னின்று விருந்துபசாரம் செய்வார்கள்.
உணவு பொருட்களை தனியாக எப்போதும் உண்ண மாட்டார்கள். மாறாக வந்திருப்பவர்களையும் அதில் சேர்த்துக்கொண்டு, வராதவர்களுக்குரிய பங்கை எடுத்து வைத்து விடுவார்கள்.
நபியவர்கள் வழியில் யாருடைய கையையாவது பிடித்துக் கொண்டால், பிறகு பிரிந்து செல்லும்போது, "அல்லாஹும்ம ஆதினா பித்துன்யா ஹஸனதன் வ பில் ஆஹிரதி ஹஸனதவ் வகினா அதாபன் னார்"
பொருள் : "யா அல்லாஹ் எங்களுக்கு இவ்வுலகிலும் மறுமையிலும் நன்மையை தந்து, நரக நெருப்பிலிருந்து பாதுகாப்பாயாக !
எப்போதாவது ஒருவரை அவருடைய அடையாளத்தைச் சொல்லி அழைப்பதுண்டு. ஒருமுறை ஒருவர் செருப்பணிந்து கொண்டு கப்ருகளில் சுற்றிக் கொண்டிருந்தார். நபியவர்கள் அவரைத் தடுத்தார்கள். அப்பொழுது "செருப்பு போட்டு இருப்பவரே செருப்பை கழற்றி விடும் " என்று சொன்னார்கள் .
எதிர்பாராமல் தன்னால் யாருக்கேனும் சிரமம் ஏற்பட்டால், அவர் தம்மை பழிவாங்க அவருக்கு உரிமை கொடுப்பார்கள். சில சமயம் அந்தக் கஷ்டத்திற்கு பகரமாக அவருக்கு ஏதேனும் ஒரு பொருளைக் கொடுப்பார்கள்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 37

("அஹ்லுல் பைத்" - என்னும் அண்ணலாரின் குடும்பத்தார்கள் )

" அல்லாஹ்வின் அன்பை பெற விரும்பினால், என்னை அன்பு வையுங்கள், எனது அன்பை பெற வேண்டுமானால், என் குடும்பத்தார்களை அன்பு வையுங்கள்" - என்று நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள் -இப்னு அப்பாஸ் (ரலி ) திர்மிதி 3814 , மிஸ்காத் 573
நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தார் விஷயத்தில் அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஆவின் நிலைப்பாடு.....
" ஜகாத் பெறுவது எவர்கள் மீது ஹராமாக்கப்பட்டுள்ளதோ, அவர்களே நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தார்கள் ஆவார்கள்"
அல்லாஹ் கூறுகிறான்:
" (நபியுடைய!) வீட்டினரே அல்லாஹ் நாடுவதெல்லாம் உங்களை விட்டும் (சகல) அசுத்தத்தைப் போக்கி உங்களை முற்றிலும் பரிசுத்தமாக்குவதையும் தான். குர்ஆன் (33:33)
இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள் (33:33) வசனத்திற்கு விளக்கமளிக்கும் போது, நபி (ஸல்) அவர்களின் மனைவிமார்களும் நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தார்களில் அடங்குவார்கள் என்பதில் அல்குர்ஆனை ஆழ்ந்து படிப்பவர்களில் யாருமே சந்தேகம் கொள்ளமாட்டார்கள் என்கிறார்கள்.
ஏனெனில், இந்த வசனத்திற்கு முன்னுள்ள வசனங்களில் நபி (ஸல்) அவர்களின் மனைவிமார்களைப் பற்றியே குறிப்பிடப்பட்டுள்ளது. ஆகவேதான் அல்லாஹ் இந்த வசனங்களுக்குப் பிறகு கூறுகிறான்:
மேலும் உங்கள் வீடுகளில் ஓதப்படுகின்ற அல்லாஹ்வின் வசனங்களையும் ஹிக்மத் (எனும் சுன்னத்)தையும் நினைவு கூறுங்கள். (33:34)

" நபியவர்களின் மனைவிமார்களே! நபி (ஸல்) அவர்கள் உங்கள் வீடுகளில் இருக்கும்போது அல்லாஹ் அவர்கள் மீது இறக்கிய அல்குர்ஆன், சுன்னாவின் அடிப்படையில் செயல்படுங்கள். கதாதா மற்றும் சில அல்குர்ஆன் விரிவுரையாளர்கள் இந்த கருத்தையே குறிப்பிட்டுள்ளார்கள்.
நபி (ஸல்) அவர்களின் மனைவிமார்களே! மற்ற மனிதர்களுக்கு மத்தியில் அல்லாஹ் உங்கள் மீது பிரத்யேகமாக செய்துள்ள அருளை நினைத்துப் பாருங்கள். மற்றவர்களை எல்லாம் தவிர்த்து நபி (ஸல்) அவர்கள் உங்கள் வீடுகளில் இருக்கும்போதுதான் அவர்கள் மீது வஹீ இறங்கியிருக்கிறது.

நபி (ஸல்) அவர்களின் மனைவிகள் மீது பொதுவாக அல்லாஹ்வின் இந்த அருட்கொடை இருந்தாலும், ஆயிஷா (ரலி) அவர்களே பிரத்யேகமான முறையில் இந்த அருளுக்கு முதல் சொந்தக்காரர்.
ஆயிஷா (ரலி) அவர்களைத் தவிர்த்து வேறு எந்த மனைவியிடத்திலும் நபி (ஸல்) அவர்கள் இருந்தபோது அவர்களின் படுக்கை விரிப்பில் வஹீ வந்ததில்லை. இதனை நபி (ஸல்) அவர்களே தெளிவுபடுத்திக் கூறியுள்ளார்கள்.
ஆக, நபி (ஸல்) அவர்களின் மனைவிகள் அனைவருமே இந்த உயர்வான, சிறப்பான அந்தஸ்தைப் பெறுவதற்கு அதிக தகுதி வாய்ந்தவர்கள் ஆவார்கள்.
நபி (ஸல்) அவர்களின் மனைவியரே நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தார்களில் வருவார்கள் என்றால் நபி (ஸல்) அவர்களின் உறவினர்கள் அவர்களைவிட அதிக தகுதி படைத்தவர்களாக இருக்கிறார்கள். (தஃப்ஸீர் இப்னு கஸீர்)
நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தார்களை அஹ்லுஸ் சுன்னாக்கள் நேசிக்கின்றனர், " கதீர் கம் " என்ற இடத்தில் நபி (ஸல்) அவர்கள் உபதேசித்ததைப் பாதுகாத்து வருகின்றனர்.
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: எனது குடும்பத்தார்கள் விஷயத்தில் அல்லாஹ்வை உங்களுக்கு நான் நினைவூட்டுகிறேன். (முஸ்லிம்)
அஹ்லுஸ் சுன்னாக்கள் நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தார்களை நேசிப்பார்கள், அவர்களைக் கண்ணியப்படுத்துவார்கள். ஏனெனில், நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தார்களை நேசிப்பதும், அவர்களைக் கண்ணியப் படுத்துவதும் நபி (ஸல்) அவர்களை நேசிப்பதற்கும் கண்ணியப்படுத்துவதற்கும் அடையாளமாகும்.
நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தில் உள்ளவரை நேசிப்பதற்கும், அவரை கண்ணியப்படுத்துவதற்குமான நிபந்தனை அவர் இஸ்லாமிய மார்க்கத்தில் உள்ளவராகவும், நபி (ஸல்) அவர்களின் சுன்னாவை பின்பற்றக் கூடியவராகவும் இருக்க வேண்டும்.
உதாரணத்திற்கு, அப்பாஸ் (ரலி) அவர்கள், அவர்களின் வாரிசுகள் அலீ (ரலி) அவர்களும் அவர்களின் வாரிசுகள் போன்று. எவர் சுன்னாவிற்கு மாற்றமாக, இஸ்லாமிய மார்க்கத்தில் நிலைத்திருக்காமல் இருக்கிறாரோ அவரை நேசிக்கக் கூடாது. அவர் நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தில் உள்ளவராக இருந்தாலும் சரியே!
அஹ்லுஸ்சுன்னாக்கள் நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தார்கள் விஷயத்தில் நடுநிலையில் உள்ளனர். அவர்களில் மார்க்கத்தில் நிலைத்திருப்பவரை நேசிப்பார்கள், நபி (ஸல்) அவர்களின் வழிமுறைக்கு மாற்றமாக நடப்பவர்களை மற்றும் மார்க்கத்தில் இல்லாதவரை விட்டும் தங்களை விலக்கிக் கொள்வார்கள்.
ஏனெனில், நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தாராகவும், உறவினராகவும் இருப்பதால் மட்டுமே ஒருவருக்கு பலன் ஏற்பட்டு விடாது. அவர் இஸ்லாமிய மார்க்கத்தில் நிலைத்திருப்பதின் மூலமாக மட்டுமே பலன் ஏற்படும்.
" உங்களின் நெருங்கிய உறவினர்களை எச்சரியுங்கள்" - என்ற வசனம் இறங்கிய போது நபி (ஸல்) அவர்கள்..
" குறைஷிகளே! உங்களை நீங்களே (அல்லாஹ்வின் வேதனையை விட்டு) காத்துக் கொள்ளுங்கள். அல்லாஹ்விடமிருந்து நேரும் எந்த ஒன்றையும் விட்டு உங்களை நான் காக்க முடியாது.
அப்பாஸ் பின் அப்துல் முத்தலிபே! அல்லாஹ்விடமிருந்து நேரும் எந்த ஒன்றையும் விட்டு உங்களை நான் காக்க முடியாது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் மாமியே அல்லாஹ்விடமிருந்து நேரும் எந்த ஒன்றையும் விட்டு உங்களை நான் காக்க முடியாது.

முஹம்மதின் மகளாகிய பாத்திமாவே இவ்வுலகில் எனது பொருட்களில் இருந்து எதை விரும்புகிறாயோ அதனைக் கேள். ஆனால் மறுமையில் அல்லாஹ்விடமிருந்து நேரும் எந்த ஒன்றையும் விட்டு உன்னை நான் காக்க முடியாது "என்றார்கள் (அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி), நூல்:புகாரி - 2753)
நற்செயல்களில் பின்தங்கியவரை குலப்பெருமை முன்னுக்கு கொண்டு வருவதில்லை (முஸ்லிம்)
நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குள்ள தனிச்சிறப்புக்களில் ஒன்று அவர்களுடைய பெயர் சொல்லப்படுகிறஇடங்களில் அவருடையை குடும்பத்தாரும் வாழ்த்தப்படுவார்கள்.
பெருமானார் (ஸல்) ) அவர்களுடைய குடும்பத்தாரை வாழ்த்துவதும் கண்ணியப்படுத்துவதும் முஸ்லிம்களின் கடமையாகும்.
தன் மீது எப்படி ஸலவாத்துச் சொல்வது என்பதை விவரித்த நபி (ஸல்) அவர்கள். இவ்வாறு சொல்லித்தந்தார்கள் இறைவா! முஹம்மதின் மீதும் அவருடைய குடும்பத்தினர் மீதும் அருட்செய்வாயாக! இபுறாகீமின் மீதும்அவருடைய குடும்பத்தினர் மீதும் அருட்செய்த்து போல. முஹம்மதின் மீதும் அவருடைய குடும்பத்தினர்மீதும் பாக்கியங்களை பொழிவாயாக! இபுறாகீமின் மீதும் அவருடைய குடும்பத்தின்ர் மீது பொழிந்தது போல!
வ அலா ஆலிஹி – என்ற வார்த்தைக்கு அவருடைய குடும்பத்தார் என்று பொருள்,
ஷாபி மத்ஹபில் அதிகாலை பஜ்ரு தொழுகையின் போது ஓதப்படுகிற குனூத்தில் பெருமானாரின் மீதுசலாத் சொல்ல வேண்டும் அதற்காக நிற்க வேண்டும் என்பது போல பெருமானாரின் குடும்பத்தினர் மீது சலவாத் சொல்ல வேண்டும் அதற்காக நிற்கவேண்டும் என்று சட்டம் சொல்லப் பட்டிருக்கிறது.
பெருமானாரின் குடும்பத்தை நேசிப்பது அவர்கள் விச்யத்தில் நல்லெண்ணம் கொள்வது நிபாக்கிலிருந்துகாப்பாற்றும் என்று தஹாவி கூறுகிறார்,
பெருமானாரின் குடும்பம் எது?
நபிகள் நாயகத்தின் முப்பாட்டனார் ஹாஷிமுடைய வாரிசுகளில் உள்ள முஸ்லிம்கள் அனைவரும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் குடும்பம் என்று கருதப்படுவர்.
அஹ்லுஸ் ஸுன்னத் வல்ஜமாத்தின் கருத்தின் படி பின்வருவோர் அனைவரும் பெருமானாரின்குடும்பத்தினராக கருதப்படுவர்.

- நபி (ஸல்)
- அவர்களுடைய குழந்தைகள்
- அவர்களுடைய மனைவியர்
- பெருமானாருடைய பாட்டனார் ஹாசிம் குடும்பத்தைச் சார்ந்த
- அப்பாஸ் பின் அப்துல் முத்தலிபின் வாரிசுகள்
- அகீல் பின் அபீதாலிபின் வாரிசுகள்
- ஜஃபர் பின் அபீதாலிபின் வாரிசுகள்
- அலீ பின் அபீதாலிபின் வாரிசுகள்
- ஹாரிஸ் பின் அப்துல் முத்தலிபின் வாரிசுகள்
- அபூலஹ்பு பின் அப்துல் முத்தலிபின் வாரிசுகள்
- இவர்களின் வாரிசுகளில் இன்று வரையுள்ள உறுப்பினர்கள்.
- சல்மான் பார்ஸி (ரலி)

இவர்களில் சல்மான் (ரலி) அவர்கள் பெருமானாரின் குடும்பத்தினரோடு நேரடித் தொடர்புடையவர் அல்ல. பாரசீகத்திலிருந்து ஒரு சத்திய நெறியைத் தேடி நீண்ட நெடிய பயணம் செய்த பிறகு நபி ( ஸல்)அவர்களைத் தேடிக் கண்டுபிடித்து இஸ்லாமைத் தழுவியவர்.

அகழ் யுத்தத்தின் போது மதினாவின் வாசலில் அகழி தோண்டி தற்காப்புச் செய்து கொள்ள பெருமானாருக்கு ஆலோசனை வழங்கியவர். அகழிதோண்டுவதற்காக மக்காவிலிருந்து குடிபெயர்ந்து வந்த முஹாஜிர்களும், மதீனாவை தாயகமாக கொண்ட அன்சாரிகளும் தனித்தனியாக அணி பிரிக்கப்பட்ட போது, பாரசீகத்தைச் சேர்ந்த சல்மான் தனியாக நின்றார்.
மக்காவைச் சேர்ந்த முஹாஜிர் தோழர்களும், மதீனாவைச் சேர்ந்த அன்சாரித் தோழர்களும் “இவர் எங்களவர் என்று அவரைச் சொந்தம் கொண்டாட போட்டியிட்டார்கள்.
அப்போது நபி (ஸல்) அவர்கள் குறிக்கிட்டு “சல்மானும் மின்னா மின் அஹ்லில் பைத்” சல்மான எங்களைச் சேர்ந்தவர். எங்களது குடும்பத்தில் ஒருவர்”என்று சொன்னார்கள். அந்த ஒரு வார்த்தையின் காரணமாக சல்மான் (ரலி) பெருமானாரின் குடும்பத்தவர்களில் ஒருவராக கருதப்படுகிறார்கள்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 38

( இஃதிகாஃப் )

இஃதிகாஃப் என்ற அரபி வார்த்தைக்கு தங்குதல்’ என்ற பொருளாகும். இஸ்லாமிய வழக்கில் பள்ளியில் நன்மையை எதிர்பார்த்துத் தங்குவதற்கு இஃதிகாஃப் என்று சொல்லப்படும்.
நபி (ஸல்) அவர்கள் ரமலான் மாதத்தின் கடைசி 10 நாட்கள் இஃதிகாஃப் இருந்துள்ளார்கள். நபித்தோழர்களும் இருந்துள்ளனர்.
ரமலானில் இஃதிகாப் எதற்காக?
ஆயிரம் மாதங்களை விடச் சிறந்த இரவாக இருக்கும் லைத்துல் கத்ரை அடைந்து அதில் அதிகமதிகம் நன்மைகளைச் செய்ய வேண்டும், வேறு எண்ணங்களுக்கு இடம் கொடுத்து வணக்கங்களைக் குறைத்து விடக் கூடாது என்பதற்காகத்தான் ரமளானின் கடைசி பத்து நாட்கள் நபி (ஸல்) அவர்களும் நபித் தோழர்களும் இஃதிகாப் இருந்துள்ளார்கள் என்பதற்குப் பின்வரும் ஹதீஸ் சான்றாக அமைந்துள்ளது.
நபி (ஸல்) அவர்கள் ரமலான் முதல் பத்து நாட்கள் இஃதிகாப் இருந்தார்கள். நாங்களும் அவர்களுடன் இஃதிகாஃப் இருந்தோம். அவர்களிடம் ஜிப்ரீல் (அலை) வந்து நீங்கள் தேடக் கூடியது (லைத்துல் கத்ரு) உங்களுக்கு இனி வரும் (நாட்களில் உள்ளது)’ என்றார்கள்.
உடனே நபி (ஸல்) அவர்கள் நடுப் பத்து நாட்கள் இஃதிகாஃப் இருந்தார்கள்.
நாங்களும் அவர்களுடன் இஃதிகாஃப் இருந்தோம். அவர்களிடம் ஜிப்ரீல் (அலை) வந்து, நீங்கள் தேடக் கூடியது உங்களுக்கு இனி வரும் (நாட்களில் உள்ளது)’ என்றார்கள்.
ரமலான் இருபதாம் நாள் காலையில் நபி (ஸல்) அவர்கள் சொற்பொழிவு செய்ய எழுந்தார்கள்.
" யார் நபியுடன் இஃதிகாஃப் இருந்தார்களோ அவர்கள் திரும்பிச் செல்லட்டும்! லைலத்துல் கத்ரு இரவு பற்றி எனக்குக் காட்டப்பட்டது. நான் மறக்கடிக்கப்பட்டு விட்டேன். நிச்சயமாக அது கடைசிப் பத்து நாட்களில் ஒற்றையான நாளில் உள்ளது. நான் களிமண் மீதும் தண்ணீர் மீதும் ஸஜ்தாச் செய்வது போல் கண்டேன்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அபூஸயீத் (ரலி), நூல்கள்: புகாரி (813), முஸ்லிம் (2168)
இஃதிகாஃபின் ஆரம்பம்
இஃதிகாஃப் இருக்க நாடுபவர், 20ஆம் நாள் காலை சுப்ஹுத் தொழுது விட்டு இஃதிகாஃப் இருக்கும் இடத்திற்குச் சென்று விட வேண்டும்.

நபி (ஸல்) அவர்கள் இஃதிகாப் இருக்க நாடினால், பஜ்ரு தொழுகையை முடித்து விட்டு இஃதிகாப் இருக்கும் இடத்திற்குச் செல்வார்கள். (முஸ்லிம் 2007)
ஒற்றை இரவுகளில் லைலதுல் கத்ரைத் தேடுமாறு நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளதை நாம் முன்பே அறிந்துள்ளோம். எனவே பஜ்ரு தொழுதவுடன் இஃதிகாப் இருக்கத் துவங்குவார்கள் என்பது 21ஆம் நாள் பஜ்ராக இருக்க முடியாது.
அப்படி இருந்தால் அந்த இரவு அவர்களுக்குத் தவறிப் போயிருக்கும். 20 ஆம் நாள் தொழுது விட்டு இஃதிகாஃப் இருப்பார்கள் என்று விளங்குவதே பொருத்தமாக இருக்கும்.
இஃதிகாஃபின் முடிவு நேரம்
இஃதிகாப் இருப்பவர் ரமலான் மாதம் 29ல் முடிந்தால், அன்றைய மஃக்ரி பில் (அதாவது ஷவ்வால் பிறை தென்பட்ட இரவில்) இல்லம் திரும்பலாம்.
ரமலான் மாதம் 30 பூர்த்தியடைந்தால், அன்றைய மஃரிப் தொழுக்குப் பிறகு தன் இல்லம் திரும்பலாம்.
அபூஸயீத் (ரலி) கூறியதாவது: நபி (ஸல்) அவர்கள் ரமலான் மாதத்தின் நடுப்பகுதியில் உள்ள பத்து நாட்களில் இஃதிகாப் இருப்பார்கள். இருபதாம் இரவு கழிந்து மாலையாகி இருபத்தொன்றாம் இரவு துவங்கியதும் தமது இல்லம் திரும்புவார்கள். (சுருக்கம்) புகாரி 2018
நபி (ஸல்) அவர்கள் நடுப் பத்தில் இஃதிகாப் இருக்கும்போது இருபதாம் இரவு கழிந்து மாலையாகி இருபத்தொன்றாம் இரவு துவங்கியதும் போவார்கள் என்ற செய்தியிலிருந்து, கடைசிப் பத்தில் இஃதிகாப் இருப்பவர்கள் 29 இரவு கழிந்து அல்லது 30 இரவு கழிந்து மாலையாகி ஷவ்வால் மாதம் துவங்கும் இரவில் வீடு திரும்பலாம் என்பதை அறியலாம்

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 39

( பெற்றோரைப் பேணுதல்)

ஒரு மனிதர் நபிகள் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! எனக்கு குழந்தையும், செல்வமும் உள்ளன. எனது தந்தைக்கு என் செல்வம் தேவைப்படுகின்றது " என்று கூறினார்.
அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் : "நீயும், உனது செல்வமும் உன்னுடைய தந்தைக்கு உரியனவாகும். நீங்கள் சம்பாதிக்கும் செல்வத்தில் உங்கள் குழந்தைகளே மிகத் தூய்மையான செல்வமாவர். எனவே உங்கள் குழந்தைகள் சம்பாத்தியத்திலிருந்து உண்ணுங்கள் என்றார்கள். அப்துல்லாஹ் பின் அம்ர் பின் ஆஸ் (ரலி), அபூதாவூத்-3530 (3063)
உலக மக்களிலேயே அழகிய முறையில் நட்பு கொள்வதற்கு முதல் தகுதியானவர்கள் பெற்றோர்கள்தான்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து
"நான் அழகிய முறையில் உறவாடுவதற்கு மிகவும் தகுதியானவர் யார்?" என்று கேட்டார்.
நபி (ஸல்) அவர்கள் "உன் தாய் என்றார்கள்".
அவர் "பிறகு யார்?" என்று கேட்டார்.
நபி (ஸல்) அவர்கள் "உன் தாய்" என்றார்கள்.
அவர், "பிறகு யார்?" என்றார். அப்போது நபி (ஸல்) அவர்கள் "பிறகு, உன் தந்தை " என்றார்கள். அபூஹுரைரா (ரலி), புகாரி-5971
ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து அறப்போரில் கலந்து கொள்ள அனுமதி கேட்டார்.
நபி (ஸல்) அவர்கள் "உன் தாயும், தந்தையும் உயிருடன் இருக்கிறார்களா?" என்று கேட்டார்கள்.
அதற்கு அம்மனிதர், "ஆம் (உயிருடனிருக்கின்றனர்)" என்று பதிலளித்தார்.

நபி (ஸல்) அவர்கள் ”அப்படியென்றால், அவ்விருவருக்கும் பணிவிடைசெய்து உதவி புரிவதற்காக ஜிஹாத் செய் (உழை)” என்று கூறினார்கள். அப்துல்லாஹ் இப்னு அம்ரு (ரலி), புகாரி-3004
நபி (ஸல்) அவர்கள் ஒரு முறை தன் தோழர்களிடம்
கூறினார்கள்: "பாவங்களிலேயே மிகப் பெரியபாவத்தை நான் சொல்லித் தரட்டுமா...?
"ஆம் இறைத்தூதரே!" என்று தோழர்கள் கூறினார்கள்.
நபி( ஸல்) கூறினார்கள்: "அல்லாஹ்வுக்கு இணைவைத்தல், பெற்றோருக்கு கொடுமை இழைத்தல்" என்றார்கள்.
( நூல்: புகாரி, முஸ்லிம் )
பிள்ளைகள் மீது பெற்றோர்கள அதிருப்தியுற்ற நிலை
இறந்துவிட்டால் உலகத்திலே ஆறுவிதமான தண்டனைகள் உண்டு. மறுமையில் மூன்று விதமான தண்டணையும் உண்டு.

**1. #உங்கள் ஒளியை அணைத்து விடுவான்**

அல்லாஹ் இம்மையிலும் மறுமையிலும் ஒளியற்ற வாழ்வுதான்...
நபி (ஸல்) கூறினார்கள்: "உன் தந்தையின் அன்பை பாதுகாத்துக் கொள்.அதை துண்டித்து விடாதே! அப்படிச் செய்தால் ஒளியை அல்லாஹ் அணைத்துவிடுவான்."
( நூல்: ஹாகிம் )

**2.#உலகின் இழிவான வாழ்வு.**

நபி(ஸல்) கூறினார்கள்: "முகத்தில் மண்தான்
( இழிவுதான் ) முகத்தில் மண் தான். முகத்தில்
மண் தான்.
தோழர்கள் கேட்டனர்: "யாரை கூறுகின்றீர்கள்
இறைத்தூதரே!
நபி (ஸல்) கூறினார்கள்: "வயதான நிலையில் பெற்றோர்கள் இருந்தும் சுவனத்திற்கு தகுதியானவனாக யார் தன்னை மாற்றவில்லையோ அவன்." ( நூல்: முஸ்லிம் )

**3.#தண்டணை உலகிலேயே விரைவாக கிடைக்கும்.**

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "மறுமைக்கு முன் உலகிலேயே தண்டனையைப் பெற்றுத் தரும் காரியங்கள் - பெற்றோர் கொடுமை, உறவை துண்டித்தல்."

**4. #தொடர் சோதனைகள்.**

"உலகிலேயே தொடர்ந்து சோதனைக்கு உள்ளாக்கப்படுவான்."

**5. #இறக்கும்போது ஷஹாதத் கலிமா வாயில் வராது.**

அல்கமா (ரலி) நல்ல நபித்தோழர். மரண வேளையில் மக்கள்
அருகிலிருந்து ஷஹாதத் சொல்லிக் கொடுக்க அவரின் நாவில் அது வரவில்லை.
நபி(ஸல்) அவர்களுக்கு தெரிவிக்கப்பட்டு. அவர்கள்
வந்தார்கள். தோழர்களிடம் கேட்டார்கள்:
"இவருடைய தாயார் உயிருடன் இருக்கின்றாரா?"
"ஆம்...... இறைத்தூதர் அவர்களே!"
"அழைத்து வாருங்கள்" அந்தத் தாயார் வந்த பின
தாயிடம் நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள்:
"அக்மாவைக் குறித்து ஏதாவது மனவேதனை
உங்களுக்கு உண்டா....?"
"ஆம் இறைத்தூதர் அவர்களே! பழங்கள் வாங்கி வருவான் என் மகன். மனைவிக்கும் மக்களுக்கும்
இனிப்பானதைக்

கொடுத்து விட்டு எனக்குப் புளிப்பான பழங்களைத் தருவான்."
"அவனை மன்னித்து விடக்கூடாதா....?
"இல்லை இறைத்தூதரே! அவனின் செயலால்
எனக்கு மனவேதனை உண்டு."
அந்த தாயின் மனதை மாற்ற வேண்டி நபி (ஸல்)
தோழர்களிடம் கூறினார்கள்:
"நெருப்பை மூட்டி அல்கமாவை அதில் போடுங்கள்."
நெருப்பு மூட்டப்பட்டது. தாய் மௌனமாகவே நிற்க
அல்கமா கொண்டு வரப்பட்டார். மகனையும்
நெருப்பையும் அருகருகே பார்த்த தாயின்
மனம் மாறுகிறது.
"இறைத்தூதர் அவர்களே! அவனை நான் பொருந்திக்
கொண்டேன்; அவனை நான் மன்னித்துவிட்டேன்!"
என்று தாய் கூற;
அல்கமாவின் உதடுகள் " அஷ்ஹது அன்லாயிலாஹ இல்லல்லாஹ்...என்ற கலிமாவை கூற நபி (ஸல்) தம்
தோழர்களிடம்."பாருங்கள்...பாருங்கள்...அவரின் தாயார் அவரை மன்னித்துவிட்டார்" என்றார்.
( நூல்: முஸ்லிம் )
**6.#பிள்ளைகளுக்கு எதிராக பெற்றோர்கள கேட்கும்**
துஆ உடனே ஒப்புக் கொள்ளப்படும்.
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"மூன்று துஆக்கள் உடனே ஏற்றுக் கொள்ளப்படும்,
1. அநீதி இழைக்கப்பட்டவனின் துஆ,
2. பயணிகளின் துஆ
3. பெற்றோர் தம் பிள்ளைகளுக்கு எதிராகக் கேட்கும் துஆ. ( நூல்: அஹ்மத், திர்மிதி, அபூதாவூத் )
-இவை இவ்வுலகில் உள்ள ஆறு சோதனைகள்
என்றால் மறுமையில் இதைவிட மிகக் கொடியது.
1.#மறுமையில் அல்லாஹ் பார்க்கமாட்டான்:
நபி (ஸல்)அவர்கள் கூறினார்கள்:
பெற்றோர்களை கொடுமை செய்தவனை மறுமையில்
அல்லாஹ் பேசமாட்டான், பார்க்கமாட்டான், அவர்களுக்கு கடுமையான வேதனையுண்டு." ( நூல்: நஸயீ )
2.#நற்செயல்களை அல்லாஹ் ஏற்றுக்கொள்ள
மாட்டான்:
நபி(ஸல்) கூறினார்கள்: "தம் தாய் தநதையர்களை நோவினை செய்துவிட்டு இஸ்லாத்தின் கடமைகளை
செய்தால்கூட
அல்லாஹ் அதை ஏற்பதில்லை."
3.#மறுமையில் சுவனம் நுழைவது இறுதிவரை
தாமதப்படுத்தப்படும்:
நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: "படைப்பினங்களக்கெல்லாம் தீர்ப்பு சொல்லும்வரை பெற்றோர்களுக்கு
நோவினை செய்தவன் சுவனம்
புகமுடியாது."
இறைவா!

எங்களை எங்கள் பெற்றோர்கள் பொருந்தக் கூடிய நிலையிலும் எங்களை உனக்கு கட்டுப்பட்ட முஸ்லிம்களாக வாழ்ந்து மரணிக்கின்ற பாக்கியத்தைத் தருவாயாக!!

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 40

( அடியானின் பிரார்த்தனை )

சந்தேகமின்றி ஒருவிசுவாசி, எல்லா நிலைகளிலும் எங்கிருந்த போதிலும் அவனுடைய இறைவனிடமே பிரார்த்திக்க வேண்டும். அந்த தூய்மையான இறைவன் தன் அடியார்களுக்கு மிக சமீபத்தில் இருக்கின்றான் உயர்வானவனாகிய அல்லாஹ் தன் திருமறையில் இவ்வாறு கூறுகின்றான்.
(நபியே!) என்அடியார்கள் என்னைப்பற்றி உம்மிடம் கேட்டால்; "நிச்சயமாக நான் சமீபமாகவே இருக்கிறேன், பிரார்த்தனை செய்பவரின் பிரார்த்தனைக்கு அவர் பிரார்த்தித்தால் விடையளிக்கிறேன். அவர்கள் என்னிடமே (பிரார்த்தித்துக்) கேட்கட்டும், என்னையே நம்பட்டும். அப்பொழுது அவர்கள் நேர்வழியை அடைவார்கள்" என்று கூறுவீராக. (குர்ஆன் 2: 186)

இன்னும் உங்களுடைய இரட்சகன் கூறுகிறான், நீங்கள் என்னையே அழை(த்துப் பிரார்த்தி)யுங்கள், நான் உங்களு(டைய பிரார்த்தனை)க்கு பதிலளிப்பேன். நிச்சயமாக, என்னை வணங்குவதை விட்டும் பெருமை அடிக்கிறார்களே, அத்தகையோர் அவர்கள் இழிவடைந்தவர்களாய் நரகம் புகுவார்கள். (குர்ஆன் 40: 60)
உயர்ந்தவனாகிய உங்களின் இரட்சகன் வெட்கமுள்ளவன், சங்கையானவன் அவனிடன் இருகைகளையும் உயர்த்தினால் (பிரார்த்தித்தால்) அவ்விரண்டையும் வெறுமையாக திருப்பி விட அவன் வெட்கப்படுகின்றான் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.
பாவம் சம்பந்தப்படாத இரத்த பந்தத்தை துண்டிக்காத விஷயத்தில் எந்த ஒரு முஸ்லிமாவது பிரார்த்தனை செய்தால் அல்லாஹ் அவனுக்கு மூன்றில் ஒன்றை கொடுக்காமலில்லை,

1. அவனின்பிரார்த்தனையை உடன் ஏற்றுக் கொள்கின்றான்.
2. அல்லது (அப்பிரார்த்தனையை ஏற்றுக்கொள்ளாமல்) அதனுடைய நன்மையை மறுமைக்காக சேகரித்து வைக்கின்றான்.
3. அல்லதுஅப்பிரார்த்தனையைப் போன்று (அவனுக்கு நேரவிருந்த) ஒரு ஆபத்தை தடுத்து விடுகின்றான்என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அப்போது நபித்தோழர்கள், அப்படியானால் நாம் அதிகம் பிரார்த்தனை செய்வோமே என்றனர். அதற்கு நபி(ஸல்) அவர்கள், அல்லாஹ்விடம் மிகவும் அதிகம் இருக்கின்றது எனக் கூறினார்கள்.
ஆகவே வல்ல இறைவன் அல்லாஹுவிடம் அதிகமதிகம் பிரார்த்தனை செய்ய வேண்டும். குறிப்பாக பாவமன்னிப்புத் தேடவேண்டும். அவன் நமது பிரார்த்தனைகளை ஏற்று எங்களின் பாவங்களையும் மன்னிப்பான்.
ஆனாலும், குறிப்பாகஇங்குகூறப்படும் நேரங்கள், நிலைகள், இடங்களில்பிரார்த்தனைகளை அதிகமாகசெய்ய வேண்டும். அதேபோன்றுபிரார்த்தனை செய்யும் முறைகளைப் பேணி நாமும் பிரார்த்தித்தால் அல்லாஹ்நம்பிரார்த்தனைகளை ஏற்றுக்கொள்வான்
பிரார்த்தனை செய்யும் ஒழுக்கங்கள்

1. தூய மனதோடுபிரார்த்தனை செய்ய வேண்டும்.
2. பிரர்த்தனையைத் துவங்கும் போதும், முடிக்கும் போதும்அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்து நபி(ஸல்) அவர்கள் மீது ஸலவாத்துக் கூறி பிரார்த்தனைசெய்ய வேண்டும்.
3. பதில் கிடைக்கும் என்ற நம்பிக்கையோடும், உறுதியோடும்பிரார்த்தனை செய்ய வேண்டும்.
4. அவசியத்தைக்கூறிபிரார்த்திக்க வேண்டும். பிரார்த்தனையில் அவசரப்படக்கூடாது. (அதாவது அல்லாஹ்விடம்ஒன்றிரண்டு முறைகள் பிரார்த்தனை செய்து, கேட்டது கிடைக்கவில்லையானால், அல்லாஹ்வின்மீது அவநம்பிக்கை கொண்டு, பிரார்த்தனையை விட்டுவிடுவதுகூடாது)
5. உள்ளச்சத்தோடுபிரார்த்திக்க வேண்டும்.
6. சந்தோஷநேரத்திலும், கஷ்ட நேரத்திலும் பிரார்த்திக்க வேண்டும்.
7. அல்லாஹ்வைத்தவிர வேறு யாரிடமும் பிரார்த்திக்கக் கூடாது.
8. தன் குடும்பம், பொருள், பிள்ளை மற்றும் தனக்கும் கேடாகபிரார்த்தனை செய்யக் கூடாது.
9. சத்தத்தைமிகவும் உயர்த்தாமலும் மிகவும் குறைக்காமலும் அவ்விரண்டிற்கும் மத்தியில், நடுநிலையோடு பிரார்த்தனை செய்ய வேண்டும்.
10. செய்த பாவத்தைமனப்பூர்வமாய் ஏற்று, அதற்காக பிழை பொறுப்புத் தேடி, அல்லாஹ் அவருக்கு அளித்தஅருட்கொடைகளை உளமாற ஒப்புக்கொண்டு, அவற்றிற்காக அல்லாஹ்விற்கு நன்றி செலுத்தவேண்டும்.
11. துஆச் செய்யும் போது அளவுக்கு மேல் சிரமத்தை மேற்கொள்ளாமல்இருக்க வேண்டும்.
12. தெளிவான உள்ளத்தோடும் பயபக்தியோடும் அல்லாஹ்வின் அருள் மீதுநம்பிக்கை வைத்து, அவனது தண்டனையிலிருந்து பயந்து பிரார்த்தனை செய்யவேண்டும்.
13. மற்றவர்களின்பொருளை எடுத்து அல்லது அவர்களுக்கு அநியாயம் செய்திருந்தால் அந்தப் பொருட்களைஉரியவர்களிடம் திருப்பிக் கொடுத்து அவர்களிடம் மன்னிப்புக் கேட்டபின்அப்பாவத்திற்காக தவ்பாச் செய்ய வேண்டும்.
14. (பிரார்த்திற்கும் ஒவ்வொன்றையும்) மும்மூன்று தடவை பிரார்த்திக்க வேண்டும்.
15. கிப்லாவைமுன்னோக்க வேண்டும்.
16. பிரார்த்தனைசெய்யும்போது கைகளை உயர்த்த வேண்டும்.
17. முடியுமாகஇருந்தால் துஆச் செய்வதற்கு முன் ஒழுச் செய்து கொள்ள வேண்டும்.
18. ஒழுக்கத்துடன்அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்யவேண்டும். "துஆ" ஒரு வணக்கம் என்பதாக நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.
19. முதலில்தனக்காக பிரார்த்தித்து பின்பு மற்றவர்களுக்காக பிரார்த்திக்க வேண்டும். (இறைவா! எனது பாவங்களையும், இன்னாருடைய பாவங்களையும்மன்னிப்பாயாக என்று கேட்பது போல்).
20. அல்லாஹ்வின்அழகிய திருநாமங்கள் மற்றும் அவனுடைய உயர்ந்த பண்புகளைக் கொண்டு அல்லது தான் செய்தநல்அமல்களைக் கொண்டு அல்லது உயிரோடு வாழக்கூடியநல்லவர்களிடம் (தனக்காக) பிரார்த்தனை செய்யும்படி கேட்டு (இஸ்லாத்தில் வஸீலாதேடுவதற்கு அனுமதிக்கப்பட்ட இம்மூன்று வகைகளில் ஒன்றைக் கொண்டு) அல்லாஹுவிடம் உதவி (வஸீலா) தேடவேண்டும்.
21. உணவு, குடிபானங்கள் அணியும் ஆடை இவைகள் ஹலாலானவைகளாக இருக்கவேண்டும்.
22. பாவமானகாரியங்களுக்காக அல்லது இரத்த உறவுகளை முறிப்பதற்காக பிரார்த்தனை செய்யக்கூடாது.
23. பிரார்த்தனைசெய்பவர் நன்மையை ஏவி தீமையைத் தடுத்து பாவங்களிலிருந்து தன்னைப் பாதுகாத்துக்கொண்டவராக இருக்க வேண்டும்.

பிரார்த்தனை ஏற்றுக் கொள்ளப்படும் நேரங்கள்
1. இரவின் நடுப்பகுதி
2. இரவில் கடைசிமூன்றாவது பகுதி

3. ஒவ்வொரு தொழுகையின் கடைசி நேரத்தில் (அதாவது அத்தஹியாத்தில்ஸலாம் கொடுப்பதற்கு முன்பு)

4. அதானுக்கும் இகாமத்திற்கும் மத்தியில்

5. பர்ளான தொழுகைக்கு அதான் சொல்லப்படும் போது

6. மழை பொழியும் போது

7. உண்மையான (நம்பிக்கையான) எண்ணத்துடன் ஸம்ஸம் தண்ணீரைக் குடிக்கும் போது

8. (தொழுகையில்)ஸுஜூது செய்யும் போது

9. ஒரு முஸ்லிம் தன்னுடைய இன்னொரு முஸ்லிம் சகோதரருக்குசெய்யும் பிரார்த்தனை

10. அரஃபாவுடைய நாளில் செய்யும் பிரார்த்தனை

11. தந்தைபிள்ளைகளுக்கும், பிள்ளைகள் தந்தைக்கும் செய்யும் பிரார்த்தனை

12. பிரயாணியின் பிரார்த்தனை

13. பெற்றோருக்குக் கட்டுப்பட்டு நடக்கும் பிள்ளையின்பிரார்த்தனை

14. சிறிய ஜம்ராவிற்குக் கல் எறிந்தபிறகுகேட்கும் பிரார்த்தனை

15. நடு ஜம்ராவிற்குக் கல் எறிந்த பிறகுகேட்கும் பிரார்த்தனை

16. கஃபாவிற்குள் கேட்கும்பிரார்த்தனை. ஹிஜ்ருக்குள் (கஃபத்துல்லாஹ்வை ஒட்டிஇருக்கும் அரைவட்ட வடிவத்திற்குள்) யார் தொழுகின்றாரோ அவர் கஃபாவிற்குள்தொழுதவரைப் போல் கணக்கிடப்படுவார்.

17. ஸஃபா மற்றும் மர்வா மலைகள் மீது கேட்கும்பிரார்த்தனை.

18. (முஸ்தலிஃபாவிலுள்ள) மஷ்அருள் ஹராம் என்னுமிடத்தில் கேட்கும்பிரார்த்தனை

19. நோன்பாளியின் பிரார்த்தனை.

20. நோன்பு திறக்கும் நேரத்தில்கேட்கும் பிரார்த்தனை

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 41

(தாஹா நபியின் துஆ கேட்கும் முறை)

நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் பெரும்பாலும், "சுபஹான ரப்பியல் அஃலா வகாப் "என்ற வார்த்தைகளை கொண்டு வர ஆரம்பிப்பார்கள்.
பொருள் : "தயாள தன்மையுள்ள உயர்ந்த ரட்சகன் பரிசுத்தமானவன் "
நபியவர்கள் துஆவில் எதுகை மோனை, அடுக்கு மொழிகளை கையாள மாட்டார்கள். அது நல்லதாகவும் கருதவில்லை.
துஆவின் ஆரம்பத்திலும், இறுதியிலும் சிலசமயம் இடையிலும் அதிகமாக இந்த வார்த்தைகளை இணைத்துக் கொள்வார்கள் " ரப்பனா ஆதினா பி துன்யா ஹஸனதவ் வபில் ஆஹிரதி ஹஸனதவ் வகினா அதாபன் னார் "
பொருள் : "எங்கள் ரட்சகனே எங்களுக்கு உலகிலும் நல்லதையே வழங்குவாயாக , மறுமையிலும் நல்லதையே வழங்குவாயாக, நரக நெருப்பை விட்டும் எங்களை பாதுகாப்பாயாக !"
எந்த விஷயத்திலாவது நபி (ஸல்) அவர்களுக்கு கடுமையான துன்பம் ஏற்பட்டு விட்டால், உடனே போர்வையை விரித்து நின்று விடுவார்கள். மேலும் துஆச் செய்ய கைகளை எந்த அளவு உயர்த்தி விடுவார்கள் என்றால், நபியவர்களின் அக்குளின் வெண்மைப் பகுதி வரைக்கும் தெரிந்துவிடும்.
நபியவர்கள் அல்லாஹு தஆலாவிடம் நன்மையை வேண்டி துஆச் செய்யும்போது, தமது கரங்களின் உள்பகுதியை தன் முகத்தின் பக்கம் வைத்துக் கொள்வார்கள்.

எந்த துன்பத்திலிருந்தாவது பாதுகாப்பு வேண்டும்போது, உள்ளங்கைகளின் பின்புறப் பகுதியை தம் முகத்தின் பக்கம் வைத்துக் கொள்வார்கள்.
நபியவர்கள் துஆவை முடிக்கும்போது, இரு கைகளையும் தமது முகத்தில் தடவிக் கொள்வார்கள்.
இஸ்திஃபார் செய்வதாக (பாவமன்னிப்பு தேடுவதாக) இருந்தால் துஆவுடைய வார்த்தைகளை மும்மூன்று முறை ஓதுவார்கள்.
நபி ( ஸல் ) அவர்கள் யாருக்காவது துஆச் செய்ய செய்தால், முதலில் தமக்காகவும், பிறகு அவருக்காகவும் துஆச் செய்வார்கள்.
சில சமயம் நபியவர்கள் துவா செய்யும்போது, வானத்தின் பக்கம் கைகளை உயர்த்துவார்கள். எப்படியென்றால், உள்ளங்கைகள் பூமியைப் பார்த்தபடியும், அவற்றின் மேற்பகுதிகள் வானைப் பார்த்தபடியும் இருக்கும்.

## ஹஜரத் அலீ (ரலி) அவர்களின் நினைவு தினத்தின் பதிவு

ஒரு நாள் நபி {ஸல்} அவர்கள் தமது அருமை மகளார் ஃபாத்திமா (ரலி) அவர்களின் வீட்டிற்கு பேரர்களான அசன், ஹுஸைன் ( ரலி) இருவரையும் பார்க்கச் சென்றார்கள்.
வீட்டில் பேரர்கள் இல்லாததைக் கண்ட பெருமானார் {ஸல்} அவர்கள் "ஃபாத்திமாவே! குழந்தைகளை காணவில்லையே எங்கே சென்றிருக்கின்றார்கள்?" என்று கேட்டார்கள்.
“உங்களது மருமகன் தான் அவர்களை ( ஓர் இடத்தின் பெயரைச் சொல்லி) அங்கே விளையாட அழைத்துச் சென்றிருக்கின்றார்” என்று ஃபாத்திமா (ரலி) பதில் கூறினார்கள்.
குறிப்பிட்ட இடத்தில் அன்னையர் திலகம் கூறியவாறே தம் மகன்களோடு அலீ (ரலி) அவர்கள் விளையாடிக் கொண்டிருப்பதை நபி {ஸல்} அவர்கள் கண்டார்கள்.
அண்ணலாரைக் கண்டதும் பேரர்கள் இருவரும் பாசத்தோடு நபி {ஸல்} அவர்களின் கரங்களில் தஞ்சம் புகுந்தனர். அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் பேரர்களின் தலையை அன்பாக வருடி விட்டார்கள்.
பின்னர், அலீ (ரலி) அவர்களை நோக்கி “அலீ அவர்களே! இந்த உச்சி வெயிலில் ஏன் குழந்தைகளை விளையாட அழைத்து வந்தீர்கள்?” என்று அன்பு கலந்த கண்டிப்போடு வினவினார்கள்.
அதற்கு, அலீ (ரலி) அவர்கள் :
"அல்லாஹ்வின் தூதரே! வீட்டில் உண்பதற்கு உணவேதும் இல்லை. ஏற்கனவே, இருவரும் நேற்றிலிருந்து ஒன்றும் உண்ணவில்லை. நானும், ஃபாத்திமாவும் தான்...
விளையாட அழைத்து வந்தால் விளையாட்டின் கவனத்தில் உணவை மறந்து விடுவார்கள் அல்லவா? அதுதான் அழைத்து வந்தேன்” என்று பதில் கூறினார்கள். ( நூல்: திர்மிதீ )

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 42

( நோயாளியை நலம் விசாரித்தல் )

நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் நோயுற்றபோது, தமது இறைவனிடம் அவர்கள் நிவாரணம் வேண்டி முறையிட்டதை இறைவன் பின்வருமாறு தெரிவிக்கின்றான்:
‘நான் நோயுறும் போது அவனே எனக்கு நிவாரணம் தருகின்றான்’. (குர்ஆன் 26:80)
மேலும், நபி அயூப் (அலை) அவர்கள் கடுமையாக நோயுற்றபோது, தமது நோய் நீங்கிட, குணம் கிடைத்திட, தமது இறைவனிடம் பிரார்த்தித்து, அதன் வாயிலாக அவர் நலம் பெற்றதை இறைவன் பின்வருமாறு கூறுகின்றான்:

''இன்னும், அயூப் (அலை) தம் இறைவனிடம் 'நிச்சயமாக என்னை (நோயினாலான) துன்பம் தீண்டியுள்ளது; (இறைவனே!) நீயே கருணையாளர்களுக்கெல்லாம் மிகக் கருணையாளன்' என்று பிரார்த்தித்த போது...
நாம் அவருடைய பிரார்த் தனையை ஏற்றுக்கொண்டோம்; அவருக்கு ஏற்பட்ட துன்பத்தை நீக்கிவிட்டோம்; அவரது குடும்பத்தாரையும், அவர்களுடன் அவர்களைப் போன்றோரையும் நம் அருளாக அவருக்கு வழங்கினோம். வணங்குவோருக்கு இது அறிவுரை''. (21:83,84)

நபி (ஸல்) அவர்கள், நோய் விசாரிப்பதால் நோயாளியின் மனதிலும் அவரது குடும்பத்தினரிடையேயும் மனிதநேயச் சிந்தனைகள் வளர்வதை அறிந்திருந்தார்கள். இதனால்தான் நபி (ஸல்) அவர்கள் நோயாளிகளின் நலம் விசாரிப்பதில் ஒருபோதும் சடைந்ததில்லை. அவர்கள் நோயாளிகளுக்கு ஆறுதல் கூறி பிரார்த்தனையும் செய்து வந்தார்கள்.
இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் எவரையேனும் நோய் விசாரிக்கச் சென்றால், அவரது தலைமாட்டில் அமர்ந்து கொண்டு ஏழுமுறை பின்வரும் துஆவைக் கூறுவார்கள்:
"உமக்கு ஷிஃபா அளிக்க வேண்டுமென மகத்தான அர்ஷின் இரட்சகனான, மகத்தான அல்லாஹ்விடம் நான் கேட்கிறேன்." (அல் அதபுல் முஃப்ரத்)
நபி (ஸல்) அவர்கள் கற்றுத் தந்த ஒழுக்கங்களில் ஒன்றுதான் தங்களது வலது கரத்தால் நோயாளியை தடவிக் கொடுத்து, அவருக்காக துஆச் செய்வதும்.
அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் கூறினார்கள்: "நபி (ஸல்) அவர்கள் தமது குடும்பத்தில் ஒருவரை நலம் விசாரிக்கச் சென்றால் தமது வலது கரத்தால் அவரை தடவிக் கொடுத்து,
"அல்லாஹும்ம ரப்பன்னாஸ், அத்ஹபில் பஃஸ, இஷ்ஃபி, அன்த்தஷ்ஷாஃபீ, லாஷிஃபாஅ இல்லா ஷிஃபாவுக, ஷிஃபாஅன் லாயுஃகாதிரு ஸகமா" என்று பிரார்த்திப்பார்கள்.
பொருள், "யா அல்லாஹ்! மனிதர்களின் இரட்சகனே! நோயைப் நீக்குவாயாக! அறவே நோயில்லாமல் குணமளிப்பாயாக! நீயே குணமளிப்பவன். உன் நிவாரணத்தைத் தவிர வேறு நிவாரணம் இல்லை." (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)
''ஸஅத் பின் அபீ வக்காஸ் (ரலி) கூறினார்: நான் மக்காவில் கடுமையாக நோய் வாய்ப்பட்டிருந்தேன். நபி (ஸல்) அவர்கள் என்னை உடல் நலம் விசாரிக்க வந்தார்கள்.
பிறகு, நபி (ஸல்) அவர்கள் தம் கையை என் நெற்றியின் மீது வைத்துப் பிறகு, அதை என் வயிற்றின் மீதும், என் முகத்தின் மீதும் தடவினார்கள். பின்னர், '' இறைவா! ஸஅதுக்குக் குணமளிப்பாயாக!'' என்று பிரார்த்தித்தார்கள்''. (புகாரி)

அனஸ் (ரழி) அவர்கள் கூறினார்கள்: நபி (ஸல்) அவர்களுக்கு பணிவிடை செய்து கொண்டிருந்த யூதச்சிறுவன் உடல்நலம் குன்றியபோது நபி (ஸல்) அவர்கள் அவனிடம் நலம் விசாரிக்கச் சென்று அவனது தலைமாட்டில் அமர்ந்தார்கள்.
பின்பு அச்சிறுவனிடம் 'நீ இஸ்லாமை ஏற்றுக்கொள்' என்று கூறினார்கள். அச்சிறுவன் அருகிலிருந்த தனது தந்தையைப் பார்த்தான். அவர் "நீ அபுல் காஸிமுக்கு கட்டுப்படு!" என்று கூறினார். அச்சிறுவர் இஸ்லாமை ஏற்றுக் கொண்டார்.
நபி (ஸல்) அவர்கள், "இச்சிறுவரை நரக நெருப்பிலிருந்து காத்த அல்லாஹ்வுக்கே அனைத்துப் புகழும்" என்று கூறியவர்களாக வீட்டை விட்டு வெளியேறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)
இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் ஒரு கிராமவாசியை நலம் விசாரிக்கச் சென்றார்கள். நபி (ஸல்) அவர்கள் நலம் விசாரிக்கச் சென்றால் "கவலைப்பட வேண்டாம்! இறைவன் நாடினால் இது (உங்கள் பாவத்தைக் கழுவி உங்களைத்) தூய்மைப்படுத்திவிடும்" என்று கூறுவார்கள். (ஸஹீஹுல் புகாரி)
இப்னுமஸ்ஊத் (ரலி) கூறுகிறார்:

நபி (ஸல்) அவர்கள் காய்ச்சலால் சிரமப்பட்டுக் கொண்டிருந்த போது அவர்களிடம் நான் சென்றேன். ''இறைத்தூதர் அவர்களே, தாங்கள் கடும் காய்ச்சலால் சிரமப்பட்டுக் கொண்டிருக்கிறீர்களே''என்று விசாரித்தேன்.
''ஆம்; உங்களில் இரண்டு மனிதர்கள் காய்ச்சலால் அடைகிற துன்பத்தை (ஒரே மனிதனாகிய) நான் அடைகிறேன் " என்றார்கள்.
''(இந்தத் துன்பத்தின் காரணமாகத்) தங்களுக்கு இரண்டு மடங்கு நற்பலன்கள் கிடைக்கும் என்பதாக இதற்குக் காரணமா?'' என்று நான் கேட்டேன்.
இதற்கு நபி (ஸல்) அவர்கள் ''ஆம் "என்று கூறிவிட்டு, 'ஒரு இறைவிசுவாசியைத் தைக்கும் ஒரு முள்ளாயினும், அதற்கு மேலான துன்பம் எதுவாயினும், அதற்கு பதிலாக, மரம் தன் இலைகளை உதிர்த்து விடுவதைப் போன்று அவரின் பாவங்களை இறைவன் (உதிரச்செய்து) மன்னிக்காமல் விடுவதில்லை' என்று கூறினார்கள். (நூல் : புகாரி)
பாவங்களை மன்னித்து, பாவ அழுக்குகளிலிருந்து மனிதனை தூய்மைப்படுத்த சிலருக்கு வியாதிகளை கொடுத்து இறைவன் சோதிக்கின்றான். எனவே நாம் பாவங்களில் இருந்தும், பாவச்செயல்களில் இருந்தும் நம்மை பாதுகாத்துக்கொண்டால் இந்த சோதனையில் இருந்து தப்பிக்கலாம். மேலும் இந்தச் சோதனையில் சிக்கியவர்கள், அதில் இருந்து மீண்டு நலம் பெற பிரார்த்தனை செய்வதும் நம் அனைவரின் கடமையாகும்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 43

(இழிவைத் தரும் முகஸ்துதி)

மனிதனின் உள்ளம் விந்தையானது. அது ஆசைகளின் பக்கம் தூண்டப்பட்டதாகவே இருக்கிறது. ஆசை இரண்டு வகைப்படுகிறது.ஒன்று: மறுமைக்கான ஆசை, மற்றொன்று: மனதின் ஆசை.
ஒரு முஃமின் இவ்வுலகத்தைத் தற்காலிக தங்குமிடமாகக் கருதி, நிரந்தரமாகத் தங்கப்போகும் சுவர்க்கத்திற்கான ஆசைகளைப் பூர்த்தி செய்யக்கூடியவனாக இருக்க வேண்டும். அதற்காகவே இஸ்லாம் என்ற மார்க்கத்தின் மூலம் நெறிமுறை வழிகாட்டுதல் கொடுக்கப்பட்டிருக்கிறது.
எப்போது ஒருவன் தன் மன ஆசைகளை மறுமைக்காக ஆக்குவானோ, அல்லாஹ்வின் தனிப்பட்ட உதவி அவனுக்குக் கிடைக்க ஆரம்பிக்கிறது.

நல்லெண்ணம் கொள்ளும்படி அடியார்களுக்கு அல்லாஹ் ஏவியிருக்கிறான். எந்த ஒரு செயலைச் செய்யும் முன் அது அல்லாஹ்வோடு சேர்த்து வைக்கக் கூடியதா? அல்லது மன ஆசைகளை மட்டுமே நிறைவேற்றக்கூடியதா? என்று தன்னையே பரிசோதித்துப் பார்ப்பது முஃமினுக்கு அழகாகும்.
"யார் தன்னுடைய மனதைப் பரிசுத்தப்படுத்திக் கொண்டாரோ, அவர் வெற்றி அடைந்து விட்டார்' என அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான்.
மனம் இயல்பிலேயே ஆசையின் பக்கம் தூண்டப்பட்டதாகவே இருக்கிறது.அதிகமாக கலிமாவை ஓதுவதும், அதிகமாக குர்ஆனை ஓதுவதும் மன நோய்களை நீக்கி வைக்கும்.
முகஸ்துதி அதாவது பிறரது முகத்துக்காக ஒரு காரியத்தைச் செய்தலும், பிறர் கேலி செய்வார்களே என்று நல்லவைகளைத் தவற விடுவதும் அல்லாஹ்விடம் கோபத்தை உண்டாக்கிவிடும்.
அதுபோல், தற்பெருமை அதாவது பிறருடன் தன்னை ஒப்பிட்டுப் பார்த்து தன்னைப் பெரியவனாகக் கருதுதல், உலக வசதிகளை வைத்தோ அல்லது படிப்பு, அந்தஸ்து, பதவி போன்றவைகளைக் கொண்டோ பாகுபாடு பார்த்தல் தவிர்க்கப்பட வேண்டியவை.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"நம் இறைவன் (காட்சியளிப்பதற்காகத்) திரையை அகற்றித் தன் காலை வெளிப்படுத்தும் அந்த (மறுமை) நாளில், இறைநம்பிக்கையுள்ள ஒவ்வோர் ஆணும், இறைநம்பிக்கையுள்ள ஒவ்வொரு பெண்ணும் அவனுக்கு முன்னால் சிரவணக்கம் (சஜ்தா) செய்வார்கள்.
முகஸ்துதிக்காகவும், மக்களின் பாராட்டைப் பெறுவதற்காகவும் இவ்வுலகில் (தொழுது) சஜ்தா செய்து வந்தவர்கள் மட்டுமே எஞ்சியிருப்பர். அப்போது அவர்கள் சஜ்தா செய்ய முற்படுவார்கள். (ஆனால்,) அவர்களது முதுகு (குனிய முடியாதவாறு) ஒரே கட்டையைப் போல் மாறிவிடும்.
அறிவிப்பவர்: அபூசயீத் (ரலி), நூல்: புகாரி-4919
முகஸ்துதி, தற்பெருமை இவை இரண்டும் பெரும் பாவத்தைப் போன்றது. ஆதமுக்கு சஜ்தா செய்ய இறைவன் கூறியும் செய்யாத காரணத்தினால் இப்லீஸ் சுவனத்திலிருந்து வெளியேறியது இந்தத் தீய எண்ணங்களால்தான்.
"மனிதன் மரணிக்கும்போது அவன் தேடிய அனைத்தும் அவனை விட்டு அகன்று வேறொருவரிடம் சென்று விடும்' என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும்.
யார் தன்னை அல்லாஹ்விடம் தாழ்த்திக் கொள்கிறார்களோ, அவர்களை அல்லாஹ் உயர்த்துகிறான். யார் தன்னை மக்களிடம் உயர்த்திக் கொள்கிறார்களோ, அவர்களை அல்லாஹ் தாழ்த்தி விடுகிறான்.
நம்மிடம் உள்ள அனைத்தும் சோதனைக்காகக் கொடுக்கப்பட்ட அல்லாஹ்வின் அருளே தவிர, சுய விளம்பரம் தேடிக் கொள்வதற்காக அல்ல.
உள்ளத்தைக் கவனிக்காமல் விட்டு விட்டால், அது கெட்ட எண்ணங்களால் சூழப்பட்டுவிடும். அவசியமில்லாத அதிகப் பேச்சு, தர்க்கம் செய்வது, கேட்காமலேயே வலியச்சென்று அபிப்பிராயம் சொல்வது, புறம், பொய், கோள் பேசுவது போன்றவை உள்ளத்தின் உயிரோட்டத்தைக் கெடுத்துவிடும். மேலும், இவை வணக்கங்களில் சோம்பலை ஏற்படுத்துவதோடு, இபாதத்தின் இன்பத்தை இல்லாமல் ஆக்கிவிடும்.
அல்லாஹ்வின் பெருமைகளைப் பேசுவது வழிபாடு; தன் பெருமைகளைப் பேசுவது பாவம். எனவே நாவை அல்லாஹ்வின் தியானத்தைக் கொண்டு செழிப்பாக்குவதால் உள்ளம் தூய்மை அடைகிறது.
செயல்கள் எந்த எண்ணத்தில் செய்யப்படுகிறதோ, அந்த எண்ணப்படியே பிரதிபலன்கள் கிடைக்கும்.
உள்ளம் சம்பந்தமான அறிவும், அதிலுள்ள நோய்களான பொறாமை, முகஸ்துதி போன்றவைகளை இனங்கண்டு, அவற்றைக் களைவது கடமையான செயல்களில் உள்ளதாகும். ஏனெனில், பொறாமையையும், முகஸ்துதியையும் அல்லாஹ் குர்ஆனில் சுட்டிக்காட்டி எச்சரிக்கை செய்துள்ளான் என இமாம் சுயூத்தி (ரஹ்) அவர்கள் உபதேசிக்கிறார்கள்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 44

(அனுமதி கேட்டல்)

நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தமது இல்லத்தில் இருக்கும் போது யாரேனும் சந்திக்க வந்து பொதுவான வழக்கப்படி, " உள்ளே வரட்டுமா ? "என்று வினவினால், உடனே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமது பணியாளரை அழைத்து அவரிடம் சென்று வீட்டில் நுழைவதற்கான முறையைக் கற்றுக் கொடும். முதலில் ஸலாம் செய்துவிட்டு, பிறகு அனுமதி கேட்கச் சொல்லும் " என்று கட்டளை இடுவார்கள்.
யாரேனும் அனுமதி கேட்காமலேயே நபியவர்களிடம் வந்து விட்டால் , அவரை திருப்பி அனுப்பி விடுவார்கள்.
மேலும் "திரும்பச் சென்று ஸலாம் சொல்லிவிட்டு,உள்ளே வாரும் " என்று கூறுவார்கள்.
யாரேனும் நபியவர்களிடம் உள்ளே வர அனுமதி வேண்டினால், வழக்கப்படி நபியவர்கள் யாரென்று வினவ, அவரும் வழக்கப்படி " நான் தான் "என்று கூறினால் , அந்தப் பதில் நபியவர்களின் புனித சுபாவத்திற்கு

பிடிக்காதவை ஆகிவிடும் . உடனே " நான் தான்... நான்... என்ன செய்கிறீர் ?" அதாவது ஏன் பெயரைக் கூறாமல் இருக்கிறீர் ? என்று வினவுவார்கள் .
யார் மூலமாவது ஒருவரை அழைத்து வரச் சொல்லும்போது அவர் யாரை கூட்டி வந்தாரோ அவர், அனுமதியின்றி உள்ளே வந்தால் நபியவர்கள் அவரை தவறாக கருத மாட்டார்கள்.
நபியவர்கள் யாரையாவது சந்திக்க செல்லும்போது, மூன்று முறை ஸலாம் சொல்லிவிட்டு, உள்ளே நுழைய அனுமதி கேட்பார்கள். பதில் வரவில்லை என்றால் திரும்பி வந்துவிடுவார்கள்.
நபி (ஸல்) அவர்களின் சிறப்புற்குரிய பழக்கம் என்னவெனில், எப்போதுமே கதவுக்கு முன்னால் நின்றவாறு அனுமதி கேட்க மாட்டார்கள். மாறாக, கதவுக்கு வலதுபுறமோ ,இடதுபுறமோ நின்றுகொண்டு ஸலாம் சொல்வார்கள். பிறகு உள்ளே வர அனுமதி கேட்பார்கள்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 45

(அண்ணலாரின் அறிவார்ந்த அணுகுமுறைகள் 1)

அல்லாஹ் கூறுகின்றான்:
" (நபியே!) அல்லாஹ்வின் மாபெரும் அருளினாலேயே நீர் அவர்களிடம்(மென்மையாக அறிவார்ந்த அணுகுமுறையோடு) நடந்து கொள்கின்றீர். நீர் கடுகடுப்பானவராகவும், வன்நெஞ்சம் கொண்டோராகவும் இருந்திருந்தால், இவர்களெல்லாம் உம்மை விட்டும் விலகிப் போயிருப்பார்கள்.
ஆகவே இவர்களின் தவறுகளைப் பொறுத்துக் கொள்வீராக! மேலும், இவர்களுக்காக (அல்லாஹ்விடம்) மன்னிப்புக் கோருவீராக! மேலும், தீனுடைய காரியங்களில் இவர்களிடமும் கலந்தாலோசிப்பீராக! ஏதேனுமொரு விவகாரத்தில் நீர் உறுதியான முடிவுக்கு வந்துவிட்டீர்களேயானால் அப்பொழுது அல்லாஹ்வையே முழுமையாகச் சார்ந்திருப்பீராக! நிச்சயமாக, தன்னை முழுமையாகச் சார்ந்திருந்து செயல்படுவோரை அல்லாஹ் நேசிக்கின்றான் (குர்ஆன்:3:159)
அதாவு இப்னு யஸார் {ரலி} அவர்கள் அறிவிக்கின்றார்கள்:
"ஒரு நபித்தோழர் நபி {ஸல்} அவர்களிடம் வந்து கேட்டார்: "அல்லாஹ்வின் தூதரே! என் தாயைச் சந்திக்க நான் அனுமதி கேட்க வேண்டுமா?"
ஆம்! என்றார்கள் அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள்.
மீண்டும் அந்த நபித்தோழர் அவ்வாறே கேட்க? நபி {ஸல்} அவர்கள் முன்பு போன்றே பதில் தந்தார்கள் அவருக்கு.
மூன்றாம் முறையும் அவர் "என் சொந்தத் தாயைச் சந்திக்கக் கூடவா அனுமதி கேட்க வேண்டும்? என்றார்.
அப்போது, அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் "உன் தாயை ஆடையின்றி நிர்வாணமாக பார்க்க விரும்புகின்றாயா?" என்று கேட்டார்கள்.
அதற்கு அவர் "இல்லை அல்லாஹ்வின் தூதர் அவர்களே!" என்றார். "அப்படியென்றால் உன் தாயைச் சந்திக்க அனுமதி கேட்டு விட்டு உன் வீட்டினுள் நுழை" என்று பதில் கூறினார்கள். (நூல்:தஃப்ஸீர் குர்துபீ,பாகம்:7,பக்கம்:151.)
அபூ ஹுரைரா {ரலி} அவர்கள் அறிவிக்கின்றார்கள்:
@ஒரு நபித்தோழர் அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்களிடம் வந்து "அல்லாஹ்வின் தூதரே! என் அண்டை வீட்டார் எனக்கு அதிகம் துன்பம் தருகின்றர்கள். என்னால் அவர்களின் கொடுமையைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை." என்றார்.
அப்படியென்றால், "நேராக வீட்டிற்குச் சென்று உங்கள் வீட்டில் உள்ள சாதனங்களையெல்லாம் வெளியே எடுத்துப் போட்டு விட்டு வீதியில் அமர்ந்து கொள்ளுங்கள்." என்று நபி {ஸல்} அவர்கள் கூறினார்கள். அவரும் அப்படியே செய்தார்.

வீதியில் வருவோரும், செல்வோரும் ஏன் இப்படி நடு வீதியில் சாதனங்களையெல்லாம் அள்ளிப் போட்டு உட்கார்ந்திருக்கின்றீகள் என விசாரித்தனர்.
அவர் நடந்த சம்பவங்களையும், அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் கூறியதையும் மக்களிடம் கூறினார்.
வீதியில் செல்பவர்களெல்லாம் அவரின் அண்டை வீட்டாரை சபித்தனர். அல்லாஹ்வின் சாபமும், கேவலமும் உண்டாகட்டும்! என கூறிச் சென்றனர்.
வீட்டிற்குள் இருந்து இவைகளையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த அந்த அண்டை வீட்டார் ஓடி வந்து "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இனி ஒரு போதும் உனக்கு நான் துன்பம் தர மாட்டேன். நீ வெறுக்கும் எந்த காரியத்தையும் இனி நான் மேற்கொள்ளமாட்டேன்" உடனடியாக நீ உன் சாதனங்களை உன் வீட்டிற்குள் எடுத்துச் செல்" என்றார். (நூல்:முஸ்தத்ரக், ஹதீஸ் எண்:7382.பக்கம்:231. பாடம்,
அபூ உமாமா அல் பாஹிலீ {ரலி} அவர்கள் அறிவிக்கின்றார்கள்:
" நாங்கள் அண்ணலாரோடு அமர்ந்திருந்த சபைக்கு ஓர் வாலிபர் வருகை தந்தார்.வந்தவர் நேராக அண்ணலாரின் முன் வந்து நின்று "அல்லாஹ்வின் தூதரே! எனக்கு நீங்கள் விபச்சாரம் செய்ய அனுமதி தர வேண்டும்" என்றார்.
அங்கிருந்த நபித்தோழர்கள் அவரை தாக்கிட முனைந்தனர். நபித்தோழர்களில் ஒருவர் இப்படிக் கேட்டார் "அல்லாஹ்வின் தூதரே! அனுமதி கொடுங்கள்! அவரின் கழுத்தை கொய்து விடுகின்றேன்.
அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் "அவரை ஒன்றும் செய்து விட வேண்டாம்" என்பது போன்று சைகை செய்தார்கள்.
பின்பு தங்களின் பக்கம் வருமாறு அவ்வாலிபரை அழைத்தார்கள். அருகே வந்து அமர்ந்த அந்த வாலிபரிடம் "உன் தாய் விபச்சாரம் செய்திட நீ விரும்புவாயா?" எனக் கேட்டார்கள்.
"இல்லை, அல்லாஹ்வின் தூதரே! ஒரு போதும் நான் விரும்ப மாட்டேன்." என்றார் அவ்வாலிபர்.
மீண்டும் அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் "உன் சகோதரி விபச்சாரம் செய்வதை நீ அங்கீகரிப்பாயா?" என்று கேட்டார்கள்.
பதறித்துடித்தவராக, அவ்வாலிபர் "ஒரு போதும் எனது மனம் விரும்பிடாது" என்றார் அவ்வாலிபர்.
அப்போது, மாநபி {ஸல்} அவர்கள் "அப்படித்தான் நீ மட்டுமல்ல! உலகில் வேறெவரும் இதற்கு விரும்ப மாட்டார்கள்". என்றார்கள்.
மீண்டும், அண்ணலார் அவ்வாலிபரிடத்தில் "உனது தாயின் சகோதரி விபச்சாரம் செய்வதை நீ விரும்புவாயா? உனது தந்தையின் சகோதரி விபச்சாரம் செய்வதை நீ விரும்புவாயா?" எனக் கேட்டார்கள்.
அண்ணலாரின் இந்த கேள்விகள் ஒவ்வொன்றும் அவரை வெகுவாகவே "தாம் எத்தகைய பார தூரமான கேள்வியை அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்களிடம் கேட்டு விட்டோம்" என்பதை உணர்த்தியிருக்க வேண்டும்.
அவர் வெட்கத்தால் தலைகுனிந்தவராக, இல்லை, இல்லை, அல்லாஹ்வின் தூதரே! ஒரு போதும் நான் விரும்ப மாட்டேன்" என்றார்.
அதன் பின்னர், அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவரை நோக்கி சீர் திருத்தும் தொனியில் "உமக்கு எதை நீ விரும்புகின்றாயோ, அதையே பிறருக்கும் நீ விரும்புவாயாக! உம் விஷயத்தில் எதை நீ வெறுப்பாயோ அதையே பிறரின் விஷயத்திலும் வெறுப்பாயாக!" என்று கூறினார்கள்.
இதைக் கேட்டதும், அந்த வாலிபர் மிகவும் பணிவுடன் "அல்லாஹ்வின் தூதரே! எனது உள்ளம் தூய்மை பெற இறைவனிடம் இறைஞ்ச மாட்டீர்களா?" என ஏக்கத்துடன் கேட்டார்.
அவரை அருகில் அழைத்த மாநபி {ஸல்} அவர்கள், தமதருகே அமரவைத்து அவரின் நெஞ்சத்தின் மீது கை வைத்து,யா அல்லாஹ்! இவரின் இதயத்தை தூய்மை படுத்துவாயாக! யா அல்லாஹ்! இவரின் பிழைகளை பொறுத்தருள்வாயாக! யா அல்லாஹ்! இவரின் கற்பொழுக்கத்தை பாதுகாப்பாயாக!" என்று துஆ செய்தார்கள்.
இறுதியாக அந்த வாலிபர் பெருமானார் {ஸல்} அவர்களிடமிருந்து விடை பெற்றுச் செல்கிற போது....

“இந்தச் சபையில் நான் நுழைகிற போது, விபச்சாரம்தான் நான் அதிகம் நேசிக்கும் விஷயமாக இருந்தது. ஆனால், இப்போது நான் அதிகம் வெறுக்கும் விஷயமாக அந்த விபச்சாரமே மாறிவிட்டது” என்று சொல்லியவாறே சென்றார்.
இந்த சம்பவத்தை அறிவிக்கும் அபூ உமாமா {ரலி} அவர்கள் கூறுகின்றார்கள்: “இதன் பின்பு அந்த வாலிபரின் வாழ்வினில் எந்த ஒரு தருணத்திலும் கற்பொழுக்கத்தை உரசிப்பார்க்கும் எந்த ஒரு செயலும் இடம் பெற வில்லை.”
(நூல்:ஸில்ஸிலத்துல் அஹாதீஸ் அஸ் ஸஹீஹா லில் அல்பானீ, பாகம்:1, பக்கம்:370, முஸ்னத் அஹ்மத், பாகம்:5, பக்கம்:256,257.)
நாகரீகம் என்றால் என்னவென்றே அறிந்திடாத, எளியோர்களின் மீது வன்முறைகளை கட்டவிழ்த்து மூர்க்கர்களாய் வாழ்ந்திட்ட, நற்குணங்களின் வாடையைக் கூட நுகர்ந்திடாத, ஒரு சமூகத்தினரின் தொடக்க கால தொடர்பின் போது, அவர்களில் ஒருவராய், அல்லாஹ்வின் தூதராய் இருந்து அணுகிய அறிவார்ந்த அணுகு முறை இது.
அன்று வரை அப்படியொரு நாகரீகத்தை கேள்விப் படாத அந்தச் சமூகம். அன்று முதல் தங்களின் பெற்றோரைச் சந்திக்கக் கூட அனுமதி கேட்டனர். அண்டை அயலார்களை தங்களின் சொந்த உறவினர்களைப் போல் பாவித்தனர். மானக்கேடான காரியங்களில் இருந்தும் விலகி, உயர்பண்புகளின் உறைவிடமாகவே மாறிப்போனார்கள்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 46
(அண்ணலாரின் அறிவார்ந்த அணுகுமுறைகள் 2)

ஒருமுறை, தனிமைச் சூழலில் வாழும் ஓர் அந்நியப் பெண்மணி சில பொருட்கள் வாங்குவதற்காக ஓர் அங்காடிக்குத் தனிமையில் சென்றபோது, கடைக்காரரர் கண்ணில் அவள் கவர்ச்சியாய்த் தோன்றினாள்! அவள் கேட்ட பொருள் உள்ளே சேமிப்பறையில் இருப்பதாய் அவர் சொன்னதும் அவள் அங்கு செல்லவே, பின் தொடர்ந்த கடைக்காரர், எதிர்பாராமல் அவள் மேனியை ஸ்பரிசித்தார்! அது மட்டுமின்றி, அவளை முத்தமிட்டார்!
அவளோ அதிர்ச்சியில் 'அட உன் கை சேதமே..! உனக்கு என்ன நேர்ந்தது? நான் தனித்து வாழும் ஓர் அந்நியப் பெண் என்பதை நீ அறியமாட்டாயா?" என்றாள்.
கடைக்காரருக்கு அப்போதுதான், தான் செய்தது பெரிய தவறு என்று உரைத்தது..! மனம் வருந்தியவர், நேராக உமர் ஃபாரூக் (ரலி) அவர்களிடம் சென்று விபரம் கூறி விடை கேட்டு நின்றார்.
''அட உனக்கு நேர்ந்த சோகமே! நீ அபுபக்ரு சித்தீக் (ரலி) அவர்களிடம் செல். ஒருவேளை, உனக்கு அவர்களிடம் உதவி கிடைக்கலாம் என்றார்.
கடைக்காரர் அபுபக்ரு (ரலி) அவர்களிடம் சென்று விபரம் சொல்லவே, அவர்களும் ''அவள் தனிமையில் வசிக்கும் பெண்ணா?'' என்றார்கள்.
'ஆம்' என்றதும் 'நீ அல்லாஹ்வின் தூதரிடம் செல்' என்று அவரை அனுப்பிவிட்டு, அபுபக்ரு சித்தீக் (ரலி) அவர்களும் உமர் ஃபாரூக் (ரலி) அவர்களும் அண்ணல் நபியைக் காணச் சென்றார்கள்.
இரக்கக் குணம் நிறைந்த இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் அந்த மனிதர் வந்த விவரத்தை கூறினார்:
அதைக் கேட்டு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சற்று நேரம் மௌனமானார்கள். இது விஷயத்தில், அல்லாஹ்வின் கட்டளையை எதிர்பார்த்திருந்தார்கள்போல் தோன்றியது. அப்போது அண்ணலாருக்கு வழக்கம்போல் 'வஹீ ' என்ற அல்லாஹ்வின் அருள் பொழியத் துவங்கியது.

وَأَقِمِ الصَّلَاةَ طَرَفَيِ النَّهَارِ وَزُلَفًا مِّنَ اللَّيْلِ ۚ إِنَّ الْحَسَنَاتِ يُذْهِبْنَ السَّيِّئَاتِ ۚ ذَٰلِكَ ذِكْرَىٰ لِلذَّاكِرِينَ

பகலின் (காலை, மாலை ஆகிய) இருமுனைகளிலும், இரவின் பகுதியிலும் நீங்கள் தொழுகையை நிலைப்படுத்துவீராக . நிச்சயமாக நற்செயல்கள், தீச்செயல்களைப் போக்கிவிடும். (அல்லாஹ்வை) நினைவு கூறுவோருக்கு இது நல்லுபதேசமாக இருக்கும் எனும் இறைவசனம் அருளப்பட்டது.
அதைப் பெற்றுப் புளகாங்கிதம் கொண்ட கடைக்காரர் ''இது எனக்கு மட்டுமா? அல்லது அனைவருக்குமா? ''என்று கேட்டதற்கு,
அருகே இருந்த உமர் ஃபாரூக் (ரலி) அவர்கள் ''இந்த வசனம் உனக்கு மட்டுமே பிரத்தியேகமானதாக இருக்கும்படி நீ விரும்பினால், உனக்கு அது செல்லுபடி ஆகாது! இந்த அருட்கொடை ஒட்டுமொத்த சமுதாயத்திற்கும்தான்!'' என்று பதிலளித்தார்கள்.
அருகில் இருந்த அண்ணல் நபி(ஸல்) அவர்கள், ''உமர் உண்மையே உரைத்தார் '' என்று சொல்லிச் சிரித்தார்கள்.
நூல்: தப்ஸீர் இப்னு கஸீர்.

ஆசையோடு வந்து நின்றவர்களிடத்தில்....
அல்லாஹ்வின் பாதையில் உயிர்த்தியாகம் புரிந்து ஷஹீத் எனும் நற்பேற்றை அடைபவர்களுக்கான அளப்பெரும் பேறுகளைக் குறித்து, அல்லாஹ்வும், அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்களும் அதிகமதிகம் ஆர்வமூட்டிக் கூறியிருக்கின்றார்கள்.
ஆதலால், நபித்தோழர்கள் அநேகம் பேர் அன்றாடத் தொழுகையின் பின்னர் பிரார்த்தனையாக கேட்டு வருவதை வழக்கமாக கொண்டிருந்தனர்.
இன்னும் சிலரோ தாம் ஷஹீதாக மரணிக்க துஆ செய்யுமாறு அல்லாஹ்வின் தூதரிடமே கேட்டுப் பெற்றிருக்கின்றார்கள்.
மதீனாவில் ஓர் அன்ஸாரிப் பெண்மணி இருந்தார்.அவருடைய பெயர் உம்மு வரக்கா {ரலி} அவர்கள்.
இறையச்சத்தை இதயத்தில் நிரப்பமாக பெற்றிருந்த பெண்மணி. அல்குர்ஆனை அழகிய குரலால் அலங்கரித்து, கேட்போரின் செவிகளையும், இதயங்களையும் கசிந்துருக வைத்திடுவார். அம்மணியின் அழகிய ஓதுதலை செவிதாழ்த்தி கேட்கும் ஸஹாபாக்கள் பலர் உண்டு. அதில் உமர் {ரலி} அவர்களும் ஒருவர்.
அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் உம்மு வரக்கா {ரலி} அவர்களை பெண்களுக்கு இமாமத் செய்யும் பொறுப்பிலும் அமர்த்தியிருந்தார்கள். ஒரு முஅத்தினையும் ஏற்பாடு செய்து கொடுத்திருந்தார்கள்.
பத்ர் யுத்தத்திற்கான ஆயத்தப் பணிகளை அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் மேற்கொண்டிருந்த தருணம் அது..

அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்களின் முன் வந்து நின்றார்கள் உம்மு வரக்கா {ரலி} அவர்கள் "அல்லாஹ்வின் தூதரே! நானும் இஸ்லாமியப் படையோடு வர ஆசிக்கின்றேன். நானும் உங்களோடு வருவதற்கு அனுமதி தாருங்களேன்? எனக்கும் ஷஹாதத்-வீரமரணம் அடையும் நற்பேறு கிடைக்கும் அல்லவா? " என்று மிக ஆசையோடு கேட்டார்கள்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் " நீங்கள் உங்கள் வீட்டிலேயே இருந்து கொள்ளுங்கள், அல்லாஹ் வீட்டில் வைத்தே ஷஹீதாகும் வாய்ப்பை நல்குவான்" என நவின்றார்கள்.
இவ்வாறு ஒரு முறையல்ல இரு முறையல்ல, பகைவர்களுக்கு எதிராக இஸ்லாமியப் படை புறப்படும் ஒவ்வொரு முறையும் நடந்துள்ளது இப்படியான உரையாடல்.
வீட்டிலிருக்கும் போதே ஷஹாதத்தா? என மக்கள் ஒருவருக்கொருவர் வியப்போடு கேட்டுக்கொள்ளும் அளவுக்கு பிரபல்யமாகி விட்டிருந்தது.
அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் கூட உம்மு வரக்கா {ரலி} அவர்களைக் காணும் போதெல்லாம் "இதோ! ஷஹீதா வருகிறார்" என்று கூறுவார்கள்.

"வாருங்கள் நாம் ஷஹீதாவின் வீடு வரை சற்று போய் அழகிய குர்ஆனையும் செவியேந்தி வரலாம்" என்று நபித்தோழர்கள் பேசிக்கொள்கிற அளவிற்கு நிலைமை மாறிவிட்டிருந்தது.
இறைத்தூதர் {ஸல்} அவர்கள் காணும் போதெல்லாம் இவ்வாறு குறிப்பிட்டதிலிருந்து இறைவன் அப்பெண்மணிக்கு ஷஹாதத்தை உறுதியாக வழங்குவான் என்பதை நபித்தோழர்கள் நம்பினார்கள். அதை அம் மக்கள் எதிர் பார்த்துக் கொண்டும் இருந்தார்கள்.
காலம் கனிந்தது. உம்மு வரக்கா {ரலி} அவர்களின் வீட்டில் காஃபிரான ஓர் அடிமையும், ஓர் அடிமைப் பெண்ணும் பணிபுரிந்து வந்தனர்.
"எப்போது நான் இறக்கின்றேனோ அப்போதே உங்களின் அடிமைத்தனம் முடிவுக்கு வந்து விடும். நீங்கள் இருவரும் விடுதலையாகி விடுவீர்கள்" என உம்மு வரக்கா {ரலி} அவர்கள் கூறியிருந்தார்கள்.
ஆனால், விரைவில் விடுதலையாக வேண்டும் என்பதில் குறியாக இருந்தார்களே தவிர, அந்தக் காலம் வரும் வரை அவர்கள் காத்திருக்க வில்லை.
மாறாக, உம்மு வரக்கா {ரலி} அவர்கள் உறங்கிக் கொண்டிருக்கும் போது ஒரு துணியை கழுத்தில் இறுக்கிக் கொன்று விட்டார்கள். வீட்டை விட்டும் ஓடியும் விட்டார்கள் அந்த அடிமைகள்.
அதிகாலை நேரம் ஆட்சித் தலைவர்-அமீருல் முஃமினீன் உமர் {ரலி} அவர்கள் வழக்கம் போல் உம்மு வரக்கா {ரலி} அவர்களின் வீட்டுச் சுவரோரமாக அவர்கள் குர்ஆன் ஓதும் இனிமையைக் கேட்பதற்காக நின்று கொண்டிருந்தார்கள்.
ஆனால், நீண்ட நேரமாகியும் குர்ஆன் ஓதப்படுகிற சப்தம் வரவில்லை. ஏதோ உள்ளுணர்வு உறுத்தவே வீட்டைத் திறந்து உள்ளே சென்று பார்க்கின்றார்கள். இன்னா லில்லாஹ்... உயிரைப் பிரிந்த உடல் உணர்வற்று துணியால் இறுக்கப் பட்டுக் கிடந்தது.
"வீட்டிலேயே நீங்கள் ஷஹீதாவீர்கள் என அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் உண்மையே உரைத்தார்கள்" என உமர் {ரலி} அவர்கள் வாய்விட்டுக் கூறினார்கள்.
தப்பியோடிய இரு அடிமைகளையும் கைது செய்து கொண்டு வந்து, கழு மரத்தில் ஏற்றி மரண தண்டனையை நிறைவேற்றினார்கள் கலீஃபா உமர் {ரலி} அவர்கள். மதீனாவில் முதன் முதலாக இவர்களுக்குத்தான் கழுமரத்தில் மரண தண்டனை நிறைவேற்றப்பட்டது.
(நூல்: இஸ்தீஆப், பாகம்:3, பக்கம்:290., அஹ்மத், பாகம்:6, பக்கம்:405., அபூ தாவூத், பாபு இமாமத்துன் நிஸா, ஹதீஸ் எண்:591.)

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 47

(அண்ணலாரின் அறிவார்ந்த அணுகுமுறைகள் 3)
உஹதில் ஷஹீதாகிப் போன தம் தந்தை, ஏராளமான கடன் சுமை, வயதுக்கு வந்த ஒன்பது சகோதரிகள், ஏழ்மையான சூழ்நிலை என ஏராளமான பிரச்சனைகளோடு நடமாடிக் கொண்டு, கிடைக்கும் சந்தர்ப்பங்களிலெல்லாம் அல்லாஹ்வின் பாதையில் பகைவர்களை எதிர்த்துப் போரிட முதல் ஆளாய் வந்து நிற்கிற இளைஞர் ஜாபிர் பின் அப்துல்லாஹ் {ரலி} அவர்கள்.
அவர்களைப் பார்க்கிற போதெல்லாம் காருண்ய நபியவர்கள் அவருக்கு பெரிய அளவில் உதவிட வேண்டும், அந்த உதவி அவரின் முழுச் சூழ்நிலைகளையும் மாற்றிட வேண்டும். என தருணம் பார்த்துக் காத்துக் கொண்டிருந்தார்கள்.
ஏனெனில், தன்மான உணர்வும், உயர்குலத்தில் பிறந்த சிறப்பும் பெற்றிருந்தவர். நேரிடையாகச் சென்று அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் உதவிட தயக்கம் காட்டியதற்கு இது தான் காரணமாய் அமைந்திருந்தது.

அன்று அருமையாய் ஒரு சந்தர்ப்பம் அதை நழுவ விட அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்களுக்கு மனமில்லை. இன்றைக்கு எப்படியாவது அவரின் துயர் துடைத்திடும் உதவியை செய்தேயாக வேண்டும் என்ற தீர்க்கமான முடிவோடு தயாரானார்கள்.
தாதுர் ரிகாஃ ஹிஜ்ரி நான்கில் பனூ ஃகத்ஃபான் கிளையாரை எதிர்த்துப் போரிட மாநபி {ஸல்} அவர்களின் தலைமையில் நபித்தோழர்கள் சென்றனர்.

பெரிய அளவில் போரெல்லாம் நடைபெறவில்லை. முஸ்லிம்கள் வெற்றியோடு திரும்பினார்கள். போர் முடிந்து எல்லோரும் கிளம்பிச் சென்று கொண்டிருந்தனர்.
இறுதியாக, அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்களும் ஜாபிர் {ரலி} அவர்களும் எஞ்சியிருந்தனர்.மெதுவாகப் பேச்சை துவக்கினார்கள் பெருமானார் {ஸல்} அவர்கள்
"என்ன ஜாபிர்? ஏன் இவ்வளவு தாமதம்?" அதுவா?"
"அல்லாஹ்வின் தூதரே!? கிழட்டு ஒட்டகம் ஆதலால் தான் தாமதம் " என்றார்கள் ஜாபிர் {ரலி}.
"கீழிறங்கி என்னிடம் தாருங்கள் என்று ஜாபிரிடம் கூறிவிட்டு, அதை வாங்கிய அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் ஒட்டகத்தின் மீதேறி, பிஸ்மில்லாஹ் கூறி தடவிக்கொடுத்தார்கள். ஒட்டகம் வேகமாகச் செல்ல ஆரம்பிக்கின்றது. அதன் பின்னர் அல்லாஹ்வின் ரஸூல் ஜாபிர் அவர்களிடம் ஒட்டகத்தைக் கொடுத்தார்கள். அதன் மீதேறி அமர்ந்த ஜாபிர் {ரலி} ஒட்டகம் வேகமாகச் செல்வதைக் கண்டதும் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்கள்.
மீண்டும் பேச்சைத் தொடர்கின்றார்கள் நபி {ஸல்} அவர்கள் "ஜாபிர் திருமணம் முடித்து விட்டீர்களா?"
ஆம்! என்றார் ஜாபிர் {ரலி}. "கன்னிப் பெண்ணா? விதவைப் பெண்ணா?" என்று நபிகளார் கேட்டார்கள்.
அதற்கவர் "விதவைப் பெண்ணை திருமணம் செய்திருக்கின்றேன்" என்றார்கள்.
"ஏன் ஒரு கன்னிப் பெண்ணை திருமணம் செய்திருக்கலாமே? மண வாழ்வு மகிழ்ச்சி மிக்கதாய் அமைந்திருக்குமே? " என்று மாநபி {ஸல்} அவர்கள் கேட்டார்கள்.
ஜாபிர் {ரலி} சொன்னார்கள் "இல்லை அல்லாஹ்வின் தூதர் அவர்களே! எனக்கு ஒன்பது சகோதரிகள். தந்தை உஹதில் ஷஹீதாகி விட்டார். கடனும் ஏராளமாய் இருக்கின்றது.இந்நிலையில் நான் என் சகோதரிகளைக் கவனிக்க என் சகோதரிகளின் ஒத்த வயதினில் உள்ள ஒரு கன்னிப் பெண்ணை திருமணம் செய்தேனென்றால்,அது நன்றாக இருக்காது என்பதற்காகத்தான் விதவைப் பெண்னை மணம் முடித்திருகின்றேன்".
ஜாபிரே! நாம் மதீனாவின் எல்லையை நெருங்குகிற போது உடனடியாக நீர் ஊருக்குள் நுழைந்திட வேண்டாம். உமது வருகையை உமது மனைவிக்கு தெரிவித்து விடுங்கள். உமது மனைவி உமக்காக தலையணையைச் சரி செய்து வைப்பார்கள்" என்றார்கள் மாநபி {ஸல்} அவர்கள்.

அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்களின் சாடையை புரிந்து கொள்ள முடியாமல் "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! என் வீட்டில் தலையணைகளே இல்லை அல்லாஹ்வின் தூதரே! என்றார் ஜாபிர் {ரலி}.
அல்லாஹ் நாடினால்... இனி வரும்..என்றார்கள் சிரித்துக் கொண்டே நபி {ஸல்} அவர்கள்
"ஜாபிரே! உமது ஒட்டகத்தை எனக்கு விலைக்குத் தருகின்றீரா?"....
"என்னது என் ஒட்டகத்தையா? அது விலை போகாது இறைத்தூதரே! வேண்டுமானால் நான் அன்பளிப்பாக உங்களுக்குத் தந்து விடுகின்றேன்" என்றார் ஜாபிர் {ரலி} அவர்கள்.
"இல்லை, ஜாபிர் விலைக்குத் தருவதாக இருந்தால் கூறுங்கள். அன்பளிப்பாகவெல்லாம் தர வேண்டாம்" என்றார்கள் மாநபி {ஸல்} அவர்கள்.
அப்படியானால், "நீங்களே ஒரு விலையைக் கூறுங்கள்" என்றார் ஜாபிர் {ரலி}.

அப்போது நபி {ஸல்} அவர்கள் “ஒரு திர்ஹம்” என்றார்கள். என் ஒட்டகம் அவ்வளவு தான் விலை போகுமா? அல்லாஹ்வின் தூதரே! என்று கேட்டார் ஜாபிர் {ரலி}.
அப்போது நபி {ஸல்} அவர்கள் “இரண்டு திர்ஹம்” என்றார்கள். “வேண்டாம் அல்லாஹ்வின் தூதரே! அன்பளிப்பாகவே எடுத்துக் கொள்ளுங்கள்!” என்றார் ஜாபிர் {ரலி}.
ஒவ்வொரு திர்ஹமாக உயர்த்தி, உயர்த்தி இறுதியாக அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் 700 எழுநூறு திர்ஹமாக அந்த ஒட்டகத்திற்கு விலையாக நிர்ணயித்தார்கள்.
விலை பேசி நபியவர்கள் முடித்த போது உடனடியாக ஒட்டகத்தின் மேல் இருந்து கீழிறங்கிய ஜாபிர் அவர்களைப் பார்த்த நபியவர்கள் “நீங்களே ஓட்டி வாருங்கள் ஊர் வந்ததும் வாங்கிக் கொள்கின்றேன்” என்று கூறினார்கள்.
மதீனா வந்ததும் நேராக மஸ்ஜிதுன் நபவீக்குச் சென்று அங்குள்ள ஒரு தூணில் ஒட்டகத்தை கட்டிப் போட்டு விட்டு, வீட்டுக்கு வந்து விடுகின்றார்கள் ஜாபிர் {ரலி}.
அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் பள்ளிவாசலுக்குள் நுழைகிற போது அங்கே ஒட்டகம் கட்டப்பட்டிருப்பதை பார்த்து விட்டு, அதை அங்கே கட்டியவர் யார்? என அங்கிருந்தவர்களிடம் விசாரிக்கின்றார்கள்.
மக்கள் ஜாபிர் என்று கூறினார்கள். உடனடியாக, அங்கிருந்த பிலால் {ரலி} அவர்களை அழைத்து 700 திர்ஹத்தை ஒருபையிலே போட்டுக் கொடுத்து, இந்த ஒட்டகத்தையும், இந்த பணமுடிப்பையும் ஜாபிர் அவர்களிடம் “அல்லாஹ்வின் தூதர் இந்த பண முடிப்பை உங்களிடம் தரச் சொன்னார்கள். மேலும், இந்த ஒட்டகத்தை உமக்கு அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் அன்பளிப்பாக தந்திருக்கின்றார்களாம்” என்று கூறிடுமாறு அனுப்பி வைத்தார்கள்.
பிலால் {ரலி} அவர்களும் அப்படியே சொல்லி கொடுத்து விட்டுச் சென்றார்கள். இந்தச் செய்தியை அறிவிக்கின்ற அறிவிப்பாளர் ஜாபிர் பின் அப்துல்லாஹ் {ரலி} அவர்கள்
“அதற்குப் பின்னர் தாம் எப்போதுமே வாழ்வில் ஏழ்மை நிலைக்குத் தள்ளப் பட்டதில்லை. அது எங்களின் பொருளாதரத்தை பல்கிப் பெருக்கியது” என்று கூறுகின்றார்கள்.
(நூல்: தஹ்தீப் ஸீரத் இப்னு ஹிஷாம், பாடம்: ஃகஸ்வது தாதுர் ரிகாஃ, பக்கம்:164,165.)

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 48

(அண்ணலாரின் அறிவார்ந்த அணுகுமுறைகள் 4)

பொறுப்பாளர்கள் தவறு செய்யும் பட்சத்தில்...
தாதுஸ் ஸலாஸில் எனும் போருக்கு அம்ர் இப்னுல் ஆஸ் {ரலி} அவர்களின் தலைமையில் 300 பேர் கொண்ட ஒரு படையை நபி {ஸல்} அவர்கள் அனுப்பி வைத்தார்கள்.
அவருக்கு உதவியாக அபூ உபைதா பின் அல் ஜர்ராஹ் {ரலி} அவர்களின் தலைமையில் ஓர் துணைப் படையையும் பின்னால் அனுப்பி வைத்தார்கள்.
அம்ர் இப்னுல் ஆஸ் {ரலி} அவர்களின் தலைமையின் கீழ் அபூபக்ர் {ரலி}, உமர் {ரலி} போன்ற பெரும் ஸஹாபி களெல்லாம் படை வீரராக கலந்து கொண்டார்கள். அவர்கள் கடும் குளிர் காலத்தில் பயணமேற்கொண்டனர்.
ஸலாஸில் என்பது மதீனாவில் இருந்து 10 நாட்கள் நடந்து செல்லும் தொலைவில் உள்ள ஓர் மணற்பாங்கான பகுதியாகும். போருக்குச் செல்கிற வழியில் இந்த உம்மத்திற்கு பெரும் பாடங்களை கற்றுத் தந்த மூன்று நிகழ்வுகள் நடந்தேறியது.
பெரும்பாலும் படைத் தளபதிகளே மக்களுக்கு இமாமாக நின்று தொழவைப்பார்கள். அதுதான் அண்ணலாரின் வழக்கமாகவும் இருந்தது.
ஒரு நாள் இரவு அம்ர் இப்னுல் ஆஸ் {ரலி} அவர்களுக்கு குளிப்புக் கடமையாகி விடுகின்றது. தயம்மும் செய்து சுபுஹ் தொழுகையை தொழ வைத்தார்கள்.

இதை அறிந்து கொண்ட உமர் {ரலி} அவர்கள் உட்பட, படை வீரர்கள் அனைவரும் ஆட்சேபித்தனர். ஆனாலும், தளபதியின் முடிவுக்கு கட்டுப்பட வேண்டுமென்ற மாநபியின் கட்டளை அவர்களைத் தடுத்து விட்டது.
அடுத்து ஸலாஸிலை சமீபித்திருந்த ஒரு பகுதியில் இரவு தங்க நேரிட்டது. குளிரின் தாக்கம் அதிகமாகி விடவே, வீரர்கள் நெருப்பு மூட்டினர்.
சிறிது நேரத்தில் அங்கு வந்த தளபதியார் "தீயை அணைத்து விடுங்கள்; இனி யாரும் நெருப்பு மூட்ட வேண்டாம். இது தளபதியின் உத்தரவாகும்" என்று அனைவரிடத்திலும் கூறினார்கள்.
மீண்டும் படை வீரர்களுக்கு மத்தியில் சலசலப்பு முணுமுணுப்பு. இறுதியாக, போர் நடந்தது.
முஸ்லிம்கள் மாபெரும் வெற்றி வாகை சூடினர். எதிரிகள் தலை தெறிக்க புறமுதுகு காட்டி ஓடினர்.
இப்போது தளபதி அம்ர் இப்னுல் ஆஸ் {ரலி} அவர்களிடம் இருந்து ஓர் கட்டளை "எதிரிகளை யாரும் துரத்திச் சென்று தாக்கிட வேண்டாம்; அப்படியே திரும்பி விடுங்கள்.
யாரும் இப்படியொரு உத்தரவை அம்ர் இப்னுல் ஆஸ் {ரலி} அவர்கள் போடுவார்கள்" என சற்றும் எதிர் பார்க்கவில்லை. எதிரிகளை பதம் பார்த்திட அருமையானதொரு சந்தர்ப்பம். இனிமேல், இதுபோன்றதொரு வாய்ப்பு கிடைக்கப் போவதில்லை. இம்முறை எதிர்ப்பு கடுமையாகவே தளபதியிடம் வீரர்கள் அனைவரும் ஒருமித்த குரலில் "நாம் எதிரிகளை விரட்டிச் சென்று தாக்குவோம்"
இல்லை, இப்போதே படை வாபஸ் பெறப்படுகிறது. உடனடியாக, நாம் மதீனா திரும்பிச் செல்கின்றோம்" என்றார் தளபதி.
பல்வேறு சிக்கலுக்குப் பிறகு மதீனா வந்து சேர்ந்தது முஸ்லிம்களின் படை.
உடனடியாக அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்களிடம் உமர் {ரலி} அவர்கள் மற்றும் இன்னும் சில வீரர்கள் சேர்ந்து தளபதியின் நடத்தை குறித்து முறையிட்டனர்.
அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்களும், உமர் கூறிவிட்டார். அபூபக்ர் கூறிவிட்டார். இன்னும் கண்ணியத்திற்குரிய பெரும் ஸஹாபாக்களெல்லாம் கூறிவிட்டனர். உடனே அம்ர் {ரலி} அவர்களை அழைத்து அதற்காக தண்டிக்கவில்லை.அம்ருப்னுல் ஆஸ் {ரலி} அவர்களை அழைத்து வருமாறு ஆளனுப்பினார்கள்.
அம்ர் {ரலி} அவர்கள் வந்ததும் "அம்ரே! மக்கள் உம் மீது இன்னின்னவாறான ஆட்சேபனைகளை என்னிடம் முறையிட்டுள்ளனர். உம்முடைய பதில் என்ன?" என்று அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் கேட்டார்கள்.
அதற்கு அம்ர் {ரலி} அவர்கள் " ஆம்! அல்லாஹ்வின் தூதர் அவர்களே! அவர்கள் சொல்வது அனைத்தும் உண்மைதான். கடுமையான குளிரில் குளித்தால் மரணித்து விடுவேனோ என நான் அஞ்சினேன்.அப்போது எனக்கு "உங்களை நீங்களே மாய்த்துக் கொள்ள வேண்டாம். திண்ணமாக அறிந்து கொள்ளுங்கள்! அல்லாஹ் உங்கள் மீது அளப்பெரும் கருணையாளனாக இருக்கின்றான்" (அல்குர்ஆன்:4:29) எனும் இறை வசனம் நினைவுக்கு வந்தது.எனவே நான் தயம்மும் செய்து தொழவைத்தேன். அது தவறா இறைத்தூதரே!?" என்று கேட்டார்.
அது கேட்ட அண்ணலார் புன்முறுவல் பூத்தவராக "இல்லை, தப்பொன்றும் இல்லை" என்று கூறிவிட்டு, "ஏன் நெருப்பை மூட்ட வேண்டாம் என்று கூறினீர்கள்" என்று கேட்டார்கள்.
அதற்கு அம்ர் {ரலி} அவர்கள் "எதிரிகளின் இடத்தை நாங்கள் நெருங்கிய பின்பு தான் நான் அவ்வாறு கூறினேன். காரணம் நம் நடமாட்டத்தை அறிந்து எதிரிகள் நம்மைத் தாக்கி விடுவார்களோ என நான் அஞ்சினேன்.அதன் பின்னர் தான் அப்படி நான் கட்டளை பிறப்பித்தேன்" என விளக்கம் தந்தார்கள்.
அப்போதும் அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் புன்னகை பூத்தார்கள். பின்னர், "ஏன் விரட்டிச் சென்று தாக்கிட வேண்டாம் என்று உத்தரவிட்டீர்கள்" என மாநபி {ஸல்} அவர்கள் கேட்டார்கள்.
அதற்கு "எதிரிகளின் எண்ணிக்கை நம் எண்ணிக்கையை விட அதிகம். அவர்கள் களத்தை விட்டும் வெளியேறி பரந்த வெளியில் ஓடிக் கொண்டிருந்தனர். தொடர்ந்து சென்று தாக்கினால் அவர்கள் சுற்றி வளைத்து நம்மை தாக்கி, வெற்றி பெற்றுவிடுவார்களோ என நான் அஞ்சிய போது அந்த முடிவை எடுத்தேன்" என்று அம்ர் {ரலி} அவர்கள் கூறினார்கள்.

இப்போதும் நபி {ஸல்} சிரித்தார்கள்.பின்பு, “என்ன தான் இருந்தாலும் களத்தில் நிற்கிற போது படைவீரர்களிடம் நீங்கள் ஆலோசித்து முடிவெடுத்து இருக்க வேண்டும். என அறிவுரை கூறி அம்ர் இப்னுல் ஆஸ் {ரலி} அவர்களை அனுப்பி வைத்தார்கள்.
(நூல்:தாரீகுல் இஸ்லாம் லி இப்னி அஸாக்கிர், பக்கம்: 59 முதல் 67 வரை.)

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 49

(அண்ணலாரின் அறிவார்ந்த அணுகுமுறைகள் 5)

தன்னை நம்பியவர்களிடத்தில்...
முஹம்மத் {ஸல்} அவர்கள் நபியாக அனுப்பப்படாத அந்தக் காலத்தில் மக்காவை புணர் நிர்மானம் செய்யும் பணியில் மக்கத்து தலைவர்கள் ஈடுபட்டிருந்தனர்.
இறுதியாக, ஹஜ்ருல் அஸ்வத் கல்லை ” அது இருந்த இடத்தில் யார் வைப்பது என்று சண்டையிட்டுக் கொண்டனர்.” இறுதியாக அவர்களே ஒரு முடிவுக்கும் வந்தனர்.
"யார் நாளைக் காலை ஹரமுக்குள் முதலாம் நபராக நுழைகின்றாரோ, அவர் சொல்லும் தீர்வுக்கு கட்டுப்படுவது " என முடிவு செய்தனர்.
மறு நாள் காலை முஹம்மத் {ஸல்} அவர்கள் முதலாம் நபராக நுழைவதக் கண்ட அவர்கள் தங்களின் பிரச்சனையையும், தாங்கள் எடுத்த முடிவையும் கூறி நீங்கள்தான் இந்தப் பிரச்சனைக்குத் தீர்வைத் தரவேண்டும்” என வேண்டி நின்றார்கள்.
அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் நீண்ட ஒரு போர்வையைக் கொண்டு வரச் சொல்லி, அதனுள் ஹஜருல் அஸ்வத் கல்லை வைத்து அந்தப் போர்வையின் முனைகளைப் பிடித்து கல் இருந்த இடத்தில் வைக்கச் சொன்னார்கள்.
மக்கத்து தலைவர்கள் மகிழ்ச்சியோடு அந்தத் தீர்வை ஏற்றுக் கொண்டார்கள். (நூல்: அல் உஸூலில் அஃக்லாக்கியா, பக்கம்:76.)
புனித மக்காவின் 'ஹஜ்ருல் அஸ்வத் கல்- Black Stone ' புகைப்படத்தை முதன்முதலாக வெளியிட்டது சவுதி அரேபியா !
புனித மக்காவின் Black Stone புகைப்படத்தை வெளியிட்டது சவூதி அரேபியா. விசேஷமாக பதப்படுத்தப்பட்ட உயர் தெளிவுத்திறன் படங்கள் வெளியிடப்பட்டுள்ளன.
அல்-ஹஜர் அல்-அஸ்வத், அல்லது பிளாக் ஸ்டோன், மக்காவில் கஃபாவின் மூலையில் அமைக்கப்பட்ட பண்டைய புனித கல்லின் புகைப்படம் வெளியிடப்பட்டுள்ளது. சவூதியரேபியா வெளியிட்டது. இது சுவர்க்கத்தின் கல் ஆகும்.
The images of al-Hajar al-Aswad, or the Black Stone, are up to 49,000 megapixels in size and took more than 50 hours to photograph and develop, the General Presidency for the Affairs of the Saudi Grand Mosque and the Prophet's Mosque said in a press release Monday.
مسند أحمد بن حنبل
13974 – حدثنا عبد الله حدثني أبي ثنا يحيى بن سعيد عن شعبة ثنا قتادة عن أنس قال : الحجر الأسود من الجنة تعليق شعيب الأرنؤوط : إسناده صحيح على شرط الشيخين
ஹஜ்ருல் அஸ்வத் கல் சொர்க்கத்துக் கல்லாகும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர் : அனஸ் (ரலி) நூல் : அஹ்மத் 13434
எனவே அஹ்மத், நஸாயீ ஆகிய நூல்களில் பதிவுசெய்யப்பட்ட ஹதீஸ்கள் ஆதாரப்பூர்வமானவையாக உள்ளதால் ஹஜருல் அஸ்வத் கல் சொர்க்கத்துக் கல் என்று நாம் நம்ப வேண்டும்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 50

(அண்ணலாரின் அறிவார்ந்த அணுகுமுறைகள் 6)

தோழர்களிடத்தில்...அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்கள்:
"நாங்கள் (ஒருநாள்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அருகில் அமர்ந்துகொண்டிருந்தோம்.
அப்போது நபியவர்கள், 'நான் தூங்கிக்கொண்டிருந்தபோது (கனவில்) என்னைச் சொர்க்கத்தில் கண்டேன்.
அப்போது (அங்கிருந்த) மாளிகை ஒன்றின் அருகில் ஒருபெண் (உலகில் தான் இறைவணக்கம் புரிபவளாய் இருந்துவந்ததைக் குறிக்கும் வகையிலும் தன் அழகையும் பொலிவையும் மெருகேற்றிக் கொள்ளவும்) 'உளு'ச் செய்து கொண்டிருந்தாள்.
அப்போது நான், ''இந்த மாளிகை யாருக்குரியது?' என்று கேட்டேன். (வானவர்) ஒருவர், இது உமர் இப்னு கத்தாப் அவர்களுக்குரியது'' என பதிலளித்தார்கள்.
அந்த மாளிகைக்குள் நான் செல்ல நினைத்தேன். ஆனால், (உமரே!) உம்முடைய ரோஷம் குறித்து நான் அறிந்திருந்தது என் நினைவுக்கு வந்தது. என்னை (உள்ளே செல்லவிடாமல்) தடுத்துவிட்டது.உடனே அங்கிருந்து திரும்பி வந்துவிட்டேன்''' என பதிலளித்தார்.
அங்கு அவையிலிருந்த உமர்(ரலி) (இதைக்கேட்டு) அழுதார்கள். பிறகு, ''என் தந்தையும் என் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! தங்களிடமா நான் ரோஷம் காட்டுவேன், இறைத்தூதர் அவர்களே!'' என்று கேட்டார்கள்.
ஸஹீஹ் புகாரி : 5226 , 5227.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 51

(அண்ணலாரின் அறிவார்ந்த அணுகுமுறைகள் 7)

(ஏமாற்ற நினைப்பரிடம் நபிகளார் அணுகிய விதம்)
பத்ரு போரில் கைதிதியாகப் பிடிக்கப்பட்ட எதிரிகளிடம் ஈட்டுத் தொகை பெற்று அவர்களை விடுதலை செய்தார்கள்.
நபியவர்கள் மக்கா நகரின் புகழ் மேவிய கவிஞர்களின் ஒருவரான " அபூ இஸ்ஸா " என்பவரும் கைது செய்யப்பட்டிருந்தார்.
அவரிடம் பணயத் தொகை கேட்ட போது, " நான் ஒரு ஏழை எனவே என்னால் எதுவும் தர இயலாது உங்களின் கைதியாகவே இங்கேயே இருந்திடவும் இயலாது. ஏனெனில் எனக்கு பெண் குழந்தைகள் அதிகம் உள்ளனர். ஒரு தந்தை என்ற முறையில் அவர்களைப் பாதுகாத்துப் பராமரிக்க வேண்டிய கடமை எனக்கு இருக்கிறது என்று இலக்கிய கவித் திறமையின் துணையோடு இறைத் தூதர் (ஸல்) அவர்களிடம் வாதாடி கெஞ்சி விடுதலை பெற்றிட முயன்றார்.
ஏழ்மையோடும் பெண்மக்களோடும் வாழ்ந்து கொண்டிருக்கும் ஒருவரை கஷ்டப் படுத்த நபி(ஸல்) அவர்கள் விரும்பவில்லை.
ஆனாலும் இவரை மட்டும் சும்மா விடுதலை செய்திடவும் முடியாது.எனவே ஒரு நிபந்தனையின் பேரில் அபூ இஸ்ஸாவை விடுவித்திட நபி(ஸல்) அவர்கள் முன் வந்தார்கள்.
" இனி முஸ்லிம்களுக்கு எதிரான படையில் சேர்ந்து கொண்டு போர்களத்துக்கு வரக்கூடாது எதிரிகளுக்கு உதவவும் கூடாது என்பதே அந்த நிபந்தனை அவர் ஒப்புக் கொண்டார் விடுதலை செய்யப்பட்டார்.
ஆனால் வாக்கு மீறினார் அபூ இஸ்ஸா. மறுவருடம் நடந்த உஹதுப் போரில் மீண்டும் முஸ்லீம்களைத் தாக்கிட எதிர்களோடு களத்துக்கு வந்திருந்தார். இப்போதும் கைது செய்யப்பட்டார்.
நமது நாவன்மையால் முஹம்மதை ஏமாற்றி நம்ப வைத்து இப்போதும் விடுதலை பெற்று விட முடியும் என்று நம்பிக் கொண்டிருந்தார்.

கருணை நபி(ஸல்) அவர்கள் உறுதியான குரலில் கூறினார்கள் : "அபூ இஸ்ஸாவே ! மக்காவின் வீதிகளில் நீ நடந்து செல்லும்போது, எதில் வந்து போவோரிடம் நான் முஹம்மதை இரண்டு தடவை ஏமாற்றி விட்டேன் என்று கூறிக் கொண்டு அலைவதை நான் அனுமதிக்கவே மாட்டேன். ஏனெனில், ஒரு இறை நம்பிக்கையாளன் ஒரே பொந்தில் இரண்டு தடவை தீண்டப்பட மாட்டான் "

இப்படிக் கூறிய இறைத் தூதர் (ஸல்) அவர்கள் அங்கே நின்று கொண்டிருந்த ஆஸிம் (ரலி) என்ற தோழரை அழைத்து,

"ஏமாற்றுக்காரக் கவிஞன் அபூ இஸ்ஸாவின் தலையை வெட்டிவிட உத்தரவிட்டார்கள் (நூல் சீரத் இப்னு ஹிஷாம்) இரக்கம் காட்டுவது வேறு ஏமாளித்தனம் வேறு இவ்விரண்டுக்கும் இடையேயான வித்தியாசத்தை துல்லியமாக தெரிந்து வைத்திருந்தார்கள்.

இறைத்தூதரவர்கள் மிகப் பெரிய சாம்ராஜ்ஜியத்தை கட்டமைத்துக் கொண்டிருந்த காலத்தில் வஞ்சக வலை விரிக்கும் எதிரிகளிடம் உடன்படிக்கையை மீறுபவர்களிடம் மென்மை காட்டிவது இறையாட்சிக்கே குந்தகம் ஏற்படுத்தும் குறை மதிச் செயலாகும். எனவே அந்த கடுமையான ஆனால் அறிவார்த்தமான முடிவுக்கு உடனே வந்தார்கள் நபியவர்கள்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 52

(அண்ணலாரின் அறிவார்ந்த அணுகுமுறைகள்

உம்மு ஸலமா (ரழி) அவர்கள் கூறினார்கள்:

அபூபக்கர் (ரழி) அவர்கள் புஸ்ரா நகரத்திற்கு வியாபார நிமித்தமாகச் சென்றார்கள். பத்ருப் போரில் பங்கேற்ற "நுஅய்மான்' மற்றும் "ஸுவைபித் இப்னு ஹர்மலா' (ரழி) அவர்களையும் உடன் அழைத்துச் சென்றார்கள்.

அதில் ஸுவைபித் (ரழி) பிரயாண உணவுக்கு பொறுப்பாளராக இருந்தார். அவரிடம் நுஅய்மான் (ரழி) "உணவு கொடுங்கள்'' என்றார். அவர் "அபூபக்கர் (ரழி) வரட்டும்'' என்று மறுத்துவிட்டார்.

நுஅய்மான் (ரழி) நகைச்சுவையாளராகவும், கிண்டல் செய்பவராகவும் இருந்தார். அவர் ஒட்டகங்களை இழுத்து வந்து கொண்டிருந்த சில மனிதர்களிடம் சென்று, "என்னிடம் சுறுசுறுப்பான அரபு அடிமை ஒருவர் இருக்கிறார். அவரை என்னிடமிருந்து வாங்கிக் கொள்கிறீர்களா?'' என்றார். அவர்கள் ஒப்புக் கொண்டார்கள்.

மேலும் நுஅய்மான் (ரழி) கூறினார் "அந்த அடிமை நாவன்மை உடையவர். அவர் தன்னை சுதந்திரமானவன் எனக் கூறலாம். நீங்கள் அதை நம்பி அவரை வாங்க மறுப்பதாக இருந்தால், இப்போதே என்னை விட்டுவிடுங்கள். அவர் விஷயத்தில் எனக்கு இடையூறு செய்யாதீர்கள்'' என்றார்.

அம்மனிதர்கள் இல்லை, அவரை வாங்கிக் கொள்கிறோம் என்றார்கள். ஸுவைபித் (ரழி) அவர்களை அம்மனிதர்கள் 10 பெண் ஒட்டைகைகளைக் கொடுத்து வாங்கிக் கொண்டார்கள்.

நுஅய்மான் (ரழி) 10 ஒட்டகைகளையும் அம்மனிதர்களையும் அழைத்து வந்து "இதோ இவர்தான் பிடித்துக் கொள்ளுங்கள்'' என்றார்.

ஸுவைபித் (ரழி) "இவர் பொய்யர், நான் சுதந்திரமனிதன்; அடிமையில்லை'' என்றார்.

வந்தவர்கள் "உம்மைப் பற்றிய எல்லா விஷயத்தையும் இவர் (நுஅய்மான்) கூறிவிட்டார்'' என்று கூறி அவரது கழுத்தில் கயிற்றைப் பிணைத்து அழைத்துச் சென்று விட்டார்கள்.

அப்போது அபூபக்கர் ஸித்தீக் (ரழி) வந்தார்கள். அவர்களிடம் நடந்த விஷயத்தைக் கூறப்பட்டது. அவர்கள் தமது தோழருடன் சென்று அவர்களது ஒட்டகைகளைக் கொடுத்துவிட்டு, அவரை மீட்டு வந்தார்கள்.

பிறகு இதை நபி (ஸல்) அவர்களிடம் தெரிவிக்கப்பட்டது. சுற்றிலும் தோழர்கள் அமர்ந்திருந்த நிலையில் தோழர்களும் நபி (ஸல்) அவர்களும் ஒரு வருடமாக இதைப் பேசி சிரித்துக் கொண்டார்கள். (முஸ்னத் அஹ்மத்) 25465

ஒரு கிராமவாசி நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். மஸ்ஜிதுக்குள் நுழைந்து அதன் முற்றத்தில் தனது ஒட்டகையை அமரச் செய்தார்.

சில நபித்தோழர்கள் நுஅய்மான் (ரழி) அவர்களிடம் "நாம் இறைச்சி சாப்பிட்டு வெகுநாட்களாகி விட்டது. மிகவும் ஆவலாக இருக்கிறது. நீர் இதை அறுத்தால் நாம் சாப்பிடலாம், இறுதியில் நபி (ஸல்) அவர்கள் அதற்கான விலையை பொறுப்பேற்றுக் கொள்வார்கள்'' என்று கூறினார்கள். அப்போது நுஅய்மான் (ரழி) அதை அறுத்துவிட்டார்.

பின்பு அந்தக் கிராமவாசி தனது ஒட்டகையைப் பார்த்துவிட்டு "முஹ்ம்மதே! அறுத்து விட்டார்களே!'' என்று கூச்சலிட்டார்.

நபி (ஸல்) அவர்கள் வெளியே வந்து "இதைச் செய்தது யார்?'' என்று கேட்டார்கள்.

நபித்தோழர்கள் "நுஅய்மான்'' என்று கூறினார்கள். அவர் எங்கே இருக்கிறார் என நபி (ஸல்) அவர்கள் தேடிச் சென்றபோது அவர் ளுபாஆ பின்த் ஜுபைர் (ரழி) அவர்களின் வீட்டில் ஒரு குழியினுள் ஒளிந்துக் கொண்டார். அவர் பேரீச்ச மட்டைகளாலும் கீற்றுகளாலும் தன்னை மறைத்துக் கொண்டிருந்தார்.

ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் சப்தமாக "அல்லாஹ்வின் தூதரே! நான் நுஅய்மானைப் பார்க்கவில்லை'' என்று கூறியவராக நுஅய்மானின் பக்கம் சைக்கினை செய்தார்.

நபி (ஸல்) அவர்கள் அவரை வெளியேறி வரச் செய்தார்கள். அவர்மீது கிடந்த கட்டைகள் முகத்தில் அழுத்தியதால் அவரது முகம் நிறம்மாறி இருந்தது.

நபி (ஸல்) அவர்கள் அவரிடம் "உம்மை இவ்வாறு செய்யத் தூண்டியவர் யார்?'' என்று கேட்டார்கள்.

நுஅய்மான் (ரழி) நபி (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! என்னைப்பற்றி உங்களிடம் கூறினார்களே அவர்கள்தான் என்னைத் தூண்டினார்கள்'' என்று கூறினார்.

நபி (ஸல்) அவர்கள் அவரது முகத்தை தடவிக் கொடுத்து சிரித்தார்கள். பின்பு அந்த ஒட்டகைக்கான விலையைக் கொடுத்தனுப்பினார்கள்.

நூல். ஹயாத்துஸ் ஸஹாபா

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 53

அண்ணலாரின் அறிவார்ந்த அணுகுமுறைகள் 9

(நபிகளாரின் உயர் நற்பண்புகளில் சில ...)

ஒருமுறை ரோம் மன்னர் ஹிர்கல் (ஹெர்குலஸ்) அழைப்பின்பேரில், நபிகளாரின் எதிரிகளில் ஒருவரான அபூ சுபியான் அவரை அவரது அவையில் சந்தித்தார்.

அப்போது அபூசுபியானிடம், ‘‘இஸ்லாத்தைப் பற்றிக் கூறுவதற்கு முன்பு அவர் (முகம்மது நபி) பொய் பேசியுள்ளார் என்று நீங்கள் பழி சுமத்தியுள்ளீர்களா?’’ என்று மன்னர் கேட்டார்.

அதற்கு அபூ சுபியான் பதில் அளிக்கையில், ‘‘அவ்வாறு அவர் ஒருபோதும் பொய் பேசியதில்லை’’ என்று பதில் அளித்தார்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மதீனாவின் ஆட்சியாளராக இருந்த நேரம். அவர்களைச் சந்திப்பதற்காக உமர் (ரலி) அவர்கள் செல்கிறார். உமர் (ரலி) அவர்கள் கண்ட காட்சிகள்

''நபிகள் நாயகம் பாயின் மீது எதையும் விரிக்காமல் படுத்திருந்தார்கள். இதனால் விலாப்புறத்தில் பாயின் அடையாளம் பதிந்திருந்தது.
கூளம் நிரப்பப்பட்ட தோல் தலையணையைத் தலைக்குக் கீழே வைத்திருந்தார்கள்.
அவர்களின் கால்மாட்டில் தோல் பதனிடப் பயன்படும் இலைகள் குவித்து வைக்கப்பட்டிருந்தன.
தலைப்பகுதியில் தண்ணீர் வைக்கும் பாத்திரம் தொங்க விடப்பட்டிருந்தது.
இதைக் கண்டதும் நான் அழுதேன். 'ஏன் அழுகிறீர்?' என்று நபிகளார் கேட்டார்கள். '(பாரசீக மன்னர்) கிஸ்ராவும், (இத்தாலியின் மன்னர்) கைஸரும் எப்படி எப்படியோ வாழ்க்கையை அனுபவிக்கும்போது.. அல்லாஹ்வின் தூதராகிய நீங்கள் இப்படி இருக்கிறீர்களே' என்று நான் கூறினேன்.
அதற்கு நபிகளார், 'இவ்வுலகம் அவர்களுக்கும், மறுமை வாழ்வு நமக்கும் கிடைப்பது உமக்குத் திருப்தி அளிக்க வில்லையா?' என்று திருப்பிக் கேட்டார்கள்''

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒரு பாயின் மீது படுப்பது வழக்கம். அதனால் அவர்கள் மேனியில் பாயின் அழுத்தம் பதிந்து விடும்.
இதைக் கண்ட நாங்கள் ''அல்லாஹ்வின் தூதரே..! நீங்கள் அனுமதித்தால் இதன் மீது விரித்துக் கொள்ளும் விரிப்பைத் தயாரித்துத் தருகிறோம்; அது உங்கள் உடலைப் பாதுகாக்கும்' எனக் கேட்டோம்.
அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ''எனக்கும், இந்த உலகத்துக்கும் என்ன உறவு உள்ளது? மரத்தின் நிழல் சற்று நேரம் இளைப்பாறி விட்டுச் செல்லக்கூடிய ஒரு பயணிக்கும், அந்த மரத்துக்கும் என்ன உறவு உள்ளதோ அது போன்ற உறவு தான் எனக்கும், இவ்வுலகத்துக்கும் உள்ளது''எனக் கூறி அதை நிராகரித்து விட்டார்கள். இதை அப்துல்லாஹ் (ரலி) அறிவிக்கிறார். திர்மிதி 2299.
ஆயிஷா(ரலி) அறிவித்தார்கள்.
பேரீச்சம் நாறினால் நிரப்பப்பட்ட பதனிடப்பட்ட தோலே இறைத்தூதர்(ஸல்) அவர்களின் படுக்கை விரிப்பாக இருந்தது புகாரி - 6456.
அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்கள் .
"அல்லாஹ் அனுப்பிய எந்த நபியும் ஆடு மேய்க்காமல் இருந்ததில்லை!' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்;
அப்போது நபித்தோழர்கள், 'நீங்களுமா?' என்று கேட்டார்கள்.
''ஆம்! மக்காவாசிகளின் சில கீராத் கூலிக்காக ஆடு மேய்ப்பவனாக நான் இருந்தேன்!" என்று நபி (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள். புகாரி - 2262
அபூ புர்தா(ரஹ்) அறிவித்தார்கள்
"ஆயிஷா (ரலி) எங்களிடம் ஒட்டுப் போட்ட (கம்பளி) ஆடை ஒன்றை எடுத்துக் காட்டி, 'இதை உடுத்திக் கொண்டிருக்கும்போது தான் நபி(ஸல்) அவர்கள் மரணமடைந்தார்கள்" என்று கூறினார்கள். புகாரி - 3108

நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 54
அண்ணலாரின் அறிவார்ந்த அணுகுமுறைகள் 10

நபிகள் நாயகம் ஸல் அவர்களின் நற்பண்புகள் குறித்து இறைவன் திருமறையில் "நபியே நீங்கள் மகத்தான நற்குணங்களை கொண்டிருக்கிறீர்கள்" என்று புகழ்ந்துறைக்கிறான்.
அப்படியானால் அந்த பண்புகள் உலகம் போற்றும் உயர் பண்புகள் என்பதில் சந்தேகமில்லை. அவைகளில் மனித நேயம், மன்னிக்கும் மாண்புகள், பிறர் நலன் நாடல், விரோதிகளிடமும் உபகாரமாக நடந்து கொள்ளல் என நற்குணங்களின் பட்டியல் நீண்டு கொண்டே செல்லும்.

இந்த பண்புகள் தான் நபிகள் நாயகம் ஸல் அவர்கள் குறுகிய காலத்தில் தனது கொள்கையை நிலைநிறுத்தி வெற்றி காண்பதற்கு காரணமாக அமைந்தது.

1.நபித்துவப் பட்டம் கிடைப்பதற்கு முன்பே நபிகள் நாயகம் (ஸல் ) அவர்களிடம் நிறைய நற்பண்புகள் குடிகொண்டிருந்தது.ஹஜ்ரத் கதீஜா ரலி அவர்கள் அதைத் தான் நபியவர்களுக்கு ஆறுதல் வார்த்தைகளாகக் கூறினார்கள்.

கதீஜா(ரலி) அவர்கள் “அவ்வாறு கூறாதீர்கள்; அல்லாஹ்வின் மீது ஆணையாக உங்களை ஒருபோதும் அல்லாஹ் இழிவுபடுத்தமாட்டான்; (ஏனெனில்) தாங்கள் உறவினர்களுடன் இணங்கி இருக்கிறீர்கள் (சிரமப்படுவோரின்) சுமைகளைத் தாங்கள் சுமந்து கொள்கிறீர்கள்; வறியவர்களுக்காக உழைக்கிறீர்கள்; விருந்தினர்களை உபசரிக்கிறீர்கள்; உண்மையான சோதனைகளில் (ஆட்பட்டோருக்கு) உதவி புரிகிறீர்கள்” என்றார்கள். (ஸஹீஹுல் புகாரி )

மேலும் நபிகள் நாயகம் ஸல் அவர்கள் உண்மை நபி என்பதற்கு ஆதாரமாக அல்லாஹ் அவர்களின் நபித்துவத்திற்கு முந்தைய வாழ்க்கையைத்தான் ஆதாரமாக கூறுகிறான்.

فَقَدْ لَبِثْتُ فِيكُمْ عُمُرًا مِنْ قَبْلِهِ ۚ أَفَلَا تَعْقِلُونَ

" நிச்சயமாக நாம் இதற்கு முன்னர் உங்களிடையே நீண்ட காலம் வசித்திருக்கிறேன் - இதை நீங்கள் விளங்கிக் கொள்ள வேண்டாமா?" என்று (நபியே!) நீர் கூறுவீராக"

(அல்குர்ஆன் 10:16)

..............................................................................................................

அல்லாஹ் திருமறையில் குறிப்பிடுகின்றான் :

... فَبِمَا رَحْمَةٍ مِنَ اللَّهِ لِنْتَ لَهُمْ ۖ وَلَوْ كُنْتَ فَظًّا غَلِيظَ الْقَلْبِ لَانْفَضُّوا مِنْ حَوْلِكَ

அல்லாஹ்வுடைய ரஹ்மத்தின் காரணமாகவே நீர் அவர்களிடம் மென்மையாக (கனிவாக) நடந்து கொள்கிறீர்;. (சொல்லில்) நீர் கடுகடுப்பானவராகவும், கடின சித்தமுடையவராகவும் இருந்திருப்பீரானால், அவர்கள் உம் சமூகத்தை விட்டும் ஓடிப்போயிருப்பார்கள்; (அல்குர்ஆன் 3:159)

2. தனக்கு தீங்கிழைத்தவர்களை மன்னிப்பது உயர் பண்பு தான் ஆனாலும் அவர்களை மன்னித்தது மட்டுமல்லாமல் அவர்களிடம் உபகாரமாக நடந்து கொள்வது மகத்தான பண்பு அந்த மகத்தானபண்புகளைத் தான் நபிகள் பெருமானார் ஸல் அவர்கள் கொடுக்கப் பட்டிருந்தார்கள்.

وَلَا تَسْتَوِي الْحَسَنَةُ وَلَا السَّيِّئَةُ ۚ ادْفَعْ بِالَّتِي هِيَ أَحْسَنُ فَإِذَا الَّذِي بَيْنَكَ وَبَيْنَهُ عَدَاوَةٌ كَأَنَّهُ وَلِيٌّ حَمِيمٌ

நன்மையும் தீமையும் சமமாக மாட்டா, நீங்கள் (தீமையை) நன்மையைக் கொண்டே தடுத்துக் கொள்வீராக! அப்பொழுது, யாருக்கும் உமக்கிடையே, பகைமை இருந்ததோ, அவர் உற்ற நண்பரே போல் ஆகிவிடுவார். (குர்ஆன் 41:34)

ஸுமாமா இப்னு உஸால் என்ற யமாமா தேசத்தின்

தலைவரை நபி (ஸல்) அவர்களின் குதிரைப் படை கைது செய்து வந்த போது நபிகளாரின் நற்பண்புகளும், மன்னிக்கும் மாண்புகளும் தான் அவர் இஸ்லாத்தை ஏற்க காரணமாக அமைந்தது.

4372. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்:

நபி(ஸல்) அவர்கள் “நஜ்த்” பகுதியை நோக்கி குதிரைப் படையொன்றை அனுப்பினார்கள்.

அந்தப் படையினர் “பனூ ஹனீஃபா” குலத்தைச் சேர்ந்த ஸுமாமா இப்னு உஸால் என்றழைக்கப்படும் மனிதர் ஒருவரைக் (கைது செய்து) கொண்டு வந்தார்கள். பள்ளிவாசலின் தூண்களில் ஒன்றில் அவரைக் கட்டிப் போட்டார்கள்.

நபி (ஸல்) அவர்கள் அவரிடம் வந்து “(உன் விஷயத்தில் நான் சொல்லப்போகும் முடிவைப் பற்றி) நீ என்ன கருதுகிறாய். ஸுமாமாவே ? ” என்று கேட்டார்கள்.

அவர் “நான் நல்லதே கருதுகிறேன். முஹம்மதே! நீங்கள் என்னைக் கொன்றால் இரத்தப்பழி வாங்க வேண்டிய ஒருவனையே கொள்கிறீர்கள். (என்னை மன்னித்து எனக்கு) நீங்கள் உபகாரம் செய்தால் நன்றி செய்யக் கூடிய

ஒருவனுக்கே உபகாரம் செய்கிறீர்கள். நீங்கள் செல்வத்தை விரும்பினால்,அதில் நீங்கள் விரும்புவதைக் கேளுங்கள்" என்று பதிலளித்தார்.
எனவே அவர் (மன்னிக்கப்பட்டு) விடப்பட்டார். மறு நாள் வந்தபோது அவரிடம் "ஸுமாமாவே! என்ன கருதுகிறாய்?" என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள்.
அதற்கு அவர் தங்களிடம் நான் (ஏற்கெனவே) கூறியது தான்: நீங்கள் உபகாரம் செய்தால் நன்றியுள்ளவனுக்கே உபகாரம் செய்கிறீர்கள்" என்றார். அவரை நபியவர்கள் (அன்றும்) விட்டுவிட்டார்கள்.
மறுநாளுக்கு அடுத்த நாள் வந்தபோது "நீ என்ன கருதுகிறாய்? ஸுமாமாவே!" என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள்.
அவர் "நான் ஏற்கெனவே தங்களிடம் சொன்னதைத் தான் கருதுகிறேன்" என்று பதிலளித்தார்.
நபி(ஸல்) அவர்கள் "ஸுமாமாவை அவிழ்த்துவிடுங்கள்" என்று கூறினார்கள்.
உடனே ஸுமாமா பள்ளிவாசலுக்கு அருகிலிருந்த பேரீச்சந் தோட்டத்திற்குச் சென்று குளித்துவிட்டு, பள்ளிவாசலுக்கு வந்து "வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறெவருமில்லை" என்று நான் உறுதி கூறுகிறேன். மேலும் "முஹம்மது இறைத்தூதர்" என்றும் நான் உறுதி கூறுகிறேன்" என்று மொழிந்துவிட்டு.., "முஹம்மதே! அல்லாஹ்வின் மீதாணையாக! (இன்றுவரை) உங்கள் முகத்தை விட என்னிடம் வெறுப்புக்குரிய முகம் பூமியில் வேறெதுவும் இருக்கவில்லை. ஆனால் (இன்று) உங்களுடைய முகம் எல்லா முகங்களிலும் எனக்கு மிகவும் பிரியமானதாக ஆகிவிட்டது.

அல்லாஹ்வின் மீதாணையாக! (இன்றுவரை) உங்கள் மார்க்கத்தை விட என் வெறுப்புக்குரிய மார்க்கம் வேறெதுவும் இருக்கவில்லை. ஆனால் இன்று மார்க்கங்களிலேயே எனக்கு மிகவும் பிரியமானதாக உங்கள் மார்க்கம் ஆகிவிட்டது.
அல்லாஹ்வின் மீதாணையாக! உங்கள் ஊரைவிட எனக்கு வெறுப்பான ஊர் வேறெதுவும் இருந்திருக்கவில்லை. ஆனால் இப்போது உங்கள் ஊரே எனக்கு மிகவும் பிரியமான ஊராகி விட்டது. உங்கள் குதிரைப்படையினர் என்னைப் பிடித்துக் கொண்டு விட்டார்கள்" என்று சொல்லி விட்டு "மேலும் நான் இப்போது (மக்காவிற்குச் சென்று) உம்ரா செய்ய விரும்புகிறேன். நீங்கள் என்ன கருதுகிறீர்கள்?" என்று கேட்டார்.
இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அவருக்கு நற்செய்தி கூறி உம்ரா செய்ய அவருக்கு அனுமதியளித்தார்கள்.
அவர் மக்காவிற்குச் சென்றபோது (அங்கே) ஒருவர் அவரிடம் "நீ மதம் மாறிவிட்டாயா?" என்று கேட்டதற்கு ஸுமாமா (ரலி) "இல்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! (நான் மதம் மாறவில்லை.) மாறாக இறைத்தூதர் முஹம்மத்(ஸல்) அவர்களுடன் இணைந்து இறைவனுக்குக் கீழ்ப்படியும் முஸ்லிமாக மாறிவிட்டேன்.
அல்லாஹ்வின் மீதாணையாக! நபி (ஸல்) அவர்கள் அனுமதி தரும்வரை, (என்னுடைய நாடான) யமாமாவிலிருந்து ஒரு கோதுமை தானியம் கூட (மக்காவாசிகளான) உங்களுக்கு வராது" என்று கூறினார்கள். (ஷஹீஹ் புகாரி)

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 55

(ஏற்றுக் கொள்ளப்படும் பிரார்த்தனைகள் )

ஒரு மனிதர் தனது தொழுகையில் அல்லாஹ்வை (புகழ்ந்து) கண்ணியப்படுத்தாமலும்,நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் மீது ஸலவாத்துச் சொல்லாமலும் பிரார்த்தனை செய்ததை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செவியுற்றார்கள்.
இவர் அவசரப்பட்டு விட்டார் என்று கூறி அம்மனிதரை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அழைத்தார்கள். அவரிடம் அல்லது மற்றவரிடம் உங்களில் ஒருவர் தொழு(கையில் பிரார்த்தித்)தால் முதலில் மாண்பும் வலிமையும் மிக்க தனது இறைவனை அவர் புகழ்ந்து கண்ணியப்படுத்தட்டும்.

பிறகு (உங்கள்) நபியின் மீது ஸலவாத்துச் சொல்லட்டும். இதற்குப் பிறகு அவர் விரும்பியதை வேண்டலாம் என்று கூறினார்கள். அறிவிப்பவர் : ஃபளாலா பின் உபைத் (ரலி) நூல் : அபூதாவுத் (1266) திர்மிதீ (3399)
நபி (ஸல்) அவர்கள் தொழுகையிலிருந்து திரும்பிவிட்டால் “மும்முறை” أَسْتَغْفِرُ الله அஸ்தஃபிருல்லாஹ்” என்று (கூறி) பாவமன்னிப்புத் தேடுவார்கள்.
(பின்னர்) اللَّهُمَّ أَنْتَ السَّلاَمُ وَ مِنْكَ السَّلاَمُ تَبَارَكْتَ يَا ذَا الْجَلاَلِ وَ الإِكْرَم“அல்லாஹும்ம அந்த்தஸ்ஸலாம் வமின்கஸ் ஸலாம் தபாரக்த்த யாதல் ஜலாலி வல்இக்ராம்” என்று ஓதுவார்கள். என்று ஸவ்பான் (ரழி) அறிவித்துள்ளார்கள். (நூல்:முஸ்லிம், திர்மிதீ, இப்னுமாஜ்ஜா, அஹ்மத்)
பொருள்: "யா அல்லாஹ்! நீயே சாந்தியானவன். மேலும் உன்னிடமிருந்தே சாந்தி பிறக்கிறது கண்ணியமும், மகத்துவமும் மிக்கவனாகிய நீயே மிக மேலானவனாகும்.

ஒரு மனிதரைப் பற்றிகுறிப்பிட்டார்கள்.”அவனோ நீண்ட தூரம் பயணத்தில் இருக்கின்றான். அவனுடைய தலை புழுதிப் படிந்துப் பரட்டையாக இருக்கின்றது. அவன் வானத்தின் பால் கைகளை உயர்த்தி, எனது இறைவனே! எனது இறைவனே! என்று அழைக்கின்றான். அவனது ஆடை, அவனது உணவு, அவனது குடிப்பு ஆகிய அனைத்தும் ஹராமாக இருக்கின்றது. அவனே ஹராமில் மூழ்கி விட்டான். இந்த நிலையில் அவனது துஆ எவ்வாறு ஏற்றுக் கொள்ளப்படும்?” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.அபூஹுரைரா (ரலி) முஸ்லிம் 1844
இந்த ஒழுங்கு முறைகள் அனைத்தையும் ஒருவர் கடைப்பிடித்து, பிரார்த்தனை செய்கிறார். இருந்தும் அவரது பிரார்த்தனை அங்கீகரிக்கப்படவில்லை என்றால் அதனால் அவர் நம்பிக்கை இழந்து விடக் கூடாது. தமது பிரார்த்தனையை இறைவன் ஏற்றுக் கொள்ளவில்லை என்று எண்ணி விடக் கூடாது.

இறைவன் தன் அடியார்கள் மீது மிகவும் கருணையுள்ளவன். அந்த அடியான் வெளித் தோற்றத்தை வைத்துக் கொண்டு அவனுடைய அறியாமையினால் தனக்குத் தீங்கு தரக்கூடியதைக் கேட்பான்.
உதாரணமாக, தனக்கு நிறைய செல்வம் வேண்டும் என்று பிரார்த்தனை செய்வான். ஆனால் அந்தச் செல்வம் அவனை இறை நிராகரிப்புக்கு இழுத்துச் செல்லும் என்றிருந்தால், அதைக் கொடுக்காமல் அதைவிடச் சிறந்ததை இறைவன் கொடுப்பான்.
ஒருவன் தனக்கு ஏற்படவுள்ள ஆபத்தை உணராமல் தனது தேவையைக் கேட்கின்றான். அனைத்தையும் அறிந்த இறைவன் அதைக் கொடுப்பதற்குப் பதிலாக அவனுக்கு வரவிருக்கும் ஆபத்தை நீக்குகின்றான்.
அதுவும் இல்லையெனில் அவன் கேட்டதைக் கொடுக்காமல் அதற்குப் பகரமாக மறுமையில் அவனது நிலையை உயர்த்துவான்.
“உறவைத் துண்டிக்காமலும் பாவமான காரியத்தில் அல்லாமலும் எந்த ஒரு பிரார்த்தனையை ஒரு முஸ்லிம் செய்தாலும் அவரது அந்தப் பிரார்த்தனைக்கு விரைவாகப் பதில் அளிக்கப்படும். அல்லது அதை அல்லாஹ் மறுமையில் ஒரு சேமிப்பாக ஆக்குகின்றான்.
அல்லது அந்தப் பிரார்த்தனைக்குத் தக்கவாறு அவனது பாவத்தை அழித்து அவனை மன்னிக்கின்றான். இவ்வாறு மூன்று விதங்களில் ஏதேனும் ஒரு விதத்தில்அல்லாஹ் பதிலளிக்கின்றான்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
“நாங்கள்அதிகமாகப் பிரார்த்தனை செய்தால் என்ன ?” என்று நபித்தோழர்கள் கேட்டனர்.
அதற்கு”அல்லாஹ் அதிகமாக்குவான்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.அபூஸயீத் (ரலி) அஹ்மத் 11150
“உங்களுடைய இறைவன் சங்கையானவன்.அவனுடைய அடியார் தனது கையை அவன் பக்கம் உயர்த்தும் போது அந்த இரு கைகளையும் வெறுமனே அனுப்புவதற்கு வெட்கப்படுகிறான் " என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். ஸல்மான் (ரலி) இப்னு மாஜா 3911

பாவமானதையும், உறவைத் துண்டிக்கும் விதத்திலும் இல்லாத எல்லா துஆக்களும் ஒப்புக் கொள்ளப்படும். என்றாலும், சில குறிப்பிட்ட நேரங்களில் செய்யப்படும் பிரார்த்தனைகள் மற்ற நேரங்களில் செய்யப்படும் பிரார்த்தனைகளை விட அதிகமதிகம் ஏற்றுக் கொள்ளப்படும். எனவே அந்தச் சந்தர்ப்பங்களையும் நாம் பயன்படுத்திக் கொள்ளவேண்டும்.
கடமையான ஒவ்வொரு நேரத் தொழுகையையும் நிறைவேற்றிய பின் கேட்கப்படும் துஆ ஏற்றுக் கொள்ளப்படும். “எந்தப் பிரார்த்தனை செவியேற்கப்படும்?” என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது.அதற்கு நபி (ஸல்) அவர்கள், “இரவில் கடைசியிலும் கடமையாக்கப்பட்ட தொழுகைக்குப் பின்னரும் கேட்கும் பிரார்த்தனை ஆகும்” என்று பதிலளித்தார்கள். அபூஉமாமா (ரலி) திர்மிதீ 3499

ஓர் அடியான் அல்லாஹ்விடம் மிக நெருக்கமாக இருக்கும் நேரம் ஸஜ்தாவாகும்.எனவே இந்தச் சந்தர்ப்பத்தில் கேட்கப்படும் பிரார்த்தனை அங்கீகரிக்கப்படுகின்றது.
“ஸஜ்தாவில் இருக்கும் நிலையில் ஓர் அடியான் தன்னுடைய இறைவனை நெருங்குகின்றான். எனவே ஸஜ்தாவில்துஆவை அதிகப்படுத்துங்கள்” என்று நபி (ஸல்)அவர்கள் கூறினார்கள்.
அபூஹுரைரா (ரலி) முஸ்லிம் 482

இரவின் கடைசிப் பகுதியில் செய்யும் துஆவும் பதிலளிக்கப்படும் துஆக்களில் ஒன்று.எனவே அந்த நேரத்திலும் அதிகமாகப் பிரார்த்திக்க வேண்டும்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
இரவை மூன்றாகப் பிரித்து, கடைசிப் பகுதியில் இறைவன் முதல் வானத்திற்கு தினமும் இறங்குகின்றான். “என்னிடம் யாரேனும் பிரார்த்தித்தால் அதை நான் ஏற்கின்றேன்.என்னிடம் யாரேனும் கேட்டால் நான் அதை ஏற்கின்றேன். என்னிடம் யாரேனும் மன்னிப்பு கேட்டால் நான் மன்னிக்கிறேன்” என்று கூறுகின்றான்.
அபூஹுரைரா (ரலி) புகாரி 6321

நாம் யார் மீது அதிகப் பிரியம் வைத்திருக்கிறோமோ அவர்களுக்காகப் பிரார்த்தனை செய்ய வேண்டும் என்று நினைப்போம். அப்போது அவர்கள் முன்னிலையிலேயே பிரார்த்திப்பதை விட அவர்களுக்குத் தெரியாமல் மறைமுகமாகப் பிரார்த்திக்கும் போது அது கட்டாயம் ஏற்றுக் கொள்ளப்படும்.
நான் ஷாமுக்கு வந்து அபூதல்ஹாவிடம், அவரது வீட்டிற்குச் சென்றேன். அவரை நான் காணவில்லை. உம்மு தல்ஹாவை நான் கண்டேன். அப்போது அவர், “இந்த வருடம் நீங்கள் ஹஜ் செய்ய நாடுகின்றீரா?” என்று கேட்டார். அதற்கு நான், ஆம் என்றேன்.
அப்போது அவர், “நீங்கள் எங்களது நன்மைக்காகப் பிரார்த்தனை செய்யுங்கள்” என்றுகூறிவிட்டு, பின்வருமாறு கூறினார் :
“ஒரு முஃமினான மனிதர் தன்னுடைய சகோதரனுக்காக மறைமுகமாகப் பிரார்த்தித்தால் அவருக்கென்று சாட்டப்பட்டுள்ள மலக்கு பதிலளிக்கின்றார். அவர் தன்னுடைய சகோதரரின் நன்மைக்குப் பிரார்த்தனை செய்யும் போதெல்லாம் அவருக்காக சாட்டப்பட்ட மலக்கு, “ஆமீன், உங்களுக்கும் அவ்வாறே ஆகட்டும்’ என்று கூறுவார்” என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.ஸவ்பான் (ரலி) முஸ்லிம் 2733
தந்தை தன் பிள்ளைகளுக்காகச் செய்யும் துஆவும் அதிகமாக ஒப்புக்கொள்ளப்படும்.இன்றுள்ள பிள்ளைகள் பெற்றோரை ஒரு தொல்லை எனக் கருதி சரியாகக்கவனிக்காமல் விட்டு விடுகின்றார்கள்.
ஆனால் பிள்ளைகள் கவனிக்காமல் விட்டாலும் பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளுக்காகப் பிரார்த்தனை செய்து கொண்டே இருப்பார்கள்.தங்கள் பிள்ளைகள் நல்ல முறையில் கவனித்தால் இன்னும் அதிகமாகவேஅவர்களுக்காகப் பிரார்த்தனை செய்வார்கள்.

எனவே பிள்ளைகள் பெற்றோரிடத்தில் நல்ல முறையில் நடந்து கொண்டு பெற்றோரின் துஆவைப் பெற வேண்டும்

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 56

(அண்ணலாரின் அறிவார்ந்த அணுகுமுறைகள் 11 )

மக்கா வெற்றியின் போது ....

காலம் காலமாக தனக்கு தீங்கிழைத்த காஃபிர்களின் தலைவர் அபூ சுஃப்யான், மற்றும் மக்கா காஃபிர்களுக்கு பொது மன்னிப்பு வழங்கியது வரலாற்றுச் சிறப்புமிக்க நிகழ்வாக நபிகளாரின் நற்பண்புகளுக்கு மகுடமாக திகழ்கிறது.

ஹிஜ்ரி எட்டாம் ஆண்டு ரமலான் பிறை 22- இல் வெள்ளிக்கிழமை மக்காவில் நுழைந்தார்கள்.

4280. உர்வா இப்னு ஸுபைர் (ரஹ்) அறிவித்தார்.

மக்கா வெற்றி கொள்ளப்பட்ட ஆண்டில் (அதனை வெற்றி கொள்வதற்காக மதீனாவிலிருந்து) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பயணம் மேற்கொண்டபோது, அவர்கள் வருகிற செய்தி (மக்கா) குறைஷிகளுக்கு எட்டியது. .

உடனே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பற்றிய செய்தியை (உளவு) அறிவதற்காக அபூ சுஃப்யான் இப்னு ஹர்ப் ஹகீம் இப்னு ஹிஸாம் புதைல் இப்னு வர்கா ஆகியோர் (மக்காவிலிருந்து) புறப்பட்டனர். .

அவர்கள் பயணம் மேற்கொண்டு “மர்ருழ் ழஹ்ரான்” என்னும் இடத்திற்கு வந்து சேர்ந்தபோது (அங்கே பல இடங்களில் மூடப்பட்டிருந்த) நெருப்புகளைக் கண்டனர். அவை அரஃபா(வில் ஹாஜிகள் மூட்டும்) நெருப்புகள் போன்றிருந்தன.

அப்போது அபூ சுஃப்யான் “இது என்ன நெருப்பு? இது அரஃபா நெருப்பைப் போன்றே இருக்கிறதே” என்று கேட்டதற்கு புதைல் இப்னு வர்கா “இது (“குபா”வில் குடியிருக்கும் “குஸாஆ” எனப்படும்) பனூஅம்ர் குலத்தாரின் நெருப்புகள்” என்று கூறினார்.

உடனே அபூ சுஃப்யான் (பனூ) அம்ர் குலத்தவரின் எண்ணிக்கை இதை விட மிகக் குறைவாகும். (எனவே அவர்களின் நெருப்புகளாக இருக்க வாய்ப்பில்லை)” என்று கூறினார்.

அப்போது அவர்கள் மூவரையும் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காவலர்களில் சிலர் பார்த்துவிட்டனர். உடனே அவர்களை அடைந்து அவர்களைப் பிடித்து (கைது செய்து) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கொண்டு வந்தனர். பின்பு அபூ சுஃப்யான் இஸ்லாத்தை ஏற்றார். அதற்குப் பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்கள். (மக்காவை நோக்கி முன்னேறிச்) சென்றபோது, அப்பாஸ்(ரலி) அவர்களிடம் “குதிரைப் படை செல்லும்போது நெரிசல் ஏற்படக் கூடிய (குறுகலான) இடத்தில் அபூ சுஃப்யானை நிறுத்திவையுங்கள். அவர் முஸ்லிம்களைப் பார்க்கட்டும். (அவர்களின் படை பலத்தைப் புரிந்து கொள்ளட்டும்)” என்று கூறினார்கள்.

(அவ்வாறே) அப்பாஸ்(ரலி) அவரை (அந்த இடத்தில்) நிறுத்திவைத்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்களுடன் அனைத்து குலத்தாரின் படைகளும் ஒவ்வொன்றாக அபூ சுஃப்யானைக் கடந்து செல்லத் தொடங்கின. அவரை ஒரு படை கடந்து சென்றவுடன் “அப்பாஸே! இவர்கள் யார்?” என்று அபூ சுஃப்யான் கேட்டதற்கு அப்பாஸ்(ரலி) “இவர்கள் ஙிஃபாரீ குலத்தினர்” என்று பதிலளித்தார்கள்.

(உடனே) “எனக்கும் ஙிஃபார் குலத்தாருக்கும் என்ன சம்பந்தம்? (எங்களுக்கிடையில் பூசலோ மோதலோ இல்லையே!)” என்று அபூ சுஃப்யான் கூறினார். பிறகு ஜுஹைனா குலத்தார் அவரைக் கடந்து சென்றனர். அப்போது அபூ சுஃப்யான் முன் போன்றே கேட்டார்.

பிறகு (அவரைக் கடந்து) ஸஅத் இப்னு ஹுதைம் குலத்தினர் சென்றனர். அப்போதும் அவ்வாறே அபூ சுஃப்யான் கேட்டார். (பிறகு) சுலைம் குலத்தினர் சென்றனர். முன்பு போன்றே அபூ சுஃப்யான் கேட்டார். (அப்பாஸ் - ரலி அவர்களும் முன்பு போன்றே பதிலளித்தார்கள்)
கடைசியில் ஒரு (பெரிய) படை முன்னோக்கி வந்தது. அதைப் போன்ற (பெரும்) படையை அபூ சுஃப்யான் பார்த்திருக்கவில்லை. “இவர்கள் யார்?” என்று அபூ சுஃப்யான் கேட்க “இவர்கள் தாம் அன்சாரிகள். ஸஅத் இப்னு உபாதா இவர்களின் தலைவர். அவருடன் தான் (அன்சாரிகளின்) கொடியிருக்கிறது” என்று அப்பாஸ்(ரலி) பதிலளித்தார்கள்.
அப்போது ஸஅத் இப்னு உபாதா(ரலி) “அபூ சுஃப்யானே! இன்று (தப்பிக்க முடியாத மாபெரும்) யுத்த நாளாகும். இன்று கஅபாவி(ன் புனித எல்லையி)னுள்ளே கூட யுத்தம் அனுமதிக்கப்படும்” என்று (உணர்ச்சி வசப்பட்டுக்) கூறினார்கள்.
அதற்கு அபூ சுஃப்யான் “அப்பாஸே! அழிவு நாளில் இது மிக நல்ல நாள் (குறைஷிகளுக்கு ஆபத்தே; என்றாலும் நீங்கள் கருணை காட்டுவீர்கள் என்ற நம்பிக்கை உண்டு)” என்று கூறினார்.
பிறகு ஒரு படை வந்தது. அது (இதுவரை வந்த) படைகளிலேயே மிகவும் சிறியதாக இருந்தது. உத்தம நபி (ஸல்) அவர்கள் தூத்துவாவை அடைந்ததும், ஏமன் நாட்டு சிவப்புநிற தலைப்பாகையை அணிந்து வாளொன்று இடையில் தொங்க மக்கா சமவெளியை அடைந்தார்கள்.

வலது புற அணிக்கு ஜுபைர் பின் அவாம் (ரலி) தென்புற அணிக்கு காலித்பின் வலீது (ரலி) மேற்புற அணிக்கு ஸஅத் பின் உபைதா (ரலி) கிழக்கு புற அணிக்கு அபூ உபைதா (ரலி) ஆகியோரைத் தளபதிகளாக நியமனம் செய்தார்கள்.
படை வீரர்கள் உருவிய வாளுடன் செல்லாதீர்கள். வழியில் யாரையும் தாக்காதீர்கள். பயந்து ஓடுவோரை விரட்டாதீர்கள் என்று அறிவுறுத்தினார்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள்.
அலி (ரலி) அவர்கள் குதிரை மீது அமர்ந்து இஸ்லாமிய கொடியைத் தாங்கி முன்னே சென்றார்கள். அபூபக்கர் (ரலி) அவர்கள் வலது புறமும் உஸ்ஸத் (ரலி) அவர்கள் இடது புறமும் ஒட்டகங்களில் அமர்ந்து சென்றார்கள்.
உஸாமா பின் ஜைது (ரலி) அவர்கள் குதிரையின் பின்னால் வர நடுவில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒட்டகத்தில் அமர்ந்து அவர்களின் தாடி சேணத்தில் பட இறைவனைச் சிரம் பணிந்து ஜபல் ஹிந்த் குன்றைச் சுற்றி செல்லும் குறுக்குப் பாதை வழியாக சென்றார்கள் .

அபூ சுஃப்யானைக் கடந்து இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சென்றபோது அவர் (இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம்) “ஸஅத் இப்னு உபாதா என்ன கூறினார் என்பது உங்களுக்குத் தெரியாதா?” என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள் “அவர் என்ன கூறினார்?” என்று கேட்டார்கள். இப்படி... இப்படி... எல்லாம் கூறினார்” என்று அபூ சுஃப்யான் (விவரித்துச்) கூறினார்.
அப்போது நபி(ஸல்) அவர்கள் “உண்மைக்குப் புறம்பானதை ஸஅத் கூறிவிட்டார்” என்று சொல்லிவிட்டு “மாறாக இந்த நாள் இறையில்லம் கஅபாவை அல்லாஹ் கண்ணியப்படுத்தும் நாள். கஅபாவிற்குத் திரை போர்த்தப்படும் (முக்கியமான) நாள்” என்று கூறினார்கள். (ஷஹீஹ் புகாரி )

மக்காவை வெற்றி கொள்வதற்காக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் புறப்பட்டு செல்லும் வழியில் அபூ சுஃப்யான் இஸ்லாத்தை ஏற்ற போது ஹஜ்ரத் அப்பாஸ் (ரலி) அவர்கள் சொன்னார்கள் "அல்லாஹ்வின் திருத்தூதரே! அபூ சுஃப்யான் மக்காவில் எவ்வளவு அந்தஸ்து உள்ளவர் என்பது தங்களுக்கு தெரியும் எனவே அவர் மனம் குளிரும் படியாக சில வார்த்தைகளை சொல்லுங்கள்" என்று கேட்டுக் கொண்ட போது...
நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சொன்னார்கள் : "யாரெல்லாம் அபூ சுஃப்யான் உடைய வீட்டில் நுழைந்து கொண்டார்களோ அவர்கள் பாதுகாப்புப் பெற்றார்கள். உடனே அபூ சுஃப்யான் கூறினார்.

"நபியே அபூ சுஃப்யானின் வீடு எல்லா மக்காவாசிகளுக்கும் போதுமானதாக இல்லையே!"
நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "யாரெல்லாம் மஸ்ஜிதுல் ஹராமில் நுழைந்து கொண்டார்களோ அவர்களும் பாதுகாப்புப் பெற்றார்கள்.
அபூ சுஃப்யான் கூறினார் : ஹரமும் எல்லா மக்காவாசிகளுக்கும் போதுமானதாக இல்லையே!
நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் மேலும் கூறினார்கள்: "அவரவர் வீட்டினுல் உள் தாழிட்டு இருப்பவர்களும் பாதுகாப்பு பெற்றார்கள். அபூ சுஃப்யான் இதைக் கேட்டு மகிழ்ச்சியோடு சொன்னார் உங்களைப் போன்ற நற்குணமுள்ள மனிதரை நான் என் வாழ் நாளில் சந்தித்ததே இல்லை.
(நூல் துஹ்ஃபதுல் காரீ ஷரஹே புகாரி)
இந்த வார்த்தை யாரிடமிருந்து வெளிப்படுகிறது நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை ஊரை விட்டு துரத்தி சுமார் கால் நூற்றாண்டு காலம் அவர்களை எதிர்த்து போர் செய்த கூட்டத்தின் தலைவரிடமிருந்து ....

## லைலத்துல் கத்ர் என்ற ஓர் இரவின் கனமான பொழுதுகள்

காலம்...இப்பூமியெங்கும் ஒரே மாதிரியாக இருக்கிறதா ? இல்லை. அமெரிக்காவில் இரவாகவும் அதே நேரம் இந்தியாவில் பகலாகவும் இருக்கிறது !
பூமியைத் தாண்டி பிரபஞ்ச வெளியில் காலம் ஒரே மாதிரியாக இருக்கிறதா ?
அதுவும் இல்லவே இல்லை
நம் பூமி சூரியனை 365 நாட்களில் சுற்றி முடிக்கிறது. இதை "ஒரு வருடம் " என்கிறோம் .
இதே சூரியனை வியாழன் கிரகம் 28 வருடத்தில் சுற்றி முடிகின்றது. இதை வியாழன் கிரக ஒரு வருடம் என்கிறார்கள் வியாழன் கிரகத்தில் மக்கள் வாழ்வதாக இருந்தால் 28 வருடமானால்தான் ஒரு வயது கூடும் .
...ஆக பிரபஞ்சம் எங்கும் காலம் ஒரே மாதிரியாக எங்குமே இல்லை இடத்திற்கு இடம் அதிகமாகவும், மிக அதிகமாகவும் மாறிக்கொண்டே இருக்கிறது.

குர்ஆனில் இந்த கால வேறுபாடுகள் குறித்து..
" வானத்தில் இருந்து பூமி வரையிலும் உள்ளது எல்லா காரியங்களையும் அவனே ஒழுங்குப் படுத்துகின்றான் ஒவ்வொன்றின் முடிவும் ஒரு நாளன்று அவனிடமே சென்று விடும். அந்த ஒரு நாள் நீங்கள் எண்ணுகின்ற உங்கள் கணக்கின்படி 1000 ஆண்டுகளுக்குச் சமமாகும்"குர்ஆன் (32 : 05 )

"அந்நாளில் மலக்குகளும் ஜிப்ரீலும் அவனிடம் போய்ச் சேருவார்கள் அந்நாள் 50 ஆயிரம் ஆண்டுகளுக்குச் சமமாக இருக்கும் " குர்ஆன் ( 70 : 04 )
குர்ஆன் பைத்துல் இஜ்ஜத் என்கிற யாருமே நெருங்க முடியாத
7- வது வானத்தில் இருந்து முதல் வானத்திற்கு அல்லாஹ்வால் இறக்கப்படுகிறது !
ஆக காலம் 7- வானத்தில் ஒரு காலமும், முதல் வானத்தில் ஒரு காலமும் இருக்கும் .
மேலும் ஜிப்ரீல் (அலை) போன்ற மலக்குமார்கள் வான எல்லையான சித்ரத்தில் முன்தஹாவில் உள்ளவர்கள் இங்கு வேறு ஒரு கால அளவு இருக்கும் .

குர்ஆனை 7-வது வானத்தில் இருந்து இறக்கும் போது பூமி வெறும் 365 நாட்களைக் சுற்றி வரக்கூடிய குறைந்த காலத்தை கொண்ட பலஹீனமாக கால கட்டமைப்பைக் கொண்ட அமைப்பாக இருக்கலாம். அந்த பலஹீனமான காலக் கட்டமைப்பைக் கொண்ட பூமியில் பலமான இறை வேதம் இறங்கினால் ஒரு சமயம் பூமி குடை சாய்ந்து விடலாம்.

இந்த பிரபஞ்சவெளியில் எங்கோ ஒரு இடத்தை 1000 வருடங்களுக்கு சமமான ஒரு நாளைக் கொண்டதாகவும் , இன்னொரு இடத்தை 50 ஆயிரம் வருடங்களுக்கு சமமான ஒரு நாளைக் கொண்டதாகவும் படைத்திற்கும் இறைவன், பளுவான வேதத்தைக் கொண்டு வரும் கோடான கோடி மலக்குமார்கள் இறங்கும் ஓர் இரவுப் பொழுதை பூமியில் கனமான பொழுதாக #தற்காலிகமாக மாற்றும் அந்த திட்டத்திற்கு "லைலத்துல் கத்ர் " என்று பெயர் வைத்திருக்கலாம் !

மேலும் குர்ஆன் பளுவான வேதம்தான். அப்படித்தான் ஒரு முறை குர்ஆன் வஹி வரும் போது நபி (ஸல் ) அவர்கள் ஒட்டகையில் இருந்து பயணிக்கும் போது,குர்ஆன் வஹியின் பளு தாங்காமல் ஒட்டகம் காலை விரித்து உட்கார்ந்து கொண்டதாக அறிந்துள்ளோம்.

اِنَّاۤ اَنْزَلْنٰهُ فِىْ لَيْلَةِ الْقَدْرِ

நிச்சயமாக நாம் அதை (குர்ஆனை) கண்ணியமிக்க (லைலத்துல் கத்ர்) என்ற இரவில் இறக்கினோம்.
وَمَاۤ اَدْرٰٮكَ مَا لَيْلَةُ الْقَدْرِ

மேலும் கண்ணியமிக்க இரவு என்ன என்பதை உமக்கு அறிவித்தது எது?
لَيْلَةُ الْقَدْرِ ۙ خَيْرٌ مِّنْ اَلْفِ شَهْرٍ

கண்ணியமிக்க (அந்த) இரவு ஆயிரம் மாதங்களை விட மிக்க மேலானதாகும்.
تَنَزَّلُ الْمَلٰٓٮِٕكَةُ وَالرُّوْحُ فِيْهَا بِاِذْنِ رَبِّهِمْ مِّنْ كُلِّ اَمْرٍ ۛۙ

அதில் மலக்குகளும், ஆன்மாவும் (ஜிப்ரீலும்) தம் இறைவனின் கட்டளையின் படி (நடைபெற வேண்டிய) சகல காரியங்களுடன் இறங்குகின்றனர்.
سَلٰمٌ ۛهِىَ حَتّٰى مَطْلَعِ الْفَجْرِ

சாந்தி (நிலவியிருக்கும்); அது விடியற்காலை உதயமாகும் வரை இருக்கும். (அல்குர்ஆன் : 97:1_ 5)

எனவே 7-வானத்தில் இஜ்ஜத் என்ற உயர்வான இடத்தில் இருந்து பூமிக்கு பளுவான குர்ஆன் இறக்கும் போது, அதன் பளுவை தாங்கிக் கொள்ள ஒரே ஒரு நாளின் ஓர் இரவுப் பொழுதை 1000 மாதங்கள் ( 83 வருடம் 4 மாதங்கள் ) கொண்டதாக மிகப்பலமானதாக கனமானதாக அல்லாஹ் ஆக்குவதற்கு லைலத்துல் கத்ர் என்ற அந்த ஓர் இரவை (83 வருடம் 4 மாதங்கள் ) கொண்ட மிகவும் கனப் பொழுதாக தற்காலிகமாக தேர்ந்தெடுத்து இருக்கலாம்.

எனவே அந்த லைலத்துல் கத்ர் என்ற அந்த ஓர் இரவில் செய்யப்படும் அமல்களின் பலன்களும், மிகவும் பளுவானதாக மீஸான் தராசின் தட்டை மிகவும் தாழ்த்தக்கூடியதாக இருக்கலாம்.

லைலத்துல் கத்ர் ஓர் இரவுப்பொழுது 1000 மாதங்களுக்கு சமமானதாக வைத்துக் கொள்வோம் .

அதன் பகல் பொழுதையும் 1000 மாதங்களுக்குச் சமமானதாக வைத்துக் கொள்வோம்

ஆக லைலத்துல் கத்ர் ஒரு நாள் என்பது 2000 மாதங்களுக்குச் சமமானதாக இருக்கும்

ஒரு நாளைக்கு 2000 மாதங்கள் என்றால், பூமி 365 நாட்களைக் கொண்டது .

365 x 2000 மாதங்கள் = 7,30,000 மாதங்கள்

அதாவது 7,30,000 / ஒரு வருடத்திற்கு 12 மாதங்கள்

7,30,000 / 12 = 60 ,833 வருடங்கள்.

மலக்குமார்கள் புறப்பட்டு வருவது 50,000 வருடங்களுக்குச் சமமான ஒரு நாளைக் கொண்ட கிரகத்தில் என்றால் , வந்து சேரும் நம் பூமி லைலத்துல் கத்ர் கணக்கின்படி 60,833 வருடங்கள் கொண்டது.

அண்ணலம் பெருமானார் நபி முஸ்தாபா ரசூலை கரீம் ஸல்லல்லாஹு அலா முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அன்னவர்களுக்காகவும் , அவர்களுக்கு இறக்கியருளப் பெற்ற மாட்சிப் பொருந்திய திருக்குர்ஆனுக்காகவும் ஓர் இரவுப் பொழுதை 1000 வருடங்களுக்கு சமமானதாக லைலத்துல் கத்ராக ஆக்கி அருள் புரிந்துள்ளான் என்பதாக இருக்கலாம்.

யார் அறிவார்கள் அவனைத் தவிர !

Rahmath Rajakumaran

லைலத்துல் கத்ர் ஓர் இரவுப்பொழுது 1000 மாதங்களுக்கு சமமானதாக வைத்துக் கொள்வோம் .
அதன் பகல் பொழுதையும் 1000 மாதங்களுக்குச் சமமானதாக வைத்துக் கொள்வோம்
ஆக லைலத்துல் கத்ர் ஒரு நாள் என்பது 2000 மாதங்களுக்குச் சமமானதாக இருக்கும்
ஒரு நாளைக்கு 2000 மாதங்கள் என்றால், பூமி 365 நாட்களைக் கொண்டது .
365 x 2000 மாதங்கள் = 7,30,000 மாதங்கள்
அதாவது 7,30,000 / ஒரு வருடத்திற்கு 12 மாதங்கள்
7,30,000 / 12 = 60 ,833 வருடங்கள்.
மலக்குமார்கள் புறப்பட்டு வருவது 50,000 வருடங்களுக்குச் சமமான ஒரு நாளைக் கொண்ட கிரகத்தில் என்றால் , வந்து சேரும் நம் பூமி லைலத்துல் கத்ர் கணக்கின்படி 60,833 வருடங்கள் கொண்டது.
அண்ணலம் பெருமானார் நபி முஸ்தாபா ரசூலை கரீம் ஸல்லல்லாஹு அலா முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அன்னவர்களுக்காகவும் , அவர்களுக்கு இறக்கியருளப் பெற்ற மாட்சிப் பொருந்திய திருக்குர்ஆனுக்காகவும் ஓர் இரவுப் பொழுதை 1000 வருடங்களுக்கு சமமானதாக லைலத்துல் கத்ராக ஆக்கி அருள் புரிந்துள்ளான் என்பதாக இருக்கலாம்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 57

(பல்வேறு நிலைகளில் பயஹம்பர் நபியவர்கள் 1)
நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அமரும் போது பல முறைகளைக் கடைப்பிடித்து உள்ளார்கள்.
1) சில சமயம் குத்த வைத்து அமர்வார்கள். 2) சில சமயம் கைகளை கட்டிக்கொண்டு அமர்வார்கள். 3) சில சமயம் கைகளுக்கு பதிலாக துணியால் கட்டிக்கொள்வார்கள்.
அமர்ந்தவாறு சாய்ந்து கொள்ள விரும்பினால் பெரும்பாலும் இடதுபுறமாக இடது கை பக்கத்தில் சாய்ந்து கொள்வார்கள்.
சில சமயம் உல்லாசமாக கிணற்றின் தடுப்புச் சுவர்களில் கால்களைத் தொங்க விட்டவாறு அமர்ந்திருப்பார்கள். அச்சமயம் கெண்டைக் காலைத் திறந்து வைப்பார்கள்.
நபி (ஸல்) அவர்களிடம் நூறு ஆடுகள் இருந்தன. நூறை விட அதிகமாக இருப்பதை நபியவர்கள் விரும்பவில்லை. எண்ணிக்கை அதிகரித்து விட்டால், அவற்றில் ஒன்றை பிடித்து அறுத்து விடுவார்கள், காரணம் நூறு என்ற எண்ணிக்கை நிலைத்திருக்க வேண்டுமாம் .
பள்ளிக்கு வெளியே தொலைந்துவிட்ட பொருளைப் பற்றி யாரேனும் ஒருவர் பள்ளியில் அறிவிப்புச் செய்தால், அதனால் நபி (ஸல்) அவர்கள் மிகுந்த அதிருப்தி அடைவார்கள்.மேலும்
" லா ரத்தல்லாஹு அலைக்க ளல்லதக "
" காணாமல் போன உமது பொருளை அல்லாஹுத்தஆலா திருப்பித் தராமல் இருக்கட்டும் " என்று கூறுவார்கள்.
எங்கிருந்தாவது ஸதகா போன்ற பொருட்கள் வந்தால், அவற்றை தகுதியுடையவர்கள், ஏழைகளுக்கு பங்கிட்டு தரும் வரை நமது வீட்டிற்குச் செல்ல மாட்டார்கள்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 58

(பல்வேறு நிலைகளில் பயஹம்பர் நபியவர்கள் 2)

நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் எப்போதுமே வெடிச்சிரிப்பு சிரிக்க மாட்டார்கள். புன்னகையே செய்வார்கள். நபியவர்களின் சிரிப்புடைய கடைசி எல்லையில் கடவாய் பற்கள் தான் தெரியுமே தவிர, உள்நாக்கு ஒருகாலும் தெரியாது.
நபிகளார் எவ்வாறு சிரிக்கும்போது 'கெக்கக்கே' என்ற சப்தம் வராதோ அவ்வாறே அழும்போதும் சப்தம் வராது. நீண்ட பெருமூச்சு விடுவார்கள். விழிகளிலிருந்து கண்ணீர் வழிந்தோடும். சட்டி கொதிப்பது போன்ற சப்தம்

அல்லது திருகை அரைபடுவது போன்ற சப்தம் நெஞ்சிலிருந்து வந்து கொண்டிருக்கும். நபி (ஸல் ) அவர்களே தமது அழுகையை பற்றி இவ்வாறு குறிப்பிடுகிறார்கள்.
'' தத்ம உல் அய்னு வ யஹ்சுனுல் கல்பு வலா நகூலு இல்லா மா யர்லா ரப்புனா "
பொருள்:- "விழிகள் கண்ணீரை சிந்துகின்றன. உள்ளம் வருத்தம் அடைகிறது. எங்கள் ரப்பு எந்த விஷயத்தால் சந்தோசமடைகிறானோ அதையே நாங்கள் நாவால் மொழிகிறோம் "
நபி (ஸல்) அவர்களை துக்கமும் கவலையும் ஆட்கொண்டு விட்டால், தமது முபாரக்கான கரத்தை தலையிலும் , தாடியிலும் தடவுவார்கள். புனித தாடியை பிடிப்பார்கள். சிலசமயம் விரல்களால் தாடியைக் கோதுவார்கள். மேலும் " ஹஸ்பியல்லாஹு வ நிஹ்மல் வகீல் "
பொருள் : அல்லாஹ் எனக்குப் போதுமானவன். அவன் பொறுப்பேற்பவர்களில் சிறந்தவன்.
நபி (ஸல் ) அவர்கள் சந்தோஷமான நேரத்தில் பார்வையைத் தாழ்த்திக் கொள்வார்கள்.
وَمَآ اَرْسَلْنٰكَ اِلَّا رَحْمَةً لِّلْعٰلَمِيْنَ
(நபியே!) நாம் உம்மை அகிலத்தாருக்கு எல்லாம் ரஹ்மத்தாக - ஓர் அருட் கொடையாகவேயன்றி அனுப்பவில்லை. (அல்குர்ஆன் : 21:107)

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 59

(பல்வேறு நிலைகளில் பயஹம்பர் நபியவர்கள் 3)

கடிதங்கள் எழுதும்போது நபியவர்கள், "பிஸ்மில்லாஹ்" எழுதிய பிறகு, அனுப்புநரின் பெயரை எழுதச் சொல்வார்கள். பிறகு பெறுநரின் பெயரை எழுதிவிட்டு, அதன் பிறகு எழுத வேண்டிய விஷயங்களை எழுதச் சொல்வார்கள்.
உதாரணத்திற்கு நபியவர்கள் சொல்லச் சொல்ல நபித்தோழர் ஒருவரால் எழுதப்பட்ட ஒரு வரலாற்று கடிதம்.
முஹம்மத் நபி (ஸல்) அவர்களின் கிறிஸ்துவர்களுக்கான
உடன்படிக்கை -
கிருஸ்த்துவ மடத்திலிருந்து எடுக்கப்பட்டுள்ள கடிதம் .
முஸ்லிம்கள், கிருத்துவர்களை எப்படி நடத்த வேண்டும்?
நபி (ஸல்) அவர்களால் எழுதப்பட்டதாக நம்பப்படும் இந்த கடிதத்தின் சுருக்கம்:
இன்று உலகில் முஸ்லிம்,கிறிஸ்துவ மக்களுக்கு இடையேயான உறவு பலவீனப்பட்டுள்ள நிலையில்,கிறிஸ்துவ சகோதர(ரி)களுக்கு நாம் சொல்லிக் கொள்வது என்னவென்றால்,
ஒரு உண்மையான முஸ்லிம் எந்த விதத்திலும் அவர்களை துன்புறுத்த மாட்டான் என்பதை இந்த கடிதத்தின் மூலம் அறிந்து கொள்ளலாம்,
மேலும் முஹம்மத் நபி (ஸல்) தன்னுடைய ஆளுமையின் கீழ் உள்ள சிறுபான்மையினரை எப்படி நடத்தினார்கள் என்பதற்கும் இது ஒரு வரலாற்றுச் சான்று.
பல ஆதாரப்பூர்வமான வரலாற்று பதிவுகள், St.Catherine (Egypt) நூலகத்தில் வைக்கப்பட்டுள்ளது. அதில் சில பதிவுகள், இஸ்லாமிய நீதிபதிகளால் வரலாற்று நம்பகத்தன்மை வாய்ந்ததாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. துருக்கிய இஸ்லாமிய படைகள், எகிப்தை வெற்றிக் கொண்டபோது, அங்கே உள்ள மடத்திலிருந்து எடுக்கப்பட்டு, இஸ்தான்பூல் அரண்மனையில் பாதுகாப்புடன் வைக்கப்பட்டது. இதனுடைய மூல பிரதி,இன்றும் இஸ்தான்பூல் அருங்காட்சியத்தில் உள்ளது.

கடிதத்தின் சுருக்கம்:
" அப்துல்லாஹ்வின் மகன் முஹம்மத் இடமிருந்து, அருகில், மேலும் தொலைவில் உள்ள கிருத்துவர்களுக்கு இந்த

உடன்படிக்கையின் மூலம் சொல்வது என்னவென்றால், நாங்கள் உங்களோடு இருக்கின்றோம்.
நிச்சயமாக, நான், இறை அடியார்கள், என் உதவியாளர்கள் மற்றும் என்னை பின்பற்றுபவர்கள், கிருத்துவர்களை பாதுகாப்போம், ஏனென்றால் அவர்கள் என் குடிமக்கள்; மேலும் அல்லாஹ்வின் மீது ஆணையாக அவர்கள் விரும்பாததை விட்டும் நான் தடுத்துக்கொள்வேன் .
அவர்களின் மீது எந்த கட்டாயமும் இல்லை. அவர்களின் நீதிபதிகள், பொறுப்பிலிருந்து நீக்கப்படமாட்டார்கள் துறவிகள் மடத்திலிருந்து நீக்கப்படமாட்டார்கள்.
கிறிஸ்துவர்களின் ஆலயங்களை இடிப்பதற்கோ, சேதப்படுத்துவதற்கோ யாருக்கும் அனுமதி இல்லை.
ஆலயங்களிலிருந்து எதையும் முஸ்லிம்கள் எடுத்துச் செல்லக் கூடாது, யாராவது மீறி செய்தால் அல்லாஹ்வின் கட்டளைக்கும், அவன் தூதருக்கும் மாறு செய்தவராவார்.
உண்மையிலேயே, கிருத்துவர்கள் என்னுடைய நண்பர்கள், மேலும் அவர்கள் வெறுப்பதிலிருந்து விலகிக்கொள்ள என்னுடைய அனுமதி பட்டயத்தை பெற்றுள்ளனர்.
அவர்களை யாரும் பயணம் செய்யுமாறும் கட்டாயப்படுத்தக் கூடாது. தங்களை பாதுகாத்துக்கொள்ள, முஸ்லிம்கள் தான் போரிட வேண்டுமே தவிர, கிறிஸ்துவர்களை தங்களோடு சேர்ந்து போரிடுமாறு கட்டாயப்படுத்தக்கூடாது.
கிறிஸ்துவப் பெண்ணின் சம்மதம் இல்லாமல் முஸ்லிம்
திருமணம் செய்யக்கூடாது, அவள் தன்னுடைய ஆலயத்திற்கு சென்று வழிபடுவதை தடுக்கக்கூடாது.
அவர்களுடைய ஆலயங்கள் கண்ணியப்படுத்தப்பட வேண்டும். அவைகள் பழுது பார்க்கப்படுவதை விட்டும் தடுக்கக்கூடாது.
இறுதிநாள் வரை உள்ள முஸ்லிம்கள் இந்த உடன்படிக்கையை மீறக்கூடாது "

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 60

(பல்வேறு நிலைகளில் பயஹம்பர் நபியவர்கள் 4)

நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தமது வீட்டில் இருக்கும் வரை வீட்டு வேலைகளில் ஈடுபட்டிருப்பார்கள். வெறுமனே சும்மா உட்கார்ந்து இருக்க மாட்டார்கள்.
சின்னச் சின்ன வீட்டு வேலைகளை செய்வதையும், நபியவர்கள் குறையாக கருத மாட்டார்கள்.
பால் கரந்து கொடுப்பார்கள். கால்நடை பிராணிகளுக்கு தீனி போடுவார்கள்.
துணி, தண்ணீர் துருத்தி அல்லது வாளி போன்றவற்றில் ஒட்டுப் போடுவார்கள். தமது செருப்பைத் தாமே தைத்துக் கொள்வார்கள். பணியாளர்களுடன் சேர்ந்து கொண்டு மாவரைப்பார்கள்.
கடைவீதியில் இருந்து சாமான்களை விலைக்கு வாங்கி வருவதை நபியவர்கள் கேவலமாக கருதமாட்டார்கள்.
தாமே கடைவீதிக்கு செல்வார்கள் பொருட்களை ஒரு துணியில் வைத்துக் கட்டி எடுத்து வருவார்கள். இது பற்றி இறைவனே குர்ஆனில் சிலாகித்து கூறுகிறான்

(நபியே!) உங்களுக்கு முன்னர் நாம் அனுப்பி வைத்த நம்முடைய தூதர்களெல்லாம் நிச்சயமாக (உங்களைப் போல்) உணவு உண்பவர்களாகவும், கடைகளுக்குச் செல்பவர்களாகவும் இருந்தார்கள். குர்ஆன் : (25:20)
மழை நாளில் தண்ணீர் பொழியத் தொடங்கியதும் நபியவர்கள் கீழே ஆடையைத் தவிர, இதர ஆடைகளை கழற்றி விடுவார்கள். உடலின் மேல் பகுதியை மழைநீரால் நனைத்துக்கொள்வார்கள்.
அசுத்தங்களை சுத்தம் செய்யும் வேலைகள் மற்றும் கையில் அசுத்தம் ஒட்டிக்கொள்ளும் என்று பயமுள்ள வேலைகள், உதாரணமாக மூக்கை சுத்தம் செய்தல், கைகளை துப்பரவு செய்தல், செருப்பை எடுத்தல்...போன்ற இம்மாதிரியான வேலைகளைத் தவிர, மற்ற வேலைகளை வலது கையால் செய்வார்கள்.

இவ்வாறு ஒருவருக்கு ஒரு பொருளைத் தர வேண்டியிருந்தால், வலது கையால் தருவார்கள். ஒரு பொருளை வாங்கினாலும் வலது கையால் வாங்குவார்கள்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 61

(அண்ணலார் அபசகுனம் பார்க்க மாட்டார்கள் )

நபிகள் நாயகம் ﷺ அவர்கள் அபசகுணம் பார்க்க மாட்டார்கள் ஆனால் நற்குறி பார்ப்பார்கள்
இஸ்லாத்தில் நற்குறி பார்ப்பது மட்டும் அனுமதிக்கப்பட்டு , துர்க்குறி பார்ப்பது விலக்கப்பட்டுள்ளது . " துர்க்குறி பார்ப்பதுதான் 'ஷிர்க்' (இணைவைத்தல்) ஆகும் என நபிகள் நாயகம் ﷺ அவர்கள் கூறியுள்ளனர் .
" துர்க்குறி பார்ப்பவரையன்றி வேறு எவரையும் துர்க்குறி யாதொரு தீங்கும் செய்யாது " என்று இப்னு மஸ்வூத் (ரலி) அவர்கள் கூறியுள்ளனர்
1438. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் 'பறவை சகுனம் என்பது கிடையாது. சகுனங்களில் சிறந்தது நற்குறியே ஆகும்" என்று கூறினார்கள்.
மக்கள், 'நற்குறி என்பதென்ன?' என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், 'அது நீங்கள் செவியுறும் நல்ல (மங்கலகரமான) சொல்லாகும்" என்று பதிலளித்தார்கள். புஹாரி :5754 அபூஹுரைரா (ரலி).
1439. தொற்றுநோய் கிடையாது. பறவை சகுனமும் கிடையாது. அபசகுனம் (இருக்க வேண்டுமென்றால்) மனைவி, வீடு, வாகனம் ஆகிய மூன்றில்தான் இருக்கும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
புஹாரி : 5753 இப்னு உமர் (ரலி).

சகுனம்' என்பதற்கு அரபியில் 'ததய்யுர்' எனப்படும். இது 'தய்ர்' எனும் பெயர்ச் சொல்லில் இருந்து பிறந்ததாகும். பறவைக்கு அரபியில் 'தய்ர்' என்பர்.
இதற்கான காரணத்தை இமாம் இப்னு ஹஜர் )ரஹ் (அவர்கள் இவ்வாறு கூறுகிறார்கள்:
அன்றைய அறியாமைக் கால மக்கள் ஒரு பிரயாணத்தை ஆரம்பிக்கும் போது பறவைகளை பறக்கச் செய்து அது பறக்கும் திசைக் கேற்ப அப்பிரயாணத்தின் முடிவைத் தீர்மானிப்பார்கள்.
அதாவது அப்பறவை வலப்புரம் பறந்தால் அதனை சுபசகுனமாகக் கருதி பிரயாணத்தைத் தொடர்பவர்களாகவும், அது இடப்புறம் பறந்தால் அது அபசகுனம் என்று ஆரம்பித்த பிரயாணத்தை நிறுத்தக் கூடியவர்களாகவும் இருந்தனர்.

1440. அபசகுனம் எதிலாவது இருக்குமானால் பெண்ணிலும் குதிரையிலும், வீட்டிலும்தான் இருக்கும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். புஹாரி : 2859 ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ் ஸாஇதீ (ரலி) .
நபிகள் நாயகம் ﷺ அவர்கள் மக்காவிலிருந்து மதீனாவுக்கு தோழர் அபூபக்கர் (ரலி) அவர்களுடன் ஹிஜ்ரத் செல்லும் போது , அஸ்லம் கூட்டத்தினர் 70 பேர்கள் சுற்றி வளைத்தார்கள் .
அவர்களின் தலைவரிடம் , "உம்முடைய பெயர் என்ன ? " என்று நபிகளார் கேட்க, அவர் "புரைதா " என்றார் அவர் .'குளிர்ச்சி ' என்று பொருள் உள்ள அச்சொல்லைக் கேட்டதும் , நபிகள் நாயகம் ﷺ அவர்கள் அபூபக்கர் (ரலி) அவர்களை நோக்கி, "செல்லும் ; நம் அலுவல் நலமே முடிவுறும் !"
அதன் பின் , " உம் குலம் யாது ?" என்று நபிகளார் கேட்க, அவர்
"அஸ்லம் " - (பாதுகாப்பு ) என்றார்.

அதைக் கேட்டதும் , நபிகள் நாயகம் ﷺ அவர்கள் அபூபக்கர் (ரலி) அவர்களை நோக்கி , " அபூபக்கரே ! நாம் பாதுகாக்கப்பட்டோம் " என்று மகிழ்ச்சியுடன் பகர்ந்தனர் .
இந்த இனிய மொழிகளால் கவரப்பட்ட புரைதா தம் கூட்டத்தாருடன் இஸ்லாத்தைத் தழுவினார் .

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 62

( கனவுகள் பற்றி காருண்ய நபியவர்கள் )

சுபுஹு தொழுகைக்குப் பிறகு நபிகளாரின் வழமை என்னவென்றால் சம்மணமிட்டவாறு அமர்ந்து கொண்டு மக்களிடம் அவர்களுடைய கனவுகளைப் பற்றி விசாரிப்பார்கள். யாரேனும் கனவு கண்டிருந்தால் அவர் தம் கனவைக் கூறுவர் .கனவு கூறுவதைக் கேட்பதற்கு முன்
"ஹைருன் தலக்காஹு வ ஷர்ருன் தவக்காஹு வ ஹைருன் லனா வ ஷர்ருன் லிஅஹ்தாஇனா வல் ஹம்துலில்லாஹ் "
பொருள் : '' கனவில் சிறந்ததை அவர்களுக்குத் தரட்டும் தீயதை விட்டும் பாதுகாக்கட்டும் (அதை) எங்களுக்கு அருளாகவும், எங்களின் எதிரிகளுக்கு தீங்காவும் (அல்லாஹ் ஆகட்டும்) அகிலத்தாரின் இரட்சகனான அல்லாஹ்வுக்கே எல்லா புகழும் ! "
'தூதுத்துவமும், நபித்துவமும் முற்றுப் பெற்றுவிட்டன. எனவே எனக்குப் பின் எந்த நபியும் இல்லை. எந்த ரஸூலும் இல்லை' என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள்.
இது மக்களுக்கு கவலையளிப்பதாக இருந்தது. அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் 'எனினும் நற்செய்தி கூறுபவை உண்டு' என்றார்கள்.

நற்செய்தி கூறுபவை என்றால் என்ன என்று நபித்தோழர்கள் கேட்ட போது 'முஸ்லிம் காணுகின்ற கனவாகும்' என்று விளக்கினார்கள். அனஸ் பின் மாலிக் (ரலி) அஹ்மத் 13322
ஒரு முஸ்லிம் காணும் (நல்ல) கனவு நபித்துவத்தின் நாற்பத்தைந்து பாகங்களில் ஒன்றாகும்.
கனவுகள் மூன்று வகையாகும். நல்ல கனவு அல்லாஹ்விடமிருந்து வரும் நற்செய்தியாகும்.
கவலையளிக்கக்கூடிய கனவு ஷைத்தானிடமிருந்து வருவதாகும். இன்னொரு வகை ஒரு மனிதரின் உள்ளத்தில் தோன்றுகின்ற பிரமையாகும்.
ஆகவே, உங்களில் ஒருவர் தாம் விரும்பாத கனவொன்றைக் கண்டால், உடனே அவர் எழுந்து (இறைவனைத்) தொழட்டும். அதைப் பற்றி மக்களிடம் தெரிவிக்க வேண்டாம்.
முஸ்லிம் 4555.
தனக்குப் பிடிக்காத கனவை ஒருவர் கண்டால் அதனால் ஏற்படும் தீங்கை விட்டும், ஷைத்தானின் தீங்கை விட்டும் அல்லாஹ்விடம் அவர் பாதுகாவல் தேடட்டும். மேலும் இடது புறம் மூன்று தடவை துப்பட்டும். எவரிடமும் அது பற்றிக் கூறவும் கூடாது. இவ்வாறு நடந்து கொண்டால் அவருக்கு அவரது கனவால் எந்தக் கேடும் எற்படாது' என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள். அபூகதாதா (ரலி) புகாரி 7044
ஒரு கிராமவாசி நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்தார். 'என் தலை வெட்டப்படுவது போலவும் அதை நான் விரட்டிச் செல்வது போலவு கனவு கண்டேன்' என்று அவர் கூறும் போது, 'ஷைத்தான் உன்னோடு கனவில் விளையாடுவதைப் பற்றி (யாருக்கும்) கூறாதே' என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள்.ஜாபிர் (ரலி) முஸ்லிம் 4211, 4213

தன் தந்தையல்லாத இன்னொருவரைத் தந்தை எனக் கூறுவதும், கனவில் காணாததைக் கண்டதாகக் கூறுவதும், நான் கூறாததைக் கூறியதாகச் சொல்வதும் பொய்களில் மிகப் பெரிய பொய்களாகும்' என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள். வாஸிலா (ரலி) புகாரி 3509
'காணாத கனவைக் கண்டதாக யாரேனும் கூறினால் (மறுமையில்) இரண்டு கோதுமைகளுக்கிடையே முடிச்சுப் போட்டு இணைக்குமாறு அவன் கட்டாயப்படுத்தப் படுவான். அவனால் அதை ஒருக்காலும் செய்ய முடியாது' எனவும் நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள். இப்னு அப்பாஸ் (ரலி) புகாரி 7042
கோதுமை வழுக்கக் கூடியதாக இருப்பதால் ஒரு முடிச்சுக்குள் இரண்டு கோதுமையை யாராலும் இணைக்க முடியாது. இந்தச் செயலைச் செய்யுமாறு அவன் கட்டாயப்படுத்தப்படுவான் என்பது கனவு விஷயத்தில் பொய் சொல்பவர்களுக்குப் போதுமான எச்சரிக்கையாகும்.
யார் என்னைக் கனவில் காண்கிறாரோ அவர் என்னையே கண்டார். ஏனெனில் ஷைத்தான் என் வடிவில் வரமாட்டான்' என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள். அபூஹுரைரா (ரலி) புகாரி 6197
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

நான் மக்கா நகரைத் துறந்து அங்கிருந்து பேரீச்சந் தோட்டங்கள் நிறைந்த ஒரு பூமிக்குச் செல்வதாகக் கனவு கண்டேன். அந்த பூமி 'யமாமா'வாகவோ 'ஹஜரா'கவோ தான் இருக்கும் என்று நான் எண்ணினேன். ஆனால், அது யஸ்ரிப் - மதீனாவாகிவிட்டது.
மேலும், இந்த என்னுடைய கனவில் நான் (என்னுடைய) வாள் ஒன்றை அசைக்க, அதன் முனை உடைந்து விடுவதாகக் கண்டேன். அது உஹுதுப் போரின்போது முஸ்லிம்களுக்கு ஏற்பட்ட இழப்பைக் குறித்தது.
பிறகு (அதே கனவில்) மற்றொரு முறை அந்த வாளை நான் அசைக்க, அது முன்பிருந்தபடியே மீண்டும் (ஒட்டி) அழகாகியது. அது அல்லாஹ் (அதே உஹுதுப் போரில்) கொணர்ந்த உறுதிப்பாட்டையும் (சிதறி ஓடிய) முஸ்லிம்கள் (மீண்டும்) ஒன்று திரண்டதையும் குறித்தது. புகாரி : 3622.

## லைலத்துல் கத்ர் பற்றிய சர்ச்சை

R.M. Nowsaath :-
இங்கே ஒரு சர்ச்சை நடக்கிறது... லைலத்துல் கத்ர் இரவு பூமியில் ஆசிய நாடுகளில் என்றால் மேலை நாடுகளில் பகலாக இருக்கும் நிலையில் இதை எவ்வாறு புரிந்து கொள்வது ர. ரா. அவர்களே !
ர.ரா : -
R.M. Nowsaath ' லைல் ' என்றாலே இரவுதானே ! ஆசிய நாடுகளில் ஒரு இரவு லைலத்துல் கத்ர் என்றால் , மேலை நாடுகளில் பகல் கழிந்து வரும் இரவு லைலத்துல் கத்ராக இருக்கலாம்.
அல்லது
ஆசிய நாடுகளில் 27 ம் பிறை லைலத்துல் கத்ரும் , மேலை நாடுகளில் 21, 23, 25, 27 இரவோ, அல்லது 29 இரவோ லைலத்துல் கத்ர் இருக்கலாம் . காரணம்
(ஒரு நபித்தோழர் முதல் நோன்பு நோற்ற நிலையில் வெளியூர் போய் வந்த இன்னொரு நபித்தோழர் பிறையை காணாததால் நோன்பு வைக்க வில்லை .இதன் அடிப்படையில் லைலத்துல் கத்ரும் உலகின் பல பாகங்களுக்கு ஒரே ஒரு இரவு இருக்க வேண்டிய அவசியம் இருக்காது)
உங்கள் சிந்தனைக்கு ....
திருக்குர்ஆன் இந்த பூமிக்கு இறங்கிய முதற்பொழுது 27 ம் பிறை லைலத்துல் கத்ர் ; அது மட்டும் அல்ல, அதே 27 - ம் பிறை பொழுதில்தான் நபிகளாருக்கு நபி பட்டமும் வழங்கப்பட்டது.

.....ஆனால் நபிகளாருக்கு ஹிஜ்ரி 2-ல் (10 வருஷம் மக்காவில் இருந்து விட்டு, மதீனா ஹிஜ்ரத் போன அந்த வருடம்தான் ஹிஜ்ரி வருடம் கணக்கில் எடுக்கப்படுகிறது ) மக்காவை விட்டு மதீனா போய் ஹிஜ்ரி 2-ல் தான் நோன்பு கடமையானது. அந்த கடமையான நோன்பில்தான் லைலத்துல் கத்ரே உலகிற் அறிமுகமானது.
அதற்கு முன் நபிப் பட்டம் கொடுக்கும்போது எப்படி லைலத்துல் கத்ர் வந்தது ?
(அப்புறமா சொல்றேன் )
கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள். தெளிவு கிடைக்கும்

Rahmath Rajakumaran

நிச்சயமாக அல்லாஹ்விடத்தில் மாதங்களின் எண்ணிக்கை (ஓர் ஆண்டுக்கு) பன்னிரண்டுதான். (இவ்வாறே) வானங்களையும், பூமியையும் படைத்த நாளிலிருந்து அல்லாஹ்வின் புத்தகத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது. அவற்றில் நான்கு (மாதங்கள்) சிறப்புற்றவை. இதுதான் நேரான மார்க்கமாகும்
يٰۤاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا كُتِبَ عَلَيْكُمُ الصِّيَامُ كَمَا كُتِبَ عَلَى الَّذِيْنَ مِنْ قَبْلِكُمْ لَعَلَّكُمْ تَتَّقُوْنَۙ
நம்பிக்கையாளர்களே! உங்களுக்கு முன்னுள்ளவர்கள் மீது கடமையாக்கப்பட்டிருந்தது போல் உங்கள் மீதும் நோன்பு நோற்பது கடமையாக்கப்பட்டுள்ளது. (அதனால்) நீங்கள் இறை அச்சமுடைய வர்களாக ஆகலாம்.
(அல்குர்ஆன் : 2:183)
ரமழான் மாதம் எத்தகைய (மகத்துவமுடைய)தென்றால் அதில்தான் மனிதர்களுக்கு நேர்வழிகாட்டும் திருக்குர்ஆன் (என்னும் வேதம்) இறக்கப்பட்டது. அது (நன்மை, தீமையைப்) பிரித்தறிவித்து நேரான வழியைத் தெளிவாக்கக்கூடிய வசனங்களை உடையதாகவும் இருக்கிறது. ஆகவே, உங்களில் எவர் அம்மாதத்தை அடைகிறாரோ அவர் அதில் நோன்பு நோற்கவும். ஆனால் (அக்காலத்தில் உங்களில்) யாராகிலும் நோயாளியாகவோ அல்லது பிரயாணத்திலோ இருந்தால் (ரமழான் அல்லாத) மற்ற நாள்களில் (விட்டுப்போன நாள்களின் நோன்பைக்) கணக்கிட்டு (நோற்று)விடவும். அல்லாஹ் உங்களுக்கு இலகுவா(ன கட்டளையைக் கொடு)க்க விரும்புகிறானே தவிர கஷ்டத்தை(க் கொடுக்க) விரும்பவில்லை. மேலும் (தவறிய நாள்களைக் கணக்கிடும்படி கட்டளையிட்டதெல்லாம், உங்கள்மீது கடமையாக உள்ள ஒரு மாத நோன்பின்) எண்ணிக்கையை நீங்கள் முழுமை செய்வதற்காகவும்; (அவ்வாறே) அல்லாஹ் உங்களை நேரான பாதையில் நடத்தியதற்காக அவனை நீங்கள் பெருமைப்படுத்துவதற்காகவும்; (நோய், பிரயாணம் போன்ற சந்தர்ப்பங்களில் நோன்பு நோற்காதிருக்க உங்களுக்கு அனுமதி வழங்கியதற்காக) நீங்கள் (அல்லாஹ்வுக்கு) நன்றி செலுத்துவதற்காகவுமே ஆகும்!
(அல்குர்ஆன் : 2:185)
அப்படியென்றால் வானங்களையும் , பூமியையும் படைத்த நாளிலிருந்தே லைலத்துல் கத்ர் இரவும் இருந்திருக்கிறது .அந்த ஓர் இரவில்தான் குர்ஆனும் இறக்கப்பட்டு , நபிகளாருக்கு நபி பட்டமும் அருளப்பட்டது

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 63

(குதிரையின் மீது அன்பு கொண்ட நபிகளார் )

நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு சவாரி செய்யும் பிராணிகளில் குதிரை மிகவும் பிடித்தமானதாக இருந்தது. அதனுடைய வாய் மூக்கு ஆகியவற்றை தமது சட்டைக் கையால் துடைத்து சுத்தம் செய்வார்கள்.
(இறைவழியில் செலுத்தப்படும்) குதிரைகளின் நெற்றிகளில் மறுமை நாள் வரைக்கும் நன்மை உள்ளது என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) புஹாரி : 2849
(இறைவழியில் செலுத்தப்படும்) குதிரைகளின் நெற்றிகளில் மறுமைநாள் வரை நன்மை பிணைக்கப்பட்டிருக்கிறது. அந்த நன்மை யாதெனில், அந்தக் குதிரையில் ஏறி அறப்போரிடுதலில் கிடைக்கும் நன்மையும், போரில் கிடைக்கும் செல்வமும் ஆகும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். புஹாரி
ஆயிஷா (ரலி) அவர்கள் ஒரு முறை ஒரு குதிரையின் மீது சவாரி செய்தார்கள். அக்குதிரை அவர்களுக்குச் சிரமத்தை அளித்தது. அதற்காக அவர்கள் அதனுடைய கடிவாளத்தைத் திரும்பத் திரும்பப் பிடித்து

இழுத்துக்கொண்டே இருந்தார்கள். அதைக் கண்ட நபியவர்கள், ‘நீ அதனிடம் மென்மையாக நடந்துகொள்’ என்றார்கள். (முஸ்லிம் 2598)

நபி (ஸல்) அவர்கள் குதிரைகளுக்கிடையே போட்டி நடத்தியபோது, பயிற்சி பெற்ற குதிரைகள் ‘ஹஃப்யா’ என்ற இடத்திலிருந்து ‘ஸனிய்யதுல் வதா’ என்ற இடம் வரை ஓட வேண்டும் என்றும் பயிற்சியளிக்கப்படாத குதிரைகள் ‘ஸனியதுல் வதா’ என்ற இடத்திலிருந்து பனூ ஸுரைக் கூட்டத்தினரின் பள்ளிவாசல் வரை ஓட வேண்டும் என்றும் இலக்கு நிர்ணயித்தார்கள். அப்போட்டியில் நானும் பங்கெடுத்துக் கொண்டேன். புஹாரி :420 இப்னு உமர் (ரலி).
எல்லோரும் நாயை தான் நன்றியுள்ள விலங்கு என்பர்.
ஆனால் அதைவிட நன்றியுள்ள விலங்குதான் குதிரை.
இறைவன் சாதாரணமாக ஒரு பொருளின் மீது சத்தியமிட மாட்டான். அப்படி சத்தியமிட்டு ஒரு விஷயத்தை கூறவேண்டுமெனில் அதில் பல அர்த்தங்கள் பொதிந்திருக்கும் மிக முக்கித்துவம் வாய்ந்த விஷயமாக இருக்கும்.
சூரா ஆதியாத்தின் வசனத்தின் சந்த அழகை பார்ப்பதற்கு மூல மொழியான அரபியில் இந்த வசனங்களை பார்போம்.
'வல்லாதியாத்தி லப்ஹன்:
வல் மூரியாத்தி கத்ஹன்:
ஃபல் முகீராத்தி சுப்ஹன்:
பஃதர் நபிஹி நக்அன்:
பவசத் நபிஹி ஜம்அன்:
இன்னல் இன்சான லிரப்பிஹி லகனூத்:
வஇன்னஹூ அலா தாலிக லஸஹீத்:
வஇன்னஹூ லிஹூப்பில் ஹைரி லஸதீத்'
(குர்ஆன் 100 : 1 - 7)
என்ன அழகிய வார்த்தை சீரமைப்பு. சந்தம் எந்த அளவு நெருங்கி வருவதைப் பாருங்கள். பலர் எழுதும் கவிதைகளில் சந்தங்கள் சரியாக அமைந்தால் பொருள் ஏனோ தானோ வென்று இருக்கும். பொருள்
**அருமையாக**
இருந்தால் ஏதோ உரை நடையை படிப்பது போல் இருக்கும்.
இங்கு இரண்டுமே மிக அழகாக பொருந்தி வருவதைப் பார்த்து ஆச்சரியப்படுகிறோம். இந்த ஒரு இடம் மட்டும் தான் என்று இல்லை. குர்ஆன் முழுக்க இந்த வசன நடை தொடர்ந்து வருவதை பார்த்திருக்கலாம்.
அரபி மொழி தெரிந்தவர்களுக்கு இந்த வார்த்தை கட்டுக்கள் இன்னும் சிறந்த ஈர்ப்பை ஏற்படுத்தும். அதனால் தான் அரபி மொழி நன்கு தெரிந்த அன்றைய அரபு புலவர்கள் குர்ஆன் ஓதப்படுவதைக் கேட்டால் கைகளால் காதை பொத்திக் கொள்வார்களாம்.
அதன் வசன நடையும் அதற்குள் பொதிந்திருக்கும் சிறந்த கருத்துக்களும் தங்களின் சிந்தையை கலைத்து இஸ்லாத்துக்குள் இழுத்துக் கொண்டு சென்று விடுமோ என்று அஞ்சுவார்களாம். அந்த அளவு குர்ஆனின் கருத்துக்களில் அன்றைய அரபு புலவர்கள் கலக்கம் அடைந்திருந்தனர்
இனி குர்ஆனின் விளக்கத்தைப் பார்ப்போம்.
மூச்சிறைத்து ஓடும் ஒரு குதிரை எந்த அளவு உண்மையானதோ,
கால் குளம்பின் தீப் பொறி பறக்க ஓடும் குதிரை எந்த அளவு உண்மையானதோ,
போர்க் காலங்களில் அதிகாலையில் உக்கிரமாக தாக்குதல் நடத்தும் குதிரைகள் எந்த அளவு உண்மையானதோ,
அந்த சண்டையில் புழுதியைக் கிளப்பும் குதிரைகள் எந்த அளவு உண்மையானதோ,
போரில் படைகளுக்கு நடுவே ஊடுருவிச் செல்லும் குதிரைகள் எந்த அளவு உண்மையானதோ
அதே அளவு உண்மையோடு மனிதன் தனது இறைவனுக்கு நன்றி மறந்தவனாக இருக்கிறான்.

அதற்கு அவனே சாட்சியாகவும் இருக்கிறான்.
அழிந்து போகும் உலக செல்வத்தை மிகக் கடுமையாக நேசிக்கவும் செய்கிறான் என்கிறான் இறைவன்.
உதாரணமாக திப்ப சுல்தான் வரலாற்றில் ஒரு நெகிழ்வான சம்பவம்.
ஆங்கிலேயருக்கு எதிரான போர்க்களத்தில் எதிரிகள் திப்பு சுல்தானை நோக்கி அம்புவிடுவதை கண்ட திப்பு சுல்தானின் குதிரை தான் இரு முன்னங்கால்களையும் தூக்கி எகிறி தான் உடலில் அந்த அம்பை வாங்கிகொண்டது.
இப்போது சொல்லுங்கள் நன்றியுள்ள விலங்கு குதிரை தானே. உலகில் நம் உயிரை காக்க முன்வரும் மனிதர்களே அரிது அப்படி இருக்கையில் குதிரையின் நன்றியுணர்வு எவ்வளவு சிறந்தது.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 64

(நீச்சல் போட்டி )

நீச்சலுக்கும் நபியவர்கள் காலத்தில் அதிக முக்கியத்துவம் வழங்கப்பட்டது. வியாபார நோக்கத்திலும், யுத்தத்திற்காகவும் கடல் மார்க்கமாக பயணிக்க வேண்டி இருந்ததால் அதனைக் கற்றுக்கொள்ள ஆர்வமூட்டியுள்ளார்கள்.
அவ்வாறே நீச்சல் என்பது தன்நம்பிக்கையை வளர்ப்பதோடு, பிறரின் உதவியும் இல்லாமல் தனி ஆளாக எதையும் செய்யும் திறனையும் வளர்க்கிறது.
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள், அல்லாஹ்வை நினைவூட்டுவதை விட்டும் தடுக்கும் அனைத்தும் வீணான, கேளிக்கையான, மறதியை ஏற்படுத்தும் விடயங்களாகும்.
இந் நான்கு விடயங்களையும் தவிர, இரு இலக்குகளுக்கிடையில் ஓட்டப்பந்தயத்தில் ஈடுபடல், குதிரை ஓட்டப்போட்டியை பயிலுதல், தன் குடும்பத்துடன் கொஞ்சி விளையாடுதல், நீச்சலைக் கற்றுக் கொள்ளல்.
(அதா இப்னு அபூ ரபாஹ் (ரழி), -ஸில்ஸிலதிஸ் ஸஹீஹா 315).

உமர் (ரழி) அவர்கள் ஷாம் பிரதேசத்தின் கவர்னர் அபூ உபைதா (ரழி) அவர்களுக்கு ஓர் கடிதம் எழுதினார்கள், அதில், உங்கள் சிறுவர்களுக்கு நீச்சலையும், அம்பெறிதலையும் கற்றுக் கொடுங்கள் எனக் குறிப்பிட்டுள்ளார்கள்.
(அபூ உமாமா இப்னு ஸஹ்ல் (ரழி), இப்னு ஹிப்பான் 6037).
எழுத்தறிவு, நீச்சல், அம்பெறிதல் ஆகிய மூன்று கலைகளும் ஒருவரிடம் காணப்பட்டால் அவருக்கு "காமில் " எனும் பெயர் கொண்டு அரேபியர்கள் அழைத்துள்ளனர்.
இம்மூன்றிலும் அஸீத் இப்னு ஹுழைர் (ரழி), ஸஃத் இப்னு உபாதா (ரழி) ஆகிய இருவரும் அப்போது பிரசித்தி பெற்றவர்களாக இருந்துள்ளார்கள்.

ஹிஜ்ரி ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த இமாம் ஸுயூதி (ரஹ்) அவர்கள் நீச்சலின் மகிமைகள் குறித்து ஓர் நூலை எழுதி, அதில் நீச்சல் பற்றி நபித்தோழர்கள் கூறிய அனைத்து செய்திகளையும் பதிவு செய்துள்ளார்கள்.
நபி ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்கள் சில சமயங்களில் நீந்துவதற்கு ஆர்வம் கொண்டிருந்தார்கள்.
ஒருமுறை ஒரு குளத்தில் நபியவர்களும், நபித்தோழர்களும் நீந்திக் கொண்டிருந்தபோது, நபியவர்கள் ஒவ்வொருவருக்கும் ஜோடியை நியமித்து, ஒவ்வொருவரும் தமது ஜோடியை நோக்கி நீந்த செல்லவேண்டும் என கூறினார்கள்.
நபி (ஸல்) அவர்களுக்கு ஜோடியாக அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்கள் இருந்தார்கள். நபியவர்கள் நீந்தியவாறு அவர்களிடம் சென்று அவளுடைய கழுத்தை பிடித்துக் கொண்டார்கள்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 65

(அம்பெறிதல் போட்டி)

அம்பெறிதல் என்பது நபியவர்கள் காலத்தில் சிறுவர்கள் முதல், வயோதிபர்கள் வரை விரும்பிப் பயின்ற ஓர் விளையாட்டாகவும் , கலையாகவும் காணப்பட்டது. அம்பெறிவதைக் கற்று அதை மறந்தவர் நபியவர்களைச் சார்ந்தவர் கிடையாது எனும் எச்சரிக்கை வரும் அளவுக்கு அதி முக்கியத்துவம் வாய்ந்த ஓர் விளையாட்டாக அது இருந்துள்ளது.
அப்துர் ரஹ்மான் இப்னு ஷுமாசா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள், ஃபுகைம் அல்லக்மீ என்பவர் உக்பா பின் ஆமிர் (ரழி) அவர்களிடம் "(முதியவரான) தாங்கள் (அம்பெய்வதற்காக) இவ்விரு இலக்குகளுக்கிடையே உங்களைச் சிரமப்படுத்திக் கொள்கிறீர்களே!" என்று கேட்டார்.
அதற்கு உக்பா பின் ஆமிர் (ரழி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து ஒரு செய்தியை நான் செவியுற்றிராவிட்டால் இதற்காக நான் சிரமம் எடுத்துக்கொள்ளமாட்டேன்" என்று பதிலளித்தார்கள்.
இதன் அறிவிப்பாளரான ஹாரிஸ் பின் யஅகூப் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
நான் அப்துர் ரஹ்மான் பின் ஷுமாசா (ரஹ்) அவர்களிடம், "அது என்ன (செய்தி)?" என்று கேட்டேன்.
அதற்கு அப்துர் ரஹ்மான், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், யார் அம்பெய்வதைப் பயின்ற பின் அதைக் கைவிட்டுவிடுகிறாரோ அவர் "நம்மைச் சேர்ந்தவர் அல்லர்" அல்லது "(நமக்கு) மாறுசெய்துவிட்டார்" என்று கூறினார்கள்" என விடையளித்தார்கள். (நூல்: முஸ்லிம் 1918).

நபி (ஸல்) அவர்கள் காலத்தில் காணப்பட்ட சில விளையாட்டுக்களும், பொழுபோக்கு அம்சங்களும் நேரத்தை வீணடிப்பவையாக அமையவில்லை. அவை இவ்வுலக வாழ்வுக்கான உடல் வலிமை, உள வலிமையைத் தந்ததோடு மறுமையில் வெற்றி பெறுவதற்கான உயரிய சில நோக்கங்களையும் கொண்டிருந்தது.
முஸ்லிம் சமூகத்தவர்கள் இத்தகு பொழுது போக்கு அம்சங்களில் ஈடுபடும் போது வீர உணர்வு அவர்களிடம் ஏற்பட வேண்டும் எனும் நோக்கத்தை சில விளையாட்டுக்கள் கொண்டிருந்தன. சண்டைப் பயிற்சிகள், வால்வீச்சு, அம்பெறிதல், குதிரைப் போட்டி, ஒட்டக போட்டி போன்ற விளையாட்டுக்கள் இதற்கு உதாரணமாகும்.
ஸலமா இப்னு அக்வஃ (ரழி) அறிவித்தார்கள்.

அஸ்லம் கூட்டத்தார் கடைவீதியில் அம்பெறிந்து (விளையாடிக்) கொண்டிருக்கையில் (அவ்வழியாக) இறைத்தூதர் (ஸல்) அவர்கள் வெளியே புறப்பட்டு வந்தார்கள்.
அதைக் கண்டதும், 'இஸ்மாயீலின் சந்ததிகளே! அம்பெறியுங்கள். ஏனெனில், உங்கள் தந்தை(யான இஸ்மாயீல் - அலை - அவர்கள்) அம்பெறிபவராக (வில் வித்தையில் தேர்ச்சி பெற்றவராக) இருந்தார்கள்.
'நான் இன்ன குலத்தாருடன் இருக்கிறேன்' என்று இருதரப்பினரில் ஒரு தரப்பாரைக் குறிப்பிட்டுக் கூறினார்கள்.
உடனே மற்றொரு தரப்பினர் (விளையாட்டைத் தொடராமல்) நிறுத்திவிட்டார்கள்.
அப்போது நபி (ஸல்) அவர்கள், 'இவர்களுக்கென்ன நேர்ந்தது?' என்று கேட்க, அவர்கள், 'நீங்கள் இன்ன குலத்தாரோடு இருக்க, நாங்கள் எப்படி அம்பெறிவோம்?' என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், '(தொடர்ந்து) அம்பெறியுங்கள். நான் உங்கள் ஒவ்வொருவருடனும் இருக்கிறேன்' என்று பதிலளித்தார்கள். (நூல்: புஹாரி 3507).
உஹது போரில் அம்பெறியும் வீரர்களின் பங்கு

நபி (ஸல்) அவர்கள் மலையின் மீது நிறுத்திய வீரர்கள் இஸ்லாமியப் படைக்குச் சாதகமான சூழ்நிலையை ஏற்படுத்துவதில் பெரும் பங்கு வகித்தனர்.
காலித் இப்னு வலீதின் தலைமையின் கீழ், பாவி அபூ ஆமின் உதவியுடன் எதிரிகள் மூன்று முறை இஸ்லாமியப் படையின் இடது பாகத்தை முறியடிக்க முயன்றனர்.
முஸ்லிம்களின் பின்புறமாகத் தாக்குதல் தொடுத்து அணியில் சேதங்களையும் குழப்பங்களையும் உண்டுபண்ணி, அதைத் தொடர்ந்து பெரும் தோல்வியை முஸ்லிம்களுக்கு ஏற்படுத்திவிடலாம் என்று மூன்று முறை இம்மலைப் பகுதியின்மீது எதிரிகள் தாக்குதல் நடத்தினர்.
ஆனால், மலை மீதிருந்து அம்பெறியும் வீரர்கள் இவர்களின் மீது அம்பு மழை பொழிந்து இவர்களின் மூன்று தாக்குதல்களையும் முறியடித்தனர். (ஃபத்ஹுல் பாரி)

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 66

(ஈட்டியெறியும் போட்டி )

1621. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் மீதாணையாக! (ஒரு பெருநாள் தினத்தன்று) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது பள்ளிவாசலி(ன் வளாகத்தி)ல் அபிசீனியர்கள் ஈட்டியெறிந்து (வீர விளையாட்டு) விளையாடிக்கொண்டிருந்தனர்.
அவர்களது விளையாட்டை நான் பார்ப்பதற்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனது அறைவாசலில் நின்றபடி தமது மேல்துண்டால் என்னை மறைத்துக்கொண்டிருந்தார்கள்.
நானாக (விளையாட்டை ரசித்துச் சலிப்புற்று)த் திரும்பும்வரை எனக்காகவே அவர்கள் நின்று கொண்டிருந்தார்கள். கேளிக்கைகள் மீது பேராவல் கொண்ட இளம்வயதுப் பெண் எவ்வளவு நேரம் வேடிக்கை பார்ப்பாள் என்பதை நீங்களே மதிப்பிட்டுக்கொள்ளுங்கள். ஸஹீஹ் முஸ்லிம்

உசாமா பின் ஸைத் பின் ஹாரிஸா (ரலி) அவர்கள் கூறியதாவது:
"எங்களை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஜுஹைனா குலத்தைச் சேர்ந்த "ஹுரக்கா" கூட்டத்தாரிடம் அனுப்பிவைத்தார்கள். நாங்கள் அந்தக் கூட்டத்தாரிடம் காலையில் சென்றடைந்தோம். (அவர்களுடன் நடந்த சண்டையில்) அவர்களை நாங்கள் தோற்கடித்தோம்.
அப்போது நானும் அன்சாரிகளில் ஒருவரும் அந்தக் கூட்டத்தைச் சேர்ந்த ஒருவரிடம் போய்ச் சேர்ந்தோம். அவரை நாங்கள் சுற்றி வளைத்துக்கொண்டபோது, அவர் "லா இலாஹ இல்லல்லாஹ்" (அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறு இறைவன் இல்லை) என்று சொல்ல, அந்த அன்சாரி (அவரைக் கொல்லாமல்) விலகிக்கொண்டார்.
நான் என் ஈட்டியால் அவரைக் குத்திக் கொன்றுவிட்டேன். நாங்கள் (திரும்பி) வந்தபோது நபி (ஸல்) அவர்களுக்கு இந்தச் செய்தி எட்டவே அவர்கள் என்னிடம், "உசாமா! அவர் "லா இலாஹ இல்லல்லாஹ்" என்று (ஏகத்துவ வாக்கியத்தை) மொழிந்த பின்னருமா அவரை நீ கொன்றாய்?" என்று கேட்டார்கள்.
நான், "அவர் உயிரைப் பாதுகாக்கவே (அவ்வாறு கூறினார்)" என்று சொன்னேன்.
நபி (ஸல்) அவர்கள் "அவர் "லா இலாஹ இல்லல்லாஹ்" என்று மொழிந்த பின்னருமா அவரை நீ கொன்றாய்?" என்று (மீண்டும்) கேட்டார்கள்.
நபி (ஸல்) அவர்கள் அந்தக் கேள்வியையே திரும்பத் திரும்பக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். எந்த அளவிற்கென்றால், நான் "(அந்தப் பாவத்தைச் செய்த) அந்த நாளுக்கு முன்பு இஸ்லாத்தை ஏற்காமல் (அதற்குப் பிறகு ஏற்று) இருந்திருந்தால் நன்றாயிருந்திருக்குமே; (பாவம் மன்னிக்கப்பட்டிருக்குமே!)" என்றுகூட ஆசைப்பட்டேன். முஸ்லிம் : 159.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 67

மல்யுத்தம்

ஓர் முஃமினை உடல் ரீதியாகவும், உள ரீதியாகவும், சமூகவியல் ரீதியாகவும் பலப்படுத்துவதற்காகவும் சில விளையாட்டுக்கள் அறிமுகம் செய்யப்பட்டன.
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள், “பலசாலியான ஓர் முஃமின் பலவீனமான ஓர் முஃமினை விடவும் அல்லாஹ்விடத்தில் சிறந்தவராகவும், அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பத்திற்குரியவராகவும் காணப்படுகிறார்”. (அபூஹுரைரா (ரழி), முஸ்லிம் 2664).
மல்யுத்தம் என்பது ஜாஹிலிய்யாக் காலத்தில் விளையாடப்பட்ட சிறந்த உடற்சார் விளையாட்டாக காணப்பட்டது.
உக்காழ் சந்தையில் அரேபிய கோத்திரங்கள் ஒவ்வொரு வருடமும் மல்யுத்த போட்டியை ஏற்பாடு செய்வார்கள். இதைப் பார்ப்பதற்காய் அதிகமான மக்கள் அங்கு திரழ்வார்கள்.
அக்காலத்தில் உமர் (ரழி) அவர்களும் சிறந்த மல்யுத்த வீரராக இருந்தார்கள். இஸ்லாம் வந்ததன் பின் சிறு திருத்தங்களுடன் மல்யுத்தத்தை அது ஆதரித்தது.
நபியவர்கள் காலத்து மல்யுத்தம் என்பது தற்போது நடைபெறுவதைப் போன்று காட்டுமிராண்டித் தனமாகவும், ஒழுக்க சீர்கேட்டை அடிப்படையாக வைத்தும் இருக்க வில்லை.
எவ்வித சூதாட்டமும் அற்ற, எதிர்வாதிக்கு எவ்வித உபாதைகளையும் ஏற்படுத்தாத, ஒழுக்கத்துக்கு முக்கியத்துவம் வழங்குகிற அடிப்படையிலே அது நிகழ்த்தப்பட்டது.
நபி (ஸல்) அவர்களும் மல்யுதத்தில் கலந்து கொண்டுள்ளார்கள்.
ருகானா என்ற நபித்தோழர் இஸ்லாத்தை ஏற்பதற்கு முன்னர் நபி (ஸல்) அவர்களுடன் மல்யுத்தத்தில் ஈடுபட்டார். அப்போட்டியில் நபியவர்கள் போட்ட விதிகள் அவரை இஸ்லாத்தை ஏற்கும் அளவுக்கு ஒழுக்கமானதாகவும், மனிதாபிமானத்தை அடிப்படையாகக் கொண்டதாகவும் இருந்தது.
சிறு சுருக்கத்துடன்- (நூல்: அல்பிதாயா வந்நிஹாயா 03/101).

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 68

உடற்திறனுடன் தொடர்புபடாத விளையாட்டுக்கள்.

உடல் திறனைப் பயன்படுத்தாமல் முன்னெடுக்கப்படும் விளையாட்டுகளை இது குறிக்கும். இவற்றுக்கு மன விளையாட்டுகள் எனவும் கூறப்படும்.
இதில் தாயக்கட்டையுடன் தொடர்பான விளையாட்டுக்கள், சதுரங்கம், சீட்டுக்கட்டு, வீடியோ கேம் போன்றவை அடங்கும். இதை இரு பிரிவுகளாக நோக்கலாம்.
முதல் பிரிவு: இது தடை என்பதற்கு இஸ்லாத்தில் நேரடியாகவே ஆதாரம் இடம்பெற்ற விளையாட்டுக்கள்.
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள், “யார் தாயக்கட்டை விளையாட்டை விளையாடுகிறாரோ அவர் பன்றியின் இறைச்சியிலும், அதன் இரத்தத்திலும் தனது கையை நுழைத்தவராவார்” (அறிவிப்பவர்: புரைதா இப்னு அல்ஹஸீப் அல் அஸ்லமீ (ரழி), நூல்: முஸ்லிம் 2260)
இவ் ஹதீஸில் குறிப்பிடப்பட்டதைப் போன்று தாயக்கட்டையுடன் தொடர்புபட்ட பர்சீஸி, லூடோ, பேக்காமன், மான்கலா, மேல்பிஸ், ஏணி பாம்பு, சவுபர், நைன் மென்ஸ் மொரிஸ் போன்ற விளையாட்டுக்களை விளையாடுவது கூடாது.
இமாம் அல்முனாவி (ரஹ்) அவர்கள் கூறினார்கள்,
‘நர்தஷீர் என்பது பாரசீக சொல்லாகும். இது அரபியிலும் அவ்வாறே பயன்படுத்தப்படுகிறது. இது தடை செய்யப்பட்டதற்கு பின்வருமாறு காரணம் முன் வைக்கப்படுகிறது.

பாரஸீகத்தின் கிளை அரசான சசானிய அரசின் மன்னரான ஸாபூர் இப்னு அஸ்தஷீரினால் நர்தஷீர் (பேக்காமன்) விளையாட்டு உருவாக்கப்பட்டது. இதற்காக பயன்படுத்தப்படும் அட்டை பூமி எனவும், அதில் உள்ள நான்கு பிரிவுகளும் 4 வாரங்களைக் குறிப்பதாகவும் இருந்தது.
அதற்காகப் பயன்படுத்தப்பட்ட 30 காய்களில், 15 காய்கள் சிவப்பு நிறத்திலும், மற்றைய 15 கறுப்பு நிறத்திலும் காணப்பட்டது. சிவப்பு நிறம் பகல் கடவுளையும், கறுப்பு நிறம் இரவுக் கடவுளையும் குறிப்பதாக அடையாளப்படுத்தப்பட்டது.
இதில் உள்ள 12 தங்குமிடங்கள் (ஹோம்) 12 மாதங்களைக் குறிப்பதாக அடையாளப்படுத்தப்பட்டது. இதற்காக பயன்படுத்தப்பட்ட தாயம் மனிதனின் ராசியைத் தீர்மானிக்கும் கிரகங்களைக் குறிப்பதாக இருந்தது.
ஒருவர் தனது விதியை அறிய விரும்பினால் இவ்விளையாட்டை விளையாடலாம். இது நெருப்பு வணங்கிகளின் விளையாட்டாகும். இதை தற்போது விளையாடுவது அவர்களின் உருவாக்க நியதியை திரும்பவும் உயிர்ப்பிப்பதாக இருப்பதால், அதிகமான ஸலப் அறிஞர்கள் இதை தடைசெய்துள்ளனர்’. (நூல்: ஃபைழுல் கதீர் 06/219).

இது இஸ்லாத்தின் ஓரிறைக் கொள்கைக்கும், ஆறாம் நம்பிக்கையான விதிக்கும் முரணாக இருப்பதால் நபி (ஸல்) அவர்கள் இதை தடைசெய்தார்கள்.
தற்காலத்தில் விளையாடப்படும் தாயக்கட்டையுடன் தொடர்பான விளையாட்டுக்களில் அத்தகைய நடைமுறை கையாளப்படாவிட்டாலும், நெருப்பு வணங்கிகளது கொள்கையின் பிரதிபலிப்பு இவற்றில் இருப்பதால், தற்கால இஸ்லாமிய அறிஞர்களும் இவற்றை தடை செய்துள்ளனர்.
இரண்டாம் பிரிவு: இஸ்லாத்தில் விளையாட முடியும் எனும் அனுமதியோ, விளையாடக் கூடாது என தடையோ வராத விளையாட்டுக்கள்.
இப்பிரிவில் உள்ளடங்கும் விளையாட்டுக்களும் இரு வகையாக நோக்கப்படுகிறது.
முதல் வகை: இஸ்லாம் தடுத்த ஏனைய விடயங்களுடன் தொடர்புபடும் விளையாட்டுக்கள்.
இதற்கு உதாரணமாக சிலவற்றைப் பார்க்கலாம்.
1. உருவச் சிலைகள் வைத்து விளையாடப்படுபவை. இதில் சதுரங்கம் போன்ற உருவச் சிலைகளுக்கு ஒப்பாக காய்களைப் பயன்படுத்தி விளையாடும் முறை தடுக்கப்படுகிறது.
அலி (ரழி) அவர்கள் சதுரங்கம் விளையாடிக் கொண்டிருந்த ஓர் குழுவை கடந்து செல்லும் போது,
‘என்ன இது? சிலைகளிடம் இருக்கிறீர்களே!’ என்று கடிந்துகொண்டு சென்றார்கள்.
இது விஷயத்தில் அலி (ரழி) அவர்கள் கூறியதே சரி என இமாம் அஹ்மத் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள். (மைஸரா இப்னு ஹபீப் (ரஹ்), நூல்: அல்மஹல்லி 09/63).

Rahmath Rajakumaran

ப்ளு வேல்” என்ற விளையாட்டு ஆரம்பத்தில் மக்களிடத்தில் மிகவும் வேகமாக பரவினாலும், குறிப்பிட்ட சில நாட்களில் மனிதர்களின் உயிருக்கே மிகப்பெரும் ஆபத்தை விளைவிக்கின்ற விளையாட்டாக மாறி, “ப்ளு வேல்” என்ற விளையாட்டு நாளவில் தடை செய்யப்பட்ட விளையாட்டாக ஆனது. இந்த “ப்ளு வேல்” விளையாட்டையெல்லாம் பின்னுக்கு தள்ளி விட்டு உலக அரங்கில் இளைஞர்களிடத்தில் ஆக்கிரமித்திருக்கின்ற ஒரு உயிர்க்கொல்லி விளையாட்டு தான் “பப்ஜி – ‘பிளேயர்ஸ் அன்நோன் பேட்டில்கிரவுண்ட்” (PUBG – Player Unknown’s Battlegrounds).
பப்ஜி கேமை ஆண்ட்ராய்ட் ஃபோன்களிலும், ஆப்பிள் ஐ ஃபோன்களிலும் விளையாட முடியும். மாணவர்கள், இளைஞர்கள், குடும்பஸ்தர்கள் என்று வயது வரம்பு பாராமல் அத்துனை நபர்களும் செல்ஃபோன் திரையை வெறிபிடித்துக் கொண்டு பார்த்தவாறு பப்ஜி கேமை விளையாடிக் கொண்டிருப்பதை பார்க்க முடிகின்றது.
வெறிபிடித்து விளையாடுகின்ற அளவுக்கு

இந்த விளையாட்டில் அப்படி என்ன தான் இருக்கின்றது? என்று கேட்டால், பல நபர்கள் கூட்டமாக சேர்ந்து ஒருவர் மற்றவரை சுட்டுத் தள்ளுகின்ற விளையாட்டு தான். ஆனால் மற்ற கேம்களை போலல்லாமல் பப்ஜி சுவாரஸ்யமான விளையாட்டு என்று தெரிவிக்கின்றனர்.
ஒரே நேரத்தில் பல நூறு பேர் உலகின் வெவ்வேறு இடங்களில் இருந்துகொண்டே இயர்போன் வழியாக ஒருவரை ஒருவர் தொடர்பு கொண்டு ஆன்லைன் வழியாக விளையாடும் விளையாட்டு பப்ஜியாகும்.
இது முழுக்க முழுக்க துப்பாக்கி, வெடிகுண்டுகள் போன்ற ஆயுதங்களுடன், தங்களை வீரர்களாக உருவகப்படுத்திக் கொண்டு தங்கள் எதிரியை அழிக்க தனியாகவோ நண்பர்களுடனோ போராடும் வன்முறைகள் நிறைந்த விளையாட்டாகும்.
இதில் விளையாடுபவர்களெல்லாம் நிஜவுலகில் பயன்படுத்தப்படும் துப்பாக்கி, வெடிகுண்டுகளின் நுண்ணிய தகவல்களைக் கூடத் தெரிந்து வைத்திருப்பது அவசியமாகும்.
பலநபர்கள் கூட்டாக சேர்ந்து, ஆயுதங்களை வாங்கி கண்ணில் படுகின்ற நபர்களையெல்லாம் சுட்டுத் தள்ளிக் கொண்டு முன்னேறி செல்ல வேண்டும். இறுதியாக யார் எஞ்சி உள்ளாரோ அவரே வெற்றி பெற்றவராவார் என்று கூறப்படுகின்றது.
இதற்கிடையில் ஆயுதங்களை சேகரிப்பது, ஒளிந்து கொள்ளுவது, ஓடுவது, சுட்டுத் தள்ளுவது என்று விளையாட்டு முழுக்க பரபரப்பாகவே செல்லும் என்றும் சொல்லிக் கொள்கின்றனர். விளையாடுவோரை செல்ஃபோனிலேயே இருக்க கட்டிப் போட்டு விடுகின்றது இந்த பப்ஜி.
சிலர் ஆர்வக் கோளாறின் உச்சகட்டத்திற்கு சென்று, படிப்பதை மறந்து விட்டு மணிக்கணக்கில் பப்ஜி விளையாட்டில் மூழ்கி திளைக்கின்றனர். சில ஆர்வக் கோளாறுகள் ஃபோனில் சார்ஜ் தீர்ந்து போனாலும், கைகளிலே பவர் பேங்க் உடனோ அல்லது சார்ஜ் ஏற்றியவாறே விளையாடி பப்ஜி போதையில் மூழ்கி விடுகின்றனர்.
சுமார் 30 கோடி பேர் பப்ஜி விளையாட்டைப் பதிவிறக்கம் செய்துள்ளதாகவும், ஒரே நேரத்தில் உலகளவில் சுமார் 5 கோடி பேர் விளையாடி வருவதாகவும் புள்ளி விவரங்கள் தெரிவிக்கின்றன.
இவ்வளவு பாரதூரமான உயிர்க்கொல்லி நோய் பப்ஜி விளையாட்டு என்பதை உலக அரங்கில் பலதரப்பட்ட புள்ளி விவரங்களின் வாயிலாக அதிர்ச்சிகரமான தகவலை வெளியிடுகின்றனர்.பப்ஜி ஒரு மனநோய்:
பப்ஜி நோயினால் மனநலம் பாதிக்கப்பட்டு தூக்கமின்மையினால் அதிகமாக மாத்திரைகளை பயன்படுத்துவதாகவும், தூங்க செல்கின்ற நேரத்தில், தூக்கத்தை கெடுக்கும் விதமாக காதுகளில் வந்து யாரோ கத்துவதாகவும் தெரிவிக்கின்றனர்.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 69

(ஒட்டகப் பந்தயம்)

அப்துல்லாஹ் இப்னு உமர் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள், நபி (ஸல்) அவர்கள் குதிரைகளுக்கிடையே பந்தயம் வைப்பார்கள். அதில் வெற்றி பெறும் குதிரை வீரருக்கு பரிசில்கள் வழங்குவார்கள். (நூல்: அஹ்மத் 08/31).
அனஸ் இப்னு மாலிக் (ரழி) அவர்கள் அறிவித்தார்கள், நபி (ஸல்) அவர்களிடம் 'அள்பா' என்று அழைக்கப்பட்ட ஒட்டகம் ஒன்று இருந்தது. அது பந்தயத்தில் எவரும் அதை முந்த முடியாத (அளவுக்கு விரைவாக ஓடக் கூடிய)தாக இருந்தது.
அப்போது கிராமவாசி ஒருவர் ஆறு வயதுக்குட்பட்ட ஒட்டகம் ஒன்றின் மீது வந்தார். அது நபி (ஸல்) அவர்களின் ஒட்டகத்தை முந்தியது. இது முஸ்லிம்களுக்கு மனவேதனையை அளித்தது.
இதையறிந்தபோது நபி (ஸல்) அவர்கள், 'உலகில் உயர்ந்து விடுகிற பொருள் எதுவாயினும் (ஒருநாள்) அதைக் கீழே கொண்டு வருவதே அல்லாஹ்வின் நியதியாகும்' என்று கூறினார்கள். (நூல்: புஹாரி 2872).
போட்டியின் போது தோல்வியை ஒப்புக் கொள்வதை நபியவர்கள் அழகாக கையாண்டுள்ள விதத்தை இவ் ஹதீஸ் குறிப்பிடுகிறது. இத்தகு பந்தயங்களில் சூது இடம்பெறவில்லை என்பதும் நாம் இங்கு கவனிக்க வேண்டிய ஓர் முக்கிய விஷயமாகும்.

அரபு நாடுகளில் ஒட்டகப் பந்தயங்கள் நடைபெறுவது பாரம்பரிய வழக்கம். இந்த ஒட்டகப் பந்தயங்கள் நடைபெறும் போது ஒட்டகத்தை ஓட்டும் ஜாக்கிகளாக இளம் சிறார்கள் அதன் முதுகில் கட்டப்படுவார்கள்.

இளம் சிறார்களின் அழுகை மற்றும் பயத்தால் எழும் அலறல் சத்தம் கேட்டு ஒட்டகங்கள் பயந்து வேகமாக ஓடுமாம்.
இந்த சர்ச்சைக்குரிய நடைமுறைக்கு எதிராக கண்டனங்கள் வலுத்ததை தொடர்ந்து குவைத்தில் கடந்த 2015 ஆம் ஆண்டு முதல் இயந்திர குழந்தைகளை ஒட்டக முதுகில் கட்டி போட்டிகளை நடத்தி வருகின்றனர்.
இந்த ரோபோட்டுக்கள் இளம் சிறார்களைப் போலவே குரலெழுப்பி அழுது அரற்றக்கூடியவை. இவையே தற்போது குவைத்தின் கபாது ஒட்டக ரேஸ் மைதானத்தில் (Kabad. Camel Race Course, Kuwait) பயன்படுத்தப்பட்டு வருகிறது.
இந்த ரோபோ ஜாக்கிகள் தான் சவுதி, அமீரகம் உள்ளிட்ட அனைத்து வளைகுடா அரபு நாடுகளிலும் தற்போது பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 70

(குதிரை பந்தயம்)

அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மெலிரியவைக்கப்பட்ட (பயிற்சியளிக்கப்பட்ட) குதிரைகளுக்கிடையே "ஹஃப்யா' எனும் இடத் திலிருந்து பந்தயம் வைத்தார்கள்.
அவற்றின் (பந்தய) எல்லை "சனிய்யத்துல் வதா' எனும் மலைக் குன்றாகும். மேலும் அவர்கள் மெலியவைக்கப்படாத (பயிற்சி பெறாத) குதிரைகளுக்கிடையேயும் அந்த சனிய்ய(த்துல்வதா)விலிருந்து பனூ ஸுரைக் குலத்தாரின் பள்ளிவாசல் வரை பந்தயம் வைத்தார்கள். புகாரி-420
நபி (ஸல்) அவர்கள் ஸன்யதுல் விதா என்ற இடத்திலிருந்து ஹஃப்யா என்ற இடம் வரை 5 மைல்கள் சேனம் பூட்டப்பட்ட
குதிரையை குதிரை பந்தயத்தில் ஓட்டி சென்றார்கள்.
ஸனியாவிலிருந்து பனூ ஸுரைக்கின் பள்ளி வாயில் வரை 6 மைல்கள் சேனம் பூட்டப்படாத குதிரையை ஓட்டினார்கள்.
சேனம் பூட்டப்பட்டு குதிரையில் சவாரி செய்வதென்பது அதிலேயே பயிற்சி பெற்ற வீரர்களால் மட்டும்தான் முடியும்.
நபி (ஸல்) அவர்கள் சேனம் பூட்டப்பட்டாமல் 6 மைல்கள் (இந்த கால கணக்குபடி 9 கி.மீ) குதிரை பந்தயத்தில் சென்றுள்ளார்களென்றால், அதுவும் 50 வயதுக்கு பின்னால் அவர்களின் உடல் வலிமையை தெரிந்து கொள்ளலாம்.
நபி (ஸல்) அவர்கள் ஜிப்பா தலைப்பாகையுமாக உடல் உழைப்பை செலுத்தாமல் பள்ளிவாசலுக்குள் முடங்கி கிடக்கவில்லை. பல வீரதீர போட் டிகளில் பங்கெடுத்து உள்ளார்கள் என்பது இதிலிருந்து தெரிய வருகிறது

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 71

(ஓட்டப் பந்தயம் )

ஓட்டப் பந்தயம் என்பது உடலுக்கு புத்துணர்ச்சியூட்டக் கூடிய ஓர் விளையாட்டாகும். நபி (ஸல்) அவர்கள் சிறுவர்கள், மனைவி, தோழர்கள் என அனைவருக்கும் ஓட்டப் பந்தயம் வைத்துள்ளார்கள்.
ஆயிஷா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்,

“நான் நபி (ஸல்) அவர்களுடன் சில பயணங்களில் சென்றிருக்கிறேன். அப்போது உடல் பருமனில்லாமல் (ஒல்லியாக) இருந்தேன். அப்போது, ‘முன்னே செல்லுங்கள்! முன்னே செல்லுங்கள்!’ என்று நபி (ஸல்) அவர்கள் மக்களிடத்தில் சொன்னார்கள். பிறகு என்னிடத்தில், ‘என்னுடன் ஒட்டப் பந்தய போட்டிக்கு வா!’ என்றார்கள். நான் அவர்களுடன் போட்டிக்கு சென்று அவர்களை முந்தினேன். அப்போது (மீண்டும் ஓடுவது பற்றி) என்னிடத்தில் எதுவும் சொல்லவில்லை.
என் உடல் பருமனானது.நான் (ஏற்கனவே நடந்த ஓட்டப்பந்தயம் பற்றி) மறந்துவிட்டேன். அவ்வாறே அவர்களுடன் பயணத்தில் சென்றேன். அப்போது அவர்கள் மக்களிடத்தில், ‘முன்னே செல்லுங்கள்! முன்னே செல்லுங்கள்!’ என சொன்னார்கள். பிறகு என்னிடத்தில், ‘என்னுடன் ஒட்டப் பந்தயத்திற்கு வா’ என்றார்கள்.
நான் அவர்களுடன் போட்டி போட்டேன். அவர்கள் என்னை முந்திவிட்டு சிரித்துக் கொண்டே அதற்கு பதிலாக இது என்றார்கள். (நூல்: அபூதாவுத் 2578, நஸாஈ 8944).
தபூக் யுத்தம் முடிந்து நபியவர்களும், நபித்தோழர்களும் மதீனா நோக்கி வரும் போது ஓர் அன்ஸாரித் தோழர் வேகமாக முன்னேறிச் சென்றார். அவரை முந்துபவர்கள் எவரும் இல்லையா எனக் கேட்டபடி அவர் முன்னேரிச் சென்றார்.
அப்போது ஸலமா இப்னு அல் அஊஃ (ரழி) அவர்கள் நபியவர்களிடம் அனுமதி பெற்று அவருடன் ஓட்டப் பந்தயத்தில் ஈடுபட்டார். -நீண்ட ஹதீஸின் சுருக்கம்- (அறிவிப்பவர்: ஸலமா இப்னு அல் அஊஃ (ரழி), நூல்: இர்வாஉல் ஹலீல் 05/332)

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 72

(பொம்மைகள் வைத்து விளையாடுதல்)

குழந்தைகளுக்காக வடிவமைக்கப்பட்டுள்ள உருவ பொம்மைகளும் அதன் முழு வடிவத்தையும் கொண்டிருக்கும் பட்சத்தில் இதில் உள்ளடங்குமென பெரும்பாலான அறிஞர்கள் கூறியுள்ளனர்.
மிருகங்கள், பறவைகள், மனித உருவ பொம்மைகள் போன்றவற்றை அவை முழுவடிவத்தைப் பெற்றிராத பட்சத்தில் குழந்தைகளுக்கு வாங்கிக் கொடுப்பதை இஸ்லாம் தடுக்கவில்லையென சில அறிஞர்கள் கூறியுள்ளனர்.
குறிப்பாக பெண்பிள்ளைகள் பிற்காலத்தில் குழந்தை வளர்ப்பில் ஈடுபடுவதற்கு ஏதுவாக மனித உருவிலான பொம்மைகளை பயன்படுத்த அனுமதியளித்துள்ளனர்.
ஆயிஷா (ரழி) அவர்கள் அறிவித்தார்கள், “நான் (சிறுமியாக இருந்தபோது) பொம்மைகள் வைத்து விளையாடுவேன். எனக்குச் சில தோழியர் இருந்தனர். அவர்கள் என்னுடன் விளையாடிக் கொண்டிருப்பார்கள். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் வீட்டுக்குள் நுழைந்தால் அவர்களைக் கண்டதும் தோழியர் (பயந்து கொண்டு) திரைக்குள் ஒளிந்து கொள்வார்கள். அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள் என் தோழியரை என்னிடம் அனுப்பி வைப்பார்கள். தோழிகள் என்னுடன் (சேர்ந்து) விளையாடுவார்கள்”. (நூல்: புஹாரி 6130, முஸ்லிம் 2440).
ஆயிஷா (ரலி ) அவர்கள் அறிவிக்கிறார்கள் :
"அல்லாஹ்வின் தூதர் நபி (ஸல்) அவர்கள் 'தபூக் ' அல்லது 'கைபர் ' போரிலிருந்து திரும்பி வந்தார்கள் . அப்போது என்னுடைய வீட்டின் முன் புறத்திலுள்ள சுவரின் மாடத்தில் ஒரு திரைச்சீலை தொங்கிக் கொண்டிருந்தது.

அந்த வேளையில் காற்று வீசியது. எனவே , அந்தக் காற்று திரைச்சீலையின் ஓரப்பகுதியை விலக்க, அங்கிருந்த என்னுடைய விளையாட்டு மொம்மைகள் வெளியே தெரிந்தன.
அப்போது நபி (ஸல்) அவர்கள் :

"ஆயிஷா ! இவை என்ன ? "
" என்னுடைய பொம்மைகள் "
அப்போது அவற்றுக்கிடையே துண்டுத் துணிகளாலான இரு இறக்கைகள் கொண்ட குதிரையைப் பார்த்த நபியவர்கள் ,
" இதோ இவற்றின் நடுவில் நான் காண்கின்ற இது என்ன ? "
" குதிரை "
" அதன் மேல் என்ன இருக்கிறது ?"
" இரண்டு இறக்கைகள் "
" என்ன, இறக்கைகள் முளைத்த பறக்கும் குதிரையா ? "
" ஆமாம் . இறக்கைகள் முளைத்த பறக்கும் குதிரை. இறைத்தூதர் சுலைமான் (அலை) அவர்களிடம் இறக்கைகள் முளைத்த குதிரைகள் இருந்தன என்பதை நீங்கள் கேள்விபட்டதில்லையா ? "
அப்போது அல்லாஹ்வின் தூதர் நபி (ஸல்) அவர்கள் கடைவாய்ப் பற்கள் தெரியும் அளவுக்குச் சிரித்தார்கள்.
(நூல் : அபூதாவூத் )

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 73

( குத்துச் சண்டை )

முகத்தில் குத்து விட்டு விளையாடும் விளையாட்டு குத்துச் சண்டை முகம் என்பது ஒரு மனிதனின் கௌரவமான பகுதியாகும். அதில் அடிப்பதை இஸ்லாம் தடுத்துள்ளது. முகத்தில் அடித்து விளையாடும் குத்துச் சண்டை போன்ற சண்டை விளையாட்டுக்களை இஸ்லாம் இதன் மூலம் தடுக்கிறது.
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள், உங்களில் ஒருவர் (எவரையாவது) தாக்கினால் முகத்(தில் அடிப்ப)தைத் தவிர்க்கட்டும். (அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி), நூல்: புஹாரி 2559, முஸ்லிம் 2616).
குத்துச்சண்டை இஸ்லாத்தில் தடுக்கப்பட்ட ஒன்றாகும். குத்துச்சண்டையில் பாரிய சேதங்களும், மோசமான விளைவுகளும் ஏற்படுவதால் எவ்வகையிலும் இதனை ஆகுமாக்க முடியாது.
இஸ்லாமிய பிக்ஹ் மன்றம் குத்துச்சண்டை ஹராம் என்ற தனது தீர்ப்பை பின்வருமாறு விளக்குகிறது:
இன்று எமது நாடுகளில் நடத்தப்படும் குத்துச்சண்டை போட்டிகள் இஸ்லாமிய ஷரிஆ அடிப்படையில் ஹராமானது என்பதை ஏற்றுக்கொள்கின்றனர்.
போட்டியில் ஈடுபடும் ஒருவர் அடுத்தவருடைய உடம்பில் நோவினைகளை ஏற்படுத்துவதை ஆகுமாக்கிக் கொள்கிறார்.

சில குத்துகள் கண்களை குருடாக்கி விடுகின்றன, மூளையை செயலிழக்கச் செய்து விடுகின்றன, பாரதூரமான உட்காயங்களை ஏற்படுத்துகின்றன. சிலபோது மரணங்கள் கூட ஏற்பட வாய்ப்பிருக்கின்றன.
இவ்வாறான மோசமான விளைவுகள் ஏற்பட்டும் தாக்கியவர் மீது எவ்வித பொறுப்பும் சுமத்தப்படுவதில்லை, வெற்றி பெற்றவரது ஆதரவாளர்கள் வெற்றிக்களிப்பில் கொண்டாடுவது இன்னும் பாரதூரமானதாகும்.
அடுத்த மனிதனுடைய துன்பத்தில் இன்பம் காணுவது எவ்வகையிலும் ஏற்க முடியாதது. இஸ்லாமிய சட்டத்தில் இது முற்று முழுதாக ஹராமாகவே கருதப்படுகின்றது.
ஒருமனிதன் தன்னுடைய இரத்தத்தை ஓட்டுவதற்கான அனுமதியை அடுத்த மனிதனுக்கு கொடுத்து இருந்தாலும் அவனைக் கொல்ல முடியாது. கொலையில் ஈடுபட்டால் இஸ்லாம் விதிக்கும் தண்டனை அவனில் நிறைவேற்றப்படும்.

மேற்கூறிய காரணிகளை வைத்து குத்துச் சண்டை ஹராமானதாகவே கருதப்படுகின்றது. இது உடலுக்கான பயிற்சி என்ற கருத்தும் பிழையானது. உடற்பயிற்சி ஒரு போதும் அடுத்தமனிதனுக்கு நோவினை தரக்கூடியதாகவோ, தீங்கிழைக்கக் கூடியதாகவோ இருக்கக் கூடாது.
கிராம ரீதியாக, தேசிய ரீதியாக நடத்தப்படும் போட்டி நிகழ்ச்சிகளில் குத்துச்சண்டை நீக்கப்படவேண்டும். தொலைக்காட்சி நிகழ்ச்சி நிரல்களிலும் இவ்வகையான போட்டிகள் ஒளிபரப்பப்படுவது முற்று முழுதாக தவிர்க்கப்பட வேண்டும்.

**நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 74**
(பெருநாள் தொழுகை)

ஈத் பெருநாட்களில் குளிர்ந்த காலை நேரங்களில் அவரவர் வீடுகளிலிருந்து வெளிப்பட்டு (தொழ) செல்பவர்களுக்கு அல்லாஹ் அளப்பரிய அருளைப் பொழிகிறான். அறிவிப்பவர்: அனஸ்பின் மாலிக்(ரலி) நூல்: இப்னு அஸாகிர்
இரண்டு ஈட்டிகளின் உயரத்திற்கு சூரியன் உயரும்போது நோன்புப் பெருநாள் தொழுகையை நபி(ஸல்)தொழுவார்கள். (ஒரு ஈட்டியின் உயரம் என்பது ஏறத்தாள மூன்று மீட்டர்களாக ஆகும். அறிவிப்பாளர்: ஜுன்துப்(ரலி) நூல்: அஹ்மது இப்னுஹஸன்
நபி(ஸல்)அவர்கள் உண்ணாமல் நோன்புப் பெருநாள் தொழுகைக்கு புறப்பட மாட்டார்கள். ஹஜ்ஜுப் பெருநாள் தொழுகையைத் தொழுவதற்கு முன் உண்ண மாட்டார்கள் என புரைதா(ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். நூல்: திர்மிதீ

நபி(ஸல்)அவர்கள் ஈதுல் பித்ர் (நோன்பு) பெருநாளன்று காலையில் ஏழு பேரித்தம் பழங்களை சாப்பிடாமல் வெளியேற மாட்டார்கள் (அறிவிப்பாளர்: ஜாபிர்பின் சம்ரா(ரலி) நூல்: தப்ரானி மற்றோர் அறிவிப்பில் அவற்றை ஒற்றைப்படை எண்ணிக்கையில் உண்பார்கள் என்று கூறப்பட்டுள்ளது. (அறிவிப்பாளர்: அனஸ்(ரலி) புகாரி)
ஈத் பெருநாட்களை அல்லாஹ்வைப் புகழ்வது கொண்டும் தக்பீரைக் கொண்டும் அழகு படுத்துங்கள். அறிவிப்பாளர்: அனஸ்பின் மாலிக்(ரலி) நூல்:நயீம்
பெருநாள் வந்துவிட்டால் நபி(ஸல்)அவர்கள் (போவதற்கும் வருவதற்கும்) பாதைகளை மாற்றிக் கொள்வார்கள். புகாரி
நோன்புப் பெருநாளிலும் ஹஜ்ஜுப் பெருநாளிலும் (திடலில் தொழுவதால் தடுப்பாக) நபி(ஸல்) அவர்களுக்கு முன்னால் ஓர் ஈட்டி நாட்டப்படும். நபி(ஸல்)அவர்கள் (அதை நோக்கித்) தொழுவார்கள். இப்னுஉமர்(ரலி),புகாரி
நபி(ஸல்)அவர்கள் (பெருநாள் தொழுகைக்காகத்) தொழும் திடலுக்குப் புறப்படுவார்கள். அவர்களுக்கு முன்பே கைத்தடி எடுத்துச் செல்லப்பட்டுத் தொழும் இடத்தில் அவர்களுக்கு முன்னால் நாட்டப்படும். அதை நோக்கி நபி (ஸல்) தொழுவார்கள். இப்னு உமர்(ரலி), புகாரி
பெரும்பாலும் நபி(ஸல்)அவர்கள் பெருநாள் தொழுகைகளை திறந்த பொது மைதானத்தில் தொழுதுள்ளார்கள். மழை காலத்தில் பெருநாள் தொழுகையை பள்ளியில் நடத்தினார்கள். அறிவிப்பாளர்: அபூஹுரைரா(ரலி) அபூதாவூத், இப்னுமாஜா
நபி(ஸல்)அவர்கள் நோன்புப் பெருநாளிலும் ஹஜ்ஜுப் பெருநாளிலும் (பள்ளியில் தொழாமல்) திடலுக்குச் செல்பவர்களாக இருந்தனர்.

அவர்கள் முதன் முதலில் தொழுகையையே துவக்குவார்கள். தொழுது முடித்து எழுந்து மக்களை முன்னோக்குவார்கள். மக்களெல்லாம் தங்கள் வரிசைகளில் அப்படியே அமர்ந்திருப்பார்கள். அவர்களுக்குப் போதனைகள் செய்வார்கள். (வலியுறுத்த வேண்டியதை) வலியுறுத்துவார்கள்; (கட்டளையிட வேண்டியதை) கட்டளையிடுவார்கள். ஏதேனும் ஒரு பகுதிக்குப் படைகளை அனுப்ப வேண்டியிருந்தால் அனுப்புவார்கள். எதைப் பற்றியேனும் உத்தரவிட வேண்டியருந்தால் உத்தரவிடுவார்கள். பின்னர் (இல்லம்) திரும்புவார்கள். அபூ ஸயீத்(ரலி), புகாரி

பெருநாள் தொழுகையில் பாங்கும், இகாமத்தும் சொல்லப்பட்டதில்லை
ஜாபிர்(ரலி), இப்னு அப்பாஸ்(ரலி) ஆகியோர் கூறினார்கள்: நோன்புப் பெருநாளிலும் ஹஜ்ஜுப் பெருநாளிலும் பாங்கு சொல்லப்பட்டதில்லை. நூல்:புகாரி
நபி(ஸல்)அவர்கள் (பெருநாள் தொழுகைக்குத்) தயாராகித் தொழுகையைத் துவக்கினார்கள். பிறகு மக்களுக்கு உரை நிகழ்த்தினார்கள்.ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி), புகாரி
நபி(ஸல்) அவர்கள், அபூ பக்ர்(ரலி), உமர்(ரலி) ஆகியோர் இரண்டு பெருநாள்களிலும் உரை நிகழ்த்துவதற்கு முன் தொழுபவர்களாக இருந்தனர். இப்னு உமர்(ரலி), நூல்:புகாரி
பெருநாள் தொழுகைக்கு முன் பின் எந்த தொழுகையுமில்லை
நபி(ஸல்)அவர்கள் நோன்புப் பெருநாள் தினத்தில் புறப்பட்டு இரண்டு ரக்அத்கள் தொழுதனர். அதற்கு முன்பும் பின்பும் எதையும் அவர்கள் தொழவில்லை. அவர்களுடன் பிலால்(ரலி) அவர்களும் சென்றனர் என இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். நூல்:புகாரி
“நோன்புப் பெருநாள் தொழுகையில் முதல் ரக்அத்தில் ஏழு தக்பீரும் இரண்டாவது ரக்அத்தில் ஐந்து தக்பீரும் உள்ளது. அவை இரண்டிற்கும் பின்னரும் கிராஅத் (குர்ஆனை ஓதுதல்) உண்டு” என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அம்ரு இப்னு ஷுஐப் தம் தந்தை மற்றும் பாட்டனார் வாயிலாக அறிவிக்கிறார். நூல்: புகாரி, திர்மிதீ
நபி(ஸல்)அவர்கள் இரு பெருநாள் தொழுகையிலும் ஜுமுஆத் தொழுகையிலும் ஸப்பிஹிஸ்ம ரப்பிக்கல் அஃலா (87வது அத்தியாயத்தையும்) ஹல் அதாக்க ஹதீஸுல் காஷியா (88வது அத்தியாயத்தையும்) ஓதி வந்தனர். பெருநாளும், ஜுமுஆவும் ஒரே நாளில் வரும்பொழுது இந்த இரண்டு அத்தியாயங்களை இரண்டு தொழுகையிலும் ஓதுவார்கள். அறிவிப்பவர்: நுஃமான் பின் பஷீர்(ரலி) நூமான் இப்னு பஷீர், நூல்கள்: முஸ்லிம், முஅத்தா, அபூதாவூத், திர்மிதீ, நஸயீ
50வது அத்தியாயத்தையும் 54வது அத்தியாயத்தையும் ஓதியதாக ஓர் அறிவிப்பு முஸ்லிம், முஅத்தா, அபூதாவூத், திர்மிதீ, நஸயீ ஆகிய நூல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது

## நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும் சுன்னத்துக்கள் 75

(நபிகளாரின் இறுதி ஹஜ்ஜும், பேருரையும் )

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமது இறுதி ஹஜ்ஜின் போது ‘பத்னுல் வாதி’ என்ற இடத்திற்கு வந்து, அங்குக் குழுமியிருந்த ஓர் இலட்சத்திற்கும் மேலான முஸ்லிம்களுக்கு (1,24,000 முஸ்லிம்கள் ) மத்தியில் நின்று உரையாற்றத் தொடங்கினார்கள்.
“மக்களே, மிகக் கவனமாகக் கேளுங்கள்! இந்த ஆண்டுக்குப் பிறகு இந்த இடத்தில் உங்களை நான் மறுபடியும் சந்திப்பேனா என்று எனக்குத் தெரியாது.
இந்த மக்கா நகரை புனிதமாகக் கருதுவதுபோல் உங்களில் ஒருவர் மற்றவரின் உயிரையும், பொருளையும், மானத்தையும் புனிதமாகக் கருதுங்கள்.

பழிவாங்குவதை, அப்படியான எண்ணங்களைக் கைவிடுங்கள்.கொலை செய்வதிலிருந்து உங்களைத் தடுத்துக் கொள்ளுங்கள்.
வட்டி வாங்குவதை விட்டுவிடுங்கள். பெண்களை மரியாதையோடு நடத்துங்கள். அவர்கள் உங்கள் மனைவியராக இருந்தாலும், அவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமையைச் செய்யுங்கள். நல்ல முறையில் அவர்களுக்கு உணவும் ஆடையும் அளியுங்கள்.

நீங்கள் விரும்பாதவர்களை உங்கள் இல்லத்திற்குள் அவர்கள் அனுமதிக்கக் கூடாது என்பதை மட்டும் நிபந்தனையாகச் சொல்லிவிடுங்கள்.
நான் உங்களிடம் விட்டுச் செல்வதை நீங்கள் உறுதியாகப் பின்பற்றினால், ஒருபோதும் வழி தவறமாட்டீர்கள். அதுதான் அல்லாஹ்வின் வேதமாகும்.
எனக்குப் பின் எந்தவொரு இறைத்தூதரும் இல்லை, உங்களுக்குப் பின் எந்தவொரு சமுதாயமும் இல்லை.
உங்களுக்கு விதிக்கப்பட்ட ஐவேளைத் தொழுகையை மட்டும் விட்டுவிடாமல் நிறைவேற்றுங்கள்.
ரமலான் மாதத்தில் நோன்பு இருங்கள்.
மனமுவந்து உங்கள் செல்வத்திலிருந்து ஒரு பங்கை தர்மமாக (ஜகாத்தாக) கொடுங்கள்.
உங்கள் இறைவனின் இல்லத்தை ஹஜ் செய்யுங்கள்.
...இப்படியான நற்கருமங்கள் செய்தால், இறைவன் உங்களுக்காகப் படைத்துள்ள சுவனத்தில் நுழைவீர்கள்.
உங்கள் இறைவனை நீங்கள் சந்திக்கும்போது, அவன் உங்கள் செயல்களைப் பற்றி உங்களிடம் விசாரணை செய்வான்.
மக்களே! அறிந்து கொள்ளுங்கள். உங்கள் இறைவன் ஒருவனே. மக்களில் ஒருவரைவிட ஒருவர் எந்தவிதத்திலும் மேன்மையானவர்கள் இல்லை.
மறுமையில் என்னைப் பற்றி உங்களிடம் விசாரிக்கும் போது நீங்கள் என்ன பதில் கூறுவீர்கள்?” என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள்.
கூடியிருந்தோர் “நிச்சயமாக நீங்கள் எடுத்துரைத்தீர்கள்; நிறைவேற்றினீர்கள்; நன்மையையே நாடினீர்கள் என நாங்கள் சாட்சி கூறுவோம்” என்றார்கள்.
அதற்கு நபியவர்கள் “அல்லாஹ்! இதற்கு நீயே சாட்சி!” என்று மூன்று முறை கூறினார்கள். இங்கு வந்திருப்பவர்கள் அனைவரும் இங்கு வராத மற்றவர்களுக்கும் இன்று நான் சொன்னதையெல்லாம் எடுத்துக் கூறுங்கள் என்று நபி(ஸல்) அவர்கள் சொல்லி உரையை முடித்தார்கள்.
அப்போது “இன்றைய தினம் நாம் உங்களுக்கு உங்களுடைய மார்க்கத்தை முழுமையாக்கி வைத்து என்னுடைய அருளையும் உங்கள் மீது முழுமையாக்கி வைத்து விட்டோம்” என்ற இறைவசனம் இறங்கியது. திருக்குர்ஆன் 5:3, ஸஹீஹ் புகாரி (5:65:4606 )
( இத்துடன் நபி (ஸல்) அவர்களின் செயல்முறை என்னும்
சுன்னத்துக்கள் தொடர் பதிவு நிறைவடைகிறது .
ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் )

ஈஸால் ஸவாப் 1




எங்க குடும்பம் ரொம்ப பெரிசு. எங்கள் பெற்றோர்கள் 3 ஆண் + 4 பெண் மக்களை பெற்றெடுத்தவர்கள் .
எனக்கும் உடன் பிறந்தவர்களுக்கும் பேரன் பேத்தி என்று சிறு குழந்தைகள் வரை மொத்தம் 64 உறுப்பினர்கள் கொண்ட பெருங்குடும்பம்.
எங்க குடும்பத்தில் மங்களகரமான விஷேங்கள் வரும்போதெல்லாம் 64 பேர்களும் ஒன்று கூடி சேர்ந்து விருந்துண்ணுவோம். அதுவும் அடிக்கடி விஷேங்கள் வந்து கொண்டே இருக்கும். விருந்தும் தொடர்ந்து கொண்டே இருக்கும் .
ஆனால் எங்கள் மூதாதையர்களுக்காக "ஈஸால் தவாப் பாத்திஹா " ஓதும்போது 64 பேர்களில் எட்டோ பத்தோ நபர்கள் மிஸ்ஸிங் . காரணம் நவீன சித்தாந்த வஹாபிய கொள்கைகளை கொஞ்சம் காது கொடுத்துக் கேட்டதன் விளைவாக இருக்கலாம் .
ஈஸால் ஸவாப் பாத்திஹா ஓதுவது குறித்து தமிழக முஸ்லிம்களிடையே அந்த வழமை வெகுவாக குறைந்துள்ளதாக தெரியவருகிறது.
எங்கள் ஊரில் பெரியவர்கள் சிலர் தங்கள் பெற்றோர்களுக்கு வருட கத்தம் பாத்திஹா வீட்டில் ஓத முடியாமல், பள்ளிவாசல் முஆத்தின்களிடம் ரகசியமாக கத்தம் பாத்திஹா ஓதச் சொல்கிறார்கள் .
ஒவ்வொரு வீட்டிலும் சங்கையாக நபி (ஸல்) அவர்கள் பேரில் சுபுஹானல்லாஹ் மௌலூது வீட்டில் ஓதப்பட்டு வந்ததை தற்காலத்தின் வஹாபிய கொள்கையால் வெகுவாக குறைக்கப்பட்டதும் , அதை ஒவ்வொரு முஹல்லாஹ் பள்ளிவாசலில் ஓதப்பட வேண்டும் என்று திருநெல்வேலி மாவட்ட மீலாது கமிட்டியை ஆரம்பித்தோம்.

நானும் , நண்பர் Er அமானுல்லாஹ் , Er Basheer Ahamed , Santhu Khaja Faizee ஆகியோர் சுமார் ஊரில் உள்ள 52 சுன்னத்துல் ஜமாத் பள்ளிவாசலில் 12 சுன்னத்துல் ஜமாத் பள்ளிவாசலை தேர்ந்தெடுத்து , ஒவ்வொரு நாள் ஒரு பள்ளி என்று 12 நாள் சுபுஹானல்லாஹ் மௌலூது 14 வருடத்திற்கு முன்பாக ஓத ஆரம்பித்து, இந்த வருடமும் வெகு விமர்சியாக ஓதி வருகிறோம்.
மீலாது விழாவில் நபிகளாரைப் பற்றி கட்டுரைப் போட்டி, பேச்சுப் போட்டியில் தேர்வு செய்து ,தேர்ந்தெடுத்த மாணவ,மாணவிகளுக்கு பரிசுப் பொருட்களும், சான்றிதழ்களும் , ஏழை மக்களுக்கு இலவச அரிசி, மற்றும் சைக்கிள், தையல் மிஷின் போன்றவற்றையும் வழங்கி அவர்களின் சுய சம்பாத்தியத்தை பெருக்க தூண்டுதலாக இருந்து வருகிறோம்.

இதே மாதிரி தங்கள் பெற்றோருக்கு ஈஸால் தவாபு ஓதுவது தங்களுடைய பிள்ளைகள் விரும்பாத காரணத்தால் மீலாது கமிட்டி ஆரம்பித்த மாதிரி, ஈஸால் தவாபு கமிட்டி என்று ஆரம்பித்து , யாரெல்லாம் தங்கள் பெற்றோர்களின் பெயர்களை பதிவு செய்கிறார்களோ அவர்களுக்கு வருடத்திற்கு ஒரு நாள் குர்ஆன், யாஸீன், போன்றவற்றை மதரஸா மாணவர்கள் மற்றும் ஆலிம்கள் மற்றும் உஸ்தாத்மார்கள் ஒன்று சேர்ந்து ஓதி, கத்தம் செய்ய, அதை திருநெல்வேலி மாவட்ட மீலாது கமிட்டி சார்பாக முன்னெடுத்து செய்யலாமா ? யோசிக்கிறோம். அதற்கு முன்பாக " ஈஸால் தவாபு " பற்றி குர்ஆன் , ஹதீஸ் சுன்னா முறையில் ஓர் ஆய்வுத் தொடரை இன்ஷா அல்லாஹ் எழுதலாமென யோசிக்கிறேன்.

## ஈஸால் ஸவாப் 2



இறந்து போன பெற்றோர்களுக்கு நாம் ஏன் கத்தம் பாத்திஹா ஓத வேண்டும் ?

கொஞ்சம் அறிவியல் ரீதியாக ஆய்வு செய்வோம்.

மரணம் என்பது உடலுக்குத்தானே தவிர, ஆத்மாவிற்கு அல்ல.

'நான்' என்று கூறுவது ஆத்மாதான். ஆனால் உடலான ஒவ்வொருவரின் அங்க அடையாளங்களான ( டிசைன்) மூக்கோ , கண்ணோ, காதோ , பரந்த மார்போ எங்கிருந்து உங்களுக்கு பெறப்பட்டது ?

ஜெனட்டிக் என்னும் மரபணு ஜீன் மூலம் உங்கள் பெற்றோர்களான தாய், தந்தையரிடமிருந்து 50 சதவிகிதமும், உங்கள் பாட்டன் , பாட்டியிடமிருந்து 25 சதவிகிதமும், உங்கள் பூட்டன், பூட்டியிடமிருந்து 12.5 சதவிகிதமும் பெறப்பட்டு உங்களது உடல் அமைப்பை அடையாளப்படுத்தப்பட்டது.

பூட்டன்,பூட்டிக்கும் மேல் உறவு இல்லை .காரணம் ஜெனட்டிக் மரபணுவின் தொடர் தொடர்வது நின்று போய் விடுகிறது .

உங்களை உங்கள் இறைவன்தான் படைத்தான். அதில் சந்தேகம் ஏதுமில்லை. ஆனால் உங்கள் பெற்றோர்களிடத்திலிருந்து பெறப்பட்ட மரபணு மூலம்தான் உங்களை வடிவமைத்தான் என்பதும் மறுக்க முடியாத உண்மை.

وَاللّٰهُ جَعَلَ لَـكُمْ مِّنْ اَنْفُسِكُمْ اَزْوَاجًا وَّ جَعَلَ لَـكُمْ مِّنْ اَزْوَاجِكُمْ بَنِيْنَ وَحَفَدَةً وَّرَزَقَكُمْ مِّنَ الطَّيِّبٰتِ اَفَبِالْبَاطِلِ يُؤْمِنُوْنَ وَبِنِعْمَتِ اللّٰهِ هُمْ يَكْفُرُوْنَۙ

உங்களிலிருந்தே உங்கள் மனைவிகளை அல்லாஹ் படைக்கிறான். அன்றி, உங்கள் மனைவிகளிலிருந்து சந்ததிகளையும், பேரன் பேத்திகளையும் உற்பத்தி செய்து உங்களுக்கு நல்ல உணவுகளையும் புகட்டுகிறான். (இவ்வாறிருக்க) அவர்கள் (தாங்களாகக் கற்பனை செய்து கொண்ட) பொய்யானவைகளை நம்பிக்கை கொண்டு அல்லாஹ்வின் அருட்கொடைகளை அவர்கள் நிராகரிக்கின்றனரா? (குர்ஆன் : 16:72)

ஆக உங்கள் தகப்பனாரின் குரல் கேட்டவர்கள் நீங்கள் பேசும்போது , உங்கள் தகப்பனாரை அவர்களுக்கு நீங்கள் ஞாபகப்படுத்துகிறீர்கள்.

உங்கள் தாயாரின் நடையில் நீங்கள் நடந்து போகும்போது இரவில் உங்கள் தாயாராகவே மற்றவர்களுக்கு தெரிகிறீர்கள்

ஆக , உங்கள் அங்கமெல்லாம் உங்களின் பெற்றோர்களின் உடலில் எழுதப்பட்ட புரோக்கிராம் என்ற சாப்ஃட்வேரில், திருமணம் என்ற செக்ரிட்டி சிஸ்டத்தில், அவர்களின் உடலுறவு என்ற Password-ல் உருவாக்கப்பட்ட நீங்கள் உங்களின் பெற்றோர்களுக்கு நன்றிக்கடன் செலுத்த வேண்டாமா ?

அந்த நன்றிக்கடன்தான் ஈஸால் ஸவாப் .

ஈஸால் ஸவாப் என்பது உயிரோடுள்ளவர்கள் மரணித்தவர்களுக்காச் செய்கின்ற நல்ல அமல்களின் நன்மை அவனைச் சென்றடைதல், நன்மையை சேர்த்து வைத்தல் தொடர்பாக தர்மம், நோன்பு, ஹஜ், உம்ரா, திருக்குர்ஆன், கத்தம், பாதிஹா, துஆ போன்றவற்றின் நன்மைகளை மரணித்து கப்ராளிகளாக வாழ்ந்து கொண்டிருப்பவர்களான உங்களின் பெற்றோர்களின் பக்கம் சேர்த்து வைப்பதாகும்.

இதனால்தான் இறந்து போன பெற்றோர்களுக்கு நாம் கத்தம் பாத்திஹா ஓத வேண்டும்

உங்கள் பெற்றோருக்கு ஈஸால் ஸவாப் செய்வீர்களா ?

https://m.facebook.com/story.php?story_fbid=3174516122807721&id=100007480923921

### ஈஸால் ஸவாப் 3

( கப்ரு வாசிகளில் வறியவர் )



யாரேனும் வந்து காப்பாற்ற மாட்டார்களா? என்ற எண்ணத்தில் நீரில் மூழ்கியவன் தத்தளிப்பது போல கப்ரில் மரணித்த மய்யித்து தனது தந்தை , தனது தாய், சகோதரன் , தான் பெற்ற பிள்ளைகள், தன் கணவன் , தன் மனைவி அல்லது நண்பன் ஆகியோரிடமிருந்து துஆவை ரொம்பவும் எதிர்பார்க்கிறது.
அப்படி ஏதேனும் ஒரு துஆ அந்த மய்யித்தை சென்றடையுமானால், அதை துன்யா மற்றும் அதில் உள்ளவற்றை விட மிகப் பிரியமாக அந்த ஆத்மா கருதுகிறது.
சந்தோஷமடைகிறது.

நிச்சயமாக அல்லாஹு தஆலா பூலோகவாசிகளின் பிரார்த்தனை மூலம் கப்ருவாசி (பர்ஸக் வாசி) களுக்கு மலைகளைப் போன்று ரஹ்மத்துகளை நுழைவிக்கிறான்.
பூலோவாசிகளின் பிரார்த்தனை பெறாதவர்கள் கப்ரு வாசிகளில் மிக ஏழ்மையானவர். உங்கள் பெற்றோர்களை ஏழை வறியவர்களாக காண உங்களுக்குப் பிடிக்குமா ?
சரி இருக்கட்டும். உங்கள் பெற்றோர்களுக்கு ஈஸால் ஸவாப்பை சேர்த்துக் கொடுக்காத நீங்கள் , உங்கள் மரணத்திற்குப் பிறகு உங்கள் மக்கள் உங்களைப் பின்பற்றியே உங்களையும் கப்ரு வாசிகளில் மிக வறியவர்களாக ஆக்க மாட்டார்கள் என்பது என்ன நிச்சயம் ?
முற்பகல் செய்யின் பிற்பகல் தானே விளையும் ?
"இறந்தவர்களுக்காக பிழைபொறுக்கத் தேடுவது உயிரோடு இருப்போர் மரணித்தவர்களுக்காக வழங்குகின்ற சன்மானமாகும்" என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதாக செய்யிதினா இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள்.
நூல்கள்: பைஹகி ஹதீது எண் 7904, மிஷ்காத் ஹதீது எண் 2355 பக்கம் 206 பாபுல் இஸ்திஃபார், அத்தத்கிரா பாகம் 1 பக்கம் 103 பாபு மா ஜாஅ பீ கிராஅத்தில் குர்ஆனி இந்தல் கப்ரி ஹாலத்தத் தபனி வ பஃதஹு

யாராவது ஒருவன் மையவாடிக்கு பக்கத்தால் சென்று 11 தரம் ஸூறதுல் இக்லாஸ் – குல்ஹுவல்லாஹு அஹத் என்ற அத்தியாயத்தை ஓதி அதன் நன்மையை மரணித்தவர்களுக்கு அன்பளிப்பாக வழங்குவானாயின்

அவனுக்கு மரணித்தோரின் எண்ணிக்கப்படி நற்கூலி வழங்கப்படும். என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னதாக செய்யிதுனா அலீ (றழியல்லாஹு அன்ஹு) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.
நூல்: கன்சுல்உம்மால்,பக்கம் 2059, ஹதீஸ் -42596
கப்ருக்குச் சென்றால் பாத்திஹா சூராவையும் முஅவ்வித்தைனியையும் குல் ஹூவல்லாஹூ அஹதையும் ஓதி அதன் நன்மையை கப்ராளிகளுக்குக் சேர்த்து வையுங்கள். கண்டிப்பாக அது அவர்களை சென்றடையும் என்று அஹமத் இப்னு ஹம்பலி ரலியல்லாஹூ அன்ஹூ அவர்கள் கூற நான் கேட்டேன் .
அறிவிப்பவர் : ஹழ்ரத் அஹ்மதுல் மரூஸி
நூல்: மிர்காத் - பாகம் - 2 , பக்கம் - 381 . இஆனா பாகம் 2 (பஸ்லுன் பிஸ் ஸலவாத்தி அல ல் மய்யித்தி)

## ஈஸால் ஸவாப் 4

(மரணத்திற்குப் பிறகு மையத்திற்கு போய்ச் சேரும் அமல்கள் )



"கத்தம்" என்ற சொல் "கத்ம் " அல்லது "கத்முன் " என்ற சொல்லின் மருவிய சொல்லாகும். இதைச் சரியாக சொல்வதென்றால் " கத்ம் கத்ம் " என்றால் "முடித்தல் முடித்தல் "என்று பொருள். "கத்முல் குர்ஆன் " என்றால் குர்ஆனின் 30 பாகங்களையும் ஓதி முடித்து பின் அதன் நன்மையை மரணத்தவர்களுக்கு சேர்த்து வைப்பதாகும் . இஸ்லாத்தின் பார்வையில் "ஈஸால் ஸவாப்" எனும் உயிரோடுள்ளவர்கள் இறந்தவர்களுக்காகச் செய்கின்ற நல்ல அமல்களின் நன்மைகள் அவர்களுக்குப் போய் சேருமா?

உயிரோடுள்ளவன் மரணித்தவனுக்காகச் செய்கின்ற நல்லமல்களின் நன்மை அவனைச் சென்றடைதல் தொடர்பாக தர்மம், நோன்பு, ஹஜ், துஆ, போன்றவற்றின் நன்மை அவனைச் சென்றடையும் என்பதை ஏற்றுக்கொள்ளும் வஹ்ஹாபிகள் திருக்குர்ஆன், கத்தம், பாதிஹா போன்றவற்றின் நன்மை மாத்திரம் அவனைச் சென்றடையாதென்று கத்தம் பாத்திஹா பித்அத் என்று கூறுவது விந்தையையானதாகும்.
உயிரோடுள்ளவர்கள் இறந்தவர்களுக்காகச் செய்கின்ற நல்ல அமல்களின் நன்மைகள் அவர்களுக்குப் போய் சேரும் என்பதற்காக ஆதாரங்கள்
நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அன்னவர்கள் கூறினார்கள் :
"ஒரு முஃமினான மனிதன் கற்பித்த கல்வியும், (எழுத்து மூலம் நூல்வடிவில் உலகெங்கும்) அவன் பரப்பிய கல்வியும், அவன் விட்டுச்சென்ற ஸாலிஹான பிள்ளைகளும், (பள்ளிவாசல்கள், மத்ரஸாக்களுக்கு) வாரிஸாக்கிய குர்ஆன் ஷரீபும், அவன் கட்டிக்கொடுத்த பள்ளியும், வழிப்போக்கர்களுக்கு அவன் அமைத்துக் கொடுத்த தங்கும்

விடுதியும், அவன் வாய்க்கால் வெட்டி ஓடச்செய்த ஆறும், அவன் இப்பூவுலகில் வாழும்போது கொடுத்து உதவிய தானங்களும் கண்டிப்பாக அவனின் மௌத்துக்குப் பிறகும் அவனைப் போய்ச்சேரும் "
ஹழ்ரத் அபூஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு
நூல்கள்: இப்னுமாஜா 242, பைஹக்கி 3448, ஷுஅபுல் ஈமான், மிஷ்காத் 254

**ஈஸால் ஸவாப் 5**

( மையித்துக்கு நாம் செய்யும் ஈஸால் ஸவாப் பற்றிய உணர்வு உண்டா ? )



மரணத்திற்குப் பிறகு, கல் கரடுகளைப் போல் கேட்டறியும் சக்தியும், உணர்வும் இல்லை என்று எண்ணுவது முஃத்தஸிலா போன்ற வழிகெட்ட கூட்டத்தார்களுடைய கொள்கைகள் ஆகும்
மையித்துக்கு உணர்வு இருப்பதால்தான் மவுத்துக்குப் பிறகும் கபரில் (ஆலம் அஜ்ஸாமுக்கும் ஆலம் அர்வாஹுக்கும் இடையே ஆலம் பர்ஜக்கில்) கேட்கப்படும் கேள்விகளுக்கும், பாவ புண்ணியங்களுக்குத் தக்க பலாபலன்களும் ஏற்படுகின்றன.
அவற்றிற்கு அத்தகைய உணர்ச்சிகள் இல்லையெனில் நன்மை தீமைகளுக்குள்ள பலாபலனை சுக துக்கத்தை எவ்வாறு அவை அனுபவித்து அறிய முடியும் ?

பொதுவாக எல்லா மையித்துகளும் தன்னை குளிப்பாட்டுபவர்களையும் , சுமந்து செல்பவர்களையும் , மண்ணறைக்கு அருகில் நிற்பவர்களையும் பார்க்கிறது , அவர்களது பேச்சுக்களை கேட்கிறது என்பதாக பதாவா குப்ராவில் பதிவு செய்யப்பட்டுள்ளது.
"மையித்து உனது காலடி (பாதரட்சையின்) சப்தத்தையும் கூட கேட்கின்றது " என்பதாக புகாரி , முஸ்லீம் , அபூதாவூது , நஸயீ ஆகிய கிரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கிறது .
உடனே நவீனத்துவவாதிகள் கீழ்க்கண்ட குர்ஆன் வசனங்களை காட்டி ஹதீஸ் உண்மையா ? குர்ஆன் உண்மையா? என்று விபரம் கேட்கிறார்கள் .

اِنَّكَ لَا تُسْمِعُ الْمَوْتٰى وَلَا تُسْمِعُ الصُّمَّ الدُّعَآءَ اِذَا وَلَّوْا مُدْبِرِيْنَ
(நபியே!) மரணித்தவர்களுக்குக் கேட்கும்படிச் செய்ய நிச்சயமாக உங்களால் முடியாது. (அவ்வாறே உங்களுக்குப்) புறங்காட்டிச் செல்லும் செவிடர்களுக்கு நீங்கள் அழைக்கும் (உங்களுடைய) சப்தத்தைக் கேட்கும்படிச் செய்யவும் முடியாது. (குர்ஆன் : 27:80)

செத்த மையத்துக்கள் செவி ஏற்பதாக நவீன விஞ்ஞானத்தால் தக்க ஏற்பாடு செய்வதாக வைத்துக் கொண்டாலும், நீங்கள் மையத்துக்களிடம் பேசினால் அவற்றைக் கேட்டு மையத்துகள் பதில் சொன்னால், செத்த மையம் சாகவில்லை என்ற ஒரு நிலை வரும் அல்லவா ? இதனால் மரணம் பொய்ப்பித்துப் போகும்.
இறைவன் செத்துப் போன மையத்துக்களை அவன் நாடினால் செவியேற்க செய்ய முடியும் .
உதாரணமாக சூர் ஊதப்படும் போது சமாதிகளிலிருந்து வெளிப்பாடுவார்கள் என்று குர்ஆன் (20 : 102 ) (27 : 87) கூறுகிறது என்றால் மையத்துகளுக்கு காது நன்கு கேட்கிறதல்லவா ...?
அடுத்து இறைவன் நாடினால் ....

وَمَا يَسْتَوِى الْاَحْيَآءُ وَلَا الْاَمْوَاتُ اِنَّ اللّٰهَ يُسْمِعُ مَنْ يَّشَآءُ وَمَآ اَنْتَ بِمُسْمِعٍ مَّنْ فِى الْقُبُوْرِ
உயிருள்ளவர்களும் மரணித்தவர்களும் சமமாக மாட்டார்கள். நிச்சயமாக அல்லாஹ் தான் விரும்பியவர்களைச் செவியுறும்படிச் செய்கின்றான். (நபியே!) சமாதிகளில் உள்ளவர்களை செவியுறும்படிச் செய்ய உங்களால் முடியாது. (அல்குர்ஆன் : 35:22)

நீங்கள் நன்கு கவனிக்க வேண்டும் அல்குர்ஆன் ( 27:80) , (35:22) ஆகிய இரு வசனங்களிலும் மரணித்தவர்களை செவியேற்க செய்யும்படி' உங்களால் ' முடியாது. ஆனால் இறைவனால் முடியும்
இந்த வசனத்தின்படி பத்ரு யுத்தத்தில் இறந்த இறை மறுப்பார்களின் பிரேதங்கள் குவிக்கப்பட்டிருந்த இடத்திற்கு போர் ஓய்ந்த பின்பு நபி பெருமானார் (ஸல்) அவர்கள் சென்று அங்கு நின்றுகொண்டு, அப்பிரேதங்களை நோக்கி, "எங்கள் நாயன் கூறிய வாக்குறுதியை நாங்கள் உண்மையாகப் பெற்றுக் கொண்டோம். உங்கள் நாயன் கூறிய வாக்குறுதியை நீங்கள் உண்மையாகப் பெற்றுக் கொண்டீர்களா ?" என்று கேட்ட போது,
அங்கு பெருமானார் (ஸல்) அவர்களுடன் இருந்த உமர் (ரலி) அவர்கள்,
"யாரசூலல்லாஹ்..! மரணம் அடைந்தோர் எங்ஙனம் தங்கள் வார்த்தையை கேட்பார்கள் ? " என்று வினவினார்கள்.
அதற்கு நபி (ஸல்) உங்களை விட அவர்கள் நன்றாக கேட்பார்கள். உங்களுக்கு வெளிக்காது உண்டு. அவர்களுக்கு ஆன்மார்த்த செவி உண்டு. அதனால் அவர்கள் எல்லாவற்றையும் கேட்கிறார்கள்" என்பதாக விடையளித்தார்கள். ( ஸஹீஹ் முஸ்லிம்)
அபூபக்கர் (ரலி) அவர்கள் வபாத்தாகும் போது ,"என்னுடைய ஜனாஸாவை நாயகம் (ஸல்) அவர்களுடைய முபாரக்கான அறையின் முன்னால் வையுங்கள். கதவு திறக்கப்பட்டு , அபூபக்கரை உள்ளே கொண்டு வாருங்கள் என்று உத்தரவு வந்தால் மட்டுமே அவ்வறையினுள் என்னை அடக்கம் செய்யுங்கள். இன்றேல் பொதுக் கபுருஸ்தானத்தில் அடக்கி விடுங்கள்"என்று வஸிய்யத்துச் செய்திருந்தார்கள்
அவ்வாறே செய்யப்பட்டது.பூட்டப்பட்ட அறை வாயிலின் முன்பு ஜனாஸா வைக்கப்பட்டபோது, வாயில் கதவு தானாகவே திறந்து கொண்டது மட்டுமல்லாமல் ,"தோழரைத் தோழரிடம் அனுப்பி வையுங்கள் " என்ற உத்தரவும் நபி (ஸல்) அவர்களின் ரவுளா ஷரீபிலிருந்து வெளிவந்தது.
இவ்வரலாற்றை இமாம் பகருத்தீன் ராஜீ (ரஹ்) அவர்கள் தப்ஸீீர் கபீர் , 5-வது பாகம் ,685 வது பக்கம் , தப்ரீஹுல் அத்கியா பீ - அஹ்வாலில் அன்பியா பாகம் 2 பக்கம் 376 எழுதப்பட்டுள்ளது.

## ஈஸால் ஸவாப் 6

( மரணத்திற்குப் பிறகு ஆத்மாவிற்கு ஸலாம் சொன்னால் பதில் ஸலாம் சொல்கிறது . தான் வாழ்ந்த இடத்திற்கு வந்தும் போகிறது )



ஷைகுல் அக்பர் முஹ்யித்தீன் இப்னு அரபி (ரஹ்) அவர்கள் வபாத்தான பிறகு அவர்களே தங்களது வீட்டிற்கு வந்தார்கள்.

தங்களது வெள்ளாட்டியைக் கண்டு அவளது சுக செய்திகளையும் நிலைமைகளையும் விசாரித்தார்கள்.

எல்லா விஷயங்களையும் அவள் விஸ்தாரமாக எடுத்துக் கூறினாள். அவர்கள் அவளிடமிருந்து விஷயங்களைக் கேட்டுத் தெரிந்து சென்றார்கள் என்பதாக புஸூஸுல் ஹிக்கம் உடைய ஷரஹில் இமாம் ஷைகு ஜுந்தி (ரஹ்) அவர்கள் கூறுவதாக ஸஆத்துத் தாரைன் 402 பக்கத்தில் எழுதப்பட்டுள்ளது .

எங்கள் சற்குரு செய்யதினா மூஸல் காழிம் தங்கள் வாப்பா

சிசர்ஸ் சிகரெட் பிடிக்கும் பழக்கமுடையவர்கள். அவர்களின் கந்தூரி தினத்தை கொண்டாடுவது குறித்து எங்கள் தர்கா முஹப்பீன்கள் தர்காவில் வைத்து கலந்தாலோசிக்கும் போது , அதே சிகரெட் வாடை எங்களைச் சுற்றிச் சுற்றி வந்ததை இன்றும் பேசி சிலாகிப்போம்.

இறைநேசர்களுடைய மண்ணறை ஒருவர் ஸியாரத்துச் செய்தால் அவரை அந்த இறைநேசர் நன்கு அறிவார். அவர் ஸலாம் சொன்னால் அந்த மண்ணறை இறைநேசர் அதற்குப் பதில் சொல்வார் . இறைநேசரின் மண்ணறைக்கு அருகாமையில் ஒருவர் சம்மனங் கொட்டி உட்கார்ந்து திக்ரு செய்தால் , அந்த இறைநேசரும் சம்மனங் கொட்டி உட்கார்ந்து சேர்ந்து திக்ரும் செய்கிறார் .

ஓர் இறைநேசர் இறந்ததும் அன்னார் பேரில் அன்பியா , அவுலியாக்களுடைய அர்வாஹுகள் மைய்யத் தொழுகை தொழும் என்பதாக இமாம் அப்துல் வஹ்ஹாபு ஷஃறானீ எழுதிய தபகாத்துல் குப்தா பாகம் 2 -ல் 65 பக்கம்

ஷைகுல் அக்பர் முஹ்யித்தீன் இப்னு அரபி (ரஹ்) அவர்களின் மக்புரா ஹிஜ்ரி 638 ரபீயுல் ஆகிர் பிறை 28 வெள்ளி இரவு (கி.பி.1240 நவம்பர்16) அன்று உயிர் நீத்தனர். இவர்களின் உடல் திமிஷ்கிலுள்ள ஸலாஹ் என்னுமிடத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டது. )

## ஈஸால் ஸவாப் 7

(உஸ்தாதுகளை தொழுகையின் அத்தஹிய்யாத்தில் நினைவுபடுத்திக் கொள்ளும் ஏற்பாட்டை மார்க்கம் செய்திருக்கிறது)

தமிழகத்தின் பாக்கியம் மிக்க பெருமக்களில் ஒருவரான O.M. அப்துல் காதிர் ஹழரத் அவர்களது நடை முறை பற்றி இன்று கிடைத்த ஒரு செய்தி மனதை மிகவும் நெகிழச் செய்தது.

மேன்மக்கள் எப்படி மேன்மையை அடைகிறார்கள் என்ற இரக்சியத்தை அது புலப்படுத்தியது.

ஓ.எம் ஹழரத் அவர்கள் கூறியுள்ளார்.(ஹபிழஹுல்லாஹு)
பாக்கியத்தில் ஓதிய காலத்திலிருந்து எனக்கு நினைவு தெரிந்து ஒரு வெள்ளிக்கிழமை கூட அண்ணல் அஃலா ஹழரத்திற்காக யாஸீன் ஓதாமல் நான் ஜும்ஆ தொழச் சென்றதில்லை.
வாழும் இளம் தலை முறைக்கு கிடைத்துள்ள கனமான பாடம் இது.
" உஸ்தாதுகளை தொழுகையின் அத்தஹிய்யாத்தில்
நினைவுபடுத்திக் கொள்ளும் ஏற்பாட்டை மார்க்கம் செய்திருக்கிறது " - என ஜ.உ மாநில தலைவர் அப்துர் ரஹ்மான் ஹழரத் ( ஹபிழஹுல்லாஹ்) நேற்று லால் பேட்டையில் நடந்த ஈஸால் தவாபு நிகழ்ச்சியில் கூறியதையும் இங்கு நினைவுபடுத்துகிறேன்
கோவை Abdul Azeez பாகவி அவர்களின் பதிவிலிருந்து ...

## ஈஸால் ஸவாப் 8

இறந்தவர்களுக்காக மற்றவர்கள் செய்யும் நற்காரியங்கள் இறந்தவர்களுக்கு போய் சேருமா?



ஒரு மனிதனுக்கு அவன் முயற்சித்தது இன்றி வேறில்லை. (சூறா அந்றஜ்ம் 19) என்று அல்குர்ஆன் கூறுகிறது. ஆகையால் இறந்தவர்களுக்காக மற்றவர்கள் செய்யும் நற்காரியங்கள் இறந்தவர்களுக்கு போய் சேராது. அப்படி இருக்க இறந்தவர்களுக்காக கத்தம் ஓதி என்ன பயன்? என்ற கேள்விக்கு கீழ்காணும் ஆதாரங்கள் மூலம் விரிவாக இமாம்கள் ஆய்வு செய்து விளக்கங்களை தந்துள்ளார்கள்.

ஒரு மனிதனுக்கு அவன் முயற்சித்தது அன்றி வேறில்லை' என்று சூரத்து அந்நஜ்மில் வரும் 19வது வசனத்தை மேலெழுந்தவாரியாகப் பார்த்துவிட்டு சன்மார்க்கத்தை சரியாக விளங்காத நமது சகோதரர்கள் ஒருவர் செய்த நல்லமலின் பலன் மற்றவர்களுக்கு போய்ச் சேராது என்கின்றனர். அதற்கு காரணம் என்னவென்றால் அவர்களின் தலைவர்கள் கூறும் கூற்றே சரியானது என்று நம்பி அதிலேயே பிடிவாதமாக இருப்பதாகும். ஆனால் அந்த பிடிவாதத்தை விட்டு விட்டு அரபி இலக்கணத்தை நன்றாக அறிந்து அதன் துணை கொண்டு மேற்படி வசனத்தை பார்த்திருந்தாலோ அல்லது அந்த வசனத்திற்கு விளக்கமாக அமைந்திருக்கிற ஏனைய வசனங்களின், ஹதீஸ்களின் துணை கொண்டு பார்த்திருந்தாலோ அல்லது அதன் தொடர் வசனங்களின் விளக்கங்களை கவனித்திருந்தாலோ கண்டிப்பாக இப்படிப்பட்ட விபரீதமான முடிவுக்கு வந்திருக்க மாட்டார்கள். ஆகவே அதற்குரிய எதார்த்தமான பொருளை முதலில் கவனிப்போம்.'வ அன் லைஸ லில் இன்ஸானி'- என்ற வசனத்தின் எதார்த்த விளக்கம்:

"இந்த ஆயத்தில் இடம் பெற்று இருக்கின்ற 'லில்' இன்ஸான் என்ற வார்த்தையில் உள்ள 'லாம்' என்ற எழுத்து அரபி இலக்கணப்படி சொந்தம், உரிமை என்ற பொருள்களைத் தரக்கூடியதாக இருக்கின்றது என்று அரபி மத்ரஸாக்களில் இரண்டாம் ஜும்ரா (வகுப்பு) ஓதும் மாணவர்கள் கூட நன்கு அறிவார்கள். இதன்படி பார்த்தால் மேற்கூறப்பட்ட வசனத்தின் பொருள், ஒரு மனிதனுக்கு உரிமையானதாக இல்லை அவன் முயற்சித்தது அன்றி என்று அமையும்.

இதை ஒரு உவமான ரீதியில் கூறுவதென்றால், ஒரு மனிதனுக்கு சொந்தமானதாக ஊதியம் இல்லை அவன் உழைத்தது அன்றி என்று ஆகும். எனவே இந்தக் கருத்தின்படி அவன் உழைத்து கிடைத்த ஊதியம் அவனுக்கு சொந்தமானதாகும். அவன் விரும்பினால் அவனே வைத்துக் கொள்ளலாம். அல்லது அதை மற்றவருக்கு அன்பளிப்புச் செய்ய விரும்பினால், மற்றவருக்கு அதை அன்பளிப்பாகவும் கொடுக்கலாம் என்றுதான் பொருள் வரும். (கிதாபுர் ரூஹ் அல் மஸாயில் பக்கம் 4)

அதைப் போன்றே ஒருவன் செய்த நல்ல அமலின் பலனுக்கு அவனே முழு உரிமை பெற்றவனாக ஆகிறான். அவன் விரும்பினால் அவனே அதை வைத்துக் கொள்ளலாம் அல்லது அதை அடுத்தவருக்கு அன்பளிப்பு செய்ய விரும்பினால் அன்பளிப்பும் செய்யலாம் என்று பொருள் விரியும்.

ஆனால் ஒரு மனிதன் தான் செய்த நல்லமலின் பலனை மற்றவருக்கு சேர்ப்பித்தால் அது மற்றவருக்குப் போய் சேராது என்றோ அல்லது ஒருவன் செய்த நல்லமலின் மூலம் மற்றவர் பயன் அடைய முடியாது என்றோ மேற்படி வசனத்திற்கு பொருள் கொள்ள கிஞ்சிற்றும் இடமில்லை.

அப்படி இருக்க இறந்தவர்களுக்காக ஓதப்படும் கத்தம் அவர்களை போய் சேராது என்பதற்கு மேற்படி வசனத்தின் (உள்ளார்ந்த விளக்கத்தை விளங்காமல் அதன்) வெளிரங்க விளக்கத்தை மட்டும் எடுத்து வைத்துக் கொண்டு அதை ஆதாரமாக காட்டுவது கொஞ்சம் கூட பொருத்தமானதாக இல்லை என்பதை மேற்படி சகோதரர்கள் நன்றாக விளங்கிக் கொள்வார்களாக

மேலும் நமது அந்த சகோதரர்கள் கூறுகின்றபடி மேற்கூறப்பட்ட ஆயத்தின் பொருள் ஒருவருக்கு அவர் செய்தது மாத்திரம்தான் கிடைக்கும் மற்றவர்கள் செய்த நல்லமல்களின் பலன் அவருக்குப் போய்ச் சேராது என்று இருக்குமாயின்,

ஒருவருக்காக மற்றவர் செய்யும் தொழுகை, ஹஜ், தானதருமங்கள், பிழை பொறுக்கத் தேடுதல் போன்ற நல்லமல்கள் அவரைச் சென்றடையும் என்று கூறுகின்ற எண்ணற்ற ஆயத்துக்களுக்கும், ஹதீஸ்களுக்கும் முரணாக அமைந்து விடும். அத்துடன் இறந்த மய்யித்திற்கு ஜனாஸா தொழுகை தொழ வைதப்பதிலும் ஒரு அர்த்தம் இல்லாமல் ஆகிவிடும்.

♣உயிரோடுள்ளவர்கள் இறந்தவர்களுக்காகச் செய்கின்ற நல்லமல்களின் நன்மைகள் அவர்களுக்குப் போய் சேரும் என்பதற்காக ஆதாரங்கள்

♦நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அன்னவர்கள் கூறினார்கள் : ஒரு முஃமினான மனிதன் கற்பித்த கல்வியும், (எழுத்து மூலம் நூல்வடிவில் உலகெங்கும்) அவன் பரப்பிய கல்வியும், அவன் விட்டுச்சென்ற ஸாலிஹான பிள்ளைகளும், (பள்ளிவாசல்கள், மத்ரஸாக்களுக்கு) வாரிஸாக்கிய குர்ஆன் ஷரீபும், அவன் கட்டிக்கொடுத்த பள்ளியும், வழிப்போக்கர்களுக்கு அவன் அமைத்துக் கொடுத்த தங்கும் விடுதியும், அவன் வாய்க்கால் வெட்டி ஓடச்செய்த ஆறும், அவன் இப்பூவுலகில் வாழும்போது கொடுத்து உதவிய தானங்களும் கண்டிப்பாக அவனின் மௌத்துக்குப் பிறகும் அவனைப் போய்ச்சேரும்.

ஹழ்ரத் அபூஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு

நூல்கள்: இப்னுமாஜா 242, பைஹக்கி 3448, ஷுஅபுல் ஈமான், மிஷ்காத் 254

♦ஒரு மனிதர் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து யா ரஸூலல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பெற்றோர்கள் மரணித்த பின்பு அவர்களுக்காக பிள்ளைகளாகிய நாங்கள் செய்ய வேண்டிய நன்மைகள் ஏதேனும் இருக்கிறதா ? என்று கேட்டார்.

அப்போது நபிகள் நாயகம் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் " ஆம் இருக்கிறது அவர்களுக்காக தொழுது, நன்மை சேர்த்தல், அவர்களுக்காக பிழைபொறுக்கத் தேடுதல், அவர்களின் வாக்குறுதிகளை நிறைவேற்றுதல், அவர்களின் சுற்றத்தினர்களுடன் சேர்ந்து நடந்து கொள்ளுதல், அவர்களின் தோழர்களுக்கு சங்கை செய்தல் என்று கூறினார்கள்.

நூல்கள்: ஆபூதாவூத் , இப்னு மாஜா , மிஷ்காத் பக்கம் - 420 , பாபுல் பிர்ரி வஸ்ஸிலா

♦நிச்சயமாக அல்லாஹு தஆலா ஒரு மனிதனுக்கு அவன் பிள்ளை செய்யும் இஸ்திஃபார் மூலம் அவரின் அந்தஸ்த்தை சுவனத்தில் உயர்த்துகிறான் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்.

நூல்: இப்னுமாஜா ஹதீஸ் எண் 3660, மிஷ்காத் ஹதீஸ் 2354

♦நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஒரு மனிதன் வந்து 'நாயகமே! எனது தாயார் (எது குறித்தும்) வஸிய்யத் செய்யாமல், திடீரென மரணம் அடைந்து விட்டார்கள். அவர்கள் பேசி இருந்தால் ஏதேனும் தானதர்மங்கள் செய்திருப்பார்கள். ஆகையால் அவர்களுக்காக நான் ஸதக்கா செய்தால் அவர்களுக்கு நன்மை உண்டா?' என்று கேட்டார்.

அப்போது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் 'ஆம்' என்று பதில் கூறினார்கள் என்று ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

நூல்கள்: புகாரி ஹதீஸ் எண்: 1388, 2760, முஸ்லிம் ஹதீஸ் 1004 அபூதாவூத் ஹதீஸ் எண் 2881

♦ஸய்யிதுனா ஸஃது இப்னு உபாதா ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் தாயார் வபாத்தான நேரத்தில் ஸஃது ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் வெளியூர் சென்றிருந்தார்கள்.

எனவே நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து 'நாயகமே! நான் வெளியூர் சென்றிருந்த வேளையில் எனது தாயார் மரணமடைந்து விட்டார்கள். அவர்களைத் தொட்டும் நான் ஸதக்கா செய்தால் அது அவர்களுக்கு பயன் அளிக்குமா? என்று கேட்டார்கள்.

'ஆம். பயனளிக்கும்' என்று நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். அப்போது 'நிச்சயமாக எனது தோட்டம் அவர்களுக்காக ஸதக்காவாக இருக்கும் என்று தாங்களை சாட்சியாக்குகிறேன்' என்று ஸஃது ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறினார்கள் என்று இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள்.

நூல்கள்: புகாரி ஹதீது எண்: 2756, 2762, 2770, 2761, நஸாயி பாகம் 6 பக்கம் 250 பாபு இதா மாத்த அல் புஜ்அத்த ஹல் யுஸ்த்தஹப்பு லி அஹ்லிஹி....கிதாபுல் வஸாயா

♦ஒரு பெண்மணி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து நாயகமே! எனது தாயார் ஹஜ் செய்யாத நிலையில் மரணமடைந்து விட்டார்கள். அவர்களைத் தொட்டும் நான் ஹஜ்ஜு செய்யலாமா? என்று கேட்டார்.

"ஆம். செய்யலாம். அவர்களுக்காக நீர் ஹஜ்ஜு செய்வீராக!' என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

ஹழ்ரத் புரைதா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள்

திர்மிதி ஹதீஸ் எண்: 667 பாபு மா ஜாஅ பில் முதஸத்திகி கிதாபுஸ்ஸகாத்

♦ஒரு மனிதர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து நாயகமே! எனது சகோதரி ஹஜ் செய்வதற்கு நேர்ச்சை செய்திருந்தாள். ஆனால் அவள் மரணித்து விட்டாள் என்று கூறினார்.

அப்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவர்களின் மீது கடன் இருந்தால் நீர் அதை நிறைவேற்றுவீரா? என்று கேட்டார்கள்.

அதற்கு ஆம் என்று அவர் பதில் கூறினார். அப்படியானால் அல்லாஹ்வுக்கு (செலுத்த வேண்டிய கடனை) நிறைவேற்றிவிடுவாயாக. அவன் நிறைவேற்றப்படுவதற்கு மிகவும் தகுதியானவன் என்று கூறினார்கள்.

நூல்: புகாரி ஹதீஸ் எண்: 6699 பாபு மன் மாத்த வஅலைஹி நத்ருன் கிதாபுல் அய்மானி வந்நுதூரி

♦நிச்சயமாக ஒரு மனிதர் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து நாயகமே! எனது தாயார் இறந்து விட்டார்கள். அவர்கள் மீது ஒரு மாத நோன்பு (நிறைவேற்றப்பட வேண்டியது) இருக்கிறது. அவர்களைத் தொட்டும் நான் அதை நிறைவேற்றலாமா? என்று கேட்டார்.
அப்போது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அந்த மனிதரைப் பார்த்து 'உனது தாயார் மீது கடன் இருந்தால் நீர் அதை அவர்களைத் தொட்டும் நிறைவேற்றுவீரா? என்று கேட்டார்கள்.
அதற்கு 'ஆம்' என்று பதில் கூறினார். அப்படியானால் அல்லாஹ்வின் கடனாகிறது நிறைவேற்றப்படுவதற்கு மிக ஏற்றமாக இருக்கிறது என்று கூறினார்கள்.
ஹழ்ரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு
நூல்: முஸ்லிம் ஹதீஸ் எண்: 1148-155 பாபு கலாயிஸ் ஸியாமி அனில் மய்யித்தி கிதாபுஸ் ஸியாம்
♦ஒருவர் மீது கடமையான நோன்பு இருக்கும் நிலையில் அவர் மரணித்துவிடுவாராயின் அவரைத் தொட்டும் அவரின் பொறுப்பாளர் நோன்பு வைக்க வேண்டும் என்று நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் கூறியதாக ஆயிஷஹ் (றழியல்லாஹு அன்ஹு) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.
நூல்: முஸ்லிம்,ஹதீஸ் இலக்கம்– 1147,பாடம் - கிதாபுஸ்ஸியாம்
♦ஸய்யிதினா அலி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஒருமுறை இரு ஆடுகளை குர்பானி கொடுத்துக் கொண்டிருந்தார்கள்.
அதைக் கண்ட ஸய்யிதினா ஹனஷ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அலி ரலியல்லாஹு அன்ஹு அவர்களைப் பார்த்து ஏன் இரண்டு குர்பானி கொடுத்தீர்கள் என்று கேட்டார்கள்.
அதற்கு அலி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் என்னிடம் தமக்காக ஒரு குர்பானி கொடுக்குமாறு வஸிய்யத் செய்திருந்தார்கள். ஆகையால் இவ்விரண்டில் ஒன்று அவர்களுக்கும் எனக்கும் என்று கூறினார்கள்.
அபூதாவூத் ஹதீது எண்: 2790, திர்மிதி ஹதீது எண்: 1495 , மிஷ்காத் ஹதீது எண்: 1462
♦கண்மணி நாயகம் ஸல்லலாஹு அலைஹிவஸல்லம் அன்னவர்கள் கூறினார்கள்: உங்களில் மௌத்தானவர்களுக்கு சூரத்துல் யாசீனை ஓதுங்கள்.
நூல்கள்: அபூதாவூத், இப்னு மாஜா, பைஹகி, மிஷ்காத் - 141
♦கண்மணி நாயகம் ஸல்லலாஹு அலைஹிவஸல்லம் அன்னவர்கள் கூறினார்கள்: உங்களில் யாரேனும் மரணம் ஆகிவிட்டால் அவரை அடக்குவதில் தாமதம் செய்யாதீர்கள். அவரது தலை மாட்டில் சூரத்துல் பகராவின் ஆரம்பத்தையும், அவரது கால்மாட்டில் பகராவின் கடைசி ஆயத்தையும் ஓதுங்கள்.
ஹழ்ரத் உமர் (ரலியல்லாஹு அன்ஹு)
நூல்கள்: மிஷ்காத் - 149, பைஹகி, ஷுஹ்புல் ஈமான்
♦கண்மணி நாயகம் ஸல்லலாஹு அலைஹிவஸல்லம் அன்னவர்கள் கூறினார்கள்: எவராவது கப்ர் ஸ்தானங்களுக்கு சென்று யாசீன் சூராவை ஓதினால் கப்ராளிகளை தொட்டும், வேதனை லேசாக்கப்படுகிறது. மேலும் அவருக்கு அந்த கப்ராளிகளின் எண்ணிக்கை அளவுக்கு நன்மைகள் கிடைக்கின்றன. (நூல் மிர்காத் 4 - 382)
ஆகவே இதுவரை கூறப்பட்ட ஆதாரங்கள் மூலம் இறந்துவிட்ட பெற்றோர்களுக்கு பிள்ளைகள் செய்கின்ற நற்காரியங்களும், இறந்து போன பிள்ளைகளுக்காக பெற்றோர்கள் செய்கின்ற நற்காரியங்களும்,
இறந்து விட்ட தனது உடன் பிறந்த சகோதரனுக்காக அவனுடைய உடன்பிறந்த சகோதரன் செய்யும்' நற்காரியமும்,
இறந்துவிட்ட ஒரு நண்பனுக்காக அவன் நண்பன் செய்யும் நற்காரியமும்,
ஓர் இறந்து விட்ட முஃமினான சகோதரருக்காக மற்றொரு முஃமினான சகோதரர் (அவ்விருவருக்கிடையே எவ்வித உறவு மற்றும் நட்புமின்றி) செய்யும் நற்காரியமும், ஒரு மரணித்துவிட்ட மார்க்க அறிஞருக்காக (அவரிடம் பயின்ற மாணவர்கள் மற்றும் அவருடைய நல்லுபதேசதைக் கேட்டு அதன்படி நடந்து வந்த பொதுமக்கள் மூலம்)

அவர் கற்பித்த கல்வியின் பயனும் அவர்களைப் போய் சேரும் என்பதை தெளிவாக புரிந்து கொள்ள எல்லாம் வல்ல கிருபையாளன் நல்லுதவி புரிவானாக ஆமீன் ஆமீன் யாரப்பல் ஆலமீன்.
சங்கைக்குரிய ஷெய்குனா மௌலவி அல்ஹாஜ்
A. அப்துர் றஊப் (மிஸ்பாஹீ) அவர்கள் பதிவிலிருந்து...

## ஈஸால் ஸவாப் 9

நம்ம ஓதினால் பெற்றவர்களுக்கு சேருமா ? அவங்க அவங்க செய்றது அவங்களுக்கு தானே வரும் , அதான் கேட்டேன்.- Anisha Banu
( முந்தைய பதிவின் பின்னூட்டத்தில் இக்கேள்வியை கேட்டிருந்தார் )
மரணித்தவர்களுக்காக உயிரோடிருப்பவர்கள் துஆ செய்ய குர்ஆனே தூண்டுகிறது.
" இறைவா..! எங்களுக்கும் எங்களுக்கு முன் மரணித்து சென்றுவிட்ட எங்களின் விசுவாசிகளான சகோதரகளுக்கும் ( பாவங்களை மன்னித்து அருள் புரிவாயாக ! ) என்று பின்னால் வந்தவர்கள் பிரார்த்திப்பார்கள் என்று அல்லாஹ் கூறியுள்ளான். குர்ஆன் ( 59:10 )
" இன்னும் அவர்களுக்குப்பின் வந்தார்களே அவர்கள் " _ என்பது ஸஹாபிகளுக்கு பிறகு அந்த தாபிஈன்கள் முதல் கியாமத் நாள் வரை வருகின்ற நல்லோர்களை குறிக்கிறது. எனவே இந்த வசனம் எல்லா மூமின்களையும் பொதிந்து கொண்டிருக்கிறது .
இத்திருவசனம் ஒரு " துஆ " பிரார்த்தனையாகும்.
இவ்வசனத்தை ஓதுகின்ற ஒருவர் தனக்கு முன் மரணித்த விசுவாசிகள் அனைவருக்காகவும் "துஆ " பிரார்த்தனை செய்தவர் ஆகிறார்.
மரணித்தவர்கள் எந்த நாடுகளைச் சேர்ந்தவர்களாயினும், எந்த மொழியில் பேசுபவர்களாயினும் சரியே, தனக்கும், அவர்களுக்கும் இடையில் எவ்வித உறவும், நட்பும் இல்லாமல் போனாலும் சரியே.
உயிரோடுள்ளவன் மரணித்தவருக்காகச் செய்யும் பிரார்த்தனை மூலம் அவர் பலன் பெற மாட்டார் என்றிருந்தால், இத்திருவசனத்தை ஓதுவது அர்த்தமற்றதாயும், வீணான தாயும் ஆகிவிடும்.
எனது உம்மத்தின் தன்மை மழையின் தன்மையை போன்றதாகும். அதன் முதலாவது துளி நன்மையா ? அல்லது அதன் கடைசித்துளி நன்மையா ? என்று அறியப்படாது - ஹதீஸ்

## ஈஸால் ஸவாப் 10

பிறர் செய்யும் துஆவையும் பாவமன்னிப்பையும் இறைவன் ஏற்றுக் கொள்கிறானா ?
اَلَّذِيْنَ يَحْمِلُوْنَ الْعَرْشَ وَمَنْ حَوْلَهٗ يُسَبِّحُوْنَ بِحَمْدِ رَبِّهِمْ وَيُؤْمِنُوْنَ بِهٖ وَيَسْتَغْفِرُوْنَ لِلَّذِيْنَ اٰمَنُوْا رَبَّنَا وَسِعْتَ كُلَّ شَىْءٍ رَّحْمَةً وَّعِلْمًا فَاغْفِرْ لِلَّذِيْنَ تَابُوْا وَاتَّبَعُوْا سَبِيْلَكَ وَقِهِمْ عَذَابَ الْجَحِيْمِ
அர்ஷை சுமந்து கொண்டிருப்பவர்களும், அதைச் சுற்றியுள்ளவர்களும் தங்கள் இறைவனின் புகழைக் கொண்டு அவனைத் தஸ்பீஹு செய்து கொண்டும் இருக்கிறார்கள்;
அவன் மேல் ஈமான் கொண்டவர்களாக மற்ற ஈமான் கொண்டவர்களுக்காக மன்னிப்புக் கோருகின்றனர்:
“எங்கள் இறைவனே! நீ ரஹ்மத்தாலும், ஞானத்தாலும், எல்லாப் பொருட்களையும் சூழந்து இருக்கிறாய்! எனவே, பாவமீட்சி கோரி, உன் வழியைப் பின்பற்றுபவர்களுக்கு, நீ மன்னிப்பளிப்பாயாக. இன்னும் அவர்களை நரக வேதனையிலிருந்தும் காத்தருள்வாயாக! (குர்ஆன் : 40:7)
அல்லாஹ்வின் அர்ஷ் ஒன்பதாவது வானத்தில் உள்ளது . பசும் இரத்தினத்தால் படைக்கப்பட்டுள்து .
"அர்ஷை சுமந்து கொண்டிருப்பவர்களும், அதைச் சுற்றியுள்ளவர்களும் " என்பதன் கருத்து அர்ஷை 4 மலக்குகள் சுமக்கிறார்கள். கியாமத் நாளின் போது 8 மலக்குகள் சுமப்பார்கள் .

4 மலக்குகளுக்கு அப்பால் 70 ஆயிரம் ஸப்பு (அணிகளாக) மலக்குகள் தங்கள் கைகளை தங்கள் கழுத்தில் கட்டிக் கொண்டு நின்ற வண்ணம் தக்பீர் தஹ்லீல் சொல்லிக்கொண்டும், விசுவாசிகளுக்கு பாவமன்னிப்பு கேட்டுக் கொண்டும் இருக்கிறார்கள் .
இவர்களுக்கும் அப்பால் ஒரு லட்சம் ஸப்பு (அணிகளாக) மலக்குகள் தங்கள் இடது கைகளில் மீது வலது கரங்களை வைத்த வண்ணம் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமான தஸ்பீஹ் செய்கின்றனர்.விசுவாசிகளுக்கு பாவமன்னிப்பு கேட்டுக் கொண்டும் இருக்கிறார்கள் .
இவர்களுக்கும் அப்பால் சுற்றிலும் மலக்குகள் இருக்கின்றனர் இவர்களுடைய எண்ணிக்கையை அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அறிய மாட்டார்கள்.
இத்திருவசனம் மூலம் அர்ஷை சுமந்து கொண்டிருக்கின்ற மலக்குகளும், அவர்களைச் சுற்றியுள்ள மலக்குகளும் , உலகில் வாழ்ந்து கொண்டிருக்கின்ற மற்றும் வாழ்ந்து மறைந்து போன சகல விசுவாசிகளுக்கும் துஆ செய்து கொண்டே இருக்கின்றார்கள். அவர்களுக்காக பாவ மன்னிப்பும் கேட்டுக்கொண்டே இருக்கிறார்கள் என்று அல்லாஹ்வே கூறியுள்ளான்.
உயிரோடுள்ளவர்களின் துஆவின் மூலம் உயிரோடுள்ள மற்றவர்களும், மரணித்தவர்களும் பலன் பெற மாட்டார்கள் என்றிருந்தால், இத்தனை மலக்குமார்களின் பிரார்த்தனை அர்த்தமற்றதாயும் வீணானதாயும் ஆகிவிடும் அல்லவா ?

## ஈஸால் ஸவாப் 11

பிறர் செய்யும் துஆவையும் பாவமன்னிப்பையும் இறைவன் ஏற்றுக் கொள்கிறானா ? 2
“எங்கள் இறைவா! என்னையும், என் பெற்றோர்களையும், முஃமின்களையும் கேள்வி கணக்குக் கேட்கும் (மறுமை) நாளில் மன்னிப்பாயாக” (என்று இப்ராஹீம் பிரார்த்தித்தார்).
(அல்குர்ஆன் : 14:41)
நபி இப்ராஹிம் (அலை) அவர்களுடைய தந்தை முஸ்லிமா ? அல்லது இறைமறுப்பாளரா ? என்பதில் உலமாக்கள் இடையில் கருத்து வேறுபாடு உண்டு.
நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் தனது தந்தையுடன் பிறந்தவர் மரணித்து வெகுகாலத்திற்குப் பிறகு இந்தப் பிரார்த்தனையை கேட்டார்கள்.
மேலும் தமது தந்தைக்காக இப்றாஹீம் (அலை) அவர்கள் அவர்கள் பிழைபொறுக்கத் தேடியதானது, அவளுக்கு அவர் வாக்களித்திருந்த வாக்குறுதிகாகத்தான்.
திருக்குர்ஆனில் கூறப்பட்டிருக்கும் செய்தி நபி இப்ராஹீம் (அலை) அவர்களுடைய சொந்த தந்தையை குறித்ததல்ல அவரது சிறிய தந்தையான ஆஜர் என்பவரை குறித்துதான்.
தாயுடன் பிறந்தவளை அரபியர்கள் "தாய் " என்றே அழைப்பார்கள். அது போன்றே தந்தையுடன் பிறந்தவரை "தந்தை" என்று அழைப்பது அரபியர்களின் வழக்கம் என்பதை ஸுயூத்தி (ரஹ்) அவர்கள் கூறியிருக்கிறார்கள்.
இத்திருவசனம் மூலம் நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் தங்களுக்காகவும் , தங்களின் பெற்றோர்களுக்காகவும், உலகில் வாழ்ந்து கொண்டிருக்கின்ற, வாழ்ந்து மறைந்துபோன சகல விசுவாசிகளுக்காவும் ' துஆ செய்து உள்ளார்கள் என்பது தெளிவாகிறது .
உயிரோடுள்ள ஒருவரின் துஆவின் மூலம் உயிரோடுள்ள மற்றவர்களும், மரணித்தவர்களும் பலன் பெறமாட்டார்கள் என்றிருந்தால் நபி இப்ராஹீம் (அலை) அவர்களின் பிரார்த்தனை அர்த்தமற்றதாயும், வீணானதாயும் ஆகிவிடும்.

## ஈஸால் ஸவாப் 12

( பிறர் செய்யும் துஆவையும் பாவமன்னிப்பையும் இறைவன் ஏற்றுக் கொள்கிறானா ? 3 )



இறந்தவர்களை அடக்கம் செய்கின்ற சமாதிகளை மண்ணறை என்று சொல்லப்படும்.
ஒரு மனிதர் இந்த உலகில் இறந்து மண்ணறைக்குச் சென்ற பின் அவர் இந்த உலகில் எப்படி வாழ்ந்தாரோ அதற்கேற்பவே அங்கு இருக்க முடியும்.
இங்கு நல்லவராக வாழ்ந்திருந்தால், அங்கு சுகமாக இருக்க முடியும். இங்கு கெட்டவராக இருந்திருந்தால் அங்கு வேதனைகளைத்தான் அனுபவிக்க முடியும்.
மண்ணறைதான் இறுதிப் படுக்கை அறை. யார்தான் மறுப்போம்? ஆனால், மறப்போம்.
அந்தப் புதைகுழி எங்கோ யாருக்கோ தோண்டப்பட்டுக் கொண்டே இருக்கிறது. அந்த மயானப் பகுதியின் வழியே கடந்து போகும்போது வெட்டப்பட்ட ஒரு குழியை எட்டிப் பார்த்ததுண்டா? இறங்கிப் படுத்துப் பார்த்ததுண்டா?
நம்மோடு கூடவே வந்து கொண்டிருக்கும் மரணத்துடன் தனிமையில் உண்மையாகவே படுத்திருக்கும் ஒரு ஸ்பரிசம் அப்போது பரவத் தொடங்கலாம்.
ஆனால், அந்தப் புதைகுழியினுள் மறைந்திருக்கும் உலகத்தை நமது பகுத்தறிவின் இருட்டில் கண்டுகொள்ள முடியாது. அதற்கு இறைச்செய்தியின் ஆதாரங்களில் வெளிப்படும் ஒளி நமது இதயங்களில் பாய வேண்டும்.
அப்போது தெரியும், நம் முன் விரியும் மண்ணறை உலகம் ஓர் ஆறடி அகலக் குழி அல்ல.
அதையும் தாண்டி வேதனைகளும், சுகங்களும் ஒரு முன்னோட்டமாகச் சுற்றி வரும் மறுமையின் முதல்கட்ட உலகம் என்று. அந்த உலகத்தை " பர்ஜக் " மண்ணறை உலகம் எனப்படும்.
மையித்துக்காக நீங்கள் தொழுகை முடித்து விட்டால், அதற்காக தூய்மையான எண்ணத்துடன் துஆ செய்யுங்கள் என்று நபி (ஸல்) அருளினார்கள்
- இப்னு மாஜஹ் 1497, அபூதாவூத் 3199 , மிஷ்காத் 1674

நபி (ஸல்) அவர்கள் மையித்தை அடக்கம் செய்து முடித்துவிட்டால், அங்கு தரித்து நிற்பார்கள். மேலும் உங்களின் சகோதரனுக்காக பாவமன்னிப்புக் கேளுங்கள். அவருக்காக தரிபாட்டையும் கேளுங்கள். ஏனெனில் நிச்சயமாக அவர் இப்போது கேள்வி கேட்கப்படுவார் என்று கூறுவார்கள் என உஸ்மான் ( ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.
மிஷ்காத் 133 பக்கம் 26, அபூதாவூத் 3223
இந்த ஹதீஸ் மூலம் இன்னும் ஓர் உண்மை தெளிவாகின்றது. சுன்னத் ஜமாஅத் கொள்கைவாதிகளை விட நவீனத்துவ கொள்கைக்காரர்கள் இதை தெளிவாக விளங்கிக் கொள்ள வேண்டும்.

இந்த ஹதீஸை ஆதாரமாகக் கொண்டு சுன்னத்துல் ஜமாத் கொள்கையுடையோர் பள்ளிவாயலில் ஜனாஸா தொழுகை முடிந்தவுடன், தொழுகை நடத்தியவர் "அல்பாத்திஹா " என்று கூறுவார். அனைவரும் சூரத்துல் பாத்திஹா, சூரத்துல் இக்லாஸ் , சூரத்துல் முஅவ்விததைன் என்பவற்றை ஓதி மையத்திற்காக துஆ செய்கிறார்கள்.
இந்த நடைமுறை தொன்றுதொட்டு எல்லா பள்ளி வாயில்களிலும் இருந்து வந்த ஒன்றாகும். இன்றுவரை சுன்னத் ஜமாஅத் கொள்கை வாதிகள் நிர்வாகத்தில் உள்ள எல்லா பள்ளிவாசல்களிலும் இருந்து வருகின்றது.
ஆயினும் நவீனத்துவ கொள்ளைக்காரர்கள் ஜனாசா தொழுகை முடித்து விட்டால், அதை உடனே மையவாடிக்கு எடுத்துச் சென்று ,நாய், நரிகளை குழியில் போட்டுப் புதைத்து விடுவது போல தல்கீன் கலிமா எதுவுமின்றி புதைத்து விடுகின்றார்கள்.
இத்தகைய செயல் இஸ்லாத்திற்கு முரணான சீர்திருத்தம் என்ற பெயரில் நவீனத்துவ கொள்கைக்காரர்கள் மையித்துக்களை கண்ணியப்படுத்துவதில்லை. அவர்கள் இந்த ஹதீஸ்களின் பக்கம் கவனம் செலுத்தட்டும் . மேலும் உயிரோடு உள்ளவர்களின் பிரார்த்தனை மூலம் மரணித்தவர்கள் பலன் பெறமாட்டார்கள் என்றிருந்தால், நபி (ஸல்) அவர்களின் இந்த கட்டளை அர்த்தமற்றதாயும் வீணானதாயும் ஆகிவிடும் அல்லவா ?

**ஈஸால் ஸவாப் 13**

நாம் இறந்தால் உடல் மண்ணுக்குப் போகிறது.



ஆன்மா எங்கே செல்கிறது? அதிநவீன அறிவியல் ஆய்வு
இந்தக் கோட்பாட்டைத் தூக்கிப் பிடிக்கும் குவாண்டம் விஞ்ஞானிகள் இணை உலகங்கள் நம்மைச் சுற்றியிருப்பதாகக் கூறுகிறார்கள். அதாவது நம் உலகத்தின் ஜெராக்ஸ் காபி.
இந்தப் பதிவு பெரியதாக இருக்கிறதே படிக்கலாமா? வேண்டாமா?
இந்தக் கட்டுரையைத் தொடங்குவதற்குமுன் உங்களுக்கு இப்படியான சந்தேகம் எழுந்திருக்கலாம். உங்களைப் பொறுத்தவரை படிக்கலாமென்று முடிவுசெய்து தொடங்கிவிட்டீர்கள். முதல் முடிவைத் தேர்வு செய்துவிட்டதால் இரண்டாவது முடிவு நிகழவில்லையென்று நீங்கள் நினைக்கலாம். ஆனால், அதுவும் நிகழ்ந்துவிட்டது !
ஆம், இதைப் படிக்கலாமென்று முடிவெடுத்துத் தொடங்கிய மறுகணமே படிக்கவேண்டாமென்ற உங்கள் இரண்டாவது முடிவும் நிகழ்ந்திருக்கும். ஆனால் அது புதிதாகத் தோன்றிய வேறொரு பிரபஞ்சத்தில்.
ஆம். ஒவ்வொரு விஷயத்திலும் உங்களுக்குக் குறைந்தது இருவகையான எண்ணங்கள் தோன்றும். அதில் ஏதாவது ஒன்றைத்தான் தேர்ந்தெடுப்பீர்கள். அதைமட்டுமே செய்வீர்கள். ஆனால், உங்களுக்குத் தோன்றிய

இரண்டாவது எண்ணத்தை நிகழ்த்தவும் அதன் விளைவுகளை அனுபவிக்கவும் செய்வீர்கள், வேறொரு பிரபஞ்சத்தில்.
பிரபஞ்சம் ஒன்றல்ல. ஒவ்வொரு முறை நாம் சிந்திக்கும்போதும், புதியதொரு பிரபஞ்சத்தை உருவாகிக்கொண்டு தானிருக்கிறது. இதைத்தான் பல்லண்டக் (Multi universe)கோட்பாடு என்கிறார்கள் குவாண்டம் இயற்பியல் விஞ்ஞானிகள்.

அறிவியல் புனைகதை எழுத்தாளரான ஹெச்.ஜி. வெல்ஸ் என்பவர்தான் முதலில் இந்தக் கருத்தை முன்வைத்தார்; 1895-ல் அவர் எழுதிய ``தி டோர் இன் தி வால் (The Door in the Wall)" என்ற நாவலில். அது வெளியாகி 62 ஆண்டுகள் கழித்து ஹூக் எவெரெட் (Hugh Everett) என்பவர் தனது ஆய்வுக் கட்டுரையில் இதே கோட்பாட்டை முன்வைத்தார்.
" ஒவ்வொரு கணத்தின்போதும் ஒரு புதிய பிரபஞ்சம் உருவாகிக் கொண்டிருக்கிறது என்பதுதான் அவரது கட்டுரை குறிப்பிட்ட விளக்கம். அதாவது மேலே குறிப்பிட்டது போல. நீங்கள் இந்தக் கட்டுரையைப் படிக்கலாமா என்ற சிந்தனையில் ஊசலாடியபோது இரண்டு வகையான சிந்தனைகளையும் நிகழ வைக்கும் இருவேறு பிரபஞ்சங்களாக நமது பிரபஞ்சம் பிரிந்திருக்கும்.
அதற்கடுத்த கணமே அந்தப் புதிய பிரபஞ்சமும் தன் பங்குக்கு அதிலிருந்து பல்வேறு பிரபஞ்சங்களைத் தோற்றுவிக்கத் தொடங்கும். அப்படிப் பிரியும் பிரபஞ்சங்களில் பலவற்றில் உங்கள் பிரதி இருக்கலாம், சிலவற்றில் இல்லாமலும் போகலாம்.
இந்தத் தோற்றங்கள் நடைபெறுவதற்குத் தூண்டுதலாக இருப்பது நமது செயல்களே. நாம் ஒரே செயலுக்குப் பல்வேறு எண்ணங்களால் சிந்தனைகளைச் செய்யும்போது அந்த ஒவ்வொரு சிந்தனையையும் நிகழ வைப்பதற்கான பிரபஞ்சங்கள் தோன்றும்.
உதாரணமாக ஒரு செயலைச் செய்வதற்கு முன் அதுகுறித்து நீங்கள் எட்டு முடிவுகளைச் சிந்தித்து இறுதியில் ஒரு முடிவைத் தீர்மானித்தால், மீதி ஏழு முடிவுகளுக்காக ஏழு புதிய பிரபஞ்சங்கள் தோன்றும். ஆக அந்த எட்டுச் சிந்தனைகளுக்கான விளைவுகளையும் நீங்கள் அனுபவிப்பீர்கள்.

நம் வாழ்க்கையை தீர்மானிப்பது நம் செயல்களை விட நம் எண்ணங்கள்தான் என்பதாக ஓர் அறிஞன் சொன்னான்:
“எண்ணங்களைப் பற்றி கவனமாக இருங்கள்.அவைகள் வார்த்தைகளாக மாறுகின்றன.

வார்த்தைகளில் கவனமாக இருங்கள்.அவை தான் செயல்களாக மாறுகின்றன.

செயல்களில்கவனமாக இருங்கள்.அவை தான் பழக்கமாக மாறுகின்றன.

பழக்கங்களில் கவனமாக இருங்கள். அவை தான் ஒழுக்கமாக மாறுகின்றன.

ஒழுக்கத்தில் கவனமாக இருங்கள். அவை தான் உங்கள் வாழ்க்கையை உருவாக்குகின்றன.

இவ்வுலக வாழ்க்கையில் கவனமாக இருங்கள். அவை தான் மறுமை வாழ்வை பெற்றுத் தருகிறது "

ஹூக் தனது ஆய்வுக்கட்டுரையை முன் வைத்த பிறகு 1980-ல் ரஷ்யாவைச் சேர்ந்த விஞ்ஞானி ஆண்ட்ரே லிண்டே என்பவரும் இதை உறுதிப்படுத்தித் தனது கோட்பாட்டை வெளியிட்டார்.
"விண்வெளி பல மண்டலங்களைக் கொண்டுள்ளது. அவையனைத்தும் தொடர்ச்சியாக மேலும் பல மண்டலங்களை உற்பத்தி செய்துகொண்டேயிருக்கிறது. அப்படி உற்பத்தியான மண்டலங்கள் அவற்றின் பங்குக்கு முன்பைவிட அதிகமான மண்டலங்களை உற்பத்தி செய்கிறது.
இவை குறிப்பிட்ட இடைவெளியோடு அருகருகே இருக்கின்றன. ஒன்றுக்கொன்று மற்றதன் இருப்பை அறிந்திருப்பதில்லை அவ்வளவுதான். பெரும்பாலும் மண்டலங்கள் கிட்டத்தட்ட ஒரே மாதிரியான அமைப்பைக்

கொண்டவையாக இருக்கலாம். அல்லது மாறுபட்ட அமைப்பைக் கொண்டதாக இருக்கலாம். அதஅது அவரது எண்ணங்களைப் பொருத்தது.
இதைத்தான் திருக்குர்ஆனில் இறைவன் :
"(எவருடைய உதவியுமின்றி) நம்முடைய சக்தியைக் கொண்டே வானத்தை அமைத்தோம். நிச்சயமாக நாம் (அதனை அவர்களின் அறிவிற்கெல்லாம் எட்டாதவாறு) மிக்க விசால மாக்கியும் வைத்திருக்கின்றோம்" (குர்ஆன் : 51:47)
இப்படித் தோன்றிக்கொண்டேயிருக்கும் பல லட்சக்கணக்கான பிரபஞ்சங்களில் நமது பிம்பங்களும் ஆங்காங்கு நமது எண்ணங்களின் முடிவுகளின் விளைவாகத் தோன்றிக் கொண்டேயிருக்கிறது. இறந்துவிட்டால் அவ்வளவு தானென்று நாம் நினைக்கிறோம். ஒருவேளை நமது உடல் மண்ணில் புதைத்தப் பின் நமது ஆன்மா நம் எண்ணத்தால் உருவாக்கிய வேறு பிரபஞ்சத்திலிருக்கும் நமது பிம்பத்தைத் தேடிச் செல்லலாம்.
2009-ம் ஆண்டு குவாண்டம் இயற்பியல் விஞ்ஞானியான ராபர்ட் லான்ஸா (Robert Lanza) எழுதிய ஒரு புத்தகம் சமீபத்தில் இணையத்தில் வைரலாகி வருகிறது.

"பயோசென்ட்ரிஸம்: வாழ்வும் ஆன்மாவும் பிரபஞ்சத்தைப் புரிந்துகொள்வதற்கான மூலக்கூறுகள் (Biocentrism: How Life and Consciousness are the keys to understanding the nature of the Universe)" என்ற அவரது புத்தகத்தில் பேசப்பட்ட விஷயமே அதற்குக் காரணம்.
உயிரை மையமாகக் கொண்டு மானிட மூலத்தைத் தேடுவதையே பயோசென்ட்ரிஸம் என்பார்கள். குவாண்டம் விசையியல் (Quantum mechanics), இயற்பியல், வான் இயற்பியல் (Astro Physics) போன்ற துறைகளில் காட்டிய ஆர்வம் இறுதியாக அவரை பயோசென்ட்ரிஸத்தில் கொண்டு சேர்த்துள்ளது.
சொல்லப்போனால், இந்தத் துறைகள் கூட்டாக இணைந்ததில் உருவானதுதான் இந்தப் புதிய கோட்பாடே. வாழ்வும் ஆன்மாவுமே பிரபஞ்சத்தைப் புரிந்துகொள்ள அடிப்படையென்று போதிப்பதே பயோசென்ட்ரிஸம். அதைப் பின்பற்றுபவர்களைப் பொறுத்தவரை பொருள்களாலான பிரபஞ்சத்தை உருவாக்கியது எண்ணங்களான உள்ளுணர்வுகளே.

லான்ஸாவைப் பொறுத்தவரை விண்வெளியும் நேரமும் ஏதோ பொருளோ விஷயமோ இல்லை. மாறாக நமது புரிதலுக்கான அளவுகோல்கள். நாம் நம்மோடு அவற்றைக் கொண்டு செல்கிறோம், ஓட்டைச் சுமந்துகொண்டு சுற்றும் ஆமையைப் போல. விண்வெளி, நேரமென்ற ஓடுகளை அகற்றினாலும் நமது இருப்பு இருக்கவே செய்யும். வேறு பிரபஞ்சத்தில் வேறு வடிவத்தில்.
லான்ஸா கோட்பாட்டில் ஆன்மாவுக்கு இறப்பே கிடையாது என்கிறார். உடல் அழிந்தபிறகு அது வெறும் நினைவுகளாக இருக்கின்றன. மனிதர்கள் அவர்களை உடலை வைத்தே அடையாளம் கண்டுகொள்வதால்தான் அந்த நினைவுகள் தெரிவதில்லை என்கிறார்.
உடல் அழியும்போதோ அது அழிந்த பிறகோ ஆன்மாவும் அழிந்து விடுகிறதென்று மனிதர்கள் தவறாகப் புரிந்துகொண்டுள்ளனர். உடல்தான் ஆன்மாவை உருவாக்கியதென்றால் உடலோடு அதுவும் அழிந்துவிடும். ஆனால் உடல்தான் அழிகிறது.அந்த அழிவு ஆன்மாவுக்கு இல்லை என்பதை நவீன விஞ்ஞானமும் ஒத்துக் கொண்டுள்ளது.
விண்வெளி நேரம் போன்ற எல்லைகளைக் கடந்தது ஆன்மா. ஒரு உடலிலோ அல்லது அண்டவெளியிலோ, அதனால் எங்கு வேண்டுமானாலும் பிழைத்திருக்க முடியும். பல்லண்டக் கோட்பாடும் உண்மையென்று லான்ஸா நம்புகிறார்.
ஒரு பிரபஞ்சத்துக்கு அருகிலேயே மற்ற பிரபஞ்சங்களும் இருக்கின்றன. ஒரு பிரபஞ்சத்தில் உடல் அழிந்துவிட்டால் மற்றொரு பிரபஞ்சத்தில் அதைப் போலவே இருக்கும் வேறு உடலில் சென்று கலந்துவிடும். அதிலும் இறந்துவிட்டால், வேறொரு பிரபஞ்சத்திலிருக்கும் உடலில் கலந்துவிடும்.

சரீரத்தைக் கொண்டே சொர்க்க இன்பங்களோ.நரக துன்பங்களோ ஏற்படுகிறது.எந்த ஒரு ஆத்மாவையும் உடலைக் கொண்டே அல்லாஹ் தண்டிக்கிறான் காரணம் அந்த உடலைக் கொண்டே அந்த ஆத்மா கெட்ட சுகங்களான பொன்னாசை, பெண்ணாசை, மண்ணாசை போன்றவற்றில் தவழ்ந்து சீரழிந்தது எனவேதான் அவன் அந்த ஆத்மாவை உடலைக் கொண்டு தண்டிக்கிறான்!

அவன் முதலில் படைக்கிறான். மீண்டும் படைக்கிறான்.(குர்ஆன் 85:13) அவ்வாறில்லை! அவனது விரல் நுனிகளையும் சீராக்க நாம் ஆற்றலுடையவர்கள். (குர்ஆன் 75:4)

அதாவது நாம் இறக்கும்போது வேறு பிரபஞ்சத்தில் வாழும் நமது பிம்பம் கேபிள் சிக்னலை ஈர்ப்பதுபோல் நமது ஆன்மாவை ஈர்த்துக்கொள்ளும். இப்படியாகத் தொடர்ச்சியாக ஒரு பாதையில் அது பயணித்துக் கொண்டேயிருக்கும். அதனால், ஆன்மாவுக்கு இறப்பு என்பதே கிடையாது என்கிறார்.

இறைவிசுவாசியான அடியான் ஒருவன் உலகத் தொடர்புகளைத் துண்டித்துக் கொண்டு மறுமையை எதிர்நோக்கி கொண்டிருக்கையில் (சக்கராத்தின் நேரத்தில்) சூரிய ஒளிக்கு ஒப்பான பிரகாசம் கொண்ட முகத்துடன் வானத்திலிருந்து வானவர்கள் சிலர் அவரிடம் வருவார்கள்.

இவர்கள் தங்களது சுவர்க்கத்துக்கு கபன் துணிகளிலிருந்து ஒரு கபன் துணியையும் சுவர்க்கத்தின் நறுமணத்திலிருந்து நறுமணத்தையும் வைத்து கொண்டு அவருடைய பார்வைக்கு எட்டும் தூரமளவு அமர்ந்திருப்பார்கள்.

அப்பொழுது உயிரை கைப்பற்றும் வானவர் வந்து அவரருகில் அமர்வார். அவரை நோக்கி நல்ல ஆத்மாவே! ஏக இறைவனுடைய மன்னிப்பை நோக்கியும் அவனுடைய திருப்தியை நோக்கியும் இந்த உடலிலிருந்து வெளியேறி விடு என கூறுவார்.

தோல் பையிலிருந்து (அதனை வளைத்தால்) நீர் வழிந்து விழுவது போல அந்த (ஆத்மா உடலிலிருந்து இலகுவாக) வெளியேறிவிடும்.

அந்த உயிரை எடுத்தவுடன் கொஞ்சநேரம் கூட கையில் வைத்து கொள்ளாமல் அந்த கபனில் கொண்டு வந்த நறுமணத்தோடு வைத்து விடுவார்கள். (பின்பு அந்த உயிரை) அல்லாஹ்விடம் கொண்டு செல்வார்கள்)

வானவர்கள் இருக்கும் கூட்டத்திற்கு அருகாமையில் அந்த உயிரை கொண்டு போகும் போதெல்லாம் இது யாருடைய நல்ல உயிர்? என அவ்வானவர்கள் கேட்பார்கள். அதற்கு இவருக்கு சொல்லப்பட்ட நல்ல பெயரைக் கொண்டு இன்னாருடைய மகன் இன்னார் என்று சொல்லப்படும்.

இவருக்காக முதல் வானத்தை திறக்கும் படி அவ்வானவர் கூறுவார். வானம் திறக்கப்படும். இப்படி ஏழு வானம் திறக்கப்படும். அப்போது அல்லாஹ் என் அடியானுடைய செயல்களை நல்லவர்களுடைய ஏடான இல்லியீனிலே பதிவு செய்யுங்கள், அந்த ஆத்மாவை மீண்டும் பூமிக்கு கொண்டு வந்து அவனுடைய கப்ரில் சேருங்கள் என்று கூறுவான்.

( நூல்: அஹ்மத் 17803)

நிராகரிப்பவன் மரண வேளையை நெருங்கிவிட்டால், கருத்த முகத்துடன் சில வானவர்கள் வந்து கண் பார்வை எட்டும் தூரத்தில் அமர்ந்துவிடுவார்கள். அவர்களிடத்தில் ஒரு கம்பளி இருக்கும்.

உயிரைக் கைப்பற்றக்கூடிய மலக்கு வந்து அவனை நோக்கி கெட்ட ஆத்மாவே! அல்லாஹ் கொடுக்க இருக்கும் இழிவை நோக்கியும் அவனுடைய கோபத்தை நோக்கியும் நீ வெளியேறி வா! என்று கூறுவார்.

அப்பொழுது அவ்வுயிர் ஒளிந்து கொள்வதற்காக உடல் முழுவதும் ஓட ஆரம்பித்துவிடும். நனைத்த கம்பளியிலிருந்து முள் கம்பியை பிடுங்கி எடுப்பது போல் அவனுடைய உடலிலிருந்து உயிர் கைப்பற்றப்படும். கொஞ்ச நேரம் கூட (அவ்வானவர்) தன் கையில் வைக்க மாட்டார். உடனே கம்பளிதுணியில் வைத்துவிடுவார். பின்பு அந்த உயிர் முதல் வானத்திற்கு எடுத்துச் செல்லப்படும்.

இவ்வுலகில் வீசும் துர்நாற்றத்தை விட அதிகமாக துர்நாற்றம் அதிலிருந்து வீசும். பின்பு அந்த உயிரை முதல் வானத்திற்கு கொண்டு செல்வார். வானவர்கள் இருக்கும் கூட்டத்திற்கு அருகில் கொண்டு செல்கின்ற போது எவனுடைய கெட்ட உயிர்? என அங்குள்ள வானவர்கள் கேட்டார்கள். இன்னாருடைய மகன் இன்னார் என்று சொல்லப்படும்.
முதல் வானத்தை திறக்கும் படி அவ்வானவர் கேட்பார். அவனுக்காக வானம் திறக்கப்படாது என்று கூறிவிட்டு பின்வரும் வசனத்தை ஓதிக் காட்டினார்கள்.
நமது வசனங்களைப் பொய்யெனக் கருதி, அதைப் புறக்கணிப்போருக்கு வானத்தின் வாசல்கள் திறக்கப்பட மாட்டாது. ஊசித் துவாரத்தில் ஒட்டகம் நுழையும் வரை அவர்கள் சொர்க்கத்தில் நுழைய மாட்டார்கள். இவ்வாறே குற்றவாளிகளைத் தண்டிப்போம். (குர்ஆன் 7:40)
ஏக இறைவன் உயிரைச் சுமந்து வந்த வானவரைப் பார்த்து அவனுடைய செயல்களை பூமியின் அடிப்பாகத்திலுள்ள ஸிஜ்ஜீன் என்ற இடத்திற்கு எறியப்படும். பிறகு பின்வரும் வசனத்தை ஓதிக்காட்டினார்கள்.
அல்லாஹ்வுக்கு அர்ப்பணித்து, அவனுக்கு இணை கற்பிக்காதோராக (ஆகுங்கள்!) அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பவன் வானத்திலிருந்து விழுந்து பறவைகள் தூக்கிச் சென்றவனைப் போல், அல்லது காற்று தூரமான இடத்தில் கொண்டு போய் வீசிய ஒருவனைப் போல் ஆவான்.
(குர்ஆன் 22:31)

இவ்வாறு (கெட்டவர்களின் ஏடான) ஸிஜ்ஜீனில் அவனுடைய செயல்கள் பதியப்படும் (நூல் : அஹ்மத் 17803)
இந்தக் பயோசென்ட்ரிஸக் கோட்பாடு பல முரண்பாடுகளைக் கொண்டிருந்தாலும் இதைப் பலரும் முழுமையாக நம்புகிறார்கள். பல்லண்டக் கோட்பாடு உண்மையென்று ஏற்றுக்கொண்ட பல இயற்பியல், வானியல் விஞ்ஞானிகளும் கூட நம்புகிறார்கள். அவர்களைப் பொறுத்தவரை இணை உலகங்களின் இருப்பைப் பொய்யாக்கும் எந்த இயல்விதிகளும் இல்லையென்பதே இதை உறுதியாக நம்புவதற்குப் போதுமான காரணம்.
"ஒவ்வொருவரும் தத்தமது எண்ணங்களின்{வழிமுறைப்}படி செயலாற்றுகின்றனர்." {அல்குர்ஆன்:17:84}
நபி{ஸல்}அவர்கள் கூறினார்கள்:
"மறுமை நாளில் ஓர் அடியான் அல்லாஹ்வின் சமூகத்தில் கொண்டு வரப்படுவான். அவனோடு மலை போல் குவிக்கப்பட்ட அவனுடைய நற்செயல்களும் கொண்டு வரப்படும்.
அப்போது அங்கே ஓர் வானவர் "இவரால் பாதிப்புக்குள்ளானவர்கள் எவரும் உண்டோ? வாருங்கள் இவரின் நன்மைகளில் இருந்து அதற்கான ஈட்டை பெற்றுச் செல்லுங்கள் என்று அறிவிப்புச் செய்வார்.
அப்போது சிலமனிதர்கள் அங்கே வந்து அவரின் நன்மைகளில் இருந்து எடுத்துச் சென்றிடுவர். இறுதியில் அம்மனிதர் மட்டும் தனியே நின்று கொண்டிருப்பார்.
அப்போது அல்லாஹ் அவரை அழைத்து "ஓ..அடியானே ! உன்னுடைய பொக்கிஷம் ஒன்று என்னிடம் உள்ளது அதை என் படைப்பினங்களில் எவரும் அறிய மாட்டார்.பரிசுத்த என் வானவர்களும் கூட அறியமாட்டார்கள்." என்று சொல்வான்.

அப்போது அந்த அடியான் "அல்லாஹ்வே அது என்ன"? என்று கேட்பான். அதற்கு அல்லாஹ் "ஓ..அடியானே ! உன்னுடைய தூய்மையான எண்ணங்கள்தான் அது ! நீ ஒவ்வொரு முறை எண்ணும் போதும் அதற்கு நான் எழுபதுமடங்கு நன்மைகளை எழுதினேன்." என்பான். நூல்:புகாரி, 2449,6534.
எது எப்படியோ ! நீங்கள் வாழும் இந்த பிரபஞ்சத்தில் உங்கள் எண்ணத்தைக் கொண்டுதான் மறுமை உலகில் நீங்கள் நிரந்தரமாக வாழப்போகும் பிரபஞ்சங்கள் உருவாகிறது என்பதை மறந்து விடாதீர்கள் .
இம்மை வணக்க வழிபாடுகளுக்கு கூலியை மறுமையில் பெறக்கூடிய தருணம்.செய்த பாவத்திற்கு மன்னிப்பும் பிரயாசித்தம் உயிரோடிருப்பவர்கள்தான் அவனுக்காக ஈஸால் ஸவாபு செய்தாக வேண்டும்.

## ஈஸால் ஸவாப் 14

( மரப்பட்டையின் உயிர்ப்புத் தன்மை மண்ணறை வாசிகளுக்கு ஸவாப் செய்கிறது )

நபி(ஸல்) அவர்கள் மக்கா அல்லது மதீனாவில் ஒரு தோட்டத்தின் பக்கமாகச் சென்று கொண்டிருந்தபோது, கப்ரில் வேதனை செய்யப்படும் இரண்டு மனிதர்களின் சப்தத்தைச் செவியுற்றார்கள்.
அப்போது, 'இவர்கள் இருவரும் வேதனை செய்யப்படுகிறார்கள். ஒரு பெரிய விஷயத்திற்காக (பாவத்திற்காக) இவர்கள் இருவரும் வேதனை செய்யப்படவில்லை' என்று சொல்லிவிட்டு, 'இருப்பினும் (அது பெரிய விஷயம்தான்) அவ்விருவரில் ஒருவர், தாம் சிறு நீர் கழிக்கும்போது மறைப்பதில்லை. மற்றொருவர், புறம்பேசித் திரிந்தார்' என்று கூறிவிட்டு,
ஒரு பேரீச்ச மட்டையைக் கொண்டு வரச் சொல்லி அதை இரண்டாகப் பிளந்து ஒவ்வொரு கப்ரின் மீதும் ஒரு துண்டை வைத்தார்கள்.
அது பற்றி நபி(ஸல்) அவர்களிடம் 'நீங்கள் ஏன் இவ்வாறு செய்தீர்கள்?' என்று கேட்கப்பட்டதற்கு, 'அந்த இரண்டு மட்டைத் துண்டுகளும் காயாமல் இருக்கும் போதெல்லாம் அவர்கள் இருவரின் வேதனை குறைக்கப்படக் கூடும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார். ஸஹீஹ் புகாரி : 216.
மரப்பட்டையின் உயிர்ப்புத் தன்மை மண்ணறை வாசிகளுக்கு ஸவாப் செய்கிறது என்றால் மண்ணறைவாசிகளுக்கு பிற மனிதர்கள் செய்யும் பாவமன்னிப்பு ஏற்றுக்கொள்ளப்படாதா ?

## ஈஸால் ஸவாப் 15

மரணித்தவரின் பெயரால் உணவு வழங்குவதற்கு ஆதாரம் உண்டா ? 1

நபி (ஸல் ) அவர்கள், தங்களின் மனைவி கதீஜா நாயகி (ரலி) அவர்கள் மரணித்த பின் அதிகமதிகம் அவர்களை நினைவுபடுத்துப்பவர்களாக இருந்தார்கள். சில சமயங்களில் ஆட்டை அறுத்து அதை தனித்தனி உறுப்புகளை வெட்டி கஜீதா நாயகியின் தோழிகளுக்கு தோழிகளுக்கு அன்பளிப்பாக அனுப்பி வைப்பார்கள் என்று ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள். புஹாரி 3818, முஸ்லிம் 2435 , மிஷ்காத் 6186 , திர்மிதீ 3875
உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) கூறினார்கள்:
"நபி(ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா(ரலி) அவர்களின் குடும்பத்தாரில் யாரேனும் இறந்துவிட்டால், அதற்காகப் பெண்கள் கூடிப் பிறகு, அவர்களின் குடும்பத்தாரும் நெருங்கிய உறவினர்களும் தவிர மற்ற பெண்கள் அனைவரும் கலைந்து சென்றுவிடுவார்கள்.
அப்போது ஒரு பாத்திரத்தில் 'தல்பீனா' (எனும் பால் பாயசம்) தயாரிக்கும்படி ஆயிஷா(ரலி) கூறுவார்கள். அவ்வாறே அது தயாரிக்கப்படும். பிறகு 'ஸரீத்' (எனும் தக்கடி) தயாரிக்கப்படும்.
அதில் 'தல்பீனா' ஊற்றப்பட்ட பிறகு (அங்குள்ள பெண்களிடம்) ஆயிஷா(ரலி) 'இதைச் சாப்பிடுங்கள்; ஏனெனில், 'தல்பீனா' (எனும் பாயசம்) நோயாளியின் மனத்திற்கு ஆறுதல் அளிக்கும்; கவலைகளில் சிலவற்றைப் போக்கும் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறக் கேட்டுள்ளேன்' என்று சொல்வார்கள். ஸஹீஹ் புகாரி : 5417

## ஈஸால் ஸவாப் 16

மய்யித்தை அடக்கிய அன்று ஓதப்படுகின்ற முதலாம் கத்தத்திற்கும் அதைத் தொடர்ந்துள்ள 3,5,7,15,20,30,40 ஆகிய தினங்களில் ஓதப்படுகின்ற கத்தங்களுக்கும் மற்றும் வருஷக் கத்தம் ஓதுவதற்கும் ஏதேனும் ஆதாரம் உண்டா?

1ம் நாள் கத்தம்



நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் ஒரு ஜனாஸாவில் கலந்து கொள்வதற்காக புறப்பட்டுச் சென்றோம். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கப்ரின் மேல் நின்று கொண்டு கப்று தோன்றுபவரைப் பார்த்து மய்யித்தின் கால்மாட்டிலும், தலைமாட்டிலும் குழியை விசாலப்படுத்துமாறு யோசனை சொல்லிக் கொண்டிருந்தார்கள்.
அங்கிருந்து திரும்பியபோது இறந்தவரின் மனைவி அனுப்பி வைத்த அழைப்பாளர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை (உணவு உண்பதற்காக) அழைத்தார்கள்.
உடனே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அந்த அழைப்பை ஏற்று சென்றார்கள். நாங்களும் அவர்களுடன் சென்றோம். உணவு கொண்டு வரப்பட்டது. உடனே உணவில் கையை வைத்தார்கள். கூட்டத்தில் உள்ள அனைவரும் கையை வைத்தனர். பிறகு எல்லோரும் சாப்பிட்டார்கள்.
ஹழ்ரத் ஆஸிம் ரலியல்லாஹு அன்ஹு
நூல்கள்: அபூதாவூத் ஹதீது எண் 3332 பாபுன் பீ இஜ்தினாபிஷ் ஷுப்ஹாத்தி கிதாபுல் புயூஇ, மிஷ்காத் பக்கம் 544 ஹதீஸ் எண்: 5942 பாபுன் பில் முஃஜிஸாத்தி

3ம் நாள் கத்தம்:
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அருமை மகனார் இப்றாஹீம் ரலியல்'லாஹு அன்ஹு அவர்கள் வபாத்தாகி மூன்றாம் நாள் அன்று அபூதர்ரு ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் உலர்ந்த பேரீச்சம் பழம், பால், தொலிக் கோதுமையால் ஆன ரொட்டி ஆகியவற்றைக் கொண்டு வந்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சமூகத்தில் வைத்தார்கள்.
உடனே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்ஹம்து சூராவை ஒருவிடுத்தம் குல்ஹுவல்லாஹு அஹது சூரா 3 விடுத்தம் ஓதி கையை உயர்த்தி பிரார்த்தித்து விட்டு கையை முகத்தில் தடவினார்கள். பிறகு

அபூதர்ரு ரலியல்லாஹூ அன்ஹு அவர்களைப் பார்த்து இதை மக்களுக்கு மத்தியில் பகிர்ந்து கொடுங்கள்' என்று நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.
நூல்: பதாவா அர்வஹன்தி தஸ்ஹீஹுல் அகாயித் பக்கம் 128

5ம் நாள் கத்தம்:
உடம்பை விட்டும் உயிர் பிரிந்து மூன்று நாட்கள் கழிந்து விட்டால் அந்த ஆன்மா அல்லாஹ்வின் சமூகத்தில் நாயனே! நான் இருந்து வந்த உடம்பை பார்த்து வருவதற்கு எனக்கு அனுமதி அளிப்பாயாக என்று கேட்கின்றது. உடனே அல்லாஹு தஆலா அது சென்று வருவதற்கு அனுமதி அளிப்பான். அப்போது அந்த ஆன்மா தனது கப்ருக்கு சற்று தூரத்தில் இருந்து கொண்டு தனது உடம்பைப் பார்க்கும். அப்போது இரு மூக்கு துவாரத்திலிருந்தும் வாயிலிருந்தும் தண்ணீர் வடிந்து கொண்டிருக்கும். இதைக் கண்ணுற்ற அந்த ஆத்மா தனது உடம்பின் நிலையை நினைத்து நீண்ட நேரம் அழுதுவிட்டு பிறகு திரும்பிச் சென்று விடும்.
ஐந்து நாட்கள் கழிந்து விட்டால் மீண்டும் அல்லாஹ்விடம் அனுமதி பெற்று தனது உடம்பைப் பார்ப்பதற்காக வரும். அப்போது அதன் வாயிலிருந்து இரத்தமும் அதனடைய ஒரு காதுகளிலிருந்து சீலும் ஊனமும் வடிந்துக் கொண்டிருப்பதைப் பார்த்து மீண்டும் அழுது விட்டு சென்று விடும்.
பிறகு ஏழாவது நாளில் மீண்டும் வந்து தனது உடம்பைப் பார்க்கும். அப்போது தனது உடம்பை புழுக்கள் கடித்துக் கொண்டிருப்பதைக் கண்டு மீண்டும் அழ ஆரம்பித்துவிடும்.
மேலும் தான் இப்பூவுலகில் வாழ்ந்த சொகுசான வாழ்க்கையைத் தற்போதுள்ள கபுருடைய கஷ்டமான வாழ்க்கையோடு ஒவ்வொரு வகையிலும் ஒப்பிட்டு பார்த்தவண்ணம் தன் நிலையை நினைத்து நினைத்து நீண்ட நேரம் அழுது விட்டு மீண்டும் சென்று விடும் என்று நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதாக ஹதீஸ் வந்துள்ளது.
நூல்: தக்காயிகுல் அக்பார் 16வது பக்கம் 9வது பாபு அத்துரருல் ஹிஸாப் பக்கம் 16
இப்போது கூறப்பட்ட இந்த ஹதீஸில் வந்துள்ளது போன்று தனது உடம்பு நாதியற்று கிடக்கும் நிலையையும் தனது குடும்பத்தாரோ உறவினர்களோ கைகொடுத்து காப்பாற்றாமல் தான் மட்டும் தன்னந்தனியே தவித்துக் கொண்டிருக்கிறோமே என்றும் நினைத்து கவலைப்படுகின்ற நேரத்தில் அந்த மய்யித்தை நினைத்து ஓதப்படுகின்ற கத்தத்தின் நன்மை அதற்கு போய்ச் சேருவதைக் கண்டு மகிழ்ச்சி அடைகின்றது என்ற காரணத்தினால் மேற்கூறப்பட்ட தினங்களில் அதாவது 3,5,7 ஆகிய தினங்களில் கத்தம் ஓதப்படுகின்றது.

7ம் நாள் கத்தம்:
மரணித்தவர்கள் நிச்சயமாக தாங்களின் கபுருகளில் 7 நாட்கள் குழப்பத்தில் உட்படுத்தப்பட்டவர்களாக இருப்பார்கள் அந்த ஏழு நாட்களில் தாங்கள் பெயரால் உணவு கொடுக்கப்படுவதை விரும்பக் கூடியவர்களாக இருக்கிறார்கள்.
...என்று தாவூஸ் ரலியல்லாஹூ அன்ஹு அவர்களைத் தொட்டும் இமாம் அஹ்மது ரலியல்லாஹூ அன்ஹு அவர்கள் தங்களின் ஸுஹ்து என்ற நூலிலும் அபூநயீம் ரலியல்லாஹூ அன்ஹு அவர்கள் தங்களின் ஹில்யா என்ற நூலிலும் கூறுகிறார்கள் என்று ஷரஹுஸ்ஸுதூர் என்ற நூலின் 139 வது பக்கத்திலும் பிக்ஹுஸுன்னா 369வது பக்கத்திலும் ஹாவி பாகம் 2 பக்கம் 178 வது பக்கத்திலும் குறிப்பிடப்பட்டுள்ளது.
மேலும் இந்த ஹதீதை இமாம் இப்னு ஹஜர் ரலியல்லாஹூ அன்ஹு அவர்கள் ஸஹீஹ் ஆனது என்று குறிப்பிட்டுள்ளார்கள்.(நூல் அல்மிர்ஆத் பாகம் 4 பக்கம் 584 மற்றும் பாகம் 3 பக்கம் 514)
மேலும் நிச்சயமாக கபுராளிகளைத் தொட்டும் செய்யப்படும் தான தருமங்கள் அவர்களுடைய கபுருகளில் உள்ள சூட்டை (உஷ்ணத்தை) அமர்த்தி விடும் என்று நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்.
ஹழ்ரத் உக்பா ரலியல்லாஹூ அன்ஹு அவர்களால் அறிவிக்கப்பட்டு தபரானியில் பதிவாகியுள்ள ஹதீது (நூல் பிக்ஹு ஸுன்னா பக்கம் 368 – அல் மிஆத் பாகம் 3 பக்கம் 514) இங்கு சிந்தனைக்குரியதாகும்.

மேலும் 7 நாட்கள் உணவு கொடுக்கும் பழக்கம் ஸஹாபாக்கள் காலம் தொட்டு இதுகாலம் வரை மக்கா, மதீனாவில் நடந்து வருகிறது என்று ஹாவியில் (பாகம் 2 பக்கம் 194) ஸுயூத்தி இமாம் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். இதுபோன்றே அல்மிர்ஆத் பாகம் 4 பக்கம் 585லிலும் வந்துள்ளது.

30 ம் நாள் பாத்திஹா:

ஒரு முஃமினான மனிதன் இறந்து விட்டால் அவனுடைய ஆன்மா தனது சொத்துக்களை தனது வாரிசுகள் எப்படி பங்கு வைக்கிறார்கள், தனது கடன்களை எப்படி நிறைவேற்றுகிறார்கள் என்பதைக் கவனித்த வண்ணம் ஒருமாத காலம் (30 நாட்கள்) அவனது வீட்டைச் சுற்றி வந்து கொண்டிருக்கின்றது.

மேலும் ஒரு மாதம் நிறைவாகி விட்டால், அவனது கப்ருக்குச் சென்று தனது வாரிசுகளில் தன்னை நினைத்து கவலைப்படுபவர்கள் யார் தனக்காக துஆ செய்பவர்கள் யார் என்பதை கவனித்த வண்ணம் ஒரு வருடம் வரை அவனது கப்ரைச் சுற்றிக் கொண்டு இருக்கின்றது.

ஒரு வருடம் நிறைவாகிவிட்டால் கியாமத் நாள்வரை அவனது ஆன்மா (வானத்தளவில்) உயர்த்தப்பட்டு விடுகின்றது என்று அபூஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு அவர்களைத் தொட்டும் அறிவிக்கபபட்டுள்ள செய்தி வந்துள்ளதால் 30 ம் நாள் பாத்திஹா அனுஷ்டிக்கப்படுகிறது.

(நூல் அத்துரருல் ஹிஸான் பக்கம் 12, தக்காயிருல் அக்பர் பக்கம் 17-19வது பாபு, ஷரஹுஸ்ஸுதூர் பக்கம் 358 பாபு தலாக்கி அர்வாஹில் மவ்தா...)

40 ம் நாள் பாத்திஹா:

மேற்கூறப்பட்ட ஹதீஸைப் போன்றே இறந்தவர்கள் 40 நாட்கள் சோதனைக்கு உட்படுத்தப்படுவதாகவும் அதனால் அந்த நாட்களில் அவர்களுக்காக உணவு கொடுக்கப்படுவதை அவர்கள் விரும்புவதாகவும் இதன் நிமித்தம் ஸஹாபாக்கள் காலத்திலும் இந்த முறை இருந்து வந்ததாகவும் பிக்ஸுன்னா 369ம் பக்கத்திலும், அல் மிர்ஆத் 584 வது பக்கத்திலும் வந்துள்ளது.

எனவேதான் அந்த 40 நாட்களுக்கும் உணவு கொடுப்பது சிரமமாகும் என்பதால் ஒவ்வொரு பகுதியிலும் சில குறிப்பிட்ட நாட்களை அதாவது 1, 3, 5, 7, 10, 20, 30, 40 என்றோ அல்லது 1, 3, 5, 7, 10, 15, 25, 40 என்றோ இமாம்கள் குறிப்பிட்டு இருக்கிறார்கள் என்பதை அறிந்து கொள்வோமாக.

வருட பாத்திஹா:

இறந்த மய்யித்தின் ஆன்மா வருடா வருடம் தன் இல்லத்திற்கு வருகை தருகிறது என்று 'தகாயிகுல் அக்பார்' போன்ற கிரந்தங்களில் (நாம் சற்று முன்பு குறிப்பிட்டுள்ளது போல) வந்துள்ளதாலும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வருடந்தோறும் ஷுஹதாக்களின் கப்ருகளுக்கு சென்று துஆ செய்து விட்டு வருதாக தப்ரானி இமாம் அவர்களுக்குரிய அவ்ஸத் என்ற ஹீது கிதாபில் (பாகம் 3 பக்கம் 241) வந்துள்ளதாலும், வருடாவருடம் மய்யித்தின் பேரில் ஸதக்காவாக செய்யப்படுகின்ற விருந்துபச்சார வைபவம்(கத்தம்) முற்காலம் தொட்டு செய்யப்பட்டு வருகின்ற காரியமாகவும், அதன் நோக்கம் மார்க்க அறிஞர்களையும் மற்றவர்களையும் அழைத்து மய்யித்தின் பேரில் கிருபை கொண்டு பிரார்த்திக் வைப்பதாகவும் இருப்பதால், இது ஒரு நல்ல காரியம் என்று மகான்களாகிய நமது முன்னோர்களின் தெளிவான மார்க்கத் தீர்ப்பு இருப்பதாலும் (அல்மிஆத் பாகம் 4 பக்கம் 585) வருடபாத்திஹா அனுஷ்டிக்கப்படுகிறது.

S.L. அப்துர்ரஹ்மான் (கௌஸி) கல்முனை பதிவிலிருந்து...

## ஈஸால் ஸவாப் 17

கத்தம் என்ற வார்த்தைக்கும், கத்தம் தமாம் பண்ணுதல் என்ற வார்த்தைக்கும் என்ன பொருள்?
மேலும் குர்ஆனை ஓதி முடித்து துஆ ஓதும் சமயத்தில் எல்லோரையும் ஒன்று கூடச்செய்வதற்கு ஆதாரம் ஏதும் உண்டா?
"கத்தம்" என்ற சொல் "கத்ம் " அல்லது "கத்முன் " என்ற சொல்லின் மருவிய சொல்லாகும். இதைச் சரியாக சொல்வதென்றால் "கத்ம் கத்ம்" என்றால்"முடித்தல் முடித்தல்" என்று பொருள்.(பாபா சினிமா படம் ஞாபகத்திற்கு வந்தால் கம்பெனி பொறுபல்ல)
"கத்முல் குர்ஆன் " என்றால் குர்ஆனின் 30 பாகங்களையும் ஓதி முடித்து பின் அதன் நன்மையை மரணத்தவர்களுக்கு சேர்த்து வைப்பதற்கும் கத்தம் என்று பெயர்.
கத்முல் குர்ஆன் மஜ்லிஸிற்கு ஒன்று கூடுவோமாக.....

1. பிரசித்திப் பெற்ற சஹாபாக்களில் ஒருவரும், பெருமானார் ஸல்லல்'லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு பத்தாண்டு காலங்கள் பணிவிடை புரிந்தவர்களும், பல ஹதீஸ்களை ரிவாயத்து செய்தவர்களும், 103 ஆண்டுகள் இப்பூவுலகில் வாழ்ந்து 100 பிள்ளைகளை பெற்றவர்களுமான (அல் இக்மால்) ஸய்யிதினா அனஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் குர்ஆனை ஓதி நிறைவு செய்து விட்டால்,
தனது பிள்ளைகளையும் தனது வீட்டினர்களையும் ஒன்று சேர்த்து அவர்களுக்காக துஆ செய்வார்கள் என்று அபூகத்தாதா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கின்றார்கள்.
(தாரமி பாகம் 2 பக்கம் 469 பாபுன் பீ கத்மில் குர்ஆன் கித்தாபு பழாஇலில் குர்ஆன், அத்காருன் நவவி பக்கம் 88 பஸ்லுன் பீ ஆதாபில் கத்மி.... கிதாபு திலாவதில் குர்ஆன்)

2. "நாங்கள் குர்ஆன் ஓதி முடித்து விட்டோம். குர்ஆன் ஓதி முடித்து விட்டு செய்யப்படுகின்ற பிரார்த்தனை ஒப்புக் கொள்ளப்படக் கூடியதாக இருக்கின்றது என்று எங்களுக்கு செய்தி கிடைத்திருக்கிறது.
ஆகவே இந்தப் பிரார்த்தனை வைபவத்தில் நீங்களும் கலந்து கொள்ள வேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம் " என்று கூறி முஜாஹித் ரலியல்லாஹு அன்ஹு, அப்தத் இப்னு அபீ லுபாபா ரலியல்லாஹு அன்ஹு ஆகிய இரு சஹாபாக்களும் எனக்கு ஆள் அனுப்பி வைத்திருந்தார்கள் என்று ஹக்கம் இப்னு உத்தைபா ரலியல்லாஹு அன்ஹு என்ற தாபிஇ அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.
(தாரமி பாகம் 2 பக்கம் 470 பாபுல் பீ கத்மில் குர்ஆனி கிதாபு பழாயிலில் குர்ஆன், அல் அத்கார் பக்கம் 88 பஸ்லுன் பீ ஆதாபில் கத்மி)

3. குர்ஆன் ஓதி கத்மு செய்யப்படுகின்ற இடங்களில் ரஹ்மத் இறங்குகின்றது என்று கூறிக் கொண்டு அவ்விடங்களில் ஸஹாபா பெருமக்கள் ஒன்று சேரக்கூடியவர்களாக இருந்தார்கள் என்று முஜாஹித் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள். (அல் அத்கார் பக்கம் 88)

4. குர்ஆனை நன்றாக ஓதத் தெரிந்தவர்கள், ஓதத் தெரியாதவர்கள் ஆக இரு பிரிவினரும் குர்ஆன் கத்மு நடக்கின்ற மஜ்லிஸ்களில் ஆஜராகுவது முஸ்த்தஹ்பாகும். (அல் அத்கார் பக்கம் 88)

5. ஒருவர் மஸ்ஜிதுன் நபவியில் குர்ஆன் ஓத ஆரம்பித்தார். இதை கண்ணுற்ற ஸய்யிதுனா இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அவர் எப்போது குர்ஆனை ஓதி முடிக்கின்றார் என்பதை தமக்குத் தெரிவிப்பதற்காக ஒரு கண்காணிப்பாளரை நியமித்தார்கள் என்று கத்தாதா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கின்றார்கள். (தாரமி பகாம் 2 பக்கம் 468 பாபுன் பீ கத்மில் குர்ஆன் கிதாபு பழாயிலில் குர்ஆன்)

6. எவர் குர்ஆன் ஓத ஆரம்பிக்கும் நேரத்தில் (அங்கு) ஆஜராகிறாரோ அவர் போர்க்களத்தில் பெற்ற வெற்றியில் கலந்து கொண்டவரைப் போன்றவராவார்.
எவர் குர்ஆனை நிறைவு செய்யும் நேரத்தில் கலந்து கொள்கின்றாரோ அவர் போரில் கிடைத்த ஙனீமத் என்ற வெற்றிப் பொருளை பங்கு பிரிக்கும் நேரத்தில் கலந்து கொண்டவரைப் போன்றவர் என்று அபூ கிலாபா ரலியல்லாஹு அன்ஹு அவர்களைத் தொட்டும் அறிவிக்கப்பட்டுள்ளது.
(தாரமி பாகம் 2 பக்கம் 468 பாபுன் பீ கதமில் குர்ஆன் கிதாபு பழாயிலில் குர்ஆன்)
எவர் குர்ஆன் ஓதி (முடித்து) விட்டு துஆ இறைஞ்சுகிறாரோ அவரின் துஆவுக்காக நான்காயிரம் மலக்குமார்கள் ஆமீன் சொல்கிறார்கள் என்று ஹுமைதுல் அஃரஜ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களைத் தொட்டும் அறிவிக்கப்பட்டு இருக்கின்ற (தாரமி பாகம் 2 பக்கம் 470 பாபுன் பீ கத்மில் குர்ஆனி கிதாபு பழாயிலில் குர்ஆன், அல் அத்கார் 88) செய்தியும்,
...மேலும் குர்ஆன் ஓதி முடிக்கப்பட்டதின் பின்னால் துஆ ஓதுவது வலுவான முஸ்த்தஹப்பாகும் (அல் அத்கார் பக்கம் 88) என்று வந்துள்ள செய்தியும் இங்கு சிந்திக்கத் தகுந்ததாகும். ஆகவே இதுவரை கூறப்பட்ட விளக்கங்கள் மூலம் கத்முல் குர்ஆன் மஜ்லிஸில் கலந்து அந்த துஆவில் பங்கு பற்றுவது ஒரு பரக்கத்தான காரியமாக இருக்கின்றது என்று அறிந்து கொள்வோமாக!
கத்தமுல் குர்ஆனை உயிரோடுள்ளவன் மரணித்தவனுக்காகச் செய்கின்ற நல்லமல்களின் நன்மை அவனைச் சென்றடைதல் தொடர்பாக தர்மம், நோன்பு, ஹஜ், துஆ,போன்றவற்றின் நன்மை அவனைச் சென்றடையும் என்பதை ஏற்றுக்கொள்ளும் வஹ்ஹாபிகள் திருக்குர்ஆன், கத்தம், பாதிஹா போன்றவற்றின் நன்மை மாத்திரம் அவனைச் சென்றடையாதென்று கத்தம் பாத்திஹா பித்அத் என்று கூறுவது விந்தையானதாகும்.
வஹ்ஹாபிகளே ! அறிந்து கொள்ளுங்கள், உங்களுக்கும் மண்ணறை வாழ்வு உண்டு.

## ஈஸால் ஸவாப் 18

கருத்த நிறம் கொண்ட பெண்மணி ஒருத்தி நபி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்களின் பள்ளிவாசலை (கூட்டி) சுத்தம் செய்பவளாக இருந்தாள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அப்பெண்ணை சில நாட்கள் காணவில்லை. அதனால் அந்தப் பெண்ணைப் பற்றி விசாரித்தார்கள்.
அதற்கு ஸஹாபாக்கள்: " அந்தப் பெண் இறந்து விட்டாள் " என்று கூறினார்கள்.
உடனே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் : "அதைப் பற்றி எமக்கு நீங்கள் அறிவித்து இருக்கக் கூடாதா? என்று கேட்டு விட்டு அவளின் கப்ரை எனக்கு காட்டுங்கள்" என்று கூறினார்கள்.
உடனே ஸஹாபாக்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அவளின் கப்ரை காட்டி கொடுத்தார்கள்.
உடனே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அந்தப் பெண்ணின் மீது தொழுதார்கள்.
பிறகு " நிச்சயமாக இந்த கபுர்கள் அந்த கபுர்வாசிகளின் மீது இருளால் நிறப்பப்பட்டவைகளாக இருக்கின்றன. நிச்சயமாக நான் அவைகளின் மீது தொழுத காரணத்தினால் அல்லாஹு தஆலா அந்த மண்ணறைகளை அந்த மண்ணறை வாசிகளுக்கு ஒளிமயமானதாக ஆக்கிக் கொடுத்து விட்டான்" என்று கூறினார்கள்.
(புகாரி ஹதீது எண் 1337 பாபுஸ்ஸலாத்தி அலல் கப்ரி பஃத மா யுத்பனு கிதாபுல் ஜனாயிஸ், முஸ்லிம் ஹதீது எண் 956 பாபுஸ்ஸலாத்தி அலல் கப்ரி கிதாபுல் ஜனாயிஸ், முஸ்னத் அஹ்மத் பாகம் 2 பக்கம் 388, மிஷ்காத் ஹதீது எண் 1659 பக்கம் 145 பாபுல் மஷ்யி பில் ஜனாஸத்தி கிதாபுல் ஜனாயிஸ், இப்னுமாஜா ஹதீது எண் 1533 பாபு மா ஜாஅ பிஸ்ஸலாத்தி அலல் கப்ரி கிதாபுல் ஜனாயிஸ்)

**ஈஸால் ஸவாப் 19**

இறைவா! நாங்கள் இந்த மய்யித்திற்காக பரிந்துரை செய்கின்றோம்(எங்கள் பரிந்துரையை ஏற்று) இவரின் பாவங்களை பொருத்தருள்வாயாக! என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஜனாஸா தொழுகையில் பிரார்த்திப்பார்கள்.
(அபூதாவூத் ஹதீது எண்: 3200 பாபுத் துஆஇ லில் மய்யித்தி கிதாபுல் ஜனாயிஸ், அஹ்மத் பாகம் 2 பக்கம் 458, மிஷ்காத் பக்கம் 147 ஹதீது எண் 1688 பாபு மஷ்யி பில் ஜனாஸா)
ஒரு முஸ்லிம் மய்யித்திற்கு தொழுகை நடத்தும் நேரத்தில் முஸ்லிம்கள் மூன்று ஸப்புகளாக நின்று தொழுவார்களானால் கண்டிப்பாக அல்லாஹு தஆலா அந்த மய்யித்திற்கு சுவர்க்கத்தை வாஜிபாக்கி விடுவான் என்று நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்.
(அபூதாவூத் ஹதீது எண்: 3166 பாபுன் பிஸ் ஸுஃபூப்பி அலல் ஜனாஸா கிதாபுல் ஜனாயிஸ், திர்மிதி ஹதீது எண் 1028 பாபு மா ஜாஅ பிஸ் ஸலாத்தி அலல் ஜனாஸத்தி வஷ்ஷபாஅத்தி லில் மைய்யித்தி கிதாபுல் ஜனாயிஸ், இப்னுமாஜா ஹதீது எண்: 1490 பாபு மா ஜாஅ பீ மன் ஸல்லா அலைஹி ஜமாஅத்துன் மினல் முஸ்லிமீன் கிதாபுல் ஜனாயிஸ், மிஷ்காத் பக்கம் 147 ஹதீது எண் 1687 பாபுல் மஷ்யி பில் ஜனாஸா கிதாபுல் ஜனாயிஸ்)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒரு ஜனாஸாவிற்கு தொழுகை நடத்தினார்கள். அப்போது அவர்கள் ஓதிய துஆவிலிருந்து சிலதை நான் பாடமாக்கி கொண்டேன்.
"இறைவா! இந்த மய்யித்தின் குற்றத்தை மன்னித்து அதன் மீது கிருபை காட்டுவாயாக! மேலும் அவருக்கு நற்சுகத்தைக் கொடுப்பாகயாக! அவரின் பிழைகளை பொறுத்தருள்வாயாக!
அவருக்குரிய விருந்துபசசாரத்தை சங்கையாக்கி வைப்பாயாக! அவரின் நுழையும் இடத்தை விசாலமாக்குவாயாக!
மேலும் அவரை நீராலும், பனிக்கட்டியாலும், ஐஸ் கட்டியாலும் கழுகுவாயாக! மேலும் வெண்மையான ஆடையை அழுக்கிலிருந்து கழுவி சுத்தமாக்குவது போல அவரின் பாவத்தை விட்டு அவரை பரிசுத்தப்படுத்துவாயாக! அவரின் வீட்டை விட சிறந்த வீட்டை அவருக்கு பகரமாக்கி கொடுப்பாயாக! அவரின் குடும்பத்தை விட சிறந்த குடும்பத்தையும், அவரின் மனைவியை விட சிறந்த மனைவியையும் அவருக்கு பகரமாக்கி கொடுப்பாயாக! அவரை சுவனத்தில் நுழையச் செய்வாயாக! மேலும் கப்ருடைய வேதனையிலிருந்தும் நரகத்துடைய வேதனையிலிருந்தும் அவரைக் காப்பாற்றுவாயாக! என்று துஆ செய்தார்கள்.
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் செய்த இந்த துஆவின் பெருமிதத்தைக் கண்ட போது நானே அந்த மய்யித்தாக ஆகியிருந்தால் நன்றாக இருந்திருக்குமே! என்று நினைத்தேன் என்று அவ்பு பின் மாலிக் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகின்றார்கள்.
(முஸ்லிம் ஹதீது எண்: 963-85 பாபுத் துஆயி லில் மய்யித்தி கிதாபுல் ஜனாயிஸ், இப்னுமாஜா ஹதீது எண்: 1500 பாபு மாஜாஅ பித்துஆஇ பிஸ் ஸலாத்தி அலல் ஜனாஸாத்தி கிதாபுல் ஜனாயிஸ், நஸாயி பாகம் 4 பக்கம் 73 பாபுன் அத்துஆஇ பில் ஜனாஸா கிதாபுல் ஜனாயிஸ், மிஷ்காத் பக்கம் 145 ஹதீது எண்1655 பாபுல் மஷ்யி பில் ஜனாஸத்தி கிதாபுல் ஜனாயிஸ்)
யாரேனும் வந்து காப்பாற்ற மாட்டார்களா? என்ற எண்ணத்தில் நீரில் மூழ்கியவன் தத்தளிப்பது போல கப்ரில் மரணித்த மய்யித்து தனது தந்தை அல்லது தனது தாய் அல்லது சகோதரன் அல்லது நண்பன் ஆகியோரிடமிருந்து துஆவை எதிர்பார்க்கிறது.
அப்படி ஏதேனும் ஒரு துஆ அந்த மய்யித்தை சென்றடையுமானால் அதை துன்யா மற்றும் அதில் உள்ளவற்றை விட மிகப் பிரியமாக கருதுகிறது.
நிச்சயமாக அல்லாஹு தஆலா பூலோகவாசிகளின் பிரார்த்தனை மூலம் கப்ருவாசிகளுக்கு மலைகளைப் போன்று ரஹ்மத்துகளை நுழைவிக்கிறான்.

இறந்தவர்களுக்காக பிழைபொறுக்கத் தேடுவது உயிரோடு இருப்போர் மரணித்தவர்களுக்காக வழங்குகின்ற சன்மானமாகும் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதாக செய்யிதினா இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள்.
நூல்கள்: பைஹகி ஹதீது எண் 7904, மிஷ்காத் ஹதீது எண் 2355 பக்கம் 206 பாபுல் இஸ்திஃபார், அத்தத்கிரா பாகம் 1 பக்கம் 103 பாபு மா ஜாஅ பீ கிராஅத்தில் குர்ஆனி இந்தல் கப்ரி ஹாலத்தத் தபனி வ பஃதஹு

## ஈஸால் ஸவாப் 20

"மறுநாள் நாளை இன்று " என்ற பெயருடைய ஒரு நபர் ஈஸால் ஸவாப்க்கு குர்ஆனில் ஆதாரம் இருக்கா ? என்று கேள்வியை கேட்டு இதை முஸ்லிம் கேட்பதை விட மற்றவர் கேட்பதே சிறந்தது ?" என்று அவரே சொல்லிக் கொண்டார். (ஸ்கிரீன் சாட்டை பார்வையிடவும் )
சகோதர சமுதாயத்தவர்களின் ஈமச்சடங்குகள் இறந்த தங்களின் பெற்றோர்களை மிகவும் கண்ணியப்படுத்துவதாக இருக்கிறது.வஹ்ஹாபிகள் ஏதோ புணத்தை வேகமாக வேகமாக தூக்கிக் கொண்டு போய் நாயோ, பூனையோ புதைப்பது போல இல்லை என்பதை அவர்கள் உணர்வதற்காக
இறப்புச் சடங்கு்
முனைவர் சி.சுந்தரேசன்
துறைத்தலைவர்
நாட்டுப்புறவியல் துறை
வாழ்க்கை வட்டச் சடங்குகளில் இறுதியாக அமைவது இறப்புச் சடங்காகும். ஆதி மனிதர்களிடம் முதன் முதலில் தோன்றிய சடங்கு இறப்புச் சடங்காகும். இதை ஈமச்சடங்கு என்று கூறுவார்கள். ஒருவர் மரணம், அவரின் குடும்பம், பங்காளி, உறவுக்காரர்களைப் பாதிக்கின்றது. இந்த இறப்புச் சடங்கை மூன்று வகையாகப் பிரிக்கலாம். அவை,
1. இறப்பதற்கு முன் நடைபெறும் சடங்கு
2. இறந்த அன்று நடைபெறும் சடங்கு
3. இறந்த பிறகு நடைபெறும் சடங்கு
இறப்புக்கு முன் நடைபெறும் சடங்கு
வயதானவர் நடக்க முடியாமல் கண்ணுத்தெரியாமல் படுத்த படுக்கையிலே நீண்ட நாள் கிடப்பாரெனில் எண்ணெய் தேய்த்துக் குளிக்க வைத்து, இளநீர் வெட்டிக் குடிக்க சொல்வார். அவ்வாறு செய்தால் அவர் உயிர்போகும். இதைக் கருணைக் கொலை என்று கூறுவார்கள்.
இறப்பிற்குப் பின் நடைபெறும் சடங்கு
ஒருவர் இறந்த உடனே மனிதர் என்ற நிலையைக் கடந்து பொணம் அல்லது சடலம் என்ற பெயரைச் சமுதாயம் அவருக்குச் சூட்டுகிறது. இறந்தவுடன் அவர் வாயில் மண்ணெண்ணெய் உப்பு இரண்டையும் கலந்து ஊற்றுவார்கள்.
எட்டுக்கட்டு
மனிதன் இறந்தவுடன் எட்டு இடங்களில் கட்டுப் போடுவார்கள். இது 'எட்டுக்கட்டு" என்று கூறப்படும்.
1. இரண்டு கை பெருவிரல்களையும் இணைத்துக் கட்டுவது "கைக்கட்டு".
2. காலிலுள்ள பெருவிரல்களையும் இணைத்துக் கட்டுவது "கால்கட்டு".
3. வாயில் வெற்றிலை சீவல் கசக்கி வைத்து துணியால் வாயை மூடிய வண்ணம் கட்டுவது "வாய்க்கட்டு".
4. தளர்ந்து வரும் தசைப் பிண்டங்களையும் வாயுடன் ஒருங்கிணைத்துக் கட்டுவார் "நாடிக்கட்டு".
5. தொப்புள் வழியாகக் காற்று புகுந்து வயிறு புடைத்துவிடாமல் கட்டுவது "தொப்புள் கட்டு".

6. நாடிக்கட்டையும் வாய்க்கட்டையும் இணைத்து, அவை வெளியில் தெரியாமல் மூடி தலை முடியையும் மறைத்து முகம் மட்டும் தெரியும்படியாகக் கட்டுவார்கள். இது “தலைக்கட்டு”.
7. முழங்கால் இரண்டையும் இணைத்து உடல் நேர்க்கோட்டில் அமையும்படி கட்டுவது “முழங்கால் கட்டு”.
8. ஆண்களின் பிறப்புறுப்பை மறைத்துக் கட்டப்படும் கட்டு “கோவனக் கட்டு”.
இம்முறை பெண்களுக்கும் மேற்கொள்ளப்படுகிறது.
இவ்வாறு செய்த பின் இறந்தவரின் முகம் தெற்குப் பக்கம் பார்க்கும்படி வைக்கப்படுகிறது.
இறந்தவரின் நெற்றியில் காசு வைக்கப்படுகிறது. ஏழையாக இருந்தாலும் செல்வந்தராக இருந்தாலும் ஒரு ரூபாய் காசு மட்டும் வைக்கப்படும் வழிக்கூட்டி விடுதல்
இறந்தவரின் அருகில் ஒருபடியில் நெல்லை நிரப்பி அதன் மேல் நல்ல விளக்கு வைப்பார்கள். சொம்பில் நீர் வைப்பார்கள். பின் மாலை, தேங்காய், சூடம், பத்தி, வெற்றிலை, சீவல் போன்றவற்றை அவரின் அருகில் வைப்பார்கள். இரண்டு இராட்டியை வாசலில் வைத்து அதன் மேல் சூடத்தை ஏற்றி வைத்து, சாம்பிராணி போட்டு, தேங்காய் உடைப்பார்கள். இதனை “வழிக்கூட்டி விடுதல்” என்பார்கள்.
துக்கம் சொல்லி விடுதல்
ஒருவர் இறந்தவுடன் அவ்வூரில் உள்ளவர்களின் மூலம் உறவுக்காரர்களுக்கு துக்கம் சொல்லிவிடுவார்கள். துக்கம் சொல்லுவதற்கு ஒரு குறிப்பிட்ட சாதியைப் சார்ந்தவர்களைப் பயன்படுத்தி இருக்கின்றனர். ஆனால், இந்த வழக்கம் இப்போது இல்லை. சிலர் தொலைபேசி மூலம் தெரிவித்து விடுகின்றனர்.
ஒப்பாரி
தமிழர்களின் இறுதிச் சடங்கில் இடம்பெறும் பாடல் ஒப்பாரி எனப்படும். ஒப்பாரியைப் பிலாக்கணம், பிணக்கானம், கையறு நிலை, புலம்பல், இறங்கற்பா, சாவுப்பாட்டு, இழவுப் பாட்டு, அழுகைப்பாட், மாரகப்பாட்டு, கைலாசப்பாட்டு எனப் பலவாறாகக் கூறுவர். இறப்பு நிகழ்ந்த வீட்டில் இறந்தவரைப் பார்க்கவும், துக்கம் விசாரிக்கவும், பாதிக்கப்பட்டவரை கட்டியணைத்து அழுகின்ற வழக்கமும் உண்டு. ஒப்பாரி பாடுவதால் இறந்தவரின் ஆவி சாந்தி அடைவதாகவும், பாடாவிட்டால் அந்த ஆவி துன்பப்படுவதாகவும் நம்பப்படுகிறது. மனித வாழ்வில் முன்னுரை தாலாட்டாகவும், முடிவுரை ஒப்பாரியாகவும் அமைகிறது. ஒப்பு + ஆரி எனப் பிரித்து ஒப்புச் சொல்லி அழுதல் எனப் பொருள் கொள்கின்றனர்.
கோடி எடுத்து வருதல்
கணவன் இறந்தாலும் மனைவி இறந்தாலும் பெண்ணின் தாய் வீட்டிலிருந்து இறுதிச் சடங்கு செய்யும் வழக்கம் உள்ளது. இதை, பொறந்த இடத்துக் கோடி என்று கூறுவார்கள். அதில் நெல், அரிசி, மஞ்சள், குங்குமம், வளையல், தலைக்குப் பூ, எண்ணெய், சீயக்காய், பச்சை மட்டை (கீத்து) போன்றவற்றை எடுத்து வருவார்கள். கோடிக்குப் பெரும்பாலும் மல்லுத்துணியைத் தான் எடுத்து வருகின்றனர்.
நீர் மாலை
கோடி எடுத்த வந்த பிறகு இறந்தவரின் மகன், மகள், பங்காளிகள் போன்ற ஏழு பேர் அல்லது ஒன்பது பேர் நீராடி உடல் முழுவதும் திருநீரால் பட்டை, நெற்றிகளில் போட்டு நீர் நிறைந்த குடத்தை தூக்கி வருவார்கள். அவர்களுக்கு மேல் வேட்டி பிடித்து வருவார்கள். அந்த நீரால் பிணத்தைக் குளிப்பாட்டுவார்கள்.
குளிப்பாட்டுதல்
தண்ணீர் எடுத்து வந்த குடங்களை வரிசையாக வைத்து, இறந்தவரை வெளியில் எடுத்து வந்து பலகையில் படுக்க வைத்து, ஆண்கள் இறந்தால் ஆண்களும், பெண்கள் இறந்தால் பெண்களும் குளிப்பாட்டுவார்கள், பெண்ணைக் குளிப்பாட்டும்போது சேலையால் மறைத்தும், ஆண்கள் இறந்தால் வேட்டியால் மறைத்தும் குளிப்பாட்டுவார்கள். கோடியில் எடுத்து வரும் பொருட்களையே குளிப்பாட்ட பயன்படுத்துவார்கள்.
வாய்க்கரிசி போடுதல்

இறந்தவர் பட்டினியுடன் இருக்கக்கூடாது என்பதற்காக வாய்க்கரிசி போடப்படுகிறது. இதற்குப் பச்சை நெல்லைக் குத்தி, அந்த அரிசியே பயன்படுத்தப்படுகிறது. இறந்தவர் பட்டினியுடன் போனால் அக்குடும்பத்திற்கு ஏதாவது தீங்கு நேர்ந்து விடும் என்று நம்பப்படுகிறது.

தப்படித்தல்

தெருவில் உள்ளவர்களுக்கும் ஊரில் உள்ளவர்களுக்கும் மற்றும் உறவினர்களுக்கும் தப்படித்தலின் மூலம் இறப்புச் செய்தி தெரிவிக்கப்படும். தப்பு அடிக்கும் சத்தத்தை வைத்தே யாரோ இறந்து விட்டார்கள் என்று அறிந்து கொள்வார்கள். இறந்தவரின் உடல் அடக்கம் செய்யும் வரை தப்பு அடிக்கப்படுகிறது. வயதானவர்களோ நல்ல முறையில் வாழ்ந்து முடித்தவர்களோ இறந்து விட்டால் குறவன் குறத்தி ஆட்டமும் வைக்கிறார்கள்.

பிணம் எடுத்தல்

அனைத்துச் சடங்குகளும் முடிந்த பின் பிணத்தைத் தூக்கிப் பாடையில் வைப்பார்கள். வைக்கும் போது முகம் வீட்டைப் பார்த்தும் கால்கள் காட்டைப் பார்த்தபடியும் வைக்கப்படுகிறது. அவர் பயன்படுத்திய பொருட்கள் பாடையில் அவர் கூடவே வைத்து விடுவார்கள். உறவுக்காரர்கள் பாடையைச் சுற்றி மூன்று முறை அழுதுக் கொண்டே வருவார்கள் பிணத்தைத் தூக்கிய பின் அழுதுக் கொண்டே கொஞ்சம் தூரம் வரை செல்வார்கள். பிறகு பெண்கள் அனைவரும் முச்சந்தையில் அமர்ந்து அழுது விட்டு வீடு திரும்புவார்கள்.

சாணம் தெளித்தல்

பிணத்தைத் தூக்கிச் சென்ற பின் அத்தெருவிலுள்ள அனைத்துப் பெண்களும் சாணம் தெளிப்பார்கள். சாணம் தீரும் வரை தெளித்துக் கொண்டே செல்வார்கள். சிலர் தண்ணீர் தெளிப்பார்கள். இறப்பின் காரணமாக ஏற்பட்ட கிருமிகள் நீங்கியும் இடம் தூய்மை அடையும் பொருட்டு பிணம் எடுத்த வீட்டைச் சாணத்தால் மொழுகித் தூய்மை செய்வார்கள்.

முச்சந்தி / சந்திரமரக் கொட்டல்

வீட்டிலிருந்து பிணத்தைத் தூக்கிச் சென்றதும் குறிப்பிட்ட தூரத்தில் மூன்று முறை பிணத்தைச் சுற்றி தோளிலுள்ள வலிகள் போக வேண்டுமென மறுதோளில் வைத்துக் கொள்வார்கள். வழி நெடுகப் பொரி, காசு, மலர்கள் தூவிச் செல்வார்கள்.

இடுகாட்டுச் சடங்கு்

இறந்தவரின் உடல் நற்கதியை அடைய இடுகாட்டில் சில சடங்குகள் செய்யப்படுகின்றன. இறப்பு என்து ஒரு குறிப்பிட்ட உலகிலிருந்து அல்லது நிலையிலிருந்து வேறொன்றிற்குச் செல்லுதல் ஆகும். பிரிநிலை, மாறுநிலை, இணை நிலை என்ற மூன்று நிலைகள் மரணத்திற்குப் பின் இருப்பதாகக் கூறப்படுகிறது. முறைப்படி அடக்கம் செய்யப்படாத பிணங்கள் குழியிலிருந்து வெளியேறி வாழ்பவர்களைத் தாக்கிவிடும். அவர்களின் இரத்தத்தை உறிஞ்சிவிடும் என்று நம்பப்படுகிறது. இக்கருத்து உலகில் எல்லாப் பகுதிகளிலும் பரவிக்கிடக்கிறது.

கொள்ளி வைத்தல்

பிணத்தை வைத்து ராட்டியை அடுக்கி முகம் மட்டும் தெரியும்படி வைத்து விடுவார்கள். கொள்ளி வைப்பவர் தாய்க்குத் தலைமகன், தந்தைக்குக் கடைசி மகன் மொட்டையடித்து மீசை வழித்து குளித்து விட்டு திருநீரால் நெற்றி, மார்பு, கை, முதுகு போன்ற பகுதிகளில் பட்டைப் போட்டு வருவார். வண்ணான் துண்டைப் பிணத்தின் அருகில் விரித்துப் போட்டு வைத்திருப்பார். கொஞ்சம் அரிசியும் வைத்திருப்பார். உறவுக்காரர்கள் கையில் ஒரு ரூபாய், அரிசியுடன் அள்ளுவார். மூன்று முறை சுற்றி, அரிசியைப் பிணத்தின் வாயில் போட்டு, காசை துண்டில் போடுவார்கள். கொள்ளி வைப்பவர் நீர்கலையத்துடன் இறந்தவரை (பிணத்தை) மூன்று முறை சுற்றி வருவார். ஒவ்வொரு சுற்றுக்கும் ஒரு துவாரம் அந்தக் கலையத்தில் போடப்படும். பிறகு பிணத்தின் கால் பகுதியில் நின்று பின்பக்கம் திரும்பி கொள்ளி வைத்து விட்டு மாயானத்தை விட்டு வெளியேறுவார்.

கட்டந்தலை பணம்

பிணத்திற்குத் தீ வைத்து ஆறு அல்லது குளம் போன்றவற்றின் கரையில் வேட்டியை விரித்துப் போட்டு அதில் மாமன், மைத்துனன், பங்காளி முறையோர் இழவுப் பணம் எழுதுவார்கள். அன்று உறவுக்காரர்கள் கலந்துப் பேசி,

எட்டுக் கும்பிடுதல், பால் தெளித்தல், கருமாதி போன்ற நிகழ்ச்சிக்கு நாட்களைத் தெரிவிப்பார்கள். பிறகு குளித்து விட்டு வீடு வருவார்கள். அப்போது எதிரில் யாரும் வரக்கூடாது. வீட்டிற்கு வந்தவுடன் இறந்தவரின் இடத்தில் விளக்கேற்றி வைத்திருப்பார்கள். வாசலில் இருக்கும் தண்ணீரில் கால்களைக் கழுவி விட்டு விளக்கு முகத்தில் முழிப்பார்.

சம்பந்தி சடங்கு்

“காடு புகையும் போது வீடு புகையக்கூடாது” என்பதால் இறப்பு நடந்த வீட்டில் சோறு ஆக்கும் பழக்கம் கிடையாது. இறப்பு வீட்டாரின் சம்பந்தி உறவு முறையினர் சமைத்துக் கொண்டு வரும் வழக்கம் உள்ளது.அதை அனைவரும் உண்ணுகின்றனர்

பால் தெளித்தல்

இறந்த நாளிலிருந்து மூன்றாம் நாள் பால் தெளிக்கும் பழக்கம் உள்ளது. இதனை காடமர்த்துதல் என்று கூறுவர். பால் அரைத்த வசம்பு, இளநீர், தேங்காய், சூடம் போன்றவற்றை வீட்டிலிருந்து எடுத்துச் சென்று புதைத்த அல்லது எரித்த இடத்தில் பால், வசம்பு போன்றவற்றைத் தெளிப்பார்கள். ஆண்கள் மட்டும் சுடுகாட்டுக்குச் செல்கின்றனர். பெண்கள் இறந்தவரின் இடத்தில் பாலை வைத்து வணங்கி விட்டு அழுது விட்டும் அப்பாலை இறந்தவரின் இடத்திலோ குளத்திலோ ஊற்றி விடுகின்றனர்.

எட்டாம் நாள்

இறந்தவருக்கு எட்டாம் நாள் “எட்டுக் கும்பிடுதல்” என்று ஒரு சடங்கு கடைபிடிக்கப்படுகிறது. இறந்த அன்றே இச்சடங்கு தெரிவிக்கப்படுகிறது. அன்றைய நாளில் மாமன், மச்சான் உறவுடையோர், பழங்கள், இனிப்பு வகை, பலகாரம், பூ போன்றவற்றை வாங்கி வருவார்கள். மாமன் வீட்டு அரிசி, மைத்துனன் வீட்டு அரிசி, பங்காளி வீட்டு அரிசி ஆகிய மூன்று வீட்டு அரிசியும் போட்டு, பொங்கல் வைப்பார்கள். ஒப்பாரி வைத்து அழுவார்கள், அவர் மீது தண்ணீர் தெளித்து ஒப்பாரி நிறுத்தப்படும். கொள்ளி வைத்தவர் பொங்கலைப் புறங்கையால் மூன்று முறை எடுத்து இலையில் போட்டு வணங்குவார். இறப்புச் சடங்குகளை வண்ணாரும் பரியாரியும் செய்வர்.

கல் நிறுத்துதல்

கருமாதி செய்யும் முதல் நாள் கல் நிறுத்தப்படும். இதற்குப் பத்திரிக்கை அடித்து அனைவருக்கும் தெரிவிப்பார்கள். பதினைந்தாம் நாள் இரவு எட்டு மணி வாக்கில் வள்ளுவர் கல் நிறுத்துதல் என்னும் சடங்கினைச் செய்ய தொடங்குவர். இதற்கு இறந்தவரின் நினைவாக ஒரு முழு செங்கல்லை நீராட்டி அக்கல்லில் பூச்சரத்தைச் சுற்றி உயிர் விட்ட இடத்திலோ அல்லது திண்ணையிலோ இந்தக் கல் நிறுத்துதல் என்னும் சடங்கு முறை நிகழ்த்தப்படும். அதில் இறந்தவருக்குப் பிடித்தமான உணவு வகைகள் முழு வாழை இலையில் வைத்துப் படையல் போடப்படும். வள்ளுவர் சடங்கு முடிந்த பின் உறவுக்காரப் பெண்கள் சிறு வட்டமாக அமர்ந்து ஒப்பாரி வைத்துக் கொண்டு அழுவார்கள். அதிகாலையில் கொள்ளி வைத்தவர் இக்கல்லை எடுத்துக் கொண்டு ஆறு அல்லது கம்மாயி, ஏதோ நீர்நிலை வசதியுள்ள இடத்தில் அமர்ந்து சடங்குகள் செய்வர்.

கருமாதி

பதினாறாம் நாள் காலையில், புரோகிதர் (வள்ளுவர்) மற்றும் உறவுக்காரர்கள் கொள்ளி வைத்தவரைச் சந்திப்பார்கள். அது கருமாதித் துறை என்று அழைக்கப்படுகிறது. வள்ளுவருக்கு முன்னே கூலியில் ஒரு பங்கு வழங்கப்பட்டு விடும். கருமாதி செய்வதற்கான அரிசி, பச்சைக் காய்கறிகள், ஒன்பது வகை தானியங்கள், வெற்றிலை, சீவல், சூடம், சாம்பிராணி, தேங்காய், கருமாதி செய்வதற்கான சிறு சிறு கலையங்கள், நூல்கண்டு, இறந்தவரின் வீட்டில் செய்யப்பட்ட உப்பு இல்லாத சோறு போன்றவற்றை வைத்து கருமாதிச் சடங்கினைச் செய்து முடிப்பார். சிறு வீடு மாதிரி மண்ணால் கட்டி அதில் நான்கு புறமும் வாசல்படி அமைத்துச் சடங்கு தொடங்கும்.

புதிய வேட்டி சட்டை

கருமாதி சடங்கு முடித்ததும் தாய்மாமன், பெண் எடுத்த வகை உறவினர்கள், மாமன் மச்சான் உறவினர்கள், வேட்டி, சட்டை, கொள்ளி வைத்தவருக்கு உடுத்தியும், அவரின் சகோதரர்களுக்கு உடுத்தியும், வீட்டுக்கு

வருவார்கள், உணவு சமைத்து இருக்கும். மொய் வைக்கும் வழக்கம் கடைபிடிக்கப்படுகிறது. மொய் வைத்தும், உணவு சாப்பிட்டு உறவினர்கள் வீடு அல்லது ஊர் சென்று விடுவார்கள்.
முப்பதாம் நாள் படையல்
முப்பதாம் நாள் (இறந்ததிலிருந்து முப்படாவது நாள்) அவரின் நினைவாகப் படையல் போடப்படும் வழக்கம் உள்ளது. அன்று பெட்டைக்கோழி அடித்துப் படையலைத் தொடங்குவர்.
ஆண்டுப்படையல்
ஒரு வருடம் கழித்து இறந்த நாளில் மீண்டும் இறந்தவரை நினைத்து அவருக்குப் பிடித்தமான உனவு வகைகளை வைத்துப் படையலிடுவார்கள். இதில் உறவுக்காரர், பங்காளி உறவுமுறையோர் கலந்துக் கொள்வார்கள், ஆண்டுக்கு ஒரு முறை திவசம் (திதி) கொடுக்கும் வழக்கம் உண்டு. இந்தச் சடங்கு முறைகளை இன்றும் கடைப்பிடித்து வருகின்றனர்.
நாம் முன்னோருக்கு ஆண்டுக்கு ஒரு முறை திவசம் (திதி) கொடுப்பது நாள்தோறும் கொடுப்பது போன்றது. நமக்கு ஓர் ஆண்டு என்பது அவர்களுக்கு ஒரு நாள் கணக்காகும் என்பது மக்கள் நம்பிக்கை.

## ஈஸால் ஸவாப் 21

ஈஸால் ஸவாப் என்கிற தொடர் பதிவுகள் குறித்து நவீன கொள்கைவாதிகள் , தீவிர வஹாபிகள், அய்க்க நய்க்க கொள்கைவாதிகள் என்று நீளும் சுன்னத்துல் ஜமாத்திற்கு புறம்பானவர்களுக்கு ஏகப்பட்ட எரிச்சலாகி unknown Call-ல் ஒருமையில் திட்டி ,கண்ணியக் குறைவான வார்த்தைகள் பிரயோகித்து , பின்னோட்டத்தில் பிற்போக்குத்தனமான கருத்துக்கள் என்று இந்த தொடரை மிகப் பிரபலப்படுத்தி விட்டார்கள் .
சுன்னத்துல் ஜமாத்திற்கு புறம்பானவர்களுக்கு ஒன்றை சொல்லிக் கொள்கிறேன். உங்களுடைய பெற்றோர்கள், முன்னோர்கள் யாவருமே சுன்னத்துல் ஜமாத்தில் தன்னை முழுமையாக ஐக்கியப்படுத்திக் கொண்டவர்களாகவே இருந்தார்கள். உங்கள் நவீன கொள்கைகள் நேற்று பெய்த மழையில் முளைத்த இன்றைய காலான்கள் , ஆனால் உங்கள் பெற்றோர்கள் காலம் காலமாக இறைநேச பெரியோர்கள், நல்லோர்களிடம் துஆ செய்ய சொல்லி, உங்களைக் கூட பிரசவத்திருப்பார்கள்.
ஆகையால் உங்கள் பெற்றோர்களுக்கு உங்களைப் பெற்ற நன்றிக்கடனுக்காவது உங்கள் நவீன கொள்கைக்கு மாற்றமாக இருந்தாலும், குர்ஆன் கத்தம் செய்து அவர்களுக்காக பாவ மன்னிப்பு கேளுங்கள்.
அவர்களுக்காக கத்தம் குர்ஆன் உங்களால் ஓத , உங்கள் கொள்கை மனம் ஒத்து வரவில்லையானால் , பாவப்பட்ட ஒரு முஅத்தினிடம் குர்ஆன் ஓதக் கேட்டு , அதை அவரே வைத்து உங்கள் பெற்றோருக்கு கத்தம் செய்யச் சொல்லுங்கள் .

பாவப்பட்ட ஏழை மக்களுக்கு உணவு, உடை வாங்கிக் கொடுத்து அதை உங்கள் பெற்றோர்களின் பெயரில் ஐக்காத்தாக கொடுங்கள்.
' இதெல்லாம் ஹராமான செயல் நான் செய்ய மாட்டேன் ' என்று ஒரு போதும் அடம் பிடிக்காதீர்கள்,காரணம் உங்கள் சம்பாத்தியத்தில் மார்க்கத்திற்கு முரணான எத்தனையோ காரியங்களுக்கு செலவு செய்திருப்பது உங்கள் மனத்திற்கு நன்கு தெரியும். அந்த பத்தோடு பதினொன்றாக இந்த காரியத்திற்கான செலவாக இந்த ஈஸால் ஸவாப் செலவும் இருந்துவிட்டுப் போகிறது.
கபர் பக்கம் மலையளவு தேவையுடன் பரிதவிக்கும் உங்கள் பெற்றோர்களின் ஆத்மாக்கள் , மறு பக்கம் நீங்கள் கொண்ட கொள்கை
கருணையான நல்ல முடிவு எடுங்கள் உங்கள் பெற்றோர்களுக்காக !

நிறைவாக ஈஸால் ஸவாப் 22.(ஈஸாலே தவாப் துஆ)

بِسم الله الرّحمٰن الرّ حيْم ۞
اَلْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ ۞ حَمْدًا يُّوَافِىْ نِعْمَهُ وَيُكَافِيْ مَزِيْدَهْ ۞ اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَعَلٰى اٰلِ سَيِّدِنَا وَمَوْلٰنَا مُحَمَّدٍ ، اَللّٰهُمَّ اَوْصِلْ مِثْلَ ثَوَابِ مَا قَرَاْنٰهُ مِنْ كَلاَمِكَ الْعَزِيْزِ ۞هٰذِه هَدِيَّةً وَّاصِلَةً وَّرَحْمَةً نَّازِلَةً وَّبَرَكَةً شَامِلَةً وَّتُحْفَةً كَامِلَةً مِّنْكَ اِلٰى رُوْحِ سَيِّدِنَا وَنَبِيِّنَا مُحَمَّدٍ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ خَاصَّةً ثُمَّ اِلٰى اَرْوَاحِ جَمِيْعِ الْمُسْلِمِيْنَ عَامَّةً ۞ ثُمَّ اِلٰى رُوْحِ مَنْ تَلَوْ نَا الْقُراٰنَ الْعَظِيْمَ لِاَجْلِه وَاغْفِرْلَهُ وَارْحَمْهُ وَاٰنَسَ اللهُ وَحْشَتَهُ وَرَحِمَ اللهُ غَرْبَتَهُ وَنَوَّرَاللهُ ضَرِيْحَهُ وَتَقَبَّلَ اللهُ مِنْ حَسَنَاتِهِ وَتَجَاوَزَاللهُ عَنْ سَيِّئَاتِهِ وَغَفَرَاللهُ ذُنُوْبَنَا وَذُنُوْبَهُ وَجَمَعَ اللهُ بَيْنَنَا وَبَيْنَهُ فِى جَنّٰتِ النَّعِيْمِ ۞ اَللّٰهُمَّ اجْعَلْ قَبْرَهُ رَوْضَةً مِّنْ رِّيَاضِ الْجِنَانِ ۞ وَلاَ تَجْعَلْ قَبْرَهُ حُفْرَةً مِّنْ حُفَرِ النِّيْرَانِ ۞ اَلاَ اِنَّ اَوْلِيَآءَ اللهِ لَاخَوْفٌ عَلَيْهِمْ وَلاَهُمْ يَحْزَنُوْنَ۞ رَبَّنَا تَقَبَّلْ مِنَّا اِنَّكَ اَنْتَ السَّمِيْعُ الْعَلِيْمُ ۞ وَتُبْ عَلَيْنَآ اِنَّكَ اَنْتَ التَّوَّابُ الرَّحِيْمُ ۞ رَبَّنَا اٰتِنَا فِى الدُّنْيَا حَسَنَةً وَّفِى الْاٰخِرَةِ حَسَنَةً وَّقِنَا عَذَابَ النَّارِ۞ رَبَّنَا اغْفِرْ لَنَا وَلِوَالِدِيْنَا وَلِمَشَآئِخِنَا وَلِاَسَاتِيْذِنَا وَلِجَمِيْعِ الْمُسْلِمِيْنَ وَالْمُسْلِمَاتِ ۞ رَبِّ ارْحَمْهُمَا كَمَا رَبَّيَانِيْ صَغِيْرًا ۞ وَصَلَّى اللهُ وَسَلَّمَ عَلٰى خَيْرِ خَلْقِهٖ سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِه وَاَصْحَابِه اَجْمَعِيْنَ ۞ سُبْحَانَ رَبِّكَ رَبِّ الْعِزَّةِ عَمَّا يَصِفُوْنَ ۞ وَسَلَامٌ عَلَى الْمُرْسَلِيْنَ ۞ وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ۞

ஈஸாலே தவாப் துஆவின் பொருள்:

அருளாளனும் அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் ஆரம்பம் செய்கின்றேன்.

அனைத்துப் புகழும் இவ்வுலகோரைப் படைத்துப் பரிபாலிக்கக் கூடிய அல்லாஹ்வுக்கே உரியன. அவனது அருட்கொடைகளை நிரப்பமாக்கி வைக்கும்படியான அவற்றை அதிமாக்கி வைப்பதற்குப் போதுமான புகழாக புகழனைத்தும் அல்லாஹ்வுக்கே!

யா அல்லாஹ்! எங்கள் தலைவர் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அர்கள் மீதும் அன்னாரின் கிளையார்கள் மீதும் ஸலவாத்தென்னும் அருள்மாரியைப் பொழிவாயாக!

யா அல்லாஹ்! உனது மகத்துவம் மிகுந்த வேதத்திலிருந்து நாங்கள் ஓதிய அளவு நன்மையை உன் புறத்திலுண்டான அன்பளிப்பாகவும், அருள்மாரியாகவும், பரக்கத்தாகவும், பரிபூரண அருட்கொடையாகவும் இருக்கும் நிலையில் எங்கள் தலைவர் நபி முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஆன்மாவிற்கும் மற்றும் அனைத்து முஸ்லிம்களின் ஆன்மாக்களுக்கும் சேர்த்திடுவாயாக!

பின்னர், எவரது ஆன்மாவுக்காக நாங்கள் சங்கை மிகு குர்ஆனை ஓதினோமோ அவரது ஆன்மாவுக்கும் அளிப்பாயாக!

மேலும், அவருக்கு மன்னிப்பை நல்கிடுவாயாக! அவருக்கு அருள் புரிவாயாக! அல்லாஹ் அவரது தனிமையைப் போக்கி நிம்மதியை அளிப்பானாக! அவரது வெருட்சியைப் போக்கி
அருள் புரிவானாக!

அல்லாஹ் அவரது மண்ணறையை பிரகாசமாக்கி வைப்பானாக! அவரது நற்காரியங்களை ஏற்றுக் கொள்வானாக! அவரது தவறுகளை மன்னித்தருள்வானாக!

நம்முடைய பாவங்களையும், அவரது பாவங்களையும் மன்னித்து, நம்மையும் அவரையும் நயீம் எனும் சுவனபதியில் ஒன்று சேர்த்து வைப்பானாக!

யா அல்லாஹ்! அவரது கப்ரை சுவனத்தின் பூஞ்சோலைகளில் ஒன்றாக ஆக்கிடுவாயாக! அவரது கப்ரை நரகின் படுகுழிகளில் ஒன்றாக ஆக்காதிருப்பாயாக! நிச்சயமாக அல்லாஹ்வின் நேசர்களுக்கு அச்சமோ கவலையோ கிடையாது.

எங்கள் இரட்சகனே! எங்கள் புறத்திலுண்டான நல்லமல்களை ஏற்றுக் கொள்வாயாக! நிச்சயமாக நீ செவியுறக் கூடியவனாகவும் நன்கறிபவனாகவும் இருக்கிறாய். மேலும் எங்களது தவ்பாவை ஏற்றுக் கொள்வாயாக! திண்ணமாக நீ தவ்பாவை ஏற்பவனாகவும், அருளாளனாகவும் இருக்கிறாய்.

எங்கள் இரட்சகனே! இவ்வுலகில் எங்களுக்கு நன்மையையே வழங்கி மறுமையிலும் நன்மையையே வழங்கி எங்களை நரகின் வேதனையிலிருந்து பாதுகாப்பாயாக!

எங்கள் இரட்சகா! எங்களுக்கும் எங்களது தாய் தந்தையருக்கும், எங்களது ஷெய்குமார்களுக்கும், எங்களது ஆசிரியர்களுக்கும் அனைத்து முஸ்லிமான ஆண், பெண்களுக்கும் மன்னிப்பை நல்கிடுவாயாக!

எங்கள் இரட்சகனே! அவ்விருவரும் எனது சிறு பிராயத்தில் என்னை வளர்த்து அருள் புரிந்தது போன்று அவ்விருவருக்கும் நீ அருள்புரிவாயாக!

அல்லாஹ் படைப்பினங்களில் சிறந்தவரான நமது தலைவர் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீதும் அன்னாரின் கிளையார்கள் மீதும் அவர்களின் தோழர்கள் அனைவர் மீதும் அருள் மாரியைப் பொழிந்திடுவானாக!

கண்ணியத்திற்குரிய ரப்பாகிய உமது ரப்பு அவர்கள் வர்ணிப்பவற்றை விட்டும் மகாத் தூய்மையானவன்.
ரஸூல்மார்களின் மீது ஸலாம் உண்டாவதாக!
புகழனைத்தும் அனைத்துலகங்களின் ரப்பாகிய அல்லாஹ்வுக்கே உரித்தாகும். Sufi Manzil பதிவிலிருந்து
இத்துடன் ஈஸால் ஸவாப் தொடர் பதிவு நிறைவடைகிறது

## இஸ்லாத்தின் பார்வையில் நாளிதழ் செய்திகள் 1



14 டன் மாம்பழம், சாத்துக்குடி அழிப்பு! செயற்கையாக பழுக்க வைத்ததால் நடவடிக்கை தினமலர் மே 12,2022
கோவை : கோவையில், செயற்கையாக பழுக்க வைக்கப்பட்ட 12.350 டன் மாம்பழம், 2.350 டன் சாத்துக்குடி ஆகியவற்றை, உணவு பாதுகாப்புத்துறையினர் பறிமுதல் செய்து அழித்தனர்.
கோவை மாநகரில் பழ மண்டிகள் அமைந்துள்ள வைசியாள் வீதி, பெரிய கடைவீதி, பவள வீதி, கருப்ப கவுண்டர் வீதியில் 45 கடைகளில் இந்த ஆய்வு நடத்தப்பட்டது.இதில்,எத்திலின் ரசாயன பவுடர் பாக்கெட்டுகள், நேரடியாக பெட்டிகளில் வைத்து பழுக்க வைக்கப்பட்ட, 12 டன் 350 கிலோ எடை கொண்ட மாம்பழங்கள் பறிமுதல் செய்யப்பட்டன.
சாத்துக்குடி 2 டன் 350 கிலோ பறிமுதல் செய்யப்பட்டன. இவை, மாநகராட்சி குப்பை கிடங்கில் கொட்டி அழிக்கப்பட்டன. பறிமுதல் செய்து அழிக்கப்பட்ட பழங்களின் சந்தை மதிப்பு 8 லட்சத்து 10 ஆயிரம் ரூபாய் ஆய்வு முடிவில், குறைபாடுகள் கண்டறியப்பட்ட 12 கடைகளுக்கு நோட்டீஸ் வழங்கப்பட்டது.
கார்பைட் கல், எத்திலின் ரசாயன பவுடர் பாக்கெட்டுகள் எத்ரல் வாயு கொண்டு பழுக்க வைக்கப்படும் மாம்பழங்கள் பழத்தின் தோல் மட்டும் மஞ்சளாக பளபளப்பாக இருக்கும். ஆனால், உள்ளே சில இடங்களில் காயாக இருக்கும் உண்பதால் வயிறு தொடர்பான பிரச்னைகள், கண் எரிச்சல், சரும அலர்ஜி, வாந்தி பேதி போன்ற உபாதைகள் உண்டாகும்.
ஆர்சனிக் மற்றும் பாஸ்பரஸ் இருந்தால், புற்றுநோய் உண்டாகவும் வாய்ப்புள்ளது. சில நேரங்களில் சுவாசம் தொடர்பான பிரச்னைகள் ஏற்படவும், உடலில் நீர் வறட்சி ஏற்பட்டு உடல் வலு இழக்கவும் வாய்ப்புள்ளதாக கூறுகின்றனர்.
....... ....... ...... ..... ..... ....... ..... ..... ...... ...... ...... ....... .... ....................................
இஸ்லாத்தின் பார்வையில் ...

இன்று நாம் முன்வைக்கும் மிகப்பெரிய விஷயம் நாட்டின் முதுகெலும்பாகத் திகழும் விவசாயம் மற்றும் அதைச் சார்ந்த தொழில் வளத்தை பற்றியதாக உள்ளது.
தாவரங்கள், தனது இறைவனின் விருப்பப்படி நல்ல பூமியில் வெளிப்படுகிறது. கெட்ட பூமியில் அற்பமானதைத் தவிர வேறெதுவும் வெளிப்படாது. நன்றி செலுத்தும் சமுதாயத்திற்கு இவ்வாறே சான்றுகளை விளக்குகிறோம். (குர்ஆன் 7:58)
மேற்கண்ட திருக்குர்ஆன் வசனத்தில் அல்லாஹ் மூன்று விதமான விவசாய அறிவுரைகளை கற்றுத்தருகிறான்.
தாவரங்கள், தனது இறைவனின் விருப்பப்படி நல்ல பூமியில் வெளிப்படுகிறது.
கெட்ட பூமியில் அற்பமானதைத் தவிர வேறெதுவும் வெளிப்படாது.
நன்றி செலுத்தும் சமுதாயத்திற்கு இவ்வாறே சான்றுகளை விளக்குகிறோம்.
நல்ல பூமியில் மாமரம், பூத்து, காய் பருவத்திற்கு வர,எட்டு மாதங்கள் தேவைப்படுகின்றன. அதற்குள் காற்றாலும், பனியாலும் உள்ளிட்ட பிரச்னைகளால், மாங்காய் விளைச்சல் பாதிக்கப்படுகிறது. இதனால்,ஆறு மாதத்திலேயே காய் பதத்தில் பறிக்கப்பட்டு, விற்பனைக்கு அனுப்பப்படுகிறது.
இந்த மாங்காய், இயற்கையாக மாம்பழமாக மாற வேண்டுமானால், ஒரு வார கால அவகாசம் தேவைப்படும்.
இயற்கையாக கனியும் பழங்கள், மிகவும் ருசியாகவும், உடல் நலத்துக்கு பாதிப்பு இல்லாததாக இருக்கும்
கெட்ட பூமிக்கு உதாரணம் தாவரங்களுக்கு தேவையான நீர் ஆதாரங்கள் மிகவும் அரிதாக காணப்படும் பாலைவனங்கள் மனிதன் வாழத்தகுதியற்ற சூழல் நிறைந்த பூமி என்று கருதினால் தார் பாலைவனம், ஆப்ரிக்க பாலைவனம் மற்றும் மெக்ஸிகோ போன்ற பாலைவனங்களை குறிப்பிடலாம்.
இவ்வகை பாலைவனங்களில் மனிதனுக்கு குறைவான பலன்களை மட்டுமே தரக்கூடிய விஷ முட்செடிகள் மற்றும் கள்ளிச் செடிகள் வளர்கின்றன.
நல்ல பூமியில் விளைந்த காய்களை அவசரமாக பழுக்க வைப்பதற்காக அவை கெட்ட பூமியில் விளைந்த விஷப் பழங்களைப் போல் மனிதன் மாற்றி விடுகிறான்.
இறைவனின் அருட்கொடைகளை அவசரக்கார மனிதன் நாசம் செய்து விடுகிறான்.

நபி (ஸல்) அவர்களும் விவசாயத்தை புகழ்ந்து கூறியுள்ளார்கள்." ஒரு முறை நபி (ஸல்) அவர்கள் உம்மு முபஷ்ஷிர் அல் அன்சாரிய்யா (ரலி) அவர்களது பேரிச்சந் தோப்பிற்குச் சென்றார்கள்.
உம்மு முபஷ்ஷிர் (ரலி) அவர்களிடம் இந்த பேரீச்ச மரங்களை நட்டுவைத்தது யார்? முஸ்லிமா அல்லது இறைமறுப்பாளரா ? என்று கேட்டார்கள்.
அதற்கு அவர், " இல்லை ஒரு முஸ்லிம் தான் நட்டு வைத்தார்"
அப்போது நபி (ஸல்) அவர்கள் முஸ்லிம் ஒருவர் மரமொன்றை நட்டுவைத்து அல்லது விதையொன்றை விதைத்துப் பயிர் செய்து அதிலிருந்து (வரும் விளைச்சலை அல்லது கனிகளை) ஒரு மனிதனோ கால்நடையோ அல்லது ஏதேனும் ஒன்றோ உண்டால் அது அவருக்கு ஒரு தர்மமாகவே அமையும்.
அறிவிப்பவர் : ஜாபிர் (ரலி) அவர்கள் முஸ்லிம் (3160)
நீங்கள் பயிரிடுவதைச் சிந்தித்தீர்களா? நீங்கள் அதை முளைக்கச் செய்கிறீர்களா? அல்லது நாம் முளைக்கச் செய்கிறோமா? நாம் நினைத்திருந்தால் அதைக் கூளமாக்கியிருப்போம். குர்ஆன் (56 : 63)
அதன் மூலம் பயிர்களையும், ஒலிவ மரம், பேரீச்சை, திராட்சை மற்றும் அனைத்துக் கனிகளையும் உங்களுக்காக அவன் முளைக்கச் செய்கிறான். சிந்திக்கும் சமுதாயத்திற்கு இதில் சான்று இருக்கிறது. குர்ஆன் (16 : 11)
இவ்வுலக வாழ்க்கைக்கு உதாரணம், வானிலிருந்து நாம் இறக்கிய தண்ணீரைப் போன்றது. மனிதர்களும், கால்நடைகளும் உண்ணுகிற பூமியின் தாவரங்களுடன் அத்தண்ணீர் கலக்கிறது. முடிவில் பூமி அலங்காரம் பெற்று கவர்ச்சியாக ஆகிறது.

அதன் உரிமையாளர்கள் அதன் மீது தமக்குச் சக்தி இருப்பதாக நினைக்கும்போது,நமது கட்டளை இரவிலோ, பகலிலோ அதற்கு (பூமிக்கு) கிடைக்கிறது. உடனே நேற்று அவ்விடத்தில் இல்லாதிருந்தது போல் அறுக்கப்பட்டதாக அதை ஆக்கி விடுகிறோம். சிந்திக்கின்ற சமுதாயத்திற்கு இவ்வாறே சான்றுகளைத் தெளிவுபடுத்துகிறோம். (குர்ஆன் 10:24)
இறைவன் அள்ளித் தரும் அருட்கொடைகளை பொருளாசை கொண்ட அவசரக்கார மனிதன் அதனை நாசம் செய்யாதிருக்கட்டும்.

## இஸ்லாத்தின் பார்வையில் நாளிதழ் செய்திகள் 2

(ஈரானில் இறந்த பின்பும் தூக்கிலிடப்பட்ட பெண் )

ஈரானில் மரணத் தண்டனை விதிக்கப்பட்ட பெண் ஒருவர் மாராடைப்பால் இறந்த பின்னரும் அவரை மீண்டும் தூக்கிலிடப்பட்ட நிகழ்வு அதிர்ச்சியை ஏற்படுத்தி உள்ளது.
இதுகுறித்து அரப் நியூஸ் வெளியிட்ட செய்தியில், " சாரா இஸ்மாயில் என்ற பெண் தன்னையும், தனது குழந்தையும் துன்புறுத்தி வந்த கணவரை தற்காப்புக்காக கொலைச் செய்திருக்கிறார். இவ்வழக்கில் அவருக்கு மரணத் தண்டனை விதிக்கப்பட்டது.
இந்த நிலையில் அவருக்கு மரணத் தண்டனை நிறைவேற்றப்பட்டது குறித்து அவரது வழக்கறிஞர் தனது சமூக வலைதள பக்கத்தில் வேதனையான பதிவை பகிர்ந்திருக்கிறார்.
அதில் சாரா தூக்கில்போடுவதற்கு முன்பு அவரை மற்றவர்கள் தூக்கிலிடும் காட்சியை பார்க்க வைத்துள்ளனர். இதில் ஏற்பட்ட அதிர்ச்சியில் வரிசையில் 16 வது நபராக நின்ற சாராவுக்கு திடீரென மாரடைப்பு ஏற்பட்டு, அவர் மரணமடைந்திருக்கிறார். ஆனால் அதிகாரிகள் அவர் இறந்ததையும் பொருட்படுத்தாமல் அவரை மீண்டும் தூக்கு கயிற்றில் ஏற்றி சாரா அமர்ந்திருக்கும் நாற்காலியை அவரது மாமியார் காலால் எட்டி உதைத்து தூக்கிலிடப்பட்டிருக்கிறார் என்று குறிப்பிட்டுள்ளார்" என்று செய்தி வெளியிட்டுள்ளது.
ஈரானை பொறுத்தவரை அங்கு கொலை செய்தவரின் மரணம் அவரால் கொல்லப்பட்டவரின் நெருங்கிய உறவுகளுக்கு முன் நிகழ வேண்டும் அப்போதுதான் அக்குடும்பத்திற்கு நீதி கிடைக்கும் என்று நம்பப்படுகிறது. சாராவுக்கு நிகழ்ந்தது போன்று பல மனித உரிமை மீறல்கள் ஈரான் சிறையில் அரங்கேறி வருவதாக தொடர்ந்து குற்றச்சாட்டுகள் எழுந்து வருகிறது.
2020 ஆம் ஆண்டில் மட்டும் ஈரானில் 200க்கும் மேற்பட்டவர்கள் தூக்கிலிடப்பட்டுள்ளனர். Published : 24 Feb 2021
இந்து தமிழ்

........................................................................................................ ........................................

இஸ்லாத்தின் பார்வையில் ....
'நிச்சயமாக எவன் ஒருவன் கொலைக்குப் பதிலாகவோ அல்லது பூமியில் ஏற்படும் குழப்பத்தை(த் தடுப்பதற்காகவோ) அன்றி, மற்றொருவரைக் கொலை செய்கிறானோ அவன் மனிதர்கள் யாவரையுமே கொலை செய்தவன் போலாவான்.
மேலும், எவரொருவர் ஓராத்மாவை வாழ வைக்கிறாரோ அவர் மக்கள் யாவரையும் வாழ வைப்பவரைப் போலாவார்' என்று இஸ்ராயீலின் சந்ததியினருக்கு விதித்தோம்.
மேலும், நிச்சயமாக நம் தூதர்கள் அவர்களிடம் தெளிவான அத்தாட்சிகளைக் கொண்டு வந்தார்கள். இதன் பின்னரும் அவர்களில் பெரும்பாலோர் பூமியில் வரம்பு கடந்தவர்களாகவே இருக்கின்றனர். குர்ஆன் ( 5:32 )

அல்லாஹ்வுடனும் அவன் தூதருடனும் போர் புரிந்து, பூமியில் குழப்பம் செய்து கொண்டு திரிபவர்களுக்குத் தண்டனை இதுதான் (அவர்கள்) கொல்லப்படுதல், அல்லது தூக்கிலிடப்படுதல், அல்லது மாறுகால் மாறு கை வாங்கப்படுதல், அல்லது நாடு கடத்தப்படுதல். இது அவர்களுக்கு இவ்வுலகில் ஏற்படும் இழிவாகும். மறுமையில் அவர்களுக்கு மிகக்கடுமையான வேதனையுமுண்டு.
(குர்ஆன் 5:33)
இவ்வுலகில் வரம்பு மீறுபவர்களுக்கு இவ்வளவு பெரிய தண்டனைகள் வழங்கப்படுவதோடு மறுமையிலும் கடும் தண்டணைகள் உள்ளன என்று இஸ்லாம் கூறுவதிலிருந்து வன்முறைகளுக்கு எதிரான மார்க்கம் இஸ்லாம் என்பதை நிரூபிக்கின்றன.
நபி (ஸல்) அவர்கள் காலத்தில் போர் காலங்களில் கூட பெண்களை, சிறுவர்களை, முதியவர்களை கொன்று விடாதீர்கள். நீர் நிலைகள், அந்நாட்டின் வளங்களை அழித்து விடாதீர்கள் என்று தன் ராணுவத்திற்கு கட்டளையிட்டார்கள் என்ற செய்திகளை நபி மொழிகளில் காணமுடிகின்றது.
முஸ்லிம் என்றால் தன் நாவினால், தன் கரத்தால் மற்றவனுக்கு தொல்லை தர மாட்டான் என்று கூறிய நபி மொழிகள் நமக்கு எதை உணர்த்துகின்றது ? இஸ்லாதிற்கும் வன்முறைக்கும் எள் முனையளவும் சம்பந்தமில்லை என்று கூறி உலகில் அமைதிக்கு வித்திடுகின்றன.
முஃப்லிஸ் (திவால் ஆனவன்) என்றால் யார் என்று உங்களுக்கு தெரியுமா ? என நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். எங்களில் எவருக்கு திர்ஹமும், பொருளும் இல்லையோ அவர் தான் என நபித்தோழர்கள் கூறினார்கள்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள் முஃப்லிஸ் என்றால் என் சமுதாயத்திலிருந்து மறுமை நாளில்; சிலர் தன் தொழுகை, நோன்பு, ஸகாத் (அதன் நன்மைகள்) ஆகியவற்றை கொண்டு வருவார். அவர் ஒரு மனிதரை திட்டி இருப்பார், ஒரு மனிதரை அவதூறு சுமத்தியிருப்பார்;, ஒரு மனிதரின் பொருளை (அநியாயமாக) சாப்பிட்டு இருப்பார், ஒரு மனிதரின் இரத்தத்தை ஓட்டியிருப்பார், ஒரு மனிதரை அடித்திருப்பார். (பாதிக்கப்பட்டவனுக்கு) அவரின் நன்மைகளை பறித்து வழங்கப்படும். பரிகாரம் தீர்க்கப்படும் முன் அவனின் நன்மைகள் தீர்ந்து விட்டால் பாதிக்கப்பட்டவனின் பாவங்களை எடுத்து அவன் மீது சாட்டப்படும். பின்பு அவன் நரகில் தள்ளப்படுவான். நூல்: முஸ்லிம் 4678
இஸ்லாம் ஒரு மனிதனின் உயிருக்கோ, உடமைக்கோ எந்த விதத்திலும் பாதிப்பு ஏற்படுத்துவதை ஒரு போதும் அனுமதிப்பதில்லை.
பூமியில் உள்ளவர்களுக்கு நீங்கள் இரக்கம் காண்பித்தால், வானில் உள்ளவன் (அல்லாஹ்) உங்களுக்கு இரக்கம் காட்டுவான். என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். நூல்: திர்மிதி 1847
இஸ்லாம் கூறுகின்ற குற்றத்திற்கான தண்டனைகளை கூட விமர்சனம் செய்யும் மேதாவிகளும் உலகில் உள்ளனர்.
குற்றவாளிகளுக்கு வழங்கப்படும் தூக்கு தண்டனை கடுமையானதா இல்லையா என்று பட்டி மன்றம் கூட அறிஞர்கர்களுக்கு மத்தியில் நடத்தப்படுகின்றன. குற்றத்திற்கான தண்டனைகள் வழங்கும் போது கூட ஒரு உயிருக்கு தண்டனை வழங்கினால் பல உயிர்கள் பாதுகாக்கப்படும் என்ற தத்துவத்தை தத்துவ மேதைகளுக்கு இன்னும் விளங்கவில்லை போலும்.
இஸலாம் வாயில்லா ஜீவன் மிருகங்கள் மீதே வன்முறை கூடாது என்று கூறும்போது வாய் பேசும், மதிக்கப்படும் மனிதர்கள் மீது எவ்வாறு வன்முறையை தூண்டும்?
ஒரு பூனையை வீட்டில் கட்டி வைத்து அதற்கு உணவு கொடுக்காமல் அதை சாகடித்ததின் காரணமாக அவளுக்கு நரகத்தின் தண்டனைக்கு ஆளாகின்றாள். நூல்:புகாரி 2365
ஒரு நாய் தாகத்தின் காரணமாக ஈர மண்ணை (நக்கி) சாப்பிடுவதை ஒருவர் பார்த்தார். உடனே அவர், தான் அணிந்திருந்த காலுறையை எடுத்து அதில் தண்ணீர் மொண்டு அந்நாய் தாகம் தீரும் வரை கொடுத்தார். எனவே அல்லாஹ் அம்மனிதருக்கு கருணை காட்டி அவரைச் சுவர்க்கத்தில் புகுத்தினான்' இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். நூல்:புகாரி 2763

உண்மை முஸ்லிம் என்றால் அவனின் மூலம் மற்ற மக்கள் பாதுகாப்பு பெற வேண்டும் அப்பொழுது தான் அவன் இறைவனிடத்தில் முஸ்லிமாக மதிக்கப்படுவான்.
அண்டை வீட்டுக்காரன் தன் தீங்கிலிருந்து பாதுகாப்பு பெற வில்லையெனில் அவன் சுவனம் செல்லமுடியாது என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். நூல்: முஸ்லிம் 66
நபி (ஸல்) அவர்களின் காலத்தில் இரவு நேரத்தில் கடுமையான சப்தம் கேட்கின்றது. உடனே நபியவர்கள் அபூ தல்ஹா (ரலி) அவர்களின் சேணை பூட்டப்படாத குதிரையின் மீது சென்று என்ன வென்று பார்த்து விட்டுவந்து மக்களே! பயப்படாதீர்கள் ஒன்றுமில்லை என்று மக்களின் பதட்டத்தை நீக்கினார்கள். நூல்:புகாரி 2820
எனவே மக்களின் அமைதிக்கு எதிரா எவர் வன்முறையை தூண்டினாலும், நடத்தினாலும் அவர் இஸ்லாத்தின் பார்வையில் ஓர் கடும் குற்றவாளியே !

## இஸ்லாத்தின் பார்வையில் நாளிதழ் செய்திகள் 3

மனித தோல் செல்களின் வயதை 30 ஆண்டுகள் குறைக்க புதிய முறை...!

லண்டன் - The Life இதழில் வெளியிடப்பட்ட ஆய்வு கட்டுரை ஒன்றில் கூறி இருப்பதாவது:-
நாம் நமது வாழ்க்கைப் பாதையில் முன்னேறும்போது, நமது செல்கள் வயது தொடர்பான மரபணு மாற்றங்களுக்கு உட்படுகின்றன.இதன் விளைவாக அவற்றின் செயல்படும் திறன் குறைகிறது.
ஒரு நபரின் உயிரியல் வயதை தீர்மானிக்க டிஎன்ஏ மெத்திலேஷன் விகிதத்தை அளவிடும் எபிஜெனெடிக் கடிகாரங்கள் போன்ற கருவிகளைப் பயன்படுத்தி கண்காணிக்க முடியும்.
2007 ஆம் ஆண்டில் ஜப்பானிய ஆராய்ச்சியாளர் ஷின்யா யமனாகா, முதிர்ந்த செல்களை மீண்டும் ஸ்டெம் செல்களாக மாற்றும் நுட்பத்தை உருவாக்கி, யமனகா காரணிகள் எனப்படும் இரசாயனங்களின் காக்டெய்லுக்கு 50 நாட்களுக்கு வெளிப்படுத்தியபோது, இந்தத் துறையில் ஒரு பெரிய முன்னேற்றம் ஏற்பட்டது. இதனால் வயோதிகத்தை தள்ளி தள்ளிப் போட்டு நீண்ட நாள் வாழ முடியும்
தற்போது விஞ்ஞானிகள் சோதனை மூலம் மனிதோல்களின் செல்கள் மாற்றத்தை 30 ஆண்டுகளாக குறைக்கும் வழியை கண்டறிந்து உள்ளனர். கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகம் இந்த புதிய சோதனைய நடத்தி உள்ளது.இதன் மூலம் செல்கள் இன்னும் இளமை நிலைக்கு மீட்டெடுக்கிறது. இந்த யுக்தி வருடக்கணக்கில் மனித ஆயுளை நீட்டிக்க முடியும் .
மனிதர்களுக்கு வயதாக ஆக, செல்கள் சரியாக செயல்படும் திறன் குறைகிறது. இதன் விளைவாக, அவர்கலின் டிஎன்ஏ வரைபடம் வயதான அறிகுறிகளைக் குவிக்கத் தொடங்குகிறது. இதனை 30 ஆண்டுகளாக குறைத்து உள்ளனர்.
மனித தோல் செல்களை 30 ஆண்டுகள் மாற்றம் நிகழாமல் இருக்க ஒரு முறையை உருவாக்கியுள்ளனர், இது செல்கள் அவற்றின் செயல்பாட்டை இழக்காமல் செய்கிறது.
ஆராய்ச்சியாளர்கள் பழைய உயிரணுக்களின் செயல்பாட்டை ஓரளவு மீட்டெடுக்க முடிந்தது, அத்துடன் உயிரியல் வயதைப் புதுப்பிக்கவும் முடிந்தது.
மீளுருவாக்கம் உயிரியலைப் பயன்படுத்தி தூண்டப்பட்ட ஸ்டெம் செல்களை உருவாக்கி, காயங்களைக் குணப்படுத்தும் மற்றும் திசுக்களுக்கு கட்டமைப்பை வழங்கும் கொலாஜன்களை உருவாக்கும் பைப்ரோபிளாஸ்ட்களை உருவாக்குகின்றனர்.
சோதனைகளில், பகுதியளவு புத்துயிர் பெற்ற செல்கள் இளமை செல்களைப் போலவே செயல்படுவதற்கான அறிகுறிகளைக் காட்டி உள்ளன என கூறப்பட்டு உள்ளது.

---

وَلَتَجِدَنَّهُمْ اَحْرَصَ النَّاسِ عَلٰى حَيٰوةٍ ۛ وَ مِنَ الَّذِيْنَ اَشْرَكُوْا ۛ يَوَدُّ اَحَدُهُمْ لَوْ يُعَمَّرُ اَ لْفَ سَنَةٍ وَمَا هُوَ بِمُزَحْزِحِهٖ مِنَ الْعَذَابِ اَنْ يُّعَمَّرَ وَاللّٰهُ بَصِيْرٌ بِمَا يَعْمَلُوْنَ

அன்றி, (நபியே! அந்த யூதர்கள்) மற்ற மனிதர்களை விடவும் (குறிப்பாக இணைவைத்து வணங்கும்) முஷ்ரிக்குகளை விடவும் (நீண்ட நாள்) உயிர்வாழ மிகவும் பேராசை உடையவர்களாக இருப்பதை நிச்சயமாக நீங்கள் காண்பீர்கள்!

அவர்களில் ஒவ்வொருவனும் "நான் ஆயிரம் ஆண்டுகள் உயிர்வாழ வேண்டுமே?" என்று விரும்புவான். (அவ்வாறு நீண்ட நாள்) உயிருடன் இருக்க அவனை விட்டு வைத்தாலும், அது வேதனையிலிருந்து ஒரு சிறிதும் அவனைத் தப்பிக்க வைத்துவிட மாட்டாது. அல்லாஹ் அவர்கள் செய்வதை உற்று நோக்குபவனாக இருக்கின்றான். (குர்ஆன் : 2:96)

இணைவைப்பவர்களுக்கு இவ்வுலக வாழ்வில் அதிகம் ஆசை உண்டு ஏனெனில் அவர்கள் மறு உலக வாழ்வை ஈமான் கொள்ளாதவர்கள். அவர்கள் இந்த உலக வாழ்க்கையை தவிர, வேறு எதையும் அறியாதவர்கள். ஆதலின் அவர்கள் இவ்வுலக வாழ்வையே அதிகம் ஆசை வைத்து இருப்பது ஆச்சரியமான விஷயம் அல்ல.

ஆனால் யூதர்கள் இவர்களைப் போல் அல்ல; இவர்கள் மறு உலகில் நன்மை தீமை கூலி கொடுக்கப்படும் என்பதை தங்கள் வேதங்கள் சொல்வதை ஒப்புக் கொண்டிருப்பவர்கள். ஆகவே யூதர்கள் விஷயத்தில் இணைவைப்பவர்களை பார்க்கினும், அதிகமாக கண்டிக்கப்படத் தகுந்தவர்கள்.

தவிர யூதர்கள் வேதக்காரர்களாக இருந்தும் இவ்வுலக வாழ்வின் மீது இவ்வளவு தூரம் ஆசை உள்ளவராக இருப்பது ஏனென்றால், அவர்கள் தங்களது அந்தரங்க நிலைமையை நன்கு அறிந்திருக்கின்றனர். ஆகவே தங்களது நிலைமையை கவனிக்குமிடத்து தங்களுக்கு நரகம்தான் நிச்சயம் கிடைக்கும் என்பதை அவர்கள் உறுதியாக உணர்ந்து கொண்டனர்.

ஆதலால் நரக வேதனைக்கு பயந்து இந்த உலகிலேயே இருப்பதை அதிகமாக விரும்புகின்றனர்.

இணைவைப்பவர்களுக்கு இந்த விஷயம் தெரியாது. ஆதலால் அவர்கள் யூதர்களைப் போல் அவ்வளவு அதிகமாக இவ்வுலக வாழ்வின் மீது ஆசை வைக்கவில்லை.

வஹபு (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : ஹஜரத் தானியால் (அலை) அவர்கள் ஒருமுறை காட்டில் போய்க் கொண்டிருக்கையில், "தானியாலே நில்லும்.புதுமையைக் காண்பீர் " என்று ஒரு சப்தம் வந்தது.அவர்கள் நின்று கொண்டு அங்கும் இங்கும் திரும்பி பார்த்தார்கள் ஒன்றையும் காணவில்லை.

இரண்டாவதும் அவ்விதமாகவே சப்தம் கேட்க நின்றார்கள். பக்கத்தில் உள்ள ஒரு வீட்டில் இருந்து அவர்களை அழைக்கும் சப்தம் வருவது தெரியவந்தது அங்கு அவர்கள் போய் பார்த்தபோது, மாணிக்கத்தாலான ஒரு கட்டில் இருந்தது. அதிலிருந்து ஒரு சப்தம், "தானியாலே ஏறும். புதுமையைக் காண்பீர் " என்று வந்தது .

ஏறி பார்த்தபோது, தங்க விரிப்பில் கஸ்தூரி அம்பரை நிரப்பி அதில் ஒரு வாலிபன் அளவற்ற நகைகளை சூடி, செத்து தூங்குவதுபோல் கிடந்தான்.அவன் தலையில் பொற்கிரீடமும் இடது கையில் பொன் மோதிரமும், இடுப்பில் கூரிய வாளும் அணிந்திருந்தான்.

அப்போது அந்த கட்டிலிருந்து, " அந்த வாளை எடுத்துப் படியும் " என்று ஒரு சத்தம் உண்டாயிற்று படித்துப் பார்த்தபோது, " இது இரமுடைய மகன் ஆது. ஆதுடைய மகன் உனுக்கு, உனுக்குடைய மகன் ஊஜு.ஊஜுடைய மகன் ஸம்ஸாமுடய வாள். நான் 1700 வருடம் உயிருடன் இருந்தேன்.12 ஆயிரம் பெண்களை கற்பழித்தேன். 40 ஆயிரம் நகரங்களை உண்டாக்கினேன். நான் அறியாமையாலும்,அநியாயத்தாலும் நீதியை விட்டு மாறினேன். என்னுடைய பொக்கிஷத்தின் திறவுகோல்களை 400 கோவேறு கழுதைகள் சுமந்தன.

இவ்வுலகில் உள்ளவர்களில் ஒருவரும் என்னுடன் பிணங்கவில்லை. ஆதலால் நான் இறைவன் என்று கூறி வழக்காடினேன். ரூபூபியத்தை தாவா செய்தேன். உடனே எனக்கு பசி உண்டாயிற்று 1000 பறை ( ஒரு பறை 6 மரக்கால் கொண்ட முகத்தல் அளவாகும் ) முத்துக் கொடுத்து ஒரு சிரங்கை ஒரு சிரங்கை சோளம் வாங்குவதற்குத் தேடினேன். அதுவும் கிடைக்காமல் பசியால் செத்தேன்.

இம்மையுடைய மக்களே...! உங்களிலிருந்து இறந்து போனவர்களைப் பற்றி கவனியுங்கள். என்னைக் கொண்டு படிப்பினை பெற்றுக் கொள்ளுங்கள். என்னை உலகம் ஏமாற்றி விட்டது போல் உங்களையும் ஏமாற்றிவிட

வேண்டாம். என்னுடைய சுற்றத்தார்கள் என் பாவத்திலிருந்து ஒரு அணுவளவேனும் சுமந்து கொள்ளவில்லை "என்று எழுதியிருந்தது

## இஸ்லாத்தின் பார்வையில் நாளிதழ் செய்திகள் 4

அமெரிக்க பெண் உடலுக்குள் உயிருடன் ஊடுருவிய 3 ஈக்கள்: அகற்றி இந்திய டாக்டர்கள் சாதனை புரிந்து உள்ளனர்.

அமெரிக்காவை சேர்ந்த 32 வயது பெண் சுற்றுலா பயணி ஒருவர் இந்தியா வந்துள்ளார். அவருக்கு கடந்த ஒன்றரை மாதமாக வலது கண்ணில் இமை வீக்கம், சிவந்து போதல், அரிப்பு தன்மை காணப்பட்டது. இந்தியா வருவதற்கு முன், அமெரிக்காவில் மருத்துவர்களிடம் பரிசோதித்ததில், அவர்களால் எதனால் இந்த அறிகுறிகள் ஏற்படுகின்றன என்று கண்டறிய முடியவில்லை. ஆனால் நோய் அறிகுறியின் அடிப்படையில் அவருக்கு சிகிச்சை அளித்தனர்.
இந்நிலையில், இந்தியா வந்த பின்னும் அவருக்கு கண் இமைக்குள் அவ்வபோது ஏதோ அசைவது போன்ற உணர்வு ஏற்பட்டதால், டெல்லியில் உள்ள தனியார் மருத்துவமனையில் பரிசோதனை செய்தார்.
அப்போது, அவர் அமேசான் காடுகளுக்கு சென்று வந்த பின்பு, கடந்த 6 வாரங்களாகவே இந்த உணர்வு இருப்பதாக டாக்டர்களிடம் தெரிவித்து உள்ளார். இதைத் தொடர்ந்து அவரை பரிசோதித்த டாக்டர்கள் , அவரது கண்ணில் அரிதான மியாசிஸ் எனப்படும், மனிதர்கள், பிற பாலூட்டிகளில் பரவும் ஒட்டுண்ணி வகையை சேர்ந்த பெரிய அமெரிக்க ஈக்கள் இருப்பது உறுதியானது.
அவர் அமேசான் காடுகளுக்கு சென்று வந்த போது, இந்த ஈக்கள் உயிருடன் அவருடைய தோலை ஊடுருவி உள்ளே சென்றுள்ளன. இதையடுத்து, டாக்டர்கள் அவருக்கு எந்த மயக்க மருந்தும் கொடுக்காமல் 10-15 நிமிடங்களில் அறுவை சிகிச்சை செய்து, வலது மேல் கண்ணிமை, கழுத்தின் பின்புறம் மற்றும் வலது முன்கை ஆகியவற்றிலிருந்து ஏறக்குறைய 2 செமீ நீளம் அளவுள்ள மூன்று ஈக்களை அகற்றினர்.
இந்த ஈக்களை அகற்றாமல் விட்டால், நாளடைவில் திசுக்களில் கணிசமான அழிவை ஏற்படுத்தியிருக்கும். இதன் விளைவாக மூக்கு, முகத்தை சுற்றிய பகுதிகளில் அரிப்பு போன்றவை ஏற்படும். சில நேரங்களில் இது மூளைக்காய்ச்சல், மரணத்திற்கு வழிவகுக்கும் என்று டாக்டர்கள் தெரிவித்தனர்.

______________________________________________

இஸ்லாத்தின் பார்வையில்....
பூச்சியினங்கள் ( கொசு ) மனித உடலுக்குள் புகுந்து தொந்தரவு கொடுப்பது பற்றி இஸ்லாம் நம்ரூத் என்ற கொடிய மன்னன் அதனால் செத்தொழிந்ததை கூறுகிறது .
நபி இப்ராஹீம் (அலை) ஓரிறைக் கொள்கையை மக்களிடம் எடுத்துரைத்தபோது, கொடியவன் நம்ரூது கொதித்தெழுந்தான். இப்ராஹீம் நபியை நெருப்பு குண்டத்தில் வீசி எறியந்தான்.
قُلْنَا يٰنَارُ كُوْنِىْ بَرْدًا وَّسَلٰمًا عَلٰٓى اِبْرٰهِيْمَ ۙ

(அவ்வாறே அவர்கள் இப்ராஹீமை நெருப்புக் கிடங்கில் எறியவே நெருப்பை நோக்கி) "நெருப்பே! நீ இப்ராஹீமுக்கு சுகம் தரும் விதத்தில் குளிர்ந்து விடு!" என்று நாம் கூறினோம்.
(அல்குர்ஆன் : 21:69) இறைவனது ஆணைப்படியே நடந்தது.
இப்ராஹீம் நபி இறை நம்பிக்கையால் அத்துன்பத்திலிருந்து வெளியே வந்துவிட்டார்கள். இதனைக் கண்ட நம்ரூத் வியப்படைந்தான். "நான் அவரது இறைவனை ஏற்கப்போகிறேன்' என்றான். அவனது அமைச்சன் தடுத்துவிட்டான்.
நபியின் செல்வாக்கு வளர்வதைக் கண்டு, நபியை ஊரை விட்டே வெளியேற்றினான்
நம்ரூத் உலகில் முதன்முதலாக தங்க கிரீடத்தை அணிந்து அரசர்களுக்கெல்லாம் ஓர் அடையாளத்தை ஏற்படுத்தியவன். அதனால்தானோ என்னவோ ...
அவனது கடைசி காலத்தில் கொசு ஒன்று மூக்கில் நுழைந்து, அவனை அலைக்கழித்தது. அவனது கிரீட வைத்திருந்த தலையில் கிரீடத்தை கழற்றி விட்டு , யாராவது ஏதேனும் ஒரு பொருளால் தட்டிக்கொண்டே இருந்தால், தொந்தரவு குறையும் என்பதால்,
நாட்டில் உள்ளவர்களின் பழைய செருப்புகளை கொண்டு அவன் தலையில் இடைவிடாது அவனின் மெய்காப்பாளர்கள் அடித்துக் கொண்டே இருப்பார்கள். மற்ற பொருட்களைக் காட்டிலும்,தலை வேதனைக்கு பழைய செருப்படி மட்டுமே இதமாக இருந்தது .
பழைய செருப்பு பிய்ந்து செருப்பு அடி நிறுத்தினால், மீண்டும் தலை வேதனை துன்புறுத்தும். இவ்வாறு அவன் கேவலப்படுத்தப்பட்டான்.
உள்ளே நுழைந்த கொசு உயிருடன் இருந்து இடையூறு செய்தது இறைவனின் சித்தமாகவும் இருக்கலாம். இவ்வேதனை தாங்க இயலாது, நாற்பதாண்டுகள் துன்புற்று இறந்தான்.
கொசுவில் இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட வகைகள் உள்ளன. இது ஒரு வகையான பூச்சி வகையைச் சேர்ந்ததாகும் என்று கஸஸீல் அன்பியா என்ற வரலாற்று நூல் குறிப்பிடுகிறது.

## இஸ்லாத்தின் பார்வையில் நாளிதழ் செய்திகள் 5

கர்நாடக மாநிலம் பெல்காமைச் சேர்ந்தவர் பிரவீன் இவரது மனைவி சவீதா இருவரும் அயர்லாந்தில் பணிபுரிந்தனர்.
கடந்த 21.10.2012, அன்று அயர்லாந்தின் பிரபல கால்வே மருத்துவமனையில் கருச்சிதைவு காரணமாக உள் நோயாளியாக அனுமதிக்கப்பட்டார்.
பல் மருத்துவரான சவீதா தனது நான்கு மாத சிசு கருவிலேயே சிதைந்து போன நிலையில் இருப்பதை ஸ்கேனிங் மூலம் அறிந்து கொண்டார்.
அது தமது உயிருக்கு ஆபத்தை விளைவிக்கும் என்பதை மருத்துவராக இருப்பதால் உணர்ந்து கொண்ட அவர், மருத்துவமனை நிர்வாகத்திற்கு “கருவை கலைத்து விடும்படி” விண்ணப்பித்தார்.
ஆனால், மருத்துவமனை நிர்வாகம் கருக்கலைப்புச் செய்ய மறுத்து விட்டது.
மன்றாடினார், மருகினார் மருத்துவமனை நிர்வாகம் செவி சாய்க்கவில்லை.அயர்லாந்து ஒரு கத்தோலிக்க கிறிஸ்தவ நாடு. கருக்கலைப்புக்கு சட்டத்தில் இடமில்லை எனக் கூறி மருத்துவமனை நிர்வாகம் கைவிரித்து விட்டது.
இறுதியில், 27.10.2012, அன்று அவர் இறந்து விட்டார். கருவை அகற்றவில்லை என்றால் தாயின் உயிருக்கு ஆபத்து என்ற நிலையிலும் சட்டவிரோதம் என்று ஒற்றை வார்த்தையைக் கூறி ஓர் உயிரை பறித்து விட்டனர்.

வழக்கமாக மீடியாக்கள் {BIAS} எனும் ஒரு பக்க சார்புடன் நடந்து கொண்டன. இது போன்றதொரு செயல் இஸ்லாமிய நாட்டில் நடைபெற்றிருக்கு மேயானால், இஸ்லாமிய பழமைவாதம்; இஸ்லாமிய அடிப்படைவாதம் எனக் கூக்குரலிட்டிருப்பனர்.

மனித நேயத்திற்கு விரோதமானவர்களாக இஸ்லாமியர்களும், ஷரீஆவின் சட்டங்களும் விமர்சிக்கப்பட்டிருக்கும். (இஸ்லாத்தின் நிலைப்பாடு இதுவல்லவே அதனால் மௌனமாகி விட்டிருந்தனர்) ஆனால், அத்துணை மீடியாக்களும், ஊடகத்துறையினரும் வாய்மூடி, அதிக எதிர்ப்புக் காட்டாமல் அப்படியே அடங்கிப் போயிருந்தனர்.

ஏற்கனவே சிதைந்து போயிருக்கின்ற சிசுவைக்காட்டிலும், உயிருக்கு போராடிக்கொண்டிருக்கின்ற தாயைக் காப்பாற்றுவது அவசியமா? இல்லையா? எனும் கேள்வி எழுவதும், இதே நிலை இறை நம்பிக்கையாளனான ஓர் முஸ்லிமுக்கு ஏற்பட்டால் அவனுக்கான தீர்வு என்ன? இஸ்லாமிய வழிகாட்டல் என்ன? என்பதைக் காண நாம் கடமைப்பட்டிருக்கின்றோம்.

_______________________________________________________________

இஸ்லாத்தின் பார்வையில்....

புரைதா பின் அல்ஹஸீப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:

"அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்களின் திருச்சமூகத்திற்கு அஸ்த் குலத்தின் கிளையான ஃகாமிதிய்யா கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு பெண்மணி வருகை தந்தார்கள்.

வந்த அந்தப் பெண்மணி அல்லாஹ்வின் தூதரே! நான் விபச்சாரம் செய்து விட்டேன். எனக்கு உரிய தண்டனையை நிறைவேற்றி என்னை தூய்மை படுத்துங்கள்! என்றார்.

அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் அப்பெண்மணியை திருப்பி அனுப்பி விட்டார்கள். அப்பெண் மறு நாளும் அல்லாஹ்வின் தூதரின் முன் வந்து நின்று முன்பு சொன்னது போலவே சொன்னார்.

அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் திரும்பிச் செல்லுமாறு கூறிய போது, அப்பெண்மணி "அல்லாஹ்வின் தூதரே! ஏன் என்னை திருப்பியனுப்புகின்றீர்கள்? மாயிஸ் இப்னு மாலிக் {ரலி} அவர்களின் விஷயத்தில் நடந்து கொண்டதைப் போன்றல்லவா என் விஷயத்திலும் நடந்து கொள்கின்றீர்கள்

அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் தகாத உறவில் ஈடுபட்டு கர்ப்பமுற்றுள்ளேன்" என்று கூறினார்.

நபி {ஸல்} அவர்கள் ஆச்சர்யத்தோடு "நீயா அது?" என்று கேட்டார்கள். அதற்கு அப்பெண்மணி "ஆம்" என்றார். அப்படியானால் உமது வயிற்றினுள் உள்ள குழந்தையை பெற்றெடுத்து விட்டு வா!" என்று அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் கூறினார்கள்.

குழந்தையை பெற்றெடுத்த பின்னர் அப்பெண்மணி ஒரு துணியில் அந்தக் குழந்தையை சுற்றியெடுத்துக் கொண்டு, மாநபி {ஸல்} அவர்களிடம் வந்து "இது நான் பெற்றெடுத்த குழந்தை" என்று கூறினார்.

அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள், "நீ சென்று அந்தக் குழந்தைக்கு அமுதூட்டு! பால்குடி மறக்கடிக்கப்பட்ட பின் வா! என்று கூறி அனுப்பி வைத்தார்கள்.

அமுதூட்டும் காலம் நிறைவடைந்த பின்னர், அக்குழந்தையை அழைத்துக் கொண்டு, அக்குழந்தையின் கையில் ரொட்டித் துண்டு ஒன்றை கொடுத்து அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்களின் சபைக்கு வந்து, "அல்லாஹ்வின் தூதரே! இதோ நான் பால்குடி மறக்கடித்து விட்டேன். இப்போது என் குழந்தை உணவை உட்கொள்ள ஆரம்பித்து விட்டது" என்று கூறினார்.

அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள், அக்குழந்தையை அன்ஸாரிகளில் ஒருவரிடம் ஒப்படைத்தார்கள். அதன் பின்னர் அந்தப் பெண்ணுக்கு கல்லெறி தண்டனை வழங்குமாறு உத்தரவிட்டார்கள். எனவே, அவருக்காக மார்பளவு குழி தோண்டப்பட்டது.

பின்னர் அக்குழிக்குள் அப்பெண் நிறுத்தி வைக்கப்பட்ட பின் கல்லெறியுமாறு மக்களுக்கு கட்டளையிட, மக்கள் அவர் மீது கல்லெறிந்து அல்லாஹ்வின் தண்டனையை நிறைவேற்றினார்கள்.

அப்போது, காலித் இப்னு வலீத் (ரலி) அவர்கள் கல் ஒன்றை எடுத்து அப்பெண்ணின் தலைமீது எறிந்தார்கள். பீறிட்டு வந்த இரத்தம் காலித் இப்னு வலீத் (ரலி) அவர்களின் முகத்தில் தெரித்தது.
அப்போது, காலித் இப்னு வலீத் (ரலி) அவர்கள் அப்பெண்ணை சபித்தார்கள்; ஏசினார்கள். இதை அருகில் நின்று கேட்ட மாநபி {ஸல்} அவர்கள் "காலிதே! நிறுத்துங்கள். என் உயிர் எவன் வசம் உள்ளதோ அவன் மீது ஆணையாக! அப்பெண்மணி அழகிய முறையில் தவ்பா பாவமன்னிப்புத் தேடிக்கொண்டார்.
பொது நிதியை மோசடி செய்த ஒருவன் இப்படி பாவமன்னிப்புக் கோரினால் அவனுக்கும்கூட மன்னிப்பு வழங்கப்பட்டிருக்கும்." என்று கூறினார்கள்.
பிறகு அப்பெண்ணுக்கு ஜனாஸா தொழுகை நடத்த ஏற்பாடு செய்யுமாறு நபித்தோழர்களை பணித்தார்கள். அவருக்காக ஜனாஸா தொழுகையை தாமே தொழவைத்தார்கள். பின்னர் அப்பெண்மணி நல்லடக்கமும் செய்யப்பட்டார்.
(நூல்: முஸ்லிம்,பாபு மன் இஃதரஃப அலா நஃப்ஸிஹி பிஸ்ஸினா, மிஷ்காத்,கிதாபுல் ஹுதூத், பக்கம்:310)
குற்றவியல் தண்டனைக்குரிய ஓர் தவறைச் செய்து விட்ட, ஒரு பெண் தானாக முன் வந்து குற்றத்தை ஒப்புக்கொண்டு தண்டனை வழங்குமாறு வேண்டி நின்றபோது...
கருவுக்குள் இருக்கும் சிசுவுக்கும் அப்பெண் செய்த குற்றத்திற்கும், தண்டனைக்கும் எந்த சம்பந்தமும் இல்லை என்பதை உணர்ந்திருந்த நபி {ஸல்} அவர்கள், மூன்று முறை தவணை வழங்கி தண்டனை வழங்குவதை தாமதப்படுத்தி, ஓர் உயிர் அநியாயமாக இறந்து விடக் கூடாது என்பதில் மிகக் கவனமாக இருந்தார்கள்.
இஸ்லாத்தைப் பொருத்தவரையில் வேண்டுமென்றே ஓர் சிசுவை கொலை செய்வதும், சிசுவை கருவில் அழிப்பதும், வறுமைக்குப் பயந்து சிசுக்கொலை செய்வதையும் தான் தடுத்துள்ளது.
அது பெரும் பாவமென்றும், மறுமையில் மன்னிக்கப்பட முடியாத குற்றம் எனவும், விசாரணை மன்றத்தில் முதல் கேள்வியாக தொக்கி நிற்கும் எனவும் அல்குர்ஆனின் மூலம் எச்சரிக்கின்றது.
ஆனால், சிசுவின் கருவமைப்பே தாயின் உயிரை பறித்துவிடும் என அஞ்சுகிற இது போன்ற தருணங்களில் "நிர்பந்தத்தின் சட்ட அமைப்பை பயன்படுத்த இஸ்லாம் அனுமதி வழங்கியுள்ளது.
அல்லாஹ் கூறுகின்றான்: "கட்டாய (நிர்பந்த) ச் சூழ்நிலைகளைத் தவிர மற்ற சமயங்களில் அல்லாஹ் உங்களுக்குத் தடை செய்துள்ளவை பற்றி ஏற்கனவே உங்களுக்கு விளக்கியிருக்கின்றான் (குர்ஆன்:6:119)
அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்: "நபி {ஸல்} அவர்கள் கூறினார்கள்: "அல்லாஹ் என் உம்மத் – சமுதாயத்தினர் ஒன்றும் அறியாமலோ, மறதியாகவோ, நிர்பந்தத்தின் அடிப்படையிலோ செய்கிற செயல்களுக்காக குற்றம் பிடிப்பதில்லை" (நூல்: இப்னுமாஜா, ஹதீஸ் எண்:4050)
மிஹ்ராப் விளக்குகள் பதிவிலிருந்து ...

## இஸ்லாத்தின் பார்வையில் நாளிதழ் செய்திகள் 6

கடந்த 16.12.2012, அன்று தில்லியின் மருத்துவக்கல்லூரி மாணவி நிர்பயா ஓடும் பஸ்ஸில் பாலியல் பலாத்காரம் செய்யப்பட்ட சம்பவத்தை யாரும் அவ்வளவு லேசில் மறந்துவிடமுடியாது.
6 பேர் கொண்ட ஒரு கும்பலால் மிகக் கொடூரமான முறையில் கற்பழிக்கப்பட்டு, தில்லியின் சஃப்தர்ஜங் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு, பின்னர் உயர் சிகிச்சைக்காக சிங்கப்பூர் கொண்டு செல்லப்பட்டு சிகிச்சை பலனின்றி பரிதாபமாக 29.12.2012, அன்று உயிரிழந்தார்.
சம்பவம் நடந்த வருடத்தில் நாட்டையே பரபரப்பாக்கிய இந்த வழக்கில் போலீசார் குற்றவாளிகளைக் கண்டறிந்து சிறையில் அடைத்தனர். அவர்களில் 17 வயது சிறுவன் ஒருவனும் அடக்கம். அடுத்த சில ஆண்டுகளில் அவன் வயதை காரணம் காட்டி விடுதலை செய்யப்பட்டான். அவனது விடுதலை பெரும் சர்ச்சையாகி நாடெங்கும் விவாதிக்கப்பட்டது.

11 மார்ச் 2013: நிர்பயா வழக்கில் கற்பழிப்பு குற்றம் சாட்டப்பட்ட ராம் சிங் தற்கொலை செய்து கொண்டான் இந்நிலையில் இன்று (மார்ச் 20) காலை 5.30 மணிக்கு திகார் சிறையில் இவர்கள் நால்வருக்கும் தூக்கு தண்டனை நிறைவேற்றப்பட்டதாக ஏஎன்ஐ செய்தி முகமை தெரிவித்துள்ளது.
தூக்கு தண்டனை நிறைவேறிய பிறகு இது குறித்து பேசிய நிர்பயாவின் தாயார் ஆஷா தேவி, ''கடைசியாக அவர்கள் தூக்கிலடப்பட்டனர். இன்று தான் எங்களுக்கு நீதி கிடைத்தது. இந்நாட்டில் உள்ள பெண்களுக்கு இன்றைய நாள் சமர்ப்பிக்கப்படுகிறது. நீதித்துறைக்கு, அரசுக்கும் அந்த நன்றியை தெரிவித்து கொள்கிறேன். நீதிக்கு கிடைத்த வெற்றி இது'' என்று கூறினார்.
அதன் பிறகு எழுந்த வாதப் பிரதிவாதங்களையும், தேச மக்கள் கொதித்து எழுந்ததையும், அரசியல்வாதிகளின் நாடகங்களையும், சட்ட மேதைகளின் தடுமாற்றங்களையும் நாம் ஓரளவு ஊடகத்தின் வாயிலாக அறிந்து வைத்திருக்கின்றோம்.
பாலியல் பலாத்கார குற்றத்திற்கு இஸ்லாமிய நாடுகளில் பின்பற்றப்படும் தண்டனை வழங்கப்பட வேண்டுமென சகோதர சமய மக்களும் அந்த தருணத்தில் முன் வைத்தது நமக்கெல்லாம் தெரிந்த செய்திதான்.

---

இஸ்லாத்தின் பார்வையில்...
நவீன காலத்தில் நவீனமான பிரச்சனைகளிலும் இஸ்லாம் வழங்கும் தீர்வுகளென்ன?
தீர்வு: -
இந்திய தண்டனைச் சட்டம் பிரிவு. 375, 376 –ன் படி பாலியல் பலாத்காரத்தில் ஈடுபட்டவர்களுக்கு ஆயுள் தண்டனை அல்லது பத்தாண்டுகள் சிறைத் தண்டனை அல்லது அபராதத்துடன் கூடிய இரண்டு ஆண்டுகள் சிறைத் தண்டனையோ வழங்கப்படலாம்.

பாலியல் பலாத்காரத்தால் ஒரு பெண் இறந்து விட்டால், பாலியல் பலாத்காரத்தில் ஈடுபட்டவர்களுக்கு “இந்திய தண்டனைச் சட்டம் 302_ன் படி கொலைக் குற்றத்தில் ஈடுபட்டதிற்காக மரண தண்டனையோ, அல்லது ஆயுள் தண்டனையோ, அல்லது அபராதத்துடன் கூடிய ஆயுள் தண்டனையோ வழங்கப்படலாம்.
(நூல்: முப்பெரும் குற்றவியல் சட்டங்கள், இந்திய தண்டனைச் சட்டம், தீங்கியல் சட்டம். இந்த நூற்கள் வழக்கறிஞர்களிடம் இருக்கும்)
நீதிமன்றத்தின் படியேறி இந்தக் குற்றத்தை நிரூபிக்கும் முன்னமே சட்டத்தின் ஓட்டைகளை கற்றறிந்த கயவர்கள், காமக் கொடூரர்களை ஜாமீனிலோ அல்லது நிரபராதி என நிரூபித்தோ வெளியில் கொண்டு வந்து விடுவார்கள்.
ஹிஜ்ரி 1401 –ஆம் ஆண்டு துல்கஅதா மாதம் பிறை 11 அன்று, சவூதியாவின் மாபெரும் மார்க்கச் சட்ட வல்லுனர்களும், முதுபெரும் உலமாக்களும் சவூதியாவின் ஆட்சியாளர்கள், அரசு அதிகாரிகள் என ஒரு பெரும் திரளான இஸ்லாமிய கலாச்சார பாதுகாவலர்கள் ஒன்று கூடி “பாலியல் பலாத்காரத்திற்கான இஸ்லாமிய தண்டனை என்ன? அல்லாஹ்வும், அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்களும் இது குறித்து என்ன வழிகாட்டி இருக்கின்றார்கள்? என்று ஆலோசனை நடத்தினார்கள்.
اِنَّمَا جَزٰٓؤُا الَّذِيْنَ يُحَارِبُوْنَ اللّٰهَ وَرَسُوْلَهٗ وَيَسْعَوْنَ فِى الْاَرْضِ فَسَادًا اَنْ يُّقَتَّلُوْۤا اَوْ يُصَلَّبُوْۤا اَوْ تُقَطَّعَ اَيْدِيْهِمْ وَاَرْجُلُهُمْ مِّنْ خِلَافٍ اَوْ يُنْفَوْا مِنَ الْاَرْضِ ذٰ لِكَ لَهُمْ خِزْىٌ فِى الدُّنْيَا وَ لَهُمْ فِى الْاٰخِرَةِ عَذَابٌ عَظِيْمٌ ۙ
அல்லாஹ்வுடனும் அவன் தூதருடனும் போர் புரிந்து, பூமியில் குழப்பம் செய்து கொண்டு திரிபவர்களுக்குத் தண்டனை இதுதான்; (அவர்கள்) கொல்லப்படுதல், அல்லது தூக்கிலிடப்படுதல், அல்லது மாறுகால் மாறு கை வாங்கப்படுதல், அல்லது நாடு கடத்தப்படுதல்; இது அவர்களுக்கு இவ்வுலகில் ஏற்படும் இழிவாகும்; மறுமையில் அவர்களுக்கு மிகக்கடுமையான வேதனையுமுண்டு.(குர்ஆன் : 5:33)

இறுதியாக, அல் மாயிதா அத்தியாயத்தின் 33-ஆம் வசனத்தின் படி “பாலியல் பலாத்காரத்திற்கான தண்டனையாக” அதிக பட்ச தண்டணையாக மரணதண்டனையை தீர்மானித்து, அதை அன்றைய தேதியிலேயே அமுல்படுத்தப்பட வேண்டும் என ஃபத்வா – மார்க்கத்தீர்ப்பு வழங்கினார்கள்.
அந்த தீர்மானத்தையும், ஃபத்வாவையும் அத்துணை இஸ்லாமிய நாடுகளுக்கும் அனுப்பி வைத்தார்கள்.
அன்றிலிருந்து இன்று வரை சவூதி மற்றும் இஸ்லாமிய நாடுகளில் அந்தச் சட்டம்தான் நடைமுறைபடுத்தப்படுகின்றதுர்

ஒரு பெண்ணை பாலியல் பலாத்காரம் செய்பவன் அல்லாஹ்வுடன் போர்பிரகடனம் செய்தவனாகவும், தான் வாழும் நாட்டில் அல்லது பகுதியில் பெரும் குழப்பம் விளைய காரணமான வனாகவும் ஆகிவிடுகின்றான்.
மேலும், அல்லாஹ் இந்த வசனத்தில் கூறிடும் தண்டனை “ஒரு மனிதனின் உயிர், மானம், பொருள் ஆகியவைகளில் மிகப் பெரிய சேதாரத்தை உண்டு பண்ணக்கூடியவர்கள் விஷயத்திலும் வழங்கலாம். என அந்த ஃபத்வாவில் குறிப்பிட்டுள்ளனர்.
(நூல்: அல் – மஜ்லதுல் புஹூஸுல் இஸ்லாமிய்யா, பாகம்:16, பக்கம்:75.) மிஹ்ராப் விளக்குகள் பதிவிலிருந்து

## இஸ்லாத்தின் பார்வையில் நாளிதழ் செய்திகள் 7

( மரணத்திற்கு பின்பும் அங்க உறுப்புகள் இயங்குகின்றன ! )

இறந்து மூன்று நாளைக்குப் பிறகும் மரணித்தவர்கள் செவியேற்கிறார்கள் என்பதற்கு ஆதாரமாக பத்ரு யுத்தத்தில் ஒரு நிகழ்வு

பத்ருப் போர் (நடந்து முடிந்த) நாளன்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், குறைஷித் தலைவர்களில் இருபத்தி நான்கு பேர்(களின் சடலங்)களை பத்ருடைய கிணறுகளில் அசுத்தமானதும், அசுத்தப்படுத்தக் கூடியதுமான கிணறு ஒன்றில் தூக்கிப் போடுமாறு உத்தரவிட்டார்கள்.

(எதிரிக்) கூட்டத்தினர் எவரிடமாவது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் போரிட்டு வெற்றி கண்டால், (போரிட்ட இடத்திலுள்ள) திறந்த வெளியில் மூன்று நாட்கள் தங்கிச் செல்வது அவர்களது வழக்கமாக இருந்தது.

பத்ர் முடிந்த #மூன்றாம்நாள் தம்முடைய வாகன(மான ஒட்டக)த்தின் மீது அதன் சிவிகையை (ஏற்றிக்) கட்டுமாறு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள். அதன் மீது அதன் சிவிகை கட்டப்பட்டது. பிறகு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் (புறப்பட்டுச்) சென்றார்கள். அவர்களுடைய தோழர்களும் அவர்களைப் பின்தொடர்ந்தனர்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஏதோ தமது தேவை ஒன்றிற்காகவே செல்கிறார்கள் என்றே நாங்கள் நினைத்தோம். இறுதியில், அந்தக் (குறைஷித் தலைவர்கள் போடப்பட்டிருந்த) கிணற்றருகில் நபியவர்கள் நின்றார்கள்.

(கிணற்றோரம் நின்றிருந்த) நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், அவர்களுடைய பெயர்களையும், அவர்களுடைய தந்தையரின் பெயர்களையும் குறிப்பிட்டு, “இன்னாரின் மகன் இன்னாரே! இன்னாரின் மகன் இன்னாரே! அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் நீங்கள் கீழ்ப்படிந்து நடந்திருந்தால் (இப்போது அது) உங்களுக்கு மகிழ்ச்சியளிக்கும் தானே! ஏனெனில், எங்களுடைய இரட்சகன் எங்களுக்கு வாக்களித்ததை நாங்கள் அடைந்து

கொண்டோம். உங்களுக்கு உங்களுடைய இரட்சகன் வாக்களித்ததை நீங்கள் அடைந்து கொண்டீர்களா?” என்று கூறினார்கள்.

உடனே (அருகிலிருந்த) உமர் (ரலி) அவர்கள், “அல்லாஹ்வின் தூதரே! உயிரற்ற சடலங்களிடமா பேசுகிறீர்கள்?” என்று கேட்டார்கள்.

அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், “என்னுடைய உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீதாணையாக! நான் கூறுவதை இவர்களை விட நீங்கள் நன்கு செவியேற்பவர்களாக இல்லை” என்று கூறினார்கள்

நூல் : புகாரி 3976

---

நவீன விஞ்ஞானத்தின் மூலம் இறந்த மனிதனின் கண்களை இயங்க வைத்த விஞ்ஞானிகள்.. முதல் முறையாக இது எப்படி சாத்தியமானது?

முதல் முறையாக, இறந்த கண் நன்கொடையாளரின் கண்கள் விஞ்ஞானிகளால் மீண்டும் எழுப்பப்பட்டு இயங்க வைக்கப்பட்டுள்ள அதிசய நிகழ்வு சமீபத்தில் நடந்தேறியுள்ளது.

ஆம், நீங்கள் சரியாகத் தான் படித்தீர்கள். இறந்த மனிதனின் கண்கள் மீண்டும் இயக்கப்பட்டுள்ளது. இப்படியான நிகழ்வு இதற்கு முன் நடந்ததே இல்லை. உலகளவில் இதுவே முதல் முறை, எப்படி அறிவியலின் உதவியோடு, இந்த வியக்கத்தகு அதிசய நிகழ்வை விஞ்ஞானிகள் செய்து முடித்தார்கள் என்று தெரிந்துகொள்ளலாம் வாருங்கள்.

முதல் முறையாக ஒரு இறந்த மனிதனின் கண்களை ஆராய்ச்சியாளர்களால் எழுப்ப முடிந்தது என்று சொன்னால் யாராவது நம்புவார்களா? பெரும்பாலானோர், இதற்குச் சாத்தியமே இல்லை என்று பதில் அளிப்பார்கள். ஆனால், மனிதன் நினைத்தால் முடியாதது என்று எந்த விஷயமுமே இல்லை. சரியான, முயற்சி மற்றும் அறிவு இருந்தால் எல்லாம் சாத்தியமே என்று நிரூபிக்கும் வகையில் இந்த நிகழ்வு இப்போது நடந்துள்ளது.

இறந்த நபரின் கண்கள் எவ்வளவு நேரம் செயல்பாட்டில் இருக்கும் என்று உங்களுக்குத் தெரியுமா? 5 மணி நேரம்.

ஆனால் 5 மணிநேரத்திற்கு பிறகும் விஞ்ஞானிகளால் இறந்த கண்களை எழுப்ப முடிந்ததா ? ஆம்

ஒரு நபரின் மறைவுக்குப் பிறகு, அவரின் இரண்டு கண்களும் சுமார் ஐந்து மணிநேரம் வரை ஒளிக்குப் பதிலளிக்கும் திறன் கொண்டவை. அதாவது, அந்த நபரின் உடலில் உயிர் இல்லை என்றாலும் கூட அவரின் கண்கள் அடுத்த 5 நேரத்திற்கு ஒளிக்குப் பிரதிபலிக்கும் செயல்பாட்டில் இருக்கும்.

இருப்பினும், ஒளியை உணரும் இந்த ஃபோட்டோரிசெப்டர் செல்கள் மற்ற விழித்திரை செல்களுடன் தொடர்பு கொள்ள முடியாமல், அவை செயலிழந்து விடுகின்றன. ஆனால், இதை இப்போது விஞ்ஞானிகள் செயல்பட வைத்துள்ளனர்.

பிரேதப் பரிசோதனைக்கு உறுப்பு தானம் செய்பவரின் விழித்திரையில் உள்ள ஒளி உணர்திறன் நியூரான்களில் உள்ள தீப்பொறியை மீண்டும் தூண்டுவதற்கான வழியை விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ளனர்.

சமீபத்தில் உடல் உறுப்பு தானம் செய்து வந்த ஒருவரிடமிருந்து விஞ்ஞானிகள் குழு கண்களைப் பிரித்தெடுத்து. அவர்கள் அந்த கண்களை ஒரு கேரியரில் வைத்து, அதன் இடமாற்ற போக்குவரத்தின் போது ஆக்ஸிஜனுடன் இருக்கும் படி செய்துள்ளனர். இறுதியில் செயல் இழந்த கண்களை, குழு மின்சாரம் மூலம் கண் விழித்திரையைத் தூண்டியது.

இப்படி மின்சாரம் மூலம் கண் விழித்திரையைத் தூண்டியதும், கண்களின் ஒளி உணர்திறன் கலங்களின் இயற்கையான மின் துடிப்புகள் மீண்டும் மீட்டெடுக்கப்பட்டன. இந்த செல்கள் மனித விழித்திரையில் உள்ள ஒரு பகுதியான மாகுலாவில் அமைந்துள்ளது. இது தான் மனிதனின் மையப் பார்வையைப் பராமரிக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது.

மனித பார்வைக்கு மத்தியஸ்தம் செய்ய உயிருள்ள கண்ணில் செய்யும் விதத்தில் விழித்திரை செல்களை ஒன்றோடு ஒன்று பேச வைக்க முடிந்தது" என்று ஆய்வின் ஆசிரியரும் உட்டா பல்கலைக்கழகத்தின் கண் மருத்துவ உதவி பேராசிரியருமான ஃபிரான்ஸ் வின்பெர்க் கூறியுள்ளார்.

இதற்கு முன் இந்த ஆராய்ச்சிக்குச் சிக்கலாக இருந்தது என்ன தெரியுமா?

இதேபோல், முந்தைய விசாரணைகளின் மூலம் எப்படி நன்கொடையாளர்களின் பார்வையில் மிகக் குறைந்த மின் செயல்பாட்டை மட்டுமே மீட்டெடுக்க முடிந்தது என்பதைப் பற்றியும் வின்பெர்க் விளக்கமளித்துள்ளார். அப்போதும் கூட, "இது மாகுலாவில் ஒருபோதும் அடையப்படவில்லை என்று அவர் கூறியுள்ளார்.

சமீபத்திய அறிக்கையின்படி, பெரும்பாலான பார்வை இழப்பு ஆராய்ச்சி எலிகள் அல்லது பிற விலங்குகளில் செய்யப்படுகிறது. பிரச்சனை என்னவென்றால், எலிகள் மனிதன் போன்ற ஒரு மாக்குலாவைக் கொண்டிருக்கவில்லை. இது மனித கண்களின் ஆய்வுக்குப் பொருந்தாத பெரும் சிக்கலாக இருந்துள்ளது.

இந்த கண்டுபிடிப்பின் மூலம் என்ன நன்மை கிடைத்துள்ளது?

இந்த சாதனையின் மூலம், மாகுலர் டிஜெனரேஷன் மற்றும் பிற நரம்பியக்கடத்தல் நிலைகளால் ஏற்படும் பார்வை இழப்பு தலைகீழாக மாறக்கூடும் என்று விஞ்ஞானிகள் நினைக்கிறார்கள்.

இறுதியில், வயது தொடர்பான மாகுலர் சிதைவு (AMD) உலகம் முழுவதும் பார்வை இழப்புக்கான முக்கிய காரணமாகக் கருதப்படுகிறது.

2017 இன் நேச்சர் மதிப்பீட்டின்படி, இந்தியாவில் 60 வயதுக்கு மேற்பட்ட 77 மில்லியனுக்கும் அதிகமான மக்கள் AMD ஆபத்தில் உள்ளனர். இந்தியாவில் AMD இன் பாதிப்பு 39.5% முதல் 0.3% வரை உள்ளது" என்று நேச்சர் எழுதினார். இந்த கண்டுபிடிப்பின் மூலம் நிலைமை மாற வாய்ப்புள்ளது என்று விஞ்ஞானிகள் நம்புகின்றனர்.

ஆக, மரணத்திற்கு பின்பும் மனித அங்க உறுப்புகள் இயங்குகின்றன என்பதை இந்த விஞ்ஞான ஆய்வுகள் மூலம் நிரூபணமாகி உள்ளது.

## இஸ்லாத்தின் பார்வையில் நாளிதழ் செய்திகள் 8

( பூமிக்கு 1000 அடி ஆழத்தில் ஒரு புதிய காடு கண்டுபிடிப்பு - பிரபஞ்ச ரகசியத்தின் திறவுகோலா ? )
இயற்கைதான் தனக்குள் எத்தனை எத்தனை அற்புதங்களையும், அதிசயங்களையும் பொதித்து வைத்திருக்கிறது. இன்றுவரை அறிவியல் விஞ்ஞானிகள் புதுப்புது உயிரினங்கள், தாவரங்களை கண்டுபிடித்துக் கொண்டே தான் இருக்கிறார்கள்.
பூமியே நம் கைக்குள் வந்துவிட்டதென நாம் மார்தட்டிக் கொள்கிறோம். ஆனால் இப்போது, மனிதர்களின் மூச்சுக் காற்று கூட படாத இடம் இந்த பூமியில் இருக்கத் தான் செய்கிறது.
அப்படி மனிதர்களின் கண்ணில் படாத சிங்க் ஹோல் sinkhole ஒன்றை சீன விஞ்ஞானிகள் கடந்த வெள்ளிக்கிழமை கண்டுபிடித்து, அதில் இறங்கி சில ஆய்வுகளையும் மேற்கொண்டுள்ளனர்.
சிங்க் ஹோல் என்றால் என்ன?
எளிமையாகச் சொல்ல வேண்டுமானால், ஒரு பெரிய நிலபரப்பில் தாழ்வாக இருக்கும் பகுதி. அதில் எத்தனை நீர் சென்றாலும் அதை உறிஞ்சிக் கொள்ளும் அமைப்பையே சிங்க் ஹோல் என்பர்.
சரி, ஒரு சிங்க் ஹோலைக் கண்டுபிடிப்பதில் என்ன ஆச்சர்யம் இருக்கிறது என்று கேட்கிறீர்களா? இந்த சிங்க் ஹோலின் மறுபுறத்தில் அடர்ந்த காடுகள் உருவாகியுள்ளன என்பது தான் அனைவரையும் ஆச்சர்யத்தில் ஆழ்த்தும் விஷயம்.
சீனாவில் குவாங்சி சுவாங் (Guangxi Zhuang) என்கிற மாகாணத்தில் இந்த பிரமாண்ட சிங்க் ஹோல் கண்டுபிடிக்கப்பட்டுள்ளதாகச் சீனாவின் சின்ஹுவா செய்தி முகமை கூறியுள்ளது. குறிப்பிட்டுச் சொல்ல வேண்டுமானால் அம்மாகாணத்தில் பிங்கே (Pinge) என்கிற கிராமத்துக்கு அருகில் லெயே (Leye) என்கிற கவுன்டியில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது
இந்த சிங்க் ஹோல் அதிகபட்சமாக 1,004 அடி வரை ஆழம் கொண்டதாகவும், 492 அடி அகலம் கொண்டதாகவும் இருந்ததாக சாங் யுவான்ஹை என்கிற சீனாவின் மூத்த புவியியல் பொறியாளர் சின்ஹுவா செய்தி முகமையிடம் கூறியுள்ளார்.
இந்த சிங்க் ஹோலின் மறுபுறத்தில் சுமார் 131 அடி உயரத்துக்கு மரங்கள் வளர்ந்திருக்கின்றன. அம்மரத்தின் கிளைகள், சிங்க் ஹோலின் துளை வழியாக வானத்தை நோக்கி வளர்ந்திருந்தன.
இந்த சிங்க் ஹோலில் உருவாகி இருக்கும் குகையில் ஆராய்ச்சி மேற்கொள்ள சென் லிக்சின் (Chen Lixin) தலைமையிலான அணி ஒன்று கடந்த வெள்ளிக்கிழமை களமிறங்கியது.
சிங்க் ஹோலின் தரை தளத்தில் மனிதர்களின் தோல் பட்டை அளவுக்கு (சுமார் 2.5 - 3 அடிக்கு) அடர்த்தியாக செடி கொடிகள் வளர்ந்திருந்ததாக சென் லிக்சின், சீனாவின் சின்ஹுவா செய்தி முகமையிடம் கூறினார்.
'இந்த அடர்ந்த குகையில் இதுவரை கண்டுபிடிக்கப்படாத, அறிவியலால் விளக்கம் கொடுக்கமுடியாத உயிரினங்கள் இருக்கலாம். அப்படி இருந்தால் அதில் அச்சர்யப்படுவதற்கு ஒன்றும் இல்லை' என சென் லிக்சின் கூறினார்.
லெயே கவுன்டியில் மட்டும் இதுவரை கண்டு பிடிக்கப்பட்டிருக்கும் மொத்த சிங்க் ஹோல்களின் எண்ணிக்கை 30 ஆக உயர்ந்துள்ளது என்றும் சின்ஹுவா கூறியுள்ளது.
புதிய உயிரினங்கள் கண்டுபிடிக்கப்படுவதெல்லாம் சரி தான், அது கொரோனா வைரஸ் போல மனிதர்களை கடுமையாக பாதித்து முடக்காத உயிரினங்களாக இருந்தால் மெத்த மகிழ்ச்சி.

---

இஸ்லாத்தின் பார்வையில்....
اَللّٰهُ الَّذِىْ خَلَقَ سَبْعَ سَمٰوٰتٍ وَّمِنَ الْاَرْضِ مِثْلَهُنَّ يَتَنَزَّلُ الْاَمْرُ بَيْنَهُنَّ لِتَعْلَمُوْۤا اَنَّ اللّٰهَ عَلٰى كُلِّ شَىْءٍ قَدِيْرٌ  ۙ وَّاَنَّ اللّٰهَ قَدْ اَحَاطَ بِكُلِّ شَىْءٍ عِلْمًا

அல்லாஹ் தான் ஏழு வானங்களையும் இன்னும் பூமியிலிருந்து அவற்றைப் போலவும் படைத்தான்; நிச்சயமாக அல்லாஹ் எல்லாப் பொருட்கள் மீதும் சக்தியுடையவன் என்பதையும், மேலும் நிச்சயமாக அல்லாஹ் தன் ஞானத்தால் எல்லாப் பொருளையும் சூழ்ந்தறிகிறான் என்பதையும் நீங்கள் அறிந்து கொள்வதற்காக, அவற்றின் (வானங்கள், பூமியின்) இடையே அவன் கட்டளையிறங்கிக் கொண்டேயிருக்கிறது.
(அல்குர்ஆன் : 65:12)
ஏழு வானங்களில் இருப்பதுபோல ஏழு பூமிகளும் இருக்கின்றன. ஆனால் அவ்வேழு பூமிகளும் எவ்விதமாக இருக்கின்றன என்பது குறித்து வேத வசனத்தில் விபரம் கூறப்படவில்லை.
ஏழு பூமிகளும் ஒன்றுக்கு மேல் ஒன்று வீதம் அடுக்கடுக்காக இருக்கின்றன. ஒரு வானுக்கும், இன்னொரு வானுக்கும் இடையில் 500 வருடத்து தூரம் இருப்பது போல, ஒரு பூமிக்கும் இன்னொரு பூமிக்கும் இடையில் 500 வருடத்து தூரம் இருக்கிறது. ஒவ்வொரு பூமியிலும் அல்லாஹ்வின் படைப்புகள் வாழ்கின்றன.
ஒரு முறை நபி (ஸல்) அவர்கள், உட்கார்ந்து கொண்டிருந்த பொழுது விண்ணில் ஒரு மேகம் வந்தது. அப்போது நபி (ஸல்) அவர்கள் " இக்கடிவாளம் என்ன என்பதை நீங்கள் அறிவீர்களா? "என்று நபி தோழர்களிடம் வினவினார்கள் "அல்லாஹ்வும், அவனது ரசூலும் தான் அறிந்தவர்கள் என்று நபித்தோழர்கள் பதிலளித்தனர்.
"இது பூமியின் தனக்கு நன்றி செலுத்தாமலும் , தன்னைப் பிரார்த்திக்காமலும் இருக்கிற ஜனக் கூட்டத்தாரின் பால் அதனை அல்லாஹ் அனுப்புகிறான் என்று நபி . (ஸல்) அவர்கள் கூறிவிட்டு,
பின்னர், " உங்களுக்கு மேல் இருக்கிறதே அது என்னவென்று அறிவீர்களா ? "
அதற்கு, " நபித்தோழர்கள் அல்லாஹ்வும், அவனது ரசூலும் அறிந்தவர்கள்" என்றார்கள்
அப்போது நபி (ஸல்) அவர்கள் அது ஒரு ஒட்டு , பாதுகாக்கப்பட்டுள்ள முகடு, தடுக்கப்பட்டுள்ள ஒரு கடல் என்று கூறி,
" உங்களுக்கும் அதற்கும் மத்தியில் உள்ளதை நீங்கள் அறிவீர்களா ?
அதற்கு, " நபித்தோழர்கள் அல்லாஹ்வும் அவனது ரசூலும் அறிந்தவர்கள் " என்று கூற .
நபி (ஸல்) அவர்கள் அதற்கு மேல் அர்ஷிருக்கிறது. அதற்கும் வானுக்கும் இடையில் இரண்டு வானங்களுக்கு இடையிலுள்ள தூரம் இருக்கிறது" என்று கூறிவிட்டு,
பின்னர், " உங்களுக்கு கீழே இருப்பதை நீங்கள் அறிவீர்களா ?"
" அல்லாஹ்வும், அவனது ரசூலும் அறிவார்கள் என்று நபித்தோழர்கள் கூற .
அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் " பூமி, இன்னும் அதற்குக் கீழில் வேறு ஒரு பூமி. அவ்விரண்டுக்குமிடையில் 500 வருடத்து தூரமிருக்கிறது" என்று கூறி,
பின்னர் " முஹம்மதுடைய ஆத்மா எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக, நீங்கள் ஒரு கயிற்றைத் தொங்க விட்டால் ' அல்லாஹ்வின் மீது நீங்கள் இறங்கி விடுவீர்கள்" என்று கூறி,
" அவன்தான் முதலாவனும், கடைசியானவனும், புறத்தவனும், அகமியனும் ஆவான் . மேலும் அவன் ஒவ்வொன்றையும் மிக அறிந்தவன்" என்று கூறினார்கள். அபூஹுரைரா ரளியல்லாஹுு அன்ஹுு ரிவாயத்து செய்திருப்பதாக கரீதத்துல் அஜாயிப் என்னும் கிரந்தத்தில் கூறப்பட்டிருக்கிறது.
மலக்குகள் கஃபாவில் ஒன்று சேர்ந்தனர். ஒருவர் வானிலிருந்து இறங்கினார். ஒருவர் கீழ் பூமியிலிருந்து ஏறினார். ஒருவர் கீழ் கோடியிலிருந்து வந்தார். ஒருவர் மேல் கோடியிலிருந்து வந்தார். பின்னர் ஒவ்வொருவரும் மற்றவரிடம், "எங்கிருந்து வந்தீர் ? " என்று வினவியதற்கு, ஒவ்வொருவரும் அல்லாஹ்விடத்திலிருந்து வந்தோம் " என்று கூறினர்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல் ) அவர்கள் கூறினார்கள்:
"யார் அநியாயமாக ஒரு சாண் அளவு நிலத்தை ஆக்கிரமித்துக் கொள்கிறாரோ அவரது கழுத்தில் அந்த நிலத்தி(ன் மேற்பகுதியிலிருந்து ஏழு பூமிகள்வரை (செல்லும் பகுதி) மாலையாக மாட்டப்படும் ஸஹீஹ் புகாரி : 2453.

(நில மோசடி செய்யும் ) அவர் ஏழு பூமிகள் வரை புதைந்து போகும் படி செய்யப்படுவார் " ஸஹீஹ் புகாரி : 2454
மேற்கண்ட குர்ஆன் வசனத்திற்கு (65:12) அத்தா உப்னு யாஸர் (ரலி) அவர்கள், "
ஒவ்வொரு பூமியிலும் உங்களுடைய ஆதமைப் போல் ஓர் ஆதாமும், உங்களுடைய நூஹைப் போல் ஒரு நூஹும், உங்களுடைய இப்ராஹீமைப் போல் ஒரு இப்ராஹீமும், உங்களுடைய ஈஸாவை போல் ஒரு ஈஸாவும் இருக்கின்றனர் " என்று கூறியுள்ளார்.
இவ்வசனத்தில் திருக்குரானின் அனேக ஆழ்ந்த நுணுக்கமான ரகசியங்கள் இருக்கின்றன. இந்த ஆயத்தைக் குறித்து இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் வினவப்பட்டதற்கு, "அதனை நான் விவரித்துக் கூறினால், எனது குரல்வளையைத் தறித்து, என்னை கல்லால் ஏறிவீர்கள்" என்று பதில் அளித்ததாக ரிவாயத்து செய்யப்பட்டிருக்கிறது.
ஆகவே இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் சுட்டிக்காட்டிய விஷயம் நாவால் உரைக்கப்படாததும், சுட்டிக்காட்டப்படாததும் ஆகும். ஆனால் ஒவ்வொருவரும் அனுபவப்பூர்வமாக உணர வேண்டிய விஷயம் என்று தாவீலாத்துன்னஜ்மிய்யா என்னும் கிரந்தத்தில் கூறப்பட்டிருக்கிறது.

## இஸ்லாத்தின் பார்வையில் நாளிதழ் செய்திகள் 9

பூனைக்கு பிறந்தது நாய் ஆனது
புலிக்கு பிறந்தது பூனையாகுமா ? என்று நம்மூரில் ஒரு பழமொழி உண்டு. ஆனால் சீனாவில் பூனை ஒன்று நாய்க்குட்டியை பிரசவித்து அறிவியல் உலகத்தையே ஆச்சரியத்தில் ஆழ்த்தியுள்ளது.
சீனாவின் சுசோவ் மாகாணத்தின் குய் யுவான் மாவட்டத்தை சேர்ந்த ஜியா வெய்னுவான் என்பவர், 'நியுநியு' என்ற அமெரிக்க குட்டை முடி இனத்தை சேர்ந்த பூனை ஒன்றை வளர்த்து வருகிறார். இந்த பூனை சமீபத்தில் 4 குட்டிகளை ஈன்றது. இதில் ஒரு குட்டி சிகுவாகுவா இனத்தை சேர்ந்த நாய்க்குட்டி ஆகும்.
மிகவும் செல்லமாக, பத்திரமாக பராமரித்து வந்த அந்த பூனையை, இணை சேர்ப்பதற்காக சில வாரங்கள் தனது நண்பர் ஒருவரின் வீட்டில் வைத்து ஜியா பராமரித்து வந்தார். அங்கு 2 ஆண் பூனைகள் மட்டுமே உள்ளன. இதைப்போல ஜியாவின் வீட்டிலும் 2 பெண் நாய்கள் மட்டுமே உள்ளன. அவையும் சிகுவாகுவா இனத்தை சேர்ந்தவை அல்ல. அப்படியிருக்க நியுநியு பூனை, நாய்க்குட்டியை பிரசவித்ததில் உள்ள மர்மத்தை அறிய முடியாமல் அனைவரும் குழம்பிப்போய் உள்ளனர்.
பொதுவாக நாயும், பூனையும் இணை சேராது என அறிவியல் உலகம் கூறி வரும் நிலையில், இந்த சம்பவம் எவ்வாறு நிகழ்ந்திருக்கக்கூடும்? என விளக்குமாறு விஞ்ஞானிகளுக்கு ஜியா வேண்டுகோள் விடுத்துள்ளார்.
அட , இதை விட ஆச்சரியமான கலப்பின உயிரினங்கள் எங்கள் இந்தியாவில் பிறந்திருக்கிறது. உத்திர பிரதேத்தில் பச்சேந்திரா கிராமத்தில் மனித முகத்துடன் ஒரு கன்று குட்டி பிறந்து , உடனே இறந்து விட்டது. . அங்குள்ள மக்கள் அதை மஹாவிஷ்ணுவின் அவதாரம் , புனித பசுவின் மைந்தன் . நிச்சயமாக மஹாவிஷ்ணுவின் அவதாரமே என்று கன்றுக் குட்டிக்கு மாலையெல்லாம் போட்டு கோவில் கட்டி கும்பாபிஷேஹம் செய்ய திட்டம் தீட்டப்பட்டது.
இதற்கிடையில் விலங்கியல் ஆர்வலர் அஜய் தேஷ்முக் , பத்திரிக்கையாளர்களிடம் இது மஹாவிஷ்ணுவின் அவதாரம் இல்லை என்றும் .பசுவின் கர்ப்பத்தில் ஏற்பட்ட சில கோளாறு காரணமாக முகத்தின் வளர்ச்சியின் போது சில பாகங்கள் சரியாக வளராததால் இது போல் தோற்றமளிக்கிறது என தெரிவித்து, கன்று குட்டியை புதைக்கப்பட்டு கோவில் கட்டுவதை தடுக்கப்பட்டது.

---

உயிரியலில், கலப்பினம் (hybrid) என்பது பல்வேறு அர்த்தங்களைக் கொண்டிருக்கின்றது. பொதுவாகக் கூறுவதானால், மரபியல் அடிப்படையில் வேறுபட்ட இரு உயிரினங்களின் பெற்றோர்களுக்கு இடையில் ஏற்படும் இனச்சேர்க்கையினால் பெறப்படும் சந்ததியே கலப்பினம் எனப்படும்.

குறிப்பிடும்படியாக, வெவ்வேறு பேதங்கள், இனங்கள், சாதிகளுக்கிடையில் செய்யப்படும் தாவர, விலங்கு இனவிருத்தியின்போது உருவாக்கப்படும் சந்ததிகளைக் குறிக்கும் பதமே கலப்பினம் ஆகும்
ஆண் சிங்கத்திற்கும், பெண் புலிக்கும் இடையில் நிகழ்ந்த இனச்சேர்க்கையால் உருவாகிய புதிய உயிரினம் ' இலிகர் ' என்றும், ஆண் புலிக்கும், பெண் சிங்கத்திற்கு இடையில் நிகழ்ந்த இனச்சேர்க்கையால் உருவாகிய புதிய உயிரினம் 'திகோன்' என்றும் அழைக்கப்படுகின்றது.
# ஆண் கழுதைக்கும் பெண் குதிரைக்கும் பிறந்த கலப்பினப் பிராணியே கோவேறு கழுதை.
# கழுதைகள் இனப் பெருக்கத்தில் ஈடுபட்டு குட்டி போடும். கோவேறு கழுதைகள் இனப்பெருக்கம் செய்ய முடியாது. காரணம் ஆண் கழுதை குரோமோசோம்களின் எண்ணிக்கை 62 , பெண் குதிரை குரோமோசோம்களின் எண்ணிக்கை 64 இதில் உருவாகும் உயிரினம் கோவேறு கழுதைக்கு இனப்பெருக்கம் செய்வதில் குளறுபடியாகி விடுகிறது .
# பொதுவாக கலப்பன எந்த உயிரினங்களாலும் இனப்பெருக்கம் செய்ய முடியாது. இயற்கையின் நீதி மீறப்படுகிறது .
# குதிரையும் கழுத்தையும் இணைந்தால் சந்ததி உருவாக்காத கோவேறு கழுதை உருவாவதைப் போல" என்பது பண்டமிழ் அணிகளுள் ஒன்று.
# கோவேறு கழுதைகள் வேலைக்குச் சிறந்தவை. கழுதைகளைவிட கோவேறு கழுதைகள் அதிக எடையைத் தாங்குபவை. அதிக எடையை ஏற்றினால் கழுதை மிகவும் கஷ்டப்படும்.
# கோவேறு கழுதைகளால் சில அடி உயரத்துக்குக் குதிக்க முடியும். கழுதையால் குதிக்க முடியாது. கழுதைகளைவிட கோவேறு கழுதைகள் புத்திசாலிகள்.
# கோவேறு கழுதைகளின் காதுகள், கழுதைகளின் காதுகளைவிடச் சிறியதாக இருக்கும். ஆனால் உருவமோ குதிரை போல இருக்கும். தலை, ஒல்லியான கால்கள், பிடரி மயிர் ஆகியவை கழுதைகளுக்கு இருப்பது போலக் கோவேறு கழுதைகளுக்கு இருக்கும்.
# கழுதைகளைவிட கோவேறு கழுதைகள் உயரமாக இருக்கும். கழுத்து, பற்களும்கூட கொஞ்சம் பெரியதாக இருக்கும்.
# குதிரையின் வாலைப் போலவே கோவேறு கழுதையின் வால் அடர்த்தியானது. ஆனால், கழுதையின் வாலோ பசுவின் வாலைப் போல இருக்கும்.
# கழுதையின் கத்தலையும் கோவேறு கழுதை வெளிப்படுத்தும் சத்தத்தையும் கேட்கும் ஒருவர் எளிதாக அதை அடையாளம் காண முடியும். கோவேறு கழுதை குதிரையைப் போலக் கனைக்கும்.
மனிதர்களை போலவே மழையில் நனைந்தால், உடல் உபாதை வரும் என்ற உள்ளுணர்வும் கழுதைக்கு உண்டு. கழுதை, குதிரை இனக்கலப்பில் உருவாகும், கோவேறு கழுதை அதிக பாரம் சுமக்க கூடியது. இந்திய இராணுவமே, அதனை தன்னுடைய தேவைகளுக்கு பயன்படுத்துகிறது என்றால் பார்த்துக்கொள்ளுங்கள்.
நபிமார்கள் கோவேறு கழுதையை வாகனமாக பயன்படுத்தியுள்ளதாக குர்ஆன் கூறுகிறது. நபி உஜைர் (அலை) கோவேறு கழுதையில் பயணித்ததாக குர்ஆன் (2 : 259)
அய்லா என்ற ஊரின் மன்னன் நபி(ஸல்) அவர்களுக்கு ஒரு வெள்ளை நிறக் கோவேறுக் கழுதையை அன்பளிப்புச் செய்து ஒரு சால்வையும் போர்த்தினார். புகாரி 1481
ஹுனைன் யுத்த களத்தில் நபி(ஸல்) அவர்கள் தம் 'பைளா' என்னும் வெண்ணிறக் கோவேறு கழுதையின் மீது அமர்ந்திருந்த நிலையில் "நான் உண்மையான இறைத் தூதராவேன் இது பொய்யல்ல, நான் அப்துல் முத்தலிபின் மகனின் மகனாவேன்" என்று கூறி முன்னேறினார்கள்.
தமது வாகனத்தைவிட்டு இறங்கி அல்லாஹ்விடம் உதவி கோரிப் பிரார்த்தித்தார்கள்.பிறகு, தம் தோழர்களை அணிவகுக்கச் செய்தார்கள்.
கோவேறு கழுதையை விடச் சிறியதும் கழுதையை விடப் பெரியதுமான வெள்ளை நிறத்திலமைந்த மின்னல் வேகத்தில் புராக் வாகனத்தில் நபி (ஸல்) அவர்கள் மிஹ்ராஜ் என்னும் விண்ணுலக பயணத்திற்கு வாகனமாகியது
புகாரி 3887

## இஸ்லாத்தின் பார்வையில் நாளிதழ் செய்திகள் 10

( எங்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர் )

தேனி பக்கம் கிராமத்தார்களிடம் தங்கள் பெயரை விசாரித்தால் "பென்னிகுக்" இன்னொரு ஆளை கூப்பிட்டு பெயர் கேட்டால், லோகன் துரை என்று சொல்கிறார்கள். இரண்டுமே ஆங்கிலேயர்களின் பெயர்கள்.

கருப்பணன், கலுவன் , பெருங்காமன் ,விருமாண்டி, மூக்கவிருமன், தொத்தன் என குலசாமிகளின் பெயர்களுக்கு ஊடாக லோகன் துரையும், பென்னிகுக்கும் எப்படி கலந்தார்கள் என்று ஆச்சரியமாக இருக்கிறது .

தீர்க்க விசாரித்ததில், இந்த இரண்டு பெயர்களும் முல்லை பெரியாறு அணையை கட்டிய வெள்ளைக்கார இன்ஜினீயர்களின் பெயர்கள்,என்றதோடு இதைவிடவும் ஒரு ஆச்சரியம்....

சாலையோரத்தில் இருந்த டீக்கடையின் சுவரை நீங்கள் பார்த்தால், அங்கு வேலும் மயிலும் நிற்கும் திருமுருகன் படமும், வழுக்கை விழுந்த ஏறு நெற்றியும், தொங்கு மீசையும் இடுக்கிய கண்களுடன் கருப்புகோட் அணிந்த பென்னிக்குக்கின் புகைப்படமும் தொங்கிக் கொண்டிருக்கும்.

எதற்காக இந்த வெள்ளைக்காரன் படத்தை கடையில் மாற்றி வைத்திருக்கிறீர்கள் ? என்று கேட்டால், டீக்கடைக்காரர் பாலை கொதிக்க விட்டபடி, "பென்னி துரை மட்டுமில்லேன்னா இந்நேரம் இந்த சீமையே நாதியத்துப் போயிருப்போம் " என்றவன், ஒண்ணு ரெண்டுல்ல எத்தனை ஆயிரம் பேரு ராத்திரியும் பகலுமா காட்டுக்குள்ளேயே கிடந்து கல்லு மண்ணு சுமந்து போட்டுக்கட்டுன அணை தெரியுமா ? ஆம்பள பொம்பள, பச்சைப் பிள்ளைகள்னு செத்த உசிரை கணக்குப் பார்க்க முடியாது அப்படி உயிர்ப்பறி கொடுத்து கட்டினதுய்யா பெரியாறு அணை !"

பென்னிகுக் ஒரு சிலை இருக்கிறது. மழையில் அணைக்கட்டு கட்டும் நாட்களில் இறந்து போனவர்களின் சமாதிகள் கவனிப்பாரற்று இருக்கின்றன.

அணைக்கட்டு வேலைக்காக கிராமம் கிராமமாக ஆட்களைத் திரட்டி வேலைக்கு கொண்டுபோய், அவர்களது நல்லது கெட்டதுகளை பகிர்ந்துகொண்ட பேய்காமத் தேவரைப் பற்றிய செய்திகளும் வியப்பாகயிருந்தன. நேற்று நடந்து முடிந்த சம்பவத்தைச் சொல்வது போல அவர்கள் பென்னிகுக்கைப் பற்றி நினைவு கொண்டார்கள்.

மேற்கு தொடர்ச்சி மலையின் ஆதிவாசிகளான காணிகளில் ஒருவன், " மலையில இருக்கிற வரை தண்ணீரை எந்த கொம்பனாலும் கட்டுப்படுத்தி வைக்க முடியாது. தரையிறங்கினால்தான் அது அடங்கிச் சாந்தமாகும். யானை மாதிரிதான் தண்ணியும் ".

நூறு வருடங்களுக்கு முன்பாக ஆங்கிலேயர்கள் ஆட்சியில் பொறியாளராகப் பணியாற்றிய பென்னிகுக்கிடம் நில அளவையாளர் ஒருவர், " பெரியாற்று நீரை ஓர் அணை கட்டித் தடுத்து நிறுத்தினால், அது மதுரை, ராமநாதபுரம் மாவட்டங்களுக்கு பாசன வசதியை உண்டாக்கலாம் என்று மங்கம்மாள் ஆட்சி காலத்தில் இருந்து ஒரு திட்டம் இருப்பதாக" தெரிவித்தார்.

பெரியாற்றைப் பார்க்கும்வரை பென்னிகுக்குக்கு அது சாத்தியம் தானா என்று சந்தேகமாகவே இருந்தது. பெரியாற்றின் வரைபடங்களையும் அதன் நீர் வரத்தையும் நேரில் பார்த்த போது, அந்த கனவு பென்னிகுக்கையும் பிடித்துக்கொண்டது.

மேற்கு நோக்கிச் சென்று வீணாகும் ஆற்று நீரைக் கிழக்காக திருப்பி வைகையில் இணைத்துவிட்டால், அது மதுரைச் சீமை முழுவதும் பாசன பூமி ஆகிவிடும் என்று திட்ட வரையறைகளை தயாரித்தார். ஆனாலும் நினைத்தது போல எளிதாக இல்லை வேலை.

தடைகளையும் குறுக்கீடுகளையும் தாண்டி, சென்னை மாகாண ஆளுநர் வென்லாக் முன்னிலையில் 1895 ஆம் ஆண்டு அக்டோபர் 11ம் தேதி இந்த அணை கட்ட அடிக்கல் நாட்டும் பணியை துவங்கினார். அப்போது 65 ரூபாய் செலவில் அதை கட்டி முடிக்கலாம் என மதிப்பிடப்பட்டது. பணிகள் துவங்கின.

கடினமான வேலை, காட்டு யானைகளின் பயம், பூச்சிகளின் விஷக்கடி, ஆயிரக்கணக்கான பணியாளர்கள் குளிர் தாங்கமுடியாமல் சாவு, காலரா, எதிர்பாராத கடும் மழை தனது கனவை நிறைவேற்றுவதற்காக காட்டு மழைக்குள்ளாகவும் பென்னிகுக் அலைந்துகொண்டிருந்தார்.

பணியாளர்களோடு பணியாளராக தங்கியிருந்து அவர்களது சுகதுக்கங்களையும் பகிர்ந்து கொண்டவன், பென்னிகுக்கோடு வேலைசெய்த இளம் பொறியாளர் லோகன் துரை .

அணை கட்டி முடிக்கப்பட்டது ஆனாலும் எதிர்பாராத வெள்ளத்தால் சில நாட்களிலேயே அணை உடைந்து போனது. விசாரணை, தவறான செயல்பாடு என்று குற்றம் சாட்டப்பட்ட பென்னிகுக் தடுப்பணைகள் உருவாக்கப்படாததான் பெரிய அணை உடைப்பு ஏற்பட்டது என்று முடிவு செய்து, காட்டுக்குள்ளே தடுப்பணை கட்டுவதற்கான நிதி உதவி கேட்டு பென்னிகுக் விண்ணப்பித்தார்.

ஆங்கிலேய அரசாங்கம் பணம் தருவதற்கு மறுத்துவிட்டது. வேறுவழியின்றி இங்கிலாந்திலிருந்த தனது சொத்துக்களை விற்று பணத்தை திரட்டிக்கொண்டு வந்து மீண்டும் தடுப்பணைகளை உருவாக்கினார்.

மதுரை மாவட்ட பகுதிகள் முழுவதும் இந்த அணையால் பாசன வசதி கண்டது. பின்னர் ஆங்கிலேய அரசே பென்னிகுக்கை கௌரவப்படுத்தியது.

எந்த தேசம் நம்மை அடிமைப்படுத்தியதோ, அதே அந்த தேசத்தில் இருந்து வந்தவர் தமது சொத்தை விற்று, நமக்காக நமது நலனுக்காக பாடுபட்டு இருக்கிறார்.

அன்று முதல் ஒவ்வொரு கிராமமும் இந்த வெள்ளைக்கார பொறியாளர்களை தங்களது குலசாமிகளை போல மனதுக்குள் வணங்கி வருகிறார்கள். லோகன்துரையும் பென்னிகுக்கும் இப்போது உள்ளூர்ப் பெயர்களாகி #அவர்களின் குடும்பத்தில்-ஒருவராகிவிட்டார்கள்.

இங்கிலாந்திலிருந்து பென்னி குக்கின் கொள்ளுப்பேரன் சாம்சன் தனது தாத்தா கட்டிய அணையை பார்ப்பதற்காக சமீபத்தில் தமிழகத்திற்கு வந்திருந்தார். முதல்முறையாக இந்தியா வந்த அவருக்கு மதுரையில் மேளதாளத்துடன் வரவேற்பு கொடுத்து, பென்னிகுக்கின் சிலையை பார்வையிட செய்தார்கள்.

கூட்டத்தில் இருந்த ஒரு பெண் தன் குழந்தைக்கு "பென்னிகுக்" என்று பெயர் வைக்கும்படி சாம்சனிடம் கொடுத்தாள். உணர்ச்சிப் பெருக்கோடு சாம்சன் தனது தாத்தாவின் பெயரை அந்த குழந்தைக்கு வைத்தார்.

கிராமவாசிகளின் ஒருவர் சாம்சங்கின் கையை பிடித்துக்கொண்டு, விளையும் ஒவ்வொரு நெல்லிலும் பென்னிகுக்கின் பெயர் ஒட்டிக் கொண்டிருப்பதாகச் சொன்னார். சாம்சங் தன்னை மறந்து தலையை ஆட்டிக் கொண்டார்.

உண்மையை எந்த பாஷையில் சொல்லும்போதும் புரிந்து விடும் என்பார்கள். அது நிஜமென்று அப்போது காண முடிந்தது. (எஸ்.ராமகிருஷ்ணன் எழுதிய துணையெழுத்து, பக்177)

___

அகழ்ப்போர் (Battle of Trench, அல்லது Battle of the Confederates) ஹிஜ்ரி 4 என்பது கிபி 627 ஆம் ஆண்டு மார்ச் 31 ல் இப்போர் ஆரம்பமானது. மதீனா நகர முஸ்லிம்கள் மீது அன்றைய யூதர்கள் உள்பட அனைத்து அரபுக் குலத்தாரும் ஒன்று திரண்டு வந்து தொடுத்த போர்.

அப்போது நகருக்குள் எதிரிகளை நுழைய விடாமல் தடுப்பதற்காக மதீனாவைச் சுற்றிலும் அகழ் ஒன்று தோண்டப்பட்டது. இதனாலேயே அது அகழ்ப்போர் என வழங்கப்படலாயிற்று. யூதர்களுடன் கைகோர்த்துக் கொண்டு அனைத்து அரபுக் குலத்தாரும் அணிதிரண்டு வந்ததால் அல்-அஹ்சாப் (கூட்டுப்படை) போர் என்றும் வழங்கப்படுகிறது.

கூட்டுப்படையில் ஏறத்தாழ 24,000 படைவீரர்கள் பங்குபற்றினர். இவர்களுடன் 600 குதிரைகள், சில ஒட்டகங்கள் பங்குபற்றின. இவர்களை எதிர்த்து 3,000 மதீனாக்கள் பங்குபற்றினர்.

பனூ நளீர் குலத்து யூதர்களுடன் நடைபெற்ற போரில் முஸ்லிம்களுக்கு வெற்றி கிடைத்தது. இதனால் பனூ குறைழா என்ற யூதர்கள் மிகவும் கவலையடைந்தனர். முஸ்லிம்களை அழிப்பதற்காக பல்வேறு சதித்திட்டங்களைத் தீட்டினர்.

முஸ்லிம்களுக்கு எதிராக குரைஷிகள், மற்றும் பல்வேறு குலத்தினரை ஒன்று திரட்டுவதில் யூதர்கள் வெற்றி கண்டனர்.

இப்பெரும் படை முஸ்லிம்களின் மீது போர்தொடுக்க மதீனாவை நோக்கி வந்தது.

ஆயிரம் கைகளாலும் மறைக்க முடியாத ஆதவனின் வெளிச்ச கீற்றாய் ஒளி வரும் இஸ்லாத்தின் வளர்ச்சியை தடுக்கவியலா குறைஷிகள் பொறாமை தீயில் ஒரு புறம் வெந்து கொண்டிருக்க, மதீனாவில் முஸ்லீம்களின் வருகைக்கு பின் செல்வாக்கு இழந்திருந்த யூதர்கள் இன்னொரு புறமும் ஆக முஸ்லீம்களை பூண்டோடு ஒழித்து விடும் நோக்கில் புதிய போருக்கு ஆயத்தமானார்கள்.

மேலும் முஸ்லீம்களுடன் உடன்படிக்கை செய்திருந்த யூதர்களின் ஒரு பிரிவான பனூ குரைளாவுடனும் கள்ள ஒப்பந்தம் செய்தனர்.

குறைஷிகளும் அவர்களும் சகாக்களும் வெளியிலிருந்து தாக்கவும் உள்ளிருந்தே குழி பறிக்கும் வேலையில் பனூ குரைளா ஈடுபடவுமாக முஸ்லீம்களை ஒரேடியாக புதைத்து விடும் நோக்கத்தோடு மதீனாவை நோக்கி பெரும்படையாக கிளம்பினர்.

சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : அகழ்ப் போர் சமயத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் நாங்கள் இருந்தோம். நபித்தோழர்கள் அகழ் தோண்டிக் கொண்டிருந்தனர். நாங்கள் எங்கள் தோள் மீது மண் சுமந்து கொண்டிருந்தோம். அப்போது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்,

" இறைவா! மறுமை வாழ்வைத்தவிர வேறு (நிரந்தர) வாழ்வு கிடையாது. ஆகவே, (அதற்காக உழைக்கும்) முஹாஜிர்களுக்கும் அன்சாரிகளுக்கும் மன்னிப்பருள்வாயாக! என்று (பாடியபடி) கூறினார்கள் நூல் : புகாரி (4098)

அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அகழ்ப் போரின் போது) அகழ் (வெட்டும் பணி நடக்கும் இடத்தை) நோக்கிப் புறப்பட்டார்கள். அப்போது முஹாஜிர்களும் அன்சாரிகளும் (கடும்) குளிரான காலை நேரத்தில் (அகழ்) தோண்டிக் கொண்டிருந்தார்கள். அந்தப் பணியை அவர்களுக்காகச் செய்திட அவர்களிடம் அடிமை(ஊழியர்)கள் இல்லை. அவர்களுக்கு ஏற்பட்டிருந்த களைப்பையும் பசியையும் கண்ட போது நபி (ஸல்) அவர்கள்,

இறைவா! (நிலையான) வாழ்க்கை என்பது மறுமை வாழ்க்கை தான். ஆகவே, அன்சாரிகளுக்கும் முஹாஜிர்களுக்கும் நீ மன்னிப்பளி என்று (பாடிய வண்ணம்) கூறினார்கள். இதைக் கேட்ட நபித் தோழர்கள் நபி (ஸல்) அவர்களுக்கு பதிலளித்தவண்ணம்,

நாங்கள் வாழும் காலமெல்லாம் இறைவழியில் அறப்போர் புரிந்து கொண்டிருப்போம்' என்று முஹம்மத் (ஸல்) அவர்களிடம் உறுதி மொழி தந்துள்ளோம் என்று (பாடிய படி) கூறினார்கள். புகாரி (2834)

பராஉ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : அகழ்ப் போரின் போது அல்லாஹ் வின் தூதர் (ஸல்) அவர்கள் மண்ணைச் சுமந்து கொண்டு செல்வதை நான் பார்த்தேன். மண் அவர்களுடைய வயிற்றின் வெண்மையை மறைத்(துப் படிந்)திருந்தது. அப்போது அவர்கள் இவ்வாறு (பாடிய வண்ணம்) கூறிக் கொண்டிருந்தார்கள்:

(இறைவா!) நீ இல்லாவிட்டால் நாங்கள் நேர்வழி அடைந்திருக்க மாட்டோம்; தருமம் செய்திருக்கவும் மாட்டோம்; தொழுதிருக்கவும் மாட் டோம். நாங்கள் பகைவர்களைச் சந்திக்கும்போது எங்கள் மீது அமைதியை இறக்கியருள்வாயாக! எங்கள் பாதங்களை உறுதிப்படுத்துவாயாக! இவர்கள் (குறைஷிகள்) எங்கள் மீது அக்கிரமம் புரிந்து விட்டார்கள். இவர்கள் எங்களைச் சோதனையில் ஆழ்த்த விரும்பினால் அதற்கு நாங்கள் இடம் தர மாட்டோம்.புகாரி 2837

கடுமையான பசி பட்டினிக்கு ஆளாகி இருந்தும் முஸ்லிம்கள் சுறுசுறுப்பாக அகழ் தோண்டுவதில் ஈடுபட்டிருந்தனர்.

இதைப் பற்றி அனஸ் (ரழி) கூறுகிறார்கள்: (அகழ் தோண்டிக் கொண்டிருக்கும்) அவர்களுக்கு எனது ஒரு கையளவு வாற்கோதுமை கொண்டு வரப்பட்டு, கெட்டுப் போன கொழுப்புடன் சேர்த்துச் சமைக்கப்பட்டு அந்த மக்களுக்கு

முன் வைக்கப்படும். அப்போது அவர்கள் எல்லாரும் பசியுடன் இருப்பார்கள். அந்தக் கெட்டுப்போன கொழுப்பு நாற்றமடித்தபடி தொண்டையிலேயே சிக்கிக் கொள்ளும்.

புகாரி (4100)

அபூ தல்ஹா (ரழி) அறிவிக்கிறார்கள் : எங்களின் பசியைப் பற்றி நாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் முறையிட்டோம். எங்களது வயிற்றில் ஒரு கல்லைக் கட்டி இருந்ததைக் காட்டினோம். நபி (ஸல்) அவர்களோ தங்களது வயிற்றில் இரண்டு கற்கள் கட்டி இருந்ததைக் காட்டினார்கள்.

திர்மிதி (2293)

முழுமையான ஆயத்தங்களோடு மதீனாவை நோக்கி வந்த அந்த வலிமையான 24,000 படையினர் பற்றி கேள்விப்பட்ட மதீனத்து முஸ்லீம்களின் மனநிலையை அல்லாஹ் திருமறையில் இவ்வாறு சொல்லி காட்டுகிறான்.

உங்களுக்கு மேலிருந்தும், உங்களுக்குக் கீழிருந்தும் அவர்கள் உங்களிடம் (படையெடுத்து) வந்த போது, (உங்களுடைய) இருதயங்கள் தொண்டை(க் குழி முடிச்சு)களை அடைந்து (நீங்கள் திணறி) அல்லாஹ்வைப் பற்றி பலவாறான எண்ணங்களை எண்ணிக் கொண்டிருந்த சமயம் (அல்லாஹ் உங்களுக்கு செய்த அருள்கொடையை) நினைவு கூருங்கள். அவ்விடத்தில் முஃமின்கள் (பெருஞ்) சோதனைக்கு உள்ளாக்கப்பட்டு, இன்னும் கடுமையான அதிர்ச்சியினால் அதிர்ச்சிக்கப்பட்டார்கள். (திருக்குர்ஆன் 33:10,11)

மதீனாவை நோக்கி வரும் பெரும்படையை எங்ஙனம் எதிர்கொள்வது என்பது குறித்து நபிகள் நாயகம் (ஸல்) தோழர்களுடன் ஆலோசனை செய்கிறார்கள். மதீனாவை பொறுத்த வரை அதன் கிழக்கு பகுதியில் வகீம் எனும் எரிமலை குன்றும் மேற்கில் வபரா எனும் எரிமலை குன்றும் பாதுகாப்பு அரண்களாய் அமைந்திருந்தது. தெற்கு பகுதியில் அடர்த்தியான பேரீச்சை மரங்கள் அரணாய் இருந்தாலும் வடக்கு பகுதி எவ்வித தடுப்புமில்லாமல் எதிரிகள் எளிதில் ஊடுறுவ ஏதுவாய் இருந்தது தான் முஸ்லீம்களுக்கு சொல்லொண்ணா துயரை தந்தது.

முஸ்லீம்களுடன் நபிகளார் (ஸல்) ஆலோசனை நடத்தி கொண்டிருந்த போது தன் பூர்விகமான பாரசீகத்தில் போர் யுக்திகளில் அனுபவம் வாய்ந்த ஸல்மான் பார்ஸி (ரலி) முஸ்லீம்கள் கேள்விபடாத ஒன்றை ஆலோசனையாக கூறுகிறார்கள். ஆம், வெற்றிடமாக உள்ள வடக்கு பகுதியில் அகழ் தோண்டும் படி ஆலோசனை கூறினார்கள்.

ஸல்மான் பார்ஸி (ரலி) யின் ஆலோசனைக்கேற்ப உடனே நபி (ஸல்) 3000 பேர் கொண்ட ஸஹாபாக்களை ஒரு குழுவுக்கு 10 நபர்கள் வீதம் 300 குழுக்களாக பிரித்து ஒவ்வொரு குழுவும் 40 கெஜம் தோண்ட ஆணையிட்டார்கள். எதிரிகள் எப்போதும் வரலாம் என்பதால் போர்கால அடிப்படையில் இரவு பகல் பாராமல் அகழ் தோண்டும் வேலை நடந்தது. இதற்கான குழுவை பிரிக்கும் போது தான் சல்மானை வைத்து ஒரு சுவையான சர்ச்சை உருவானது.

மக்காவிலிருந்து ஹிஜ்ரத் செய்து வந்த முஹாஜிர்கள் ஸல்மான் தங்களை சார்ந்தவர் என்றும் அன்ஸார்கள் ஸல்மான் தங்களை தான் சார்ந்தவர் என்றும் சண்டை போட்ட போது #அல்லாஹ்வின்தூதர்ஸல்மான்தம்குடும்பத்தைசார்ந்தவர் என்று கூறி சண்டைக்கு முற்றுப்புள்ளி வைத்தார்கள்.

அகழ் தோண்டும் பணியில் ஈடுபட்டிருந்த போது ஸல்மான் (ரலி) அவர்களால் ஒரு பாறையை உடைக்க முடியவில்லை. ஆஜானுபாகுவான ஸல்மான் எவ்வளவோ முயற்சித்தும் உடைக்க முடியாமல் போகவே நபி (ஸல்) அவர்களிடம் வந்து முறையிட்டார்.

ஸஹாபாக்களோடு அகழ் தோண்டும் பணியில் தன்னையும் ஈடுபடுத்தி கொண்டிருந்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) சுத்தியலை கொண்டு மூன்று தடவை அப்பாறையில் அடித்து உடைக்கிறார்கள். அவர்கள் அடித்த முதல் அடியில் வெளிப்பட்ட ஒளியில் மதீனா நகரையும் இரண்டாவது அடியில் வெளிப்பட்ட ஒளியில் ரோமாபுரியையும் மூன்றாவது அடியில் வெளிப்பட்ட ஒளியில் சிரியா மற்றும் சனாவின் அரண்மணைகளை ஸல்மான் பார்ஸி (ரலி) அவர்கள் கண்டார்.

மதீனாவை நோக்கி பெரும் ஆராவரத்துடன் அபூ சுப்யானின் தலைமையில் வந்த படை அகழை பார்த்து திகைத்து போனது. எவ்வளவோ முயற்சித்தும் அகழை கடக்க முடியாததால் தோல்வியை ஒப்பு கொண்டு வந்த இடத்திற்கே அப்படை திரும்பி போனது வரலாறு.

எந்த பெரிய கோபுரத்தையும் தாங்குவது கண்ணுக்குத் தெரியாத அஸ்திவாரக் கல் மட்டுமே , அதேபோலத்தான் தியாகங்களும் வெளியே தெரிவதில்லை; ஆனால் யாரோ ஒருவரால் அவை உணரப்படுகின்றன !

## செயல்களும் அதன் விளைவுகளும் 1

(விதி)




நிச்சயமாக நாம் ஒவ்வொரு பொருளையும் விதியுடன்(கத்ர்) படைத்திருக்கின்றோம். அல்குர்ஆன் 54-49
வானங்களையும் பூமிகளையும் படைப்பதற்கு ஐம்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன் எல்லா விதிகளையும் அல்லாஹ் தீர்மானித்து விட்டான். அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அம்ரு(ரலி) நூல்கள்: முஸ்லிம், திர்மிதி

மனிதன் படைக்கப்பட்டு தாயின் கருவரையில் ஒட்டிக் கொண்டிருக்கின்ற நிலையினில் இறைவனது ஏவலால் வானவர்கள் உயிரை ஊதுகிறார். அப்பொழுது நான்கு விபரங்கள் எழுதப்படுகிறது. செல்வம், அவரது தவணை, செயல்பாடு, குணங்கள் இவைகள் பதியப்பட்ட நிலையில்தான் மனிதன் உருப்பெறுகிறான். நூல் திர்மிதி
விதி என்பது கிடையாது மதியைக் கொண்டு விதியை வென்று விடலாம் என்று கூறுபவர்களுக்கு மேற்காணும் திருமறையும் நபிமொழியும் ஓர் எடுத்துக் காட்டாகும்.
மனிதன் நிலையினை அல்லாஹ் தெளிவுபட விளக்குகின்றான் என்று நபி அவர்கள் கூறியுள்ளார்கள். ஆனால் மனிதனோ தன்னைத்தானே உயர்த்திக்கொண்டு எல்லாம் என் அறிவாற்றலால் வந்தது என்று பெருமையடித்துக் கொண்டு அலைவதை காண முடிகிறது.
அல்லாஹ் தன் திருமறையில் "நிகழும் நிகழ்ச்சியெல்லாம் அல்லாஹ்வின் அனுமதி கொண்டேயல்லாமல் (வேறு) இல்லை "குர்ஆன் 64-11
"பூமியிலோ, அல்லது உங்களிலோ சம்பவிக்கிற எந்தச் சம்பவமும் அதனை நாம் உண்டாக்குவதற்கு முன்னரே (லவ்ஹுல் மஹ்ஃபூள்) ஏட்டில் இல்லாமலில்லை, நிச்சயமாக அது அல்லாஹ்வுக்கு மிக எளிதானதேயாகும் " குர்ஆன் 57-22. இவ்வாறு திருமறை தெளிவாக கூறுகிறது.
மனிதன் எத்தகைய காரியங்கள் செய்தாலும் அல்லாஹ்வே அவனை செயல்படுத்துகிறான் என்பதை நபி அவர்களின் பொன்மொழிகள் சான்று பகர்கின்றன.
அல்லாஹ் ஒவ்வொரு உயிரையும் படைத்து, அதன் ஆயுளையும், அதன் உணவையும் , அதற்கேற்படும் சோதனைகளையும் பதிவு செய்கிறான் என்று நபி அவர்கள் கூறினார்கள். இப்னுமஸ்வூது(ரலி) நூல்: திர்மிதி
"அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் செய்கின்ற செயல்கள் சுயமாக செய்கிறோமா? அல்லது விதிப்படி நடக்கிறதா?"என்று உமர்(ரலி) அவர்கள் கேட்டார்கள்.
"கத்தாபின் மகனே! எல்லாமே ஏற்கனவே எழுதப்பட்ட விதிப்படியே நடக்கின்றன. ஒருவர் பாக்கிய சாலியாக இருந்தால் பாக்கியம் பெறுவதற்கே செயல்படுகிறார், துர்பாக்கியசாலியாக இருந்தால் துர்பாக்கியமடையும் வகையில் செயல்படுகிறார் " என்று நபி அவர்கள் விடையளித்தார்கள். அறிவிப்பவர்: இப்னு உமர்(ரலி) நூல்: திர்மிதி
"அப்படியெனில் நாங்கள் எல்லாம் விதிப்படியே நடக்கிறது என்று எண்ணி செயல்படாமல் இருக்கலாம் அல்லவா ?"என்று சஹாபாக்கள் நபி அவர்களிடத்தில் கேட்டார்கள்.
அதற்கு நபி அவர்கள் இவ்வாறு பதிலளித்தார்கள். “நீங்கள் செயல்படுங்கள்! ஒவ்வொரு வரும் எதற்காக படைக்கப்பட்டுள்ளனரோ அவற்றை செய்ய வேண்டும்" புகாரி, திர்மிதி
விதிதான் நிர்ணயம் செய்யப்பட்டு விட்டதே என்று கண்ணைக் கட்டிக் கொண்டு கிணற்றில் விழுவோம்! விதிப்படி நடக்கட்டும் என்று கூறிக்கொண்டு செயல்படலாகாது. அதற்குத்தான் நபி அவர்கள் கூறினார்கள், எதற்காக படைக்கப்பட்டுள்ளோமோ அவற்றையே செய்ய வேண்டும். நாம் படைக்கப்பட்டதின் நோக்கம் இறைவனை வணங்க வேண்டும். மற்றும் உள்ள அன்றாட வேலைகள் மனிதனுக்கு ஏவப்பட்டுள்ளதை நல்லவைகளை மட்டுமே செய்யவேண்டும்.
இதைவிட்டு விதிதான் நிர்ணயம் செய்யப்பட்டு விட்டதே என்று தன் விருப்பத்திற்கு செயல்படுவதுதான் ஷைத்தானின் சூழ்ச்சியில் பின்னப்படுவதாகும். இறைவன் விதித்த விதி மரணத்தை தவிர மற்றவைகளை மாற்றுவதற்குறிய வழிமுறைகளை குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான்.
(நபியே!) என் அடியார்கள் என்னைப்பற்றி உம்மிடம் கேட்டால்; “நிச்சயமாக நான் சமீபமாகவே இருக்கிறேன், பிரார்த்தனை செய்பவரின் பிரார்த்தனைக்கு அவர் பிரார்த்தித்தால் விடையளிக்கிறேன்;, அவர்கள் என்னிடமே(பிரார்த்தித்துக்) கேட்கட்டும், என்னை நம்பட்டும். அப்பொழுது அவர்கள் நேர்வழியை அடைவார்கள்” என்று கூறுவீராக.குர்ஆன் 2-186
(அவனை) நாடுபவரை அவன் தன்பால் நேர்வழி காட்டுகிறான். குர்ஆன் 42-13
இவ்வாறு அல்லாஹ் தன் அடியார்களை பிரார்த்தனை மூலம் கேட்கச் சொல்கிறான்.

பிரார்த்தனையை தவிர வேறு எதுவும் விதியை மாற்றாது. என்று நபி அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: ஸல்மான்(ரலி) நூல்: திர்மிதி

பிரார்த்தனை எனும் பெயரில் வரம்பு மீறி கேட்டுவிட்டு எனது பிரார்த்தனைக்கு பயனில்லையே என்று மன வெறுப்பு அடைந்திடக்கூடாது. அல்லாஹ் "நான் நாடியவர்களை நேர்வழியில் செலுத்துவேன் என்ற வசனத்தை மறந்துவிடக்கூடாது.
மேலும் ஒருவர் தமக்கும் சொர்க்கத்திற்குமிடையே ஒரே ஒரு முழம் மட்டுமே இருக்கும் அளவிற்கு நல்ல செயல்களை செய்து வருவார். விதி அவரை வென்று கெட்ட செயல்களை செய்து முடிவில் நரகில் நுழைவர். இதேபோல் ஒருவர் நரகத்திற்கும், தனக்கும் இடையே ஒரு முழம் மட்டுமே உள்ள அளவிற்கு நரகவாசிகளின் செயல்களை செய்து வருவார். விதி அவரை வென்று சொர்க்கவாசிகளின் செயல்களை செய்து சொர்க்கம் நுழைவார் என்று நபி அவர்கள் கூறியுள்ளார்கள். அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் மஸ்வூது (ரலி) நூல்: புகாரி, திர்மிதி
மேற்காணும் ஹதீஸின்படி இறைவன்
சொர்க்கத்திற்குரியவர்களையும், நரகத்திற்குரியவர்களையும் நிர்ணயம் செய்து விட்ட போதிலும் நல்வழியின் மூலமாகவும், பிரார்த்தனையின் மூலமாகவும் நரகவாசி என்ற நிலையில் உள்ளவர் விதியை வென்று சொர்க்கவாசியாக மாறிவிடலாம். என்பதனை இந்த ஹதீஸ் மூலம் அறிய முடிகிறது. ஆயினும் இதுவும் அல்லாஹ்வின் அறிவுக்கு உட்பட்டதே என்பதை மறுக்க வேண்டாம்.
எவர் நேர்வழியில் செல்கிறார்களோ அவர்களை அல்லாஹ் மேலும் மேலும் நேர்வழியில் செலுத்துகிறான். குர்ஆன் 19-76
என்று அல்லாஹ் திருமறையில் கூறுவதுடன்
(எனினும்,) தான் நாடியதை (அதிலிருந்து) அல்லாஹ் அழித்து விடுவான். (தான் நாடியதை அதில்) நிலைத்திருக்கவும் செய்வான் – அவனிடத்திலேயே உம்முல் கிதாப் (மூலப் பதிவேடும்) இருக்கிறது.குர்ஆன் 13-39 என்று விளக்குகிறான்.
"எவன் பாவமன்னிப்புத் தேடி ஈமான் கொண்டு நற்செயல்களையும் செய்து அப்பால் நேர்வழியும் அடைகிறானோ அவனுக்கு நிச்சயமாக நான் மிகவும் மன்னிப்பவனாக இருக்கின்றேன். குர்ஆன் 20-82
...என்று திருமறையில் இறைவன் கூறுவதிலிருந்தே நாம் உணர்லாம். ஒருவன் தவறான வழியில் சென்று, பிறகு மனம் திருந்தி இறைவனிடம் பாவமன்னிப்பு தேடினால், அவனை அல்லாஹ் மன்னிப்பதாக கூறுகிறான்.
இருள் சூழ்ந்த உலகினில் வாழ்கின்றவர்களுக்கு ஒளியாக திகழ்வது திருமறையும், நபிவழி எனப்படும் ஹதீஸும்தான். இவற்றை பின்பற்றி நடந்தாலே நேர்வழி பெற்றவராக திகழ முடியும்.
ஒவ்வொரு குழந்தையும் இயற்கை மார்க்கத்திலேயே பிறக்கின்றது. எனினும் அவர்களது பெற்றோர்களின் நிலையினால் அதைல் பின்னி பினைந்து விடுகின்றனர். அதனால்தான் எல்லா மக்களிடமும் குர்ஆன், ஹதீது போதனைகளை எடுத்துரைக்க வேண்டும். சிந்திக்கக் கூடிய மக்களுக்கு நல்வழியில் செல்வதற்கு விதி அமைந்துவிடும்.

இவற்றைத்தான் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"நரகவாசிகளின் செயல்களை செய்பவர்கள் விதி அவரை வென்று சொர்க்கவாசிகளின் செயலை செய்து சொர்க்கத்தில் நுழைந்து விடுவர் " என்றார்கள்.
மனிதனுக்குரிய நன்மை அல்லாஹ்வுடைய விதியின் மீது திருப்தியுறுவதாகும்.
மனிதனுக்குரிய தீமை அவன் அல்லாஹ்விடம் நன்மையைக் கோருவதைக் கைவிடுவதாகும்.
மேலும் மனிதனுக்குரிய தீமை அவன் அல்லாஹ்வுடைய விதியைக் கொண்டு அதிருப்தியுறுவதாகும் என்று நபி அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: ஸஃதுப்னு அபீவக்காஸ் (ரலி) நூல்: திர்மிதி

ஒவ்வொரு செயலையும் செய்யும் பொழுது இறைவனுக்கு பயந்து “இறைவா நான் செய்யக்கூடிய செயல்கள் நேர்வழியாக இருக்க வேண்டும் என்ற எண்ணங்களிலேயே செய்தால், அல்லாஹ் விதியை மாற்றி நேர்வழியாக தருவான் என்று தன் திருமறையிலேயே குர்ஆன் 42:13ல் கூறுகிறான்.

ஏனெனில் இதுகூட பிரார்த்தனையே ஆகும். மதியைக் கொண்டு விதியை வென்று விடலாம் என்று கூறுபவர்களும் தனது அறிவால் உயர்ந்தேன் என்று பெருமை பேசுபவர்களும் திருமறையின் வசனங்களையும், நபி அவர்களின் பொன்மொழிகளையும் ஆராய்ந்து பார்க்கவும். அவர்களுக்கு தெளிவான விடை இதில் கிடைக்கும். விதி இறைவனின் முத்திரைதான் என்ற முடிவு கிடைக்கும்.

## செயல்களும் அதன் விளைவுகளும் 2

(தீயவற்றை பகிரங்கமாகக் கூறுவதை அல்லாஹ் விரும்பவில்லை )



لَا يُحِبُّ اللّٰهُ الْجَــهْرَ بِالسُّوْٓءِ مِنَ الْقَوْلِ اِلَّا مَنْ ظُلِمَ وَكَانَ اللّٰهُ سَمِيْعًا عَلِيْمًا

அநியாயம் செய்யப்பட்டவர்களைத் தவிர (வேறு யாரும்) வார்த்தைகளில் தீயவற்றை பகிரங்கமாகக் கூறுவதை அல்லாஹ் விரும்பவில்லை - அல்லாஹ் நன்கு செவியுறுவோனாகவும் யாவற்றையும் அறிபவனாகவும் இருக்கின்றான். (அல்குர்ஆன் : 4:148)

மூஸா (அலை) அவர்கள் காலத்தில் ஒரு தடவை பெரும் தண்ணீர் பஞ்சம் ஏற்பட்டது. உடனே சமூக மக்கள் அனைவரையும் பெரிய மைதானம் ஒன்றில் ஒன்று திரட்டி தண்ணீர் பஞ்சம் நீங்க மழைவேண்டி துஆச்செய்தார்கள் மூஸா (அலை) அவர்கள்.
ஆனால், துஆச் செய்து வெகு நேரமாகியும் துஆவிற்கான பதில் ரப்பிடமிருந்து வராததை உணர்ந்த மூஸா ( அலை ) அவர்கள் “இறைவா! எப்பொழுதும் என் பிரார்த்தனைக்கு உடனடியாகப் பதிலளிக்கும் நீ இன்று ஏன் பதிலளிக்கவில்லை” என்று அல்லாஹ்விடம் கேட்டார்கள்.
அதற்கு அல்லாஹ் “மூஸாவே! இங்கு கூடியிருக்கும் ஜனத்திரளில் ஒருவர் சுமார் நாற்பதாண்டு காலமாக எனக்கு மாறு செய்து கொண்டிருக்கின்றார். அவரின் காரணமாகவே நான் பதில் தரவில்லை. அவரை அங்கிருந்து வெளியேறச் சொல்லுங்கள்! உங்கள் துஆவை ஏற்று உங்களுக்கு நான் மழை பொழிவிக்கிறேன்” என்றான்.
உடனே, மூஸா (அலை) அவர்கள் அங்கு கூடியிருந்த மக்களிடம் “இங்கு கூடியிருக்கிற மக்களில் ஒருவர் சுமார் நாற்பதாண்டு காலமாக அல்லாஹ்வுக்கு மாறு செய்து கொண்டிருக்கின்றார். அவரின் காரணமாகவே அல்லாஹ்

மழையைத் தராமல் தடுத்து வைத்திருக்கின்றான். ஆகவே, அவர் இங்கிருந்து உடனடியாக வெளியேறிச் செல்லவும். இல்லையெனில் ஒட்டு மொத்த சமூகமும் பாதிக்கப்படுவோம்" என்று கூறினார்கள்.
உடனே, கூட்டத்தில் இருந்த அந்த மனிதர் தன்னைத்தான் மூஸா (அலை) அவர்கள் கூறுகின்றார்கள் என்பதை உணர்ந்து கொண்டார். இங்கிருந்து இப்போது வெளியேறினால், தம்மை அடையாளம் கண்டு சமூக மக்கள் கேவலமாகக் கருதுவார்கள் என்று எண்ணிய அவர் தான் அணிந்திருந்த ஆடையின் ஒரு பகுதியைக் கொண்டு தன் தலைக்கு முக்காடிடுக் கொண்டு...
"அல்லாஹ்வே! இதோ இந்த இடத்தில் உன்னிடம் நான் ஒரு உறுதி மொழியைத் தருகின்றேன்! இனி எப்போதும் ஒரு கணமேனும் உனக்கு நான் மாறு செய்யமாட்டேன்! என் காரணத்தால் என் சமூக மக்களை நீ தண்டித்து விடாதே!" என்று பிரார்த்தித்தார்.
அடுத்த நொடியில் மழை பொழியத்தொடங்கியது. மூஸா (அலை) அவர்களுக்கு ஆச்சர்யம் கூட்டத்தை விட்டு எவரும் வெளியேற வில்லை, ஆனால், மழை பொழிகிறது.
அல்லாஹ்விடம் கையேந்தினார் மூஸா (அலை) அவர்கள். "அல்லாஹ்வே! எவரும் தான் வெளியேற வில்லையே! பின் ஏன் மழையைப் பொழிவித்தாய்!".
அதற்கு, அல்லாஹ் "மூஸாவே! எந்த மனிதரின் காரணத்தால் நான் மழையைத் தடுத்து வைத்திருந்தேனோ, அவர் இப்போது மனம் திருந்தி என்னிடம் மன்னிப்புக் கோரிவிட்டார். அவரின் காரணத்தினாலேயே நான் இப்போது இந்த மழையை உங்களுக்கு தந்திருக்கின்றேன்" என்று பதில் கூறினான்.
அப்போது, மூஸா (அலை) அவர்கள் "அப்படியென்றால் நீ எனக்கு அவரை அடையாளம் காட்டு" என்று அல்லாஹ்விடம் கேட்டார்கள்.
அதற்கு, அல்லாஹ் "மூஸாவே! 40 ஆண்டுகளாக எனக்கு மாறு செய்து கொண்டிருந்த போது அவரைப் பிறரிடம் காட்டிக்கொடுத்து அவமானப் படுத்தாத நான்.. தற்போது மனம் திருந்தி என் அருள் வாசலுக்கு வந்த பின்னரா பிறருக்கு நான் காட்டிக் கொடுப்பேன்" என்று பதில் கூறினான்.
நூல்: இப்னு கஸீர்

## செயல்களும் அதன் விளைவுகளும் 3

( மரண தண்டனை)




ஸாலிம் இப்னு அப்துல்லாஹ் (ரலி) அறிவிக்கின்றார்கள்: "எனது உம்மத்தினர் அனைவரும் பாதுகாப்பு வழங்கப்பட்டவர்களே! பகிரங்கப்படுத்தியவர்களைத் தவிர!
ஏனெனில், இரவில் யாரும் அறியாத நிலையில் ஒரு பாவத்தைச் செய்கின்றார். அல்லாஹ் அதை மறைத்த நிலையில் காலைப் பொழுதை அவர் அடைகின்றார்.

ஆனால், இரவில் தாம் செய்த அந்த பாவமான காரியத்தை எல்லோரிடத்திலும் சென்று இரவு இன்னின்னவாறு நான் செய்தேன் என்று அல்லாஹ் மறைத்த ஒன்றை பகிரங்கப்படுத்துகின்றார்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். ( நூல்: புகாரி )

விபச்சாரக் குற்றத்தில் ஒருவர் ஈடுபட்டால் அது தண்டனை வழங்கும் அளவிற்கான குற்றம் என்பதாக அல்லாஹ் இறைவசனத்தை இறக்கியருளியிருந்த தருணம் அது...
புரைதா, இப்னு அப்பாஸ், அனஸ் ( ரலி – அன்ஹும் ) அறிவிக்கின்றார்கள்:
பனூ அஸ்லம் குலத்தைச் சேர்ந்த மாஇஸ் இப்னு மாலிக் என்கிற நபித்தோழர் நபி (ஸல்) அவர்களின் சமூகத்தில் வந்து தாம் விபசாரம் புரிந்துவிட்டதாக ஒப்புதல் வாக்குமூலம் அளித்தார்.
அப்போது நபி(ஸல்) அவர்கள் அவரை விட்டும் தம் முகத்தைத் திருப்பிக் கொண்டார்கள்.
மீண்டும் வந்து முறையிடவே, அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கேட்குமாறு கூறி மாயிஸ் (ரலி) அவர்களை நபி (ஸல்) அனுப்பி வைத்தார்கள்.
இவ்வாறு, அவர் மூன்று முறை அண்ணலாரின் சபைக்கு வருவதும், செல்வதுமாக இருந்தார்.
நான்காவது முறையாக முன்பு போல் அவர் அவ்வாறு கூறவே அவரை நோக்கி அண்ணலார் {ஸல்} அவர்கள் "(அவளை) நீர் முத்தமிட்டிருக்கலாம்! அல்லது (கண்ணாலோ கையாலோ) சைகை செய்திரக்கலாம்! அல்லது (ஆசையுடன்) பார்த்திருக்கலாம்!" என்றார்கள்.
ஆனால், அவரோ முன்பு போலவே தாம் விபச்சாரம் புரிந்து விட்டதாக ஒப்புதல் வாக்குமூலம் அளித்தார்.
அப்போது அவரிடம் நபி(ஸல்) அவர்கள் "உமக்குப் பைத்தியமா?" என்று கேட்டார்கள். அவர் "இல்லை" என்றார்.
ஆனால், அவரோ மீண்டும் முன்பு போலவே தாம் விபச்சாரம் புரிந்து விட்டதாக ஒப்புதல் வாக்குமூலம் அளித்தார்.
அப்போது, அருகில் இருந்த நபித்தோழர்களிடம் அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள்
"இவர் மது அருந்தி இருக்கிறாரா?" என்று பரிசோதித்துப் பாருங்கள்" என்றார்கள்.
பரிசோதித்த நபித்தோழர்கள் "இல்லை, இவர் மது அருந்த வில்லை" என்று பதில் கூறினார்கள்.
இறுதியாக அவர் நான்கு முறை தமக்கெதிராகத் தாமே சாட்சியம்அளித்தார். அப்போது, அவரிடம் நபி (ஸல்) அவர்கள் சாடைமாடையாகக் கேட்காமல்
"அவளுடன் நீர் உடலுறவு கொண்டீரா?" என்று (வெளிப்படையாகவே) கேட்டார்கள். அவர், "ஆம்'" என்று கூறினார்.
அப்போதுதான் அவருக்குக் கல்லெறி தண்டனை வழங்கும்படி நபி (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள்.
பெருநாள் தொழுகைத் திடல் அருகில் அவருக்குக் கல்லெறி தண்டனை நிறைவேற்றப்பட்டது.
அப்போது, நபி (ஸல்) அவர்கள் "அவரைக் குறித்து நல்லதைக் கூறியதோடு அவருக்காக இறுதித் தொழுகை (ஜனாஸா) தொழவைத்தார்கள்".

மாயிஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் விபச்சாரம் செய்து கையும் களவுமாக பிடிக்கப்பட்டு தண்டனை நிறைவேற்றப் பட்டவர்கள் அல்ல.
மாறாக, தான் செய்த தண்டனைக்குரிய குற்றத்தை யாரும் பார்க்காவிட்டாலும், அல்லாஹ் பார்த்துக் கொண்டிருக்கிறான் என்ற அவர்களின் உள்ளத்தில் வெளிப்பட்ட தக்வா - இறையச்சம்தான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் சமூகம் நோக்கி இழுத்து வந்தது.
அங்கே, மாயிஸ் (ரலி) குற்றத்தை ஒப்புக் கொண்டு தண்டனை கேட்டபோது
"போய் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புத் தேடுங்கள்" என்றார்கள். பின்னர், உமக்குப் பைத்தியமா..? என்கிறார்கள், இவர் மது குடித்திருக்கின்றாரா? என பரிசோதிக்கச் சொல்கின்றார்கள்.
பின்பு நீர் முத்தமிட்டிருக்கலாம்; அல்லது சைகை செய்திருக்கலாம்; அல்லது ஆசையோடு பார்த்திருக்கலாம் என்றெல்லாம் சொல்லி மாயிஸ் (ரலி) அவர்களை நபியவர்கள் திருப்பி அனுப்ப முயற்சிக்கின்றார்கள்.

ஆனாலும், மாயிஸ் (ரலி) அவர்களின் உறுதியான நிலைப்பாட்டால் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தண்டனையை நிறைவேற்ற உத்தரவிட்டார்கள்.
எல்லாம் வல்ல அல்லாஹ் மாயிஸ் (ரலி) அவர்களை பொருந்திக் கொள்வானாக!
பைபிளிலும் விபச்சார தண்டனை குறித்து ....
பின்னும் நீ இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லவேண்டியது என்னவென்றால்: இஸ்ரவேல் புத்திரரிலும் இஸ்ரவேலில் வாசம்பண்ணுகிற அந்நியர்களிலும் எவனாகிலும் தன் சந்ததியில் ஒரு பிள்ளையை மோளேகுக்குக் கொடுத்தால், அவன் கொலை செய்யப்பட வேண்டும். தேசத்தின் ஜனங்கள் அவன்மேல் கல்லெறியவேண்டும். (லேவியராகமம் 20 :2 )
கர்த்தருடைய நாமத்தை நிந்திக்கிறவன் கொலைசெய்யப்படவேண்டும், சபையார் எல்லாரும் அவனைக் கல்லெறியவேண்டும், பரதேசியானாலும், சுதேசியானாலும் கர்த்தரின் நாமத்தைத் தூஷிக்கிறவன் கொலை செய்யப்பட வேண்டும். (லேவியராகமம் 24 :16 )

## செயல்களும் அதன் விளைவுகளும் 4

(தபசி தறிக் கெட்டுப்போன வரலாறு)

كَمَثَلِ الشَّيْطٰنِ اِذْ قَالَ لِلْاِنْسَانِ اكْفُرْ فَلَمَّا كَفَرَ قَالَ اِنِّىْ بَرِىْٓءٌ مِّنْكَ اِنِّىْۤ اَخَافُ اللّٰهَ رَبَّ الْعٰلَمِيْنَ

(இன்னும் இவர்கள் நிலை) ஷைத்தானுடைய உதாரணத்தைப் போன்றிருக்கிறது; (அவன்) மனிதனை நோக்கி: “நீ (இறைவனை) நிராகரித்து விடு” என்று கூறுகிறான். அவ்வாறு மனிதன் நிராகரித்ததும் “நான் உன்னை விட்டும் ஒதுங்கிக் கொண்டேன்; (ஏனெனில்) நான் அகிலங்களுக்கெல்லாம் இறைவனாகிய அல்லாஹ்வை அஞ்சுகிறேன்” என்றான். (குர்ஆன் : 59:16)
இங்கு கூறப்பட்டுள்ள இன்ஸான் மனிதன் என்பது பனு இஸ்ராயீல்களில் உள்ள மார்க்க அறிஞரும், தபசியுமான பர்ஸீஸா என்பவரை குறிக்கிறது என்று திருக்குர்ஆன் ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.
பர்ஸீஸா என்பவர் 220 வருடகாலம் அல்லாஹுத்தஆலா வணங்கினார். இக்காலத்தில் ஒரு இமை கொட்டும் சமயத்திலாவது அல்லாஹுத்தலாவுக்கு இவர் மாறு செய்வதில்லை.
இவருடைய சிஷ்யர்களில் அறுபதாயிரம் பேர்கள் இவருடைய பரக்கத்தால் விண்ணில் நடப்பவர்களாக, விண்ணில் பறப்பவர்களாக இருந்தனர். இவருடைய வணக்கத்தைப் பார்த்து மலக்குகளும் கூட ஆச்சரியமடைந்தனர்.

மலக்குகள் ஆச்சரியப்பட்ட பொழுது, இறைவன், " நீங்கள் அறியாததை நானறிவேன். அவன் இறை மறுப்பாளனவான் என்பது எனது இல்மில் இருக்கிறது. இன்னும் அவன் நரகம் புகுவான்" என்றும் கூறினான்.
இதனை இப்லீஸ் செவியேற்று, அவனது நாசம் தனது கையில் இருக்கிறது என்பதை அறிந்து, அவரது ஆசிரமத்துக்கு ஒரு தபசியின் வடிவில் வந்து, பர்ஸீஸாவை அழைத்து, " நான் ஒரு தபசி. இறைவனை வழங்குவதில் உனக்கு உதவியாக இருக்க விரும்புகிறேன்" என்று கூறினான்.
அதற்கு பர்ஸீஸா, " அல்லாஹ்வை வணங்க ஒருவர் உண்மையாகவே விரும்புவாராயின், அல்லாஹுத்தஆலா அவருக்கு துணைவனாக இருக்கப் போதியவன்" என்றும் கூறினார்.
பின்னர் இப்லீஸ் அங்கேயே அல்லாஹுத்தஆலாவை மூன்று நாளாக உணவு, தண்ணீர் இல்லாமல் நின்ற வண்ணம் வணங்கினான்.

இதனை பர்ஸீஸா பார்த்து, " நான் உண்கிறேன், உறங்குகிறேன்,நோன்பு நோற்கிறேன், நீயோ உண்பதில்லை; நான் 220 வருடகாலமாக அல்லாஹுத்தஆலா வாங்கினேன். ஆனால் உணவு தண்ணீரை விட்டு விடவில்லை" என்றார்.
அதற்கு இப்லீஸ் " நான் பாவத்தைச் செய்திருக்கிறேன். அதனை நினைக்கும் பொழுது, தூக்கமும் ,உணவும், தண்ணீரும் தேவை இல்லாமற் போய்விடுகிறது " என்றான்.
அப்பொழுது பர்ஸீஸா "உன்னைப்போல் நானும் ஆகி விடுவதற்கு என்ன வழி ?" என்றார்.
அதற்கு அவன் "அல்லாஹ்வுக்கு மாறு செய். பின்னர் அவனிடம் தவ்பாச் செய். அவன் கிருபை உள்ளவன் வழிபாட்டின் இன்பத்தை நீ காண்பாய் ? "என்றான்.
அதற்கு அவர் அவனை இன்னின்ன விதமாக இத்தனை வருட காலமாக அவனை வணங்கிவிட்டு, எவ்வாறு அவனுக்கு மாறு செய்வேன் ? என்றார்
அதற்கு இப்லீஸ், "மனிதன் பாவத்தைச் செய்தால், மன்னிப்பு கேட்க அவசியப்படுகிறான். இந்த பாவமன்னிப்பு கேட்டல் மூலம் அவனின் நெருக்கம் கிடைக்கும் " என்றான்.
பர்ஸீஸா : " எந்தப் பாவத்தைச் செய்யுமாறு நீ கூறுகிறாய் ? "
இப்லீஸ் : " விபச்சாரத்தை "
பர்ஸீஸா : "' அதனை நான் செய்ய மாட்டேன் "
இப்லீஸ் : " மூமினான மனிதனை கொலை செய்கிறாயா ?"
பர்ஸீஸா: " முடியாது. நான் மாட்டேன் "
இப்லீஸ் : " அவ்வாறாயின் போதை உள்ள மதுவை அருந்து. அது போதும்.அது மிகச் சுலபமானது"
பர்ஸீஸா : " அதனை நான் எங்கு பெற முடியும் ? "
இப்லீஸ் : (ஒரு ஊரை குறிப்பிட்டு ) "இன்ன ஊருக்கு செல் "
இவனது யோசனைப்படி குறிப்பிட்ட ஊருக்கு அவர் சென்றார். மது விற்றுக்கொண்டிருந்த அழகிய பெண்ணைப் பார்த்து, அவளிடம் மதுவை வாங்கி அருந்தினார். போதை அடைந்து, அவளையே விபச்சாரம் செய்தார் .அவ்விருவரும் விபச்சாரத்தில் ஈடுபட்டிருந்த பொழுது அவளுடைய கணவன் அங்கு அவர்களை பார்த்து விட்டான். அவள் கணவனுடன் சண்டையிட்டு அவனை கொன்று விட்டார்.
பின்னர், இப்லீஸ் மனித உருவத்தில் அரசனிடம் சென்று , இக்கொலையை அறிவித்தான். உடனே பர்ஸீஸா கைது செய்யப்பட்டு மது அருந்தியது, விபச்சாரம் செய்தது, கொலை செய்தது ஆகிய மூன்று குற்றங்களுக்கும் தனித்தனியாக தண்டனை விதிக்கப்பட்டார்.
இவர் கழுவிலேற்றப்படும் தருவாயில், இவரிடம் இப்லீஸ் எப்படி முன்னர் வந்த அதே உருவத்தில் வந்து, " உன் நிலை எவ்வாறு இருக்கிறது ? "என்றான்
எவர் தீய நண்பனைப் பின்பற்றுகிறானே அவனுக்குரிய தண்டனை இவ்விதம்தானே இருக்கும் ? சரி, என்னை ஏன் இந்த கீழான நிலைக்கு ஆளாக்கினாய் ? என்றார்
இப்லீஸ் : 220 வருட காலமாக உன் தொந்தரவுக்கு ஆளாகி இருந்தேன். இறுதியாக உன்னை கழுவேற்றி விட்டேன். இதனை விட்டு நீ இறங்க வேண்டும் என நீ விரும்பினால் உன்னை இறக்கிவிடவும் என்னால் முடியும்.
பர்ஸீஸா : இதனை விட்டு இறங்கவே நான் விரும்புகிறேன். நீ கேட்பதை தருவேன்.
இப்லீஸ் : ஒரே ஒரு முறை எனக்கு ஸுஜூது செய் .
பர்ஸீஸா : கழுமரத்தின் மீதிருக்கையில் எவ்வாறு ஸுஜூது செய்ய முடியும் ?
இப்லீஸ் : சமிக்கையால் ஸுஜூது செய்து, மரணிப்பதற்கு முன் இறை மறுப்பாளராகி விட்டார்.
கழுவிலேற்றப்படுவதை விட்டு அவரால் தப்பித்துக் கொள்ளவும் இயலவில்லை
தவிர இதே பர்ஸீஸா அவை குறித்து வேறுவிதமாகவும் ஹிக்காயத்து சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விரு ஹிக்காய்த்துக்களிலும் பர்ஸீஸா ஈமான் இழந்து, இறைவனுக்கு மாறு செய்து மரணிப்பதற்கு காரணமான

மதுப்போதை , விபச்சாரம் அதனைத் தொடர்ந்து கொலை என்று அடுக்கடுக்கான பாதக செயல்கள் அரங்கேறி விட்டது.
ஒரு சின்ன செயல்தான் , அது எவ்வளவு பெரிய பாதகமான விளைவு ஏற்படுத்திவிட்டது பார்த்தீர்களாக !

## செயல்களும் அதன் விளைவுகளும் 5

(ஸஃப் _ அணி அணியாக நிற்பது)



என்னுடைய உம்மத்மார்கள் தொழுகையில் நிற்கின்ற ஸஃப் என்பது மலக்குமார்களின் ஸஃப்பைப் போன்றது .வேறு எந்த உம்மத்துகளுக்கும் கிடைக்காத பாக்கியம் ஸஃப்பாக நிற்பது
ஒரு முறை நபி(ஸல்) அவர்கள் எங்களிடம் வந்தார்கள். "மலக்குகள் தங்கள் இரட்சகனின் சமுகத்தில் அணிவகுப்பது போல், தொழுகையில் நீங்கள் அணிவகுக்கக் கூடாதா? " எனக் கூறினார்கள்.
அப்பொழுது நாங்கள், " யாரஸூலுல்லாஹ் மலக்குகள் தங்கள் இரட்சகனின் சமுகத்தில் எவ்வாறு அணிவகுக்குகிறார்கள்? எனக் கேட்டோம்.
அதற்கவர்கள், அவர்கள் முந்திய ஸஃப்புகளை முழுமைப் படுத்துகிறார்கள், ஸஃப்பில் நெருக்கமாக இருக்கிறார்கள் எனக் கூறினார்கள். (முஸ்லிம்)
ஸஃப்பில் இடைவெளி என்கிற உங்களின் செயலால் ஏற்படும் விளைவு உள்ளங்களில் உங்களுக்கிடையே பிளவு ஏற்படுத்தும் என்பதாக நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அபூமஸ்ஊத் அல்அன்சாரி (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையி(ன் ஆரம்பத்தி)ல் எங்களுடைய தோள்களைத் தடவி (அவை சமமாக இருக்கின்றனவா என்று சரி) பார்ப்பார்கள்;
மேலும், நேராக நில்லுங்கள்; (முன்பின்னாக) வேறுபட்டு நிற்காதீர்கள்; அப்படி (வேறுபட்டு) நின்றால், உங்கள் உள்ளங்களும் வேறுபட்டுவிடும்.
உங்களில் அறிவிற் சிறந்தவர்கள் எனக்கு அருகில் (முதல் வரிசையில்) நிற்கட்டும். பிறகு அவர்களுக்கு அடுத்து உள்ளவர்களும், பிறகு அவர்களுக்கு அடுத்து உள்ளவர்களும் நிற்கட்டும் என்று கூறுவார்கள்.
தொடர்ந்து அபூமஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறினார்கள்: ஆனால், நீங்களோ இன்று (வரிசையில் சீராக நிற்காத காரணத்தால்) கடுமையான கருத்துவேறுபாட்டுடன் காணப்படுகின்றீர்கள். முஸ்லிம் : 739.
اِنَّ اللّٰهَ يُحِبُّ الَّذِيْنَ يُقَاتِلُوْنَ فِىْ سَبِيْلِهٖ صَفًّا كَاَنَّهُمْ بُنْيَانٌ مَّرْصُوْصٌ
எவர்கள் ஈயத்தால் வார்க்கப்பட்ட கெட்டியான கட்டடத்தைப் போல் அணியில் நின்று, அல்லாஹ்வுடைய பாதையில் போரிடுகிறார்களோ, அவர்களை நிச்சயமாக (அல்லாஹ்) நேசிக்கின்றான். (குர்ஆன் : 61:4)
இது போரில் நிற்கும் ஸஃப் மட்டுமில்லை தொழுகையில் நிற்கும் ஸஃப்பிற்கும் பொருந்தும் என்று பல சஹப்பாக்கள் கூறியுள்ளனர்.

(ஸஃப்பில் நிற்கும்பொழுது) எங்களில் ஒருவர் தம் தோள்பட்டையை அருகிலுள்ளவரின் தோள்பட்டையுடனும், தம் பாதத்தை அவரின் பாதத்துடனும் சேர்த்துக் கொள்வோம் என அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். - புகாரி
"நீங்கள் உங்களின் வரிசைகளை நெருக்கமாகவும் சமீபமாகவும் ஆக்கிக் கொள்ளுங்கள், கழுத்துகளுக்கு நேராக நில்லுங்கள், என் உயிர் எவன் கைவசம் இருக்கின்றதோ அவன்மீது ஆணையாக, வரிசையின் இடைவெளிகளில் சிறிய கறுப்பு ஆட்டுக்குட்டியின் தோற்றத்தில் ஷைத்தான் நுழைகின்றான் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். (அபூதாவூத்)
விளக்கம்: வரிசையில் இடைவெளி விட்டு நின்றால் அங்கே ஷைத்தான் கருப்பு ஆட்டுகுட்டி உருவத்தில் நுழைந்து நமது உள்ளங்களில் பல எண்ணங்களை உண்டுபண்ணி நமது தொழுகைகளை பாழாக்கிவிடுவான், ஆகவே வரிசைகளில் இடைவெளி விடுவதை முற்றாக தவிர்ந்து கொள்ள வேண்டும்.

## செயல்களும் அதன் விளைவுகளும் 6

(ஒன்றுக்கொன்று தொடர்பு )




ஒவ்வொரு வினைக்கும் சமமான எதிர் வினை உண்டு...
For Every action, there is an equal and opposite reaction...
எதை விதைக்கிறோமோ அதைத்தான் அறுவடை செய்வோம்..
பிரபஞ்சத்தில் ஒலி, அதிர்வு இல்லாத இடமே கிடையாது. ஒலியினால் அதிர்வும், அதிர்வினால் ஒலியும் ஏற்படும் அளவிற்கு இரண்டும் ஒன்றோடு ஒன்று இணைந்திருக்கிறது.
ஒவ்வொரு மனிதனின் எண்ணம், சொல், செயல்களும் அதன் தன்மைக்கேற்ப அதிர்வுகளை (Action) ஏற்படுத்தும் திறன் கொண்டவை. நமக்குத் தெரியாமலே தானியங்கியாக இது நடந்து கொண்டிருக்கிறது. நாம் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் இது நடந்து கொண்டுதானிருக்கும்.
இந்த அதிர்வுகள் தனது வட்டப் பாதையில் பல்வேறு இயற்கை நியதிகளுக்கு உட்பட்டு, அதன் தன்மைக்கேற்ப நன்மையாகவோ, தீமையாகவோ, பலமாகவோ, பலவீனமாகவோ ஆரம்பமான இடத்துக்கு வருகின்றன. இதை எதிர் சக்தி (Reaction) என்று சொல்லலாம். நாம் நம்பினாலும், நம்பாவிட்டாலும் அது நடந்து கொண்டிருக்கும்.
நமது நினைப்பு, பேச்சு, செயல் எல்லாம் ஒரு சக்தி ( அதிர்வு ) உற்பத்தியாக காரணமாகிறது. இந்த சக்திக்கேற்ற எதிர் சக்தி புதிய வேகம், பெறும் தன்மை அடைகிறது.
தனது எண்ணம், சொல், செயல் நன்மையை நோக்கும் போது நன்மை ஏற்படும். தீமையை நோக்கும்போது தீமை ஏற்படுகிறது
பிரபஞ்சத்தில் எல்லாமே ஒன்றுக்கொன்று தொடர்புடையது.

ஒவ்வொரு செயலும் அடுத்த செயலுக்கு காரணமாகிறது. அது அப்படியே தொடர்ந்து, முதல் செயல் கடைசி செயலுக்கு காரணமாகிறது. இதற்கு ஆயிரம் உதாரணங்களை குர்ஆனிலிருந்தும் நபிகளாரின் ஹதீஸ்களிலிருந்து சொல்லிக் கொண்டே போகலாம்.

1) உலுஹின் குறைபாடு என்பது அது ஓதுவதில் பாதிப்பை ஏற்படுத்தும். அது இமாமமாக இருந்தாலும் சரி , மஹ்மூமாக இருந்தாலும் சரி பாதிப்பை ஏற்படுத்தியே தீரும் , அதே மாதிரி மஹ்மூன்களின் செய்யக்கூடிய காரியம் இமாம்கள் ஓதுவதில் பாதிப்படையச் செய்யும் .
2) ஆண் பெண் இருவரையும் கணவன் மனைவி என்கிற உறவை அல்லாஹ் ஏற்படுத்தியது .இதுவல்லாத தகாத உறவு, கூடாத உறவு ஏற்படுமானால் , நீங்கள் கேள்விப்படாத உங்கள் முன்னோர்கள் கேள்விப்படாத வியாதிகள் சமூகத்தை வந்தடையும் என்று நபிகளார் கூறினார்கள் .

3) தொழுகையின் ஸஃப்புகளில் இடைவெளி ஏற்படுமாயின், அந்த இடைவெளியால் உங்களுக்கு இடையே கருத்து வேறுபட்டு அது பிளவை ஏற்படுத்தும் என்று நபிகளார் கூறினார்கள்.

4) அளவில் மோசடி செய்தால், விலைவாசி கடுமையாக உயரும். பஞ்சம் ஏற்படும் .பஞ்சத்தின் விளைவு நீங்கள் நிறைய சம்பாதிக்கலாம் ஆனால் பரக்கத் இருக்காது. இந்த சம்பாத்தியத்தின் மூலம் நலவை ஏற்படாது. நம் முன்னோர்கள் குறைவாக சம்பாதித்தார்கள் பரக்கத்தாக வாழ்ந்தார்கள். ஆனால் இன்று நிறைய சம்பாதிக்கலாம், அந்த சம்பாத்தியத்தைக் கொண்டு அதனால் ஏற்படும் பயன்பாடுகள் குறைவாக இருக்கும். மேலும் மோசமான ஆட்சியும் உங்களுக்குச் சாட்டப்படும்.

5) முறையாக கணக்கிடப்பட்டு கொடுக்கப்படாத ஜக்காத் என்கிற ஏழை வரியினால், உலகில் வழக்கமாக பெய்ய வேண்டிய மழை இல்லாமலோ, தேவையான நேரத்தில் பெய்ய வேண்டிய மழை -காலம் தவறி தரிக்கெட்டு பெய்ந்து பாதிப்படையச் செய்யும்.

6) அல்லாஹ்வுடைய கடமைகளை நிறைவேற்றுவதில் கவனக்குறைவு ஏற்படின், எதிரிகள் மிகைப்பார்கள் . நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ.. அப்படித்தான் உங்களின் ஆட்சியாளர்கள் உங்களின் மீது சாட்டப்படுவார்கள். நாம் ஒன்றுபடுவதற்கு ஆயிரம் வழிகள் இருக்கிறது ஒரே வேதம், ஒரே நபி , ஒரே கிப்லா... ஆனால் எதிரிகளை பொறுத்தவரை அவர்கள் தங்களுக்குள்ளே பிரிவதற்கான ஆயிரம் வழிகள் இருக்கிறது. அவர்களுக்கிடையே மதத்தால், ஜாதியால், கடவுளர்களால் பிரிந்து இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் ஒன்றுகூடி நம்மை எதிர்ப்பதற்கு நம்மிடம் உள்ள குறைபாடுதான் காரணம்.

7) மனோ இச்சையின்படி சட்டங்களை மாற்றியமைத்தால், உங்களுக்கு மத்தியில் உங்களுக்குள்ளேயே குரோதம் அதிகமாகிவிடும்.
நமது நினைப்பு, பேச்சு, செயல் எல்லாம் ஒரு சக்தி ( அதிர்வு ) உற்பத்தியாக காரணமாகிறது. இந்த சக்திக்கேற்ற எதிர் சக்தி புதிய வேகம், பெறும் தன்மை அடைகிறது.
தனது எண்ணம், சொல், செயல் நன்மையை நோக்கும் போது நன்மை ஏற்படும். தீமையை நோக்கும்போது தீமை ஏற்படுகிறது
பிரபஞ்சத்தில் எல்லாமே ஒன்றுக்கொன்று தொடர்புடையது.

## செயல்களும் அதன் விளைவுகளும் 7

(பார்வையும் அதன் விளைவும்)



குர்ஆன் ஓதுவதில் ஒரு சுவை,திக்ரு செய்வதில் ஒரு சுவை, ஈமானுக்கும் ஒரு சுவை. அட , பாவங்கள் மிகைத்தவர்களுக்கு பாவம் செய்வதிலும் ஒரு சுவை இருக்கிறது. அதே மாதிரி இபாதத் செய்வதற்கும் ஒரு சுவை இருக்கிறது.

அந்த சுவையைத்தான் நபித்தோழர் ஒருவர் , "யாரசூல்லாஹ் ! இபாதத்தின் சுவையை நான் பெற்றுக்கொள்ள வேண்டும் .அதற்கு என்ன செய்ய வேண்டும் ?

அதற்கு நபிகளார் , " பார்க்கக் கூடாத தவறானப் பார்வையை விட்டும் யார் தன்னுடைய பார்வையைத் தாழ்த்திக் கொள்கிறாரோ அவர் இபாதத்தின் சுவையை பெற்றுக் கொள்வார்"

இபாதத்தின் சுவையில் திளைக்க ஆரம்பித்தால் , அந்த இன்பத்திற்கு வேறு எந்த இன்பமும் ஈடாகாது.

### எல்லா பாவங்களுக்கும் அடிப்படை தீய பார்வைதான் .

நபி (ஸல்) அவர்கள் , அலி (ரலி) அவர்களுக்கு உபதேசம் செய்யும்போது, " பார்க்கக் கூடாத இடத்தில் பார்வை பட்டு விட்டால், அந்தப் பார்வையைத் தொடராதீர்கள்.

பட்ட பார்வையை அல்லாஹ் மன்னிப்பான் தொடரும் பார்வைக்கு அல்லாஹ் தண்டனை கொடுப்பான். முதல் பார்வையை மன்னித்தான் . இரண்டாம் பார்வைக்கு அனுமதி மறுத்தான் .

“நபியே! நம்பிக்கையாளர்களான ஆண்களுக்கு நீங்கள் கூறுங்கள், அவர்கள் தங்கள் பார்வைகளை கீழ்நோக்கியே வைத்திருக்கவும். இது அவர்களை பரிசுத்தமாக்கி விடும்” (திருக்குர்ஆன் 24:30).

தன் வாழ்நாளில் ஒரு மனிதன் பாவத்தில் இருந்து விடுபட்டு வாழ வேண்டும் என்றால், கண்களையும் மனதையும் கட்டுப்பாட்டில் வைத்துக்கொள்ள வேண்டும். கண்கள் காணும் காட்சிகள், மனதில் ஆசைகளாக மாறி, அதனை அடைய முற்படும்போது தான், மனிதன் பாவச்சேற்றில் சிக்கிக்கொள்கிறான்.

கண்களில் படும் அனைத்தையும் அடைந்துவிட வேண்டும் என்ற சுயநலமும், பேராசையும் தான் மனிதனின் பாவத்திற்கு காரணமாகின்றது. அதனை அல்லாஹ் அறிந்தவனாக இருக்கிறான். இதையே திருக்குர்ஆனில் அல்லாஹ் இவ்வாறு குறிப்பிடுகின்றான்:

‘மனிதர்களின் கண்கள் செய்யும் சூதுகளையும், உள்ளங்களில் மறைத்து இருப்பவைகளையும் இறைவன் நன்கறிவான்’ (குர்ஆன் 40:19).

தவறான பார்வைகளை தவிர்த்தாலே மனங்களும் அதன் எண்ண ஓட்டங்களும் நம் கட்டுப்பாட்டில் வந்துவிடும். அதற்கான வழிமுறைகளையும் அல்லாஹ் திருக்குர்ஆனில் அழகாக குறிப்பிடுகின்றான்:

“நபியே! நம்பிக்கையாளர்களான ஆண்களுக்கு நீங்கள் கூறுங்கள், அவர்கள் தங்கள் பார்வைகளை கீழ்நோக்கியே வைத்திருக்கவும். இது அவர்களை பரிசுத்தமாக்கி விடும்” (திருக்குர்ஆன் 24:30).
அதேபோன்று பெண்களையும் இவ்வாறு எச்சரிக்கின்றது திருமறை:
“நபியே! நம்பிக்கை உள்ள பெண்களுக்கும் நீங்கள் கூறுங்கள், அவர்களும் தங்கள் பார்வையை கீழ்நோக்கி வைத்துக் கொள்ளட்டும், தங்கள் கற்பையும் பாதுகாத்துக் கொள்ளட்டும்” (திருக்குர்ஆன் 24:31).
பெண்களுக்கு பார்வையை தாழ்த்திக் கொள்ளுங்கள் என்ற எச்சரிக்கையோடு மட்டும் விட்டுவிடவில்லை தங்கள் கற்பை பாதுகாத்துக் கொள்ளட்டும் என்று சேர்த்தே எச்சரிக்கிறது திருக்குர்ஆன்.

ஒருவரது பார்வை தற்செயலாக ஒரு பெண்ணின் மேல் விழுந்து விட்டாலும், அது அவன் மனதில் சஞ்சலங்களை ஏற்படுத்தாத வகையில் அந்தப் பெண்கள் தாங்கள் அணியும் ஆடைகளை அமைத்துக் கொள்ள வேண்டும். இதனை ஒரு பெண் கவனத்தில் கொள்ளும்போது அவளும் பாதுகாப்பு பெறுகிறாள், பாவத்தை தூண்டும் செயலிலிருந்து மற்றவர்களையும் தடுத்து விடுகின்றாள்.இந்த அறிவுரைகளை பின்பற்றும்போது, பாவங்கள் நிகழாதவண்ணம் பரிசுத்தமான நிலை அங்கே உருவாகிவிடும்.
இந்த கட்டளைகளை மீறும் மனித குலத்திற்கு பெரும் தண்டனை மறுமை நாளில் காத்திருக்கிறது என்றும் இறைவன் எச்சரிக்கின்றான். மறுமைநாளில் கேள்வி கணக்கு கேட்கப்படும் சமயத்தில் அவனிடமிருந்து பதிலை அல்லாஹ் எதிர்பார்ப்பதில்லை. காரணம்
அவர்களின் வாய்களுக்கு முத்திரை வைக்கப்பட்டு விடும், அவர்களின் கண்களும் செவிகளும், தோல்களும் பேச ஆரம்பிக்கும். மனிதன் செய்த பாவங்களை அவனின் ஒவ்வொரு உறுப்பும் சாட்சியாக விவரிக்கும்போது மனிதனால் அதை மறுக்க முடியாது.
“அல்லாஹ்வுடைய எதிரிகளை நரகத்தின் பக்கம் ஒன்று சேர்க்கப்படும் நாளில் (அதன் சமீபமாக வந்ததும்) அவர்கள் (விசாரணைக்காக நல்லோரில் இருந்து) பிரித்து நிறுத்தப்படுவார்கள்.
அச்சமயம் (பாவம் செய்த) அவர்களுக்கு விரோதமாக அவர்களுடைய செவிகளும், அவர்களுடைய கண்களும், அவர்களுடைய (உடல்) தோல்களும் அவைகள் செய்தவைகளைப் பற்றி சாட்சி கூறும்” என்று திருக்குர்ஆன் (41:19,20) எச்சரிக்கை செய்கின்றது.

## செயல்களும் அதன் விளைவுகளும் 8

(பார்வையும், சிந்தனையும் )

" மண்ணுலகிலும், விண்ணுலகிலும் நிறைந்து கிடப்பதாக தோன்றும் அத்தனை பொருள்களுக்கும் என்னுடைய மனமே உருவம் கொடுக்கின்றது. என்னால், என் மனதால் அதை உணரப்படாத வரையில் அவற்றின் உருவங்கள் அனைத்தும் அருவமே " என்கிறார் பொருளைப் பற்றிய சிந்தனையில் ஒரு தத்துவஞானி.
அதே மாதிரி மெய்ஞ்ஞானியின் பார்வை என்பது அது ஈமானியப் பார்வை என்கிறார்கள். உதாரணமாக ..
ஒரு நபித்தோழர் இரண்டு மாட்டை வண்டியில் பூட்டிக் கொண்டு பயணம் புறப்படுகிறார் . பாதி வழியில் இரண்டில் ஒரு மாடு படுத்துக் கொண்டு வண்டியை இழக்க மறுக்கிறது .

அந்த நபித்தோழருக்கு கோபம் அந்த மாட்டை ரொம்பவும் அடித்து விடுகிறார். அடித்து விட்டு கொஞ்ச நேரத்தில் தேம்பி தேம்பி அழுகிறார். காரணம் கேட்டபோது ,
" இந்த மாட்டிற்கு நான்தான் எஜமான் என்ற காரணத்தால் , என் சொல்லுக்குக் கட்டுப்படாததால் அடிக்கிறேன். இதேபோல் என் ரப்பு மறுமை நாளில் அவன் சொல்லை கேட்காததனால் என்னை அடிப்பானே நான் என்ன செய்வது ? என்ற சிந்தனை என் மனதில் வந்தது. திடுக்குற்று கவலைப்பட்டு அழுகிறேன் " என்றார்கள்.

மூமின்களாகிய நமக்கும் ஈமானியப் பார்வை வேண்டும்.

ஒருவரை அல்லது ஒரு பொருளை எப்படிப் பார்க்க வேண்டும் என்ற அணுகுமுறையின் காரணமாக நேர் மாற்றமாக கூட மாறிவிடும். உதாரணமாக
நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை கொலை செய்ய வந்தவர்தான் உமர் கத்தாப் (ரலி) அவர்கள். இதே உமர் கத்தாப் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் வபாத்தின் போது, "யாராவது நபிகளாரை மரணித்துவிட்டார்கள் என்று சொன்னால் அவர்களை மரணிக்கச் செய்து விடுவேன் " என்று உருவிய வாளுடன் வீற்றிருந்தார்கள் .
வயதான மூதாட்டி தன் தட்டு முட்டு சாமான்களை பெரிய மூட்டையாக கட்டி தூக்க முடியாமல் தூக்கிச் செல்வதை , நபி (ஸல்) அவர்கள் பார்த்து , மூதாட்டியின் சுமை தான் வாங்கி தலையில் சுமந்து கொண்டு செல்கிறார்கள்
குறிப்பிட்ட இடம் வந்ததும் , அந்த மூதாட்டியிடம் நபிகளார்
" எதற்கம்மா ஊரை காலி செய்து செய்து விட்டு போகிறீர்கள் ?"
" யாரோ ஒரு ஆள் முஹம்மதாம். அவர் இதுவரை கேள்விப்படாத செய்திகளையெல்லாம் சொல்கிறாராம். எனவே அவருடைய தொந்திரவிலிருந்து பாதுகாப்பு
வேண்டிதான் ஊரை காலி செய்து போகிறேன். ஆமா இவ்வளவு உபகாரமெல்லாம் செய்கிறீயே நீ யாரு ? "
" நான்தான் அந்த முஹம்மது "
அந்தவுடனேயே இஸ்லாத்தை தழுவி, தான் புறப்பட்ட சொந்த ஊருக்கு திரும்புகிறார்கள்.
நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மதீனா நகரில் தங்கி ஏகத்துவத்தைப் போதித்து வந்தார்கள். ஆரம்ப காலத்தில் அவர்கள் பல துன்பங்களைச் சந்தித்தார்கள்

அன்று மதீனா நகரில் பல்வேறு பிரிவைச் சேர்ந்தவர்கள் வாழ்ந்துவந்தனர். அவர்களின் இறை நம்பிக்கையும் வேறுவேறாக இருந்தது. அதில் நபி(ஸல்) அவர்களை வெறுத்தவர்களில் ஒரு மூதாட்டியும் இருந்தார். அம்மூதாட்டி ஒரு வீட்டின் மாடியில் தனியாக வசித்து வந்தார். தினமும் காலையில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அவளது வீட்டைக் கடந்து செல்லும் போது அந்த மூதாட்டி மாடியில் இருந்து குப்பைக் கூடையைக் கவிழ்த்து நபிகளார் மீது கொட்டுவார்.

பல நாட்கள், பல மாதங்களாக இது தொடர்ந்தது. ஆனால், பொறுமையின் உருவமான நபி (ஸல்) அவர்கள் அந்த மூதாட்டியின் இச்செயலைச் சகித்துக்கொண்டார்கள். அவர்களுக்குச் சிறு வருத்தம்கூட ஏற்படவில்லை. நபி (ஸல்) அவர்கள் தனது பாதையை மாற்றியோ குறிப்பிட்ட நேரத்துக்கு முன்னதாக அவ்வீதியைக் கடந்தோ அம்மூதாட்டி தரும் துன்பத்தைத் தவிர்த்திருக்கலாம். ஆனால், அவர் அவ்வாறு செய்யவில்லை. அம்மூதாட்டியைத் தவிர்த்துச் சென்றால், அவள் மனம் ஏமாற்றம் அடையக்கூடும் என்று நினைத்து நபி (ஸல்) அவர்கள் குறிப்பிட்ட அதே பாதையில் குறிப்பிட்ட அதே நேரத்தில் சென்றார்.

அந்த மூதாட்டியின் வீட்டருகே வந்தவுடன் அவள் குப்பையைச் சரியாகத் தம் மீது கொட்டுவதற்கு வசதியாக நபி (ஸல்) அவர்கள் அசையாமல் நிற்பார்கள் . அவர்கள் மீது குப்பையைக் கொட்டி அவமானப்படுத்துவதில் அந்த மூதாட்டிக்குப் பேரானந்தம். அவர் அந்தப் மூதாட்டியின் மகிழ்ச்சியைக் குலைக்க விரும்பவில்லை. எனவே குப்பையை மலர்க் குவியலாகக் கருதிப் பெருமையுடன் ஏற்றுக்கொள்வார்கள்.
ஒரு நாள் எப்போதும் போல நபி (ஸல்) அவர்.கள் அந்த வீட்டருகே வந்து நின்றார்கள் . குப்பை தூவப்படும் என்று எதிர்பார்த்தார்கள்.ஆனால், அவ்வாறு நடக்கவில்லை. அவர்கள் முதல் முறையாக நிமிர்ந்து மேலே பார்த்தார்கள். அம்மூதாட்டி அங்கு தென்படவில்லை. நபி (ஸல்) அவர்களுக்குப் பெரும் வியப்பு ஏற்பட்டது.

நபி (ஸல்) அவர்கள் அருகே இருந்தவர்களிடம் அம்மூதாட்டியைப் பற்றி விசாரித்தார்கள் . முந்தைய தினத்திலிருந்தே அவர் தென்படவில்லை என்று அண்டைவீட்டார் பதில் தந்தனர்.

அந்த மூதாட்டியின் வீட்டை விசாரித்த நபி (ஸல்) அவர்கள் படியேறிச் சென்றார்கள். அங்கே அந்தப் பெண்மணி நோயுற்றுப் படுக்கையில் கிடந்தார். நோயின் தன்மையால் அவள் வலுவிழந்து மிகவும் களைப்பாகக் காணப்பட்டாள். அவளது இந்த நிலையைக் கண்ட நபி (ஸல்) அவர்களின் கண்களில் கண்ணீர் துளிர்த்தது. கருணை உள்ளம் கொண்ட நபி (ஸல்) அவர்கள் அந்த மூதாட்டிக்கு முதலில் தண்ணீர் கொடுத்தார்கள். பின் மருந்துகள் கொண்டுவந்து கொடுத்தார்கள். எழுந்து நடமாடும் வரை தினமும் அவளுக்குத் தொண்டுகள் செய்தார்கள்.

பின் அந்த மூதாட்டி, நபி (ஸல்) அவர்களிடம், "தினமும் நான் உங்களை அவமதித்தேன். உங்கள் உள்ளத்தை நோகச் செய்தேன். நீங்கள் போதிக்கும் மதம் வேறு எனது மதம் வேறு என்பதால் நான் அவ்வாறு நடந்துகொண்டேன். ஆனாலும் நீங்கள் என்னைத் தேடி வந்து எனக்குச் சேவை செய்கிறீர்கள். என்னைச் சேர்ந்தவர்களே என்னைப் பற்றிக் கவலைப்படாத போது நீங்கள் என்மீது கருணை காட்டினீர்கள்". உண்மையிலேயே நீங்கள் உயர்ந்தவர்தான். உயர்ந்தவராகிய நீங்கள் போதிக்கும் மதமும் உயர்ந்ததாகத்தான் இருக்கும்.என்னை மன்னியுங்கள்,"என்று கூறினார். அன்றைக்கே நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் மார்க்கமான இஸ்லாத்தை ஏற்றார்கள்

## செயல்களும் அதன் விளைவுகளும் 9

( இம்மைக்கும், மறுமைக்கும் வெற்றியைப் பெற்று தரும் இரண்டே இரண்டு செயல்கள் )

அல்லாஹ்வால் படைக்கப்பட்ட மிக சிறந்த ஞானவான்கள் பலர் இருப்பினும், அவர்களில் இருவரைப் பற்றிய குறிப்புகள் மட்டுமே திருக்குர்ஆனில் பதிவு செய்யப்பட்டுள்ளது.
ஒருவர் 'ஹிள்று (அலை) என்ற மகான். மூஸா நபி காலத்தில் இவர் வாழ்ந்தவர். மற்றொருவர் 'லுக்மான் (அலை)'. இவர் தாவூது நபி காலத்தில் வாழ்ந்த ஞான மாமேதை .

லுக்மான் அபீசீனியா நாட்டைச் சார்ந்தவர். அடிமை . கிமு 1110-ல் கருப்பர் இனத்தில் பிறந்தவர். அல்லாஹ்வின் மிகப்பெரும் கருணையினால் ஞானம் பெற்றவர். 560 வருட கால நீண்ட ஆயுளையும் கொடுத்திருந்தான் .அவரைப் பற்றிய செய்தியைச் சொல்வதற்காக ஒரு சூராவையே அவர்களின் பெயரிலேயே - "லுக்மான் " திருக்குர்ஆனில் இறக்கி அருளினான் அல்லாஹ்.
லுக்மான் அலை அவர்கள் கூறுகிறார்கள்: " நான் ஆயிரக்கணக்கான நபிமார்களுக்கு சேவகம் புரிந்து இருக்கின்றேன். அத்தனை நபிமார்களிடமிருந்து நான் கற்ற ஞானத்தை மிகச் சுருக்கமாக இரண்டே விஷயங்களில் கூறுகிறேன். இந்த இரண்டு விஷயத்தை என்றுமே மறக்கக் கூடாது .இந்த இரண்டும் இம்மைக்கும், மறுமைக்கும் வெற்றியைப் பெற்று தரும்

**1) அல்லாஹ்வை மறந்து விடக்கூடாது**

**( என் ரப்பு என்னை பார்க்கிறான். என்னை அவன் கண்காணிக்கின்றான். அவனது பார்வையை விட்டும் நான் தூரமானவன் இல்லை .அவனுடன் நாம் கொண்டுள்ள தொடர்பு எக்காரணத்தாலும், எக்காலத்திலும் துண்டித்து விடக்கூடாது )**

**2) மரணத்தை ஒருபோதும் எப்போதும் மறக்கக்கூடாது**
**( பூமியில் பிறந்தவர் என்றாவது ஒருநாள் இறந்துதான் ஆகவேண்டும். இறக்காமல் இருக்க வேண்டுமென்றால்,, அவர் பிறக்காமல் இருக்க வேண்டும், பிறந்தால் இறந்துதானே ஆகவேண்டும். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறுகிறார்கள்: "மனிதனுடைய கற்பனைகளையெல்லாம் தவிடு பொடியாக்க கூடிய மரணத்தைப் பற்றி சிந்தியுங்கள் )**

மேற்கண்ட இந்த இரண்டு செயல்களும் மூமின்களின் வாழ்வில் என்றைக்குமே மறக்க கூடாது. இந்த இரண்டும் இம்மையிலும், மறுமையிலும் நல்ல விளைவுகளைப் பெற்றுத் தரும்
ஒரு முறை லுக்மான் ஹக்கீம் அவர்களைச் சுற்றி பலர் அமர்ந் திருந்தனர். அவர்களுக்கு போதனை செய்து கொண்டிருந்தார். அப்போது அவர்களை கடந்து சென்ற ஒருவர் லுக்மான் சொன்ன போதனைகளில் ஈர்க்கப்பட்டு நெருங்கி வந்து பார்த்தார். இவர் ஏற்கனவே நமக்கு தெரிந்தவர் போல் இருக்கிறது. ஆனால் அவருக்கு இத்தனை ஞானம் இருக்க வாய்ப்பில்லை என்று எண்ணியவராக, லுக்மானிடமே தனது சந்தேகத்தை கேட்டார். இதோ அந்த உரையாடல்...
'நீங்கள் கொஞ்ச காலங்களுக்கு முன்பாக ஒருவரிடம் அடிமையாக இருந்தீர்கள் அல்லவா?'.
'ஆம், நான் அடிமையாகத் தான் இருந்தேன்'.
'அப்போது மலையடிவாரத்தில் ஆடு மேய்த்துக் கொண்டிருந்தது நீங்கள் தானே?'.
'ஆம்! நான் அதே மனிதன் தான்'.
'அப்படியானால் இத்தனை ஞானத்தை எவ்வாறு பெற்றுக்கொண்டீர்கள்?'
'அல்லாஹ்தான் எனக்கு இந்த ஞானத்தை அருளினான்'.
'அல்லாஹ் அப்படி அருள்வதற்கு உங்களிடம் இருந்த பண்புகள் தான் என்ன?'
'அதனை அல்லாஹ்வே அறிந்தவனாக இருக்கின்றான். எந்த நற்குணத்தைக் கொண்டு என்னை ஏற்றுக்கொண்டானோ நான் அறியேன். ஆனால் என்னிடம் குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய சிறந்த நான்கு பண்புகள் உண்டு.

1) அல்லாஹ்வின் மீது அசைக்க முடியாத நம்பிக்கை, நடப்பது எல்லாம் அவனால் தான் என்று ஏற்றுக்கொள்வது, தவறு செய்தால் இறைவன் மிகவும் கடுமையாக தண்டிப்பான் என்ற அச்ச உணர்வு கொண்டிருத்தல்,

2) வாக்கில் சத்தியம், வாழ்வில் உண்மைத்தன்மை, பொய் கலக்காத உயர்ந்த வாழ்வு,

3) அமானிதத்தைப் பாதுகாத்தல். அது பொருளாக இருந்தாலும், செய்தியாக இருந்தாலும், ரகசியமோ, பிறரின் வாழ்க்கைப் பிரச்சினையோ, எதுவாக இருந்தாலும் அமானிதத்தைப் பேணி பாதுகாத்தல்,

4) அல்லாஹ்வின் நினைவை மறக்கச் செய்யும், அறிவை மழுங்கச் செய்யும் வீணான செயல்களில் இருந்து தவிர்த்திருந்தல்... இந்த நான்கு பண்புகளையும் நான் கடைப் பிடித்து வருகிறேன்'. என்று லுக்மான் (அலை) கூறினார்கள்

இதுபற்றி குர்ஆனில் அல்லாஹ் ...
"இன்னும், நாம் லுஃக்மானுக்கு நிச்சயமாக ஞானத்தைக் கொடுத்தோம். "அல்லாஹ்வுக்கு நீர் நன்றி செலுத்தும்; ஏனென்றால் எவன் நன்றி செலுத்துகிறானோ அவன் தன(து நன்மை)க்காவே நன்றி செலுத்துகிறான்; இன்னும்

எவன் நிராகரிக்கிறானோ (அவன் தன்னையே நட்டப்படுத்திக் கொள்கிறான்) - நிச்சயமாக அல்லாஹ் (எவரிடத்திருந்தும்) தேவையில்லாதவன்; புகழப்படுபவன்". (குர்ஆன் : 31:12)

## செயல்களும் அதன் விளைவுகளும் 10

( மனிதனின் நான்கு கெட்ட குணங்கள் )

" இன்னும், இப்ராஹீம்: "என் இறைவா! இறந்தவர்களை நீ எவ்வாறு உயிர்ப்பிக்கிறாய் என்பதை எனக்குக் காண்பிப்பாயாக!" எனக் கோரியபோது,
அவன்,"நீர் (இதை) நம்ப வில்லையா?" எனக் கேட்டான்;
"மெய்(யாக நம்புகிறேன்!) ஆனால் என் இதயம் அமைதிபெறும் பொருட்டே (இவ்வாறு கேட்கிறேன்)" என்று கூறினார்
"(அப்படியாயின்,) பறவைகளிலிருந்து நான்கைப்பிடித்து, (அவை உம்மிடம் திரும்பி வருமாறு) பழக்கிக்கொள்ளும்; பின்னர்(அவற்றை அறுத்து) அவற்றின் பாகத்தை ஒவ்வொரு மலையின் மீது வைத்து விடும்; பின், அவற்றைக் கூப்பிடும்; அவை உம்மிடம் வேகமாய்(ப் பறந்து) வரும்; நிச்சயமாக அல்லாஹ் மிகைத்தவன், பேரறிவாளன் என்பதை அறிந்து கொள்ளும்" என்று (அல்லாஹ்) கூறினான். (குர்ஆன் : 2:260)
நபி இப்றாஹீம் (அலை) அவர்கள் இறந்த ஒருவரின் சடலத்தைக் கண்டார். அதைப் பறவைகளும் கொத்தி தின்று கொண்டிருந்தன. மீன் இனங்களும் தின்று கொண்டிருந்தன. இக்காட்சியைக் கண்ட இப்றாஹீம் நபியின் உள்ளத்தில் ஓர் எண்ணம் எழுந்தது.
"பல உயிரினங்களின் வயிற்றில் பிரிக்கப்பட்ட இந்த உடலை அல்லாஹ் எப்படி உயிர்ப்பிப்பான்?" என்பதுதான் அது!
இந்த எண்ணத்தோடு இப்றாஹீம் நபி அல்லாஹ்விடம், "என் இறைவா! இறந்தவர்களை எப்படி உயிர்ப்பிக்கின்றாய் என்று எனக்குக் காட்டுவாயா?" என்று கேட்டார்கள்.
"இப்றாஹீம்! நீ நம்பவில்லையா?" என அல்லாஹ் கேட்டான்.
"இல்லை... இல்லை... நான் நம்புகின்றேன். இதைக் கண்ணாறக் கண்டு உள்ளம் அமைதியுற விரும்புகின்றேன்" என்றார்கள்.
அதற்கு அல்லாஹ் 1)மயில் 2) கழுகு 3) சேவற்கோழி 4) காகம் இந்நான்கு பறவைகளை எடுத்து நன்கு பழக்கச் சொன்னான். இப்றாஹீம் நபி நான்கு பறவைகளை எடுத்து வளர்த்தார்கள். பின்னர் அவற்றை அல்லாஹ் கூறிய விதத்தில் அறுத்து துண்டு துண்டாக்கினார்கள்.
பறவையின் பாகங்கள் அனைத்தையும் ஒன்றாக் கலந்தார்கள். பின்னர் கலந்த அவற்றின் மாமிச உறுப்புக்களை நான்கு பகுதிகளாகப் பிரித்து நான்கு மலைகளின் மீது வைத்தார்கள். பறவைகளின் தலைகளை மட்டும் தனது கையில் வைத்துக் கொண்டார்கள். அதன் பின்னர் அந்தப் பறவைகளின் பெயர் கூறி அழைத்தார்கள்.
என்ன ஆச்சரியம்! அவர் பெயர் கூறி அழைத்ததும் ஒவ்வொரு மலையில் இருந்தும் துண்டு போடப்பட்ட இறைச்சி அவற்றின சிறகுகள், கால் எல்லாம் ஒன்று சேர்ந்து மீண்டும் பழைய பறவையாகி வந்து இப்றாஹீம் நபியின் கையில் இருந்த தலையுடன் இணைந்தன. இவ்வாறு நான்கு பறவைகளும் உயிர் பெற்ற அற்புதத்தை இப்றாஹீம் நபி கண்ணாறக் கண்டு பேராணந்தம் அடைந்தார்கள்.
இவ்வாறுதான் இறந்து அடக்கப்பட்டவர்கள், எரிக்கப் பட்டவர்கள், கடலில் மீன்களுக்கும், காட்டில் விலங்குகளுக்கும் இறையானவர்கள் அனைவரையும் அல்லாஹ் உயிர் கொடுத்து எழுப்புவான்.
ஏன் இந்த நான்கு இனப் பறவைகள் தேர்ந்தெடுக்கப்பட்டன ?

இந்த நான்கு இன பறவைகள் மட்டும் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு காரணம் உண்டு. சில பறவைகளின் தன்மைகள் மனிதனுக்கும் இருக்கின்றன. அதனால் மனிதன் உயர்நிலை அடைவதிலிருந்து தடுக்கப்படுகின்றான் .அவற்றை அறுத்தெறிந்துவிடின், படிப்படியாக உயர் அந்தஸ்தை அடைகின்றான்.
தன்னை அலங்கரித்தல், தன்னை விட சிறந்தவர் கிடையாது என கர்வம் கொள்ளுதல் என்ற இரு தன்மைகள் மனிதனில் ஏற்படுகின்றன. இவ்விரு தன்மைகளும் மயிலுக்கு உரியவை. இவை இரண்டும் இருக்கும் வரை மனிதன் உயர்வடைய முடியாது. ஆகையால் இவற்றை மனதைவிட்டு அறுத்தெறிய வேண்டும் என்பது மயிலைத் தேர்ந்தெடுக்க காரணம் ஆகும்.
சதா உண்பதையே கவனமாக கொண்டிருப்பவனே கழுகுக்கும், காம நுகழ்ச்சியிலேயே சதாவும் மூழ்கி இருப்பவனைச் சேவலுக்கும் , அதிக பேராசைக்காரனை காகத்திருக்கும் ஒப்பிடுவது உண்டு.
ஆனால் , ஒவ்வொரு மனித உடலிலும் நான்கு பறவைகள் சதா வாழ்கின்றன.
ஒவ்வொரு இரவும் அவை கொல்லப்பட்டு நான்கு உடல்கள் ஒன்றோடு ஒன்று கலக்கின்றன.
ஒவ்வொரு காலையிலும் அவை உயிர்ப்பிக்கப்பட்டுத் தனித்தனி கூண்டுகளில் அடைக்கப்படுகின்றன.
இத்தன்மைகள் அந்தந்த பறவைகளில் இருக்கின்றன. இத்தகைய தன்மைகள் கைக்கொண்டிருக்கிற எந்த மனிதனும் உயர் அந்தஸ்தை பெற முடியாது. அவற்றை மனதிலிருந்து அறுத்தெறிய வேண்டும் என்பதை தத்துவார்த்தமாக இந்த நான்கு பறவைகள் மூலம் சுட்டிக் காண்பிக்கப்படுகிறது.

## செயல்களும் அதன் விளைவுகளும் 11

( அலங்காரமும் , அகங்காரமும்)
" செல்வமும், பிள்ளைகளும் இவ்வுலக வாழ்க்கையின் அலங்காரங்களேயாகும்; என்றும் நிலைத்து நிற்கக் கூடிய நற்கருமங்களே உம்முடைய இறைவனிடத்தில் நன்மைப் பலனுடையவையாகவும், (அவனிடத்தில்) நம்பிக்கையுடன் ஆதரவு வைக்கத்தக்கவையாகவும் இருக்கின்றன".
(குர்ஆன் : 18:46)
மனிதன் பெருமை அடிப்பதற்கு உபயோகப்படுபவை பொருளும், சந்ததியும் ஆகும். அதிலும் அரபியர்கள் தங்களுடைய சந்ததிகளாக ஆண் மக்களைப் பெற்றிருப்பது இன்னும் கூடுதல் கௌரமாகப் பார்க்கப்படுகிறது.
இந்த இரண்டையும் பெற்றவன் இவற்றை பெறாதவனைக் குறைவாக கருதுகிறான். தான் அவனை விட மேம்பட்டவன் என்ற மனப்பான்மை எழுந்து அகங்காரம் ஏற்படுகிறது.
ஆனால் இவை இரண்டையும் அவன் சற்று சிந்தித்துப் பார்த்தால்,அவை வெறும் அலங்காரப் பொருட்கள்தாம் விரைவில் அழிந்து விடும் என்பதை அவனால் உணர்ந்து கொள்ள முடியும் .
இதனை உணர்த்தும் பொருட்டே, தான் பார்த்து பார்த்துக் கட்டிய பங்களாக்களான எல்லா பொருள்களும், தன்னை பெருமைப்படுத்திக் கொள்ள தான் பெற்ற மக்களும் இவ்வுலக வாழ்வில் அலங்காரங்கள் என இவ்வசனத்தில் கூறப்படுகிறது .
பொருள் இன்று ஒருவனிடம் இருக்கிறது. நாளை வேறு ஒருவனிடம் மாறிவிடுகிறது. இவ்வாறு மாறக் கூடியதை எவரும் தமக்கே சொந்தம் என்று எண்ண முடியாது. சொந்தம் என்றால் அவரை விட்டு அது எக்காலத்திலும் அகன்று விடக் கூடாது. ஆனால் அது அப்படி இருப்பதில்லை. இந்நிலையில் அதனைக் கொண்டு அவன் எப்படி பெருமை அடிக்க முடியும் ?
இவ்வாறுதான் அவன் பெற்ற மக்களும் இருக்கின்றனர். சில காலம் வரைதான் அவர்கள் அவனுக்கு அலங்காரமாக தோற்றமளிக்கின்றனர். அவர்களுக்கு சுயபலம் ஏற்பட்டு விட்டால், அவனை அவர்கள் மதிப்பதில்லை. தங்கள் நோக்கப்படி நடக்க ஆரம்பித்து விடுகின்றனர். அதனை அவன் விரும்பினாலும்

விரும்பாவிட்டாலும் அவர்கள் அதனைப் பொருட்படுத்தவில்லை. ஆகையால் இவர்களைக் கொண்டும் அவன் பெருமை அடிக்க முடியாது.
அன்றியும் இவையெல்லாம் இவ்வுலகத்தோடு நின்று விடக் கூடியவை. மறுமையில் அவனுக்கு உதவக் கூடியவையல்ல. இதனால்தான் இவ்வசனத்தில் ஆரம்பத்தில் இவ்வுலக வாழ்வின் அலங்காரங்கள் என்று கூறப்பட்டுள்ளது.
"அறிந்து கொள்ளுங்கள்: “நிச்சயமாக இவ்வுலக வாழ்க்கை விளையாட்டும், வேடிக்கையும், அலங்காரமுமேயாகும்; மேலும் (அது) உங்களிடையே பெருமையடித்துக் கொள்வதும்; பொருள்களையும், சந்ததிகளையும் பெருக்குவதுமேயாகும்;
(குர்ஆன் : 57:20)
பின்னே ஏன் அவன் செல்வத்தையும் , சந்ததிகளையும் கொடுத்தான் ?
அவைகளை காரணமாகத்தான் கொடுத்தான்.
" நிச்சயமாக அல்லாஹ் நம்பிக்கையாளரின் உயிர்களையும், உடைமைகளையும் வாங்கிக்கொண்டான். அவர்களுக்குச் சுவனபதி என்பதற்காக."( குர்ஆன் : 9 : 111 )
" உன் அன்பையும்,சுயநலமற்ற உணர்வுகளையும் நான்தான் வாங்கிக்கொள்கிறேன். உன்னைச் சுற்றி உள்ளோர் அல்லர்.
"அவர்கள் " -உன் மீது அக்கறை காட்ட வேண்டும் என்று நீ எதிர்பார்க்கிறாயா ? "
நானும், அவர்களும் என்று " இரண்டு " நுகர்வோர் வேண்டுமா உனக்கு ?
பிரபலமடைய நீ எதைச் செய்தாலும், அது கால விரயமே.
அவர்கள் பார்க்கிறார்கள், முகம் திருப்பிக்கொள்கிறார்கள். அது உன்னை வருத்தப்படுத்துகிறதா ?
அப்படி இருக்காதே !
என்றைக்கும் உனக்கான நுகர்வோர் நான் ஒருவன் மட்டுமே ! "

**செயல்களும் அதன் விளைவுகளும் 12**
(விருந்தாளியும் முஷிபத்தும்)
ஒரு பெண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்களிடம் வந்து, தன் கணவரைப் பற்றி குறைப்பட்டுக் கொண்டார்.
“அல்லாஹ்வின் தூதர் அவர்களே! என் கணவர் ஏராளமான விருந்தினர்களை அழைத்து வருகிறார். நான் அவர்களுக்கு உணவு தயாரித்து தயாரித்து மாய்ந்து போய்விட்டேன்.”
நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்கள் எதுவுமே பேசவில்லை. அமைதியாக இருந்தார்கள்.
அப்பெண்மணி போய்விட்டார்.
சில நாட்களுக்குப் பிறகு நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்கள் அந்தப் பெண்ணின் கணவரை அழைத்துக் கூறினார்கள்: ''நான் இன்று உங்கள் வீட்டுக்கு விருந்தினராக வரப் போகிறேன்''
அவர் மகிழ்ச்சியின் எல்லைக்கே போய் விட்டார்.
தன் இல்லத்தை நோக்கி ஓடோடிச் சென்றார். அந்த மகிழ்ச்சியான செய்தியை தன் மனைவியிடம் கூறினார். அப்பெண்மணியும் மகிழ்ச்சியால் தன்னை மறந்தார். அந்த மாநபியின் வருகைக்காக வீட்டில் ஒரு துளி மீதம் வைக்காமல் அருமையாய் சமையல் செய்து முடித்தார்.
அந்த அற்புதமான விருந்துபசாரத்திற்கு பிறகு நபியவர்கள் அப்பெண்ணின் கணவரிடம் கூறினார்கள்: ''நான் எந்த வாயில் வழியாக வெளியேறிச் செல்கிறேனோ அந்த வாயிலை உங்கள் மனைவியைக் கவனிக்கச் சொல்லுங்கள்''

அவருடைய மனைவி ஆவலுடன் நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்கள் வெளியேறிச் செல்லும் வாசல் வழியே நோக்கினாள். அதிர்ச்சியால் அப்படியே உறைந்தே போய்விட்டார் அப்பெண்மணி!.
ஆம்!. அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்கள் சென்ற வழியாக அவர்களின் பின்னால் சகல வகையான தீமைகளும், சோதனைகளும், வேதனைகளும் வீட்டை விட்டு வெளியேறிக் கொண்டிருந்தன.
இதைக் கண்ட அப்பெண்மணி அப்படியே மயக்கமுற்று வீழ்ந்தாள். அவர் தெளிவுற்றதும் கண்மணி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்கள் அப்பெண்மணியிடம் கூறினார்கள்: "ஒவ்வொரு முறை விருந்தினர்கள் உங்கள் வீட்டை விட்டு வெளியேறும் போதும் இதுவே நடந்தது. அத்தனை வகையான தீமைகளும், சோதனகளும், வேதனைகளும், உங்கள் வீட்டை விட்டும் வெளியேறிச் சென்றுவிட்டன.
•••••••••••••••••••••••••••••••••••••••••••••••••••••
திருக்குறள் கூறும் விருந்தோம்பலின் சிறப்பு:-
திருவள்ளுவர் விருந்தோம்பலுக்கு என்று தனி அதிகாரம் படைத்து அதில் உள்ள பத்து குறள்களில் விருந்தோம்பலின் முக்கியத்துவத்தைக் குறிப்பிட்டுள்ளார்.
அவையாவன:
1. மனைவியுடன் வீட்டில் இருந்து பொருள்களைப் பாதுகாத்து இல்வாழ்க்கை நடத்துவதெல்லாம் விருந்தினரைப் போற்றி உதவி செய்யும் தன்மையுடையதாகும்.
2. விருந்தாக வந்தவர் வீட்டின் வெளியே இருக்கத் தான் மட்டும் உண்பது, சாவா மருந்தாகிய அமிழ்தமே என்றாலும் அது விரும்பத்தக்கது அன்று.
3. நாள்தோறும் தன்னை நாடிவரும் விருந்தினரைப் போற்றுகின்றவனுடைய வாழ்க்கை துன்பத்தால் வருந்திக்கெடுதல் என்பது என்றுமே இல்லாத ஒன்றாகும்.
4. முகமலர்ச்சியுடன் நல்ல விருந்தினரைப் போற்றுகின்றவனுடைய வீட்டில் திருமகள் மனம் மகிழ்ந்து வாழ்வாள்.
5. விருந்தினரைப் போற்றி உணவிட்டபின் எஞ்சியதைத் தான் உண்ணுகின்றவனுடைய நிலத்தில் விதைக்காமலேயே பயன் விளையும்.
6. வந்த விருந்தினரைப் போற்றி இனிவரும் விருந்தினரை எதிர்பார்க்கின்றவன் வானுலகத்தில் உள்ள தேவர்க்கும் நல்ல விருந்தினனாவான்.
7. விருந்தோம்பலாகிய வேள்வியின் பயன் இன்ன அளவிலானது என்று கூற முடியாது. விருந்தினரின் தகுதிக்கு ஏற்ற தன்மை உடையதாக அமையும்.
8. விருந்தினரை மதித்து உபசரிக்கும் வேள்வியில் ஈடுபடாதவர் பின்னர் பொருளை வருந்திக் காத்துப் பயனை அடையாமல் போனோமே என்று வருந்தும் நிலையை அடைவர்.
9. செல்வச் செழிப்புடன் இருக்கும் காலத்தில் வறுமை என்பது விருந்தோம்பலைப் போற்றாத அறியாமையாகும் அது. அறிவில்லாதவர்களிடம் மட்டுமே காணப்படும்.
10. அனிச்சமலர் முகர்ந்தவுடன் வாடிவிடும் விருந்தினரோ விருந்தளிப்பவரின் முகம் மலராமல் வேறுபட்டுத் தோன்றிய உடனேயே வாடிவிடுவர்.
"இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு" (81)
"மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து" (90)
விருந்தோம்பல் என்கிற நற்செயலால் விளைந்த நன்மைகளைப் பார்த்தீர்களா ..!

## செயல்களும் அதன் விளைவுகளும் 13

("உலகில் ஒரு நாள் அல்லது ஒரு நாளின் சிறு பகுதியே தங்கியிருந்தோம்")

"என்னுடைய சமூகத்தாரே! இவ்வுலக வாழ்க்கையெல்லாம் அற்ப சுகம்தான்; அன்றியும் நிச்சயமாக, மறுமையோ - அதுதான் (என்றென்றுமிருக்கும்) நிலையான வீடு. (திருக்குர்ஆன் 40:39).

ஆசைகளும், பேராசைகளும் மனிதனை அழிக்கும் உயிர்க் கொல்லியாகும். இதுமட்டுமின்றி பாவங்களின் முதல் காரணகர்த்தாவும் இவையே. அதன் நிழல்களைக் கூட அணுகத் தடை செய்கிறது இஸ்லாம்.

இந்த வாழ்க்கை என்பது பயணம்தான், யாரும் இவ்வுலகில் தங்கி வாழ்பவர் அல்ல. வழிப்போக்கன் போல், சில காலம் தங்கி, மறுபடியும் மறுமை நோக்கி பயணிப்பதுதான் நம் வாழ்வின் நோக்கமாகும்.

உலகில் நீ (தாய் நாடு அல்லது சொந்த ஊர் அல்லாத ஓரிடத்தில் வாழும்) ஓர் அந்நியனைப் போல் அல்லது ஒரு வழிப்போக்கனைப் போல் வாழ்வாயாக!'

மண்ணறைவாசிகளை போல் உன்னை நினைத்துக்கொள்.

உமரின் மகனே..! நீ காலைப் பொழுதை அடைந்தால் மாலையை எதிர்பார்க்காதே. நீ மாலையை அடைந்தால் காலையை எதிர்பார்க்காதே. நோயின் பாதிப்புகளுக்கு முன்னால் ஆரோக்கியத்தையும், மரணத்தைச் சந்திப்பதற்காக வாழ்வையும் பயன்படுத்திக் கொள். ஓ அப்துல்லாஹ்..! நாளை உன் நிலை என்ன என்பது நீ அறியமாட்டாய்'' என்றார்கள்.

நபி (ஸல்) (நூல்: திர்மிதி)

உலகம் பெறுமதியற்றது என்பதை நபி (ஸல்) அவர்கள் ஓர் நடைமுறை உதாரணத்தின் மூலம் குறித்துக் காட்டினார்கள்.

ஒரு முறை நபி(ஸல்) அவர்கள் ஸஹாபாக்கள் புடைசூழ கடைத்தெருவொன்றைக் கடந்துகொண்டிருந்தார்கள். அப்போது அங்கே இறந்து, காதுகள் அறுந்துகிடந்த ஓர் ஆட்டைக் கண்டார்கள். உடனே அதனை நெருங்கி அதன் காதைப் பிடித்துக்கொண்டு

"உங்களில் யார் இதை ஒரு வெள்ளிக் காசுக்கு வாங்க விரும்புவார்?" என்று கேட்டார்.

அதற்கு அம்மக்கள் "நாம் அதனை வாங்க விரும்ப மாட்டோம். அதனைவைத்து நாம் என்ன செய்வோம்?" என்று கேட்டனர்.

மீண்டும் நபியவர்கள் "இது உங்களுக்குரியதாக (இலவசமாக) இருக்க வேண்டுமென நீங்கள் விரும்பமாட்டீர்களா?" என்று கேட்டார்.

அதற்கு மக்கள் "அல்லாஹ்வின் மீதானையாக உயிரோடு இருந்தாலும் இது காதறுந்த குறையுள்ள ஒரு ஆடு. அவ்வாறிருக்க செத்த நிலையில் எப்படி (இதற்கு மதிப்பிருக்கும்)" எனக் கேட்டனர். அதற்கு அண்ணலார் "அவ்வாறாயின் அல்லாஹ்வின் மீதானையாக இந்த இறந்த ஆட்டைவிட இவ்வுலகம் அல்லாஹ்வின் கணிப்பில் அற்பமானது" என்றார்கள் (முஸ்லிம்)

"அவர்கள் இந்த உலக வாழ்விலிருந்து (அதன்) வெளித்தோற்றத்தையே அறிகிறார்கள் - ஆனால் அவர்கள் மறுமையைப் பற்றி அலட்சியமாக இருக்கிறார்கள்"

(குர்ஆன்: 30:7)

அது மட்டுமன்றி இவ்வுலகில் 60,70 வருடங்கள் வாழ்ந்த மனிதன் மறுமைக் காட்சிகளைத் தன் கண்களால் காணும்போது இவ்வுலகில் சொற்பகாலமே ஜீவித்தது போன்று உணர்வார்களென அல்லாஹ் திருமறையில் கூறுகின்றான்

அதனை அவர்கள் காணும் நாளில் மாலையிலோ அல்லது அதன் முற்பகலிலோ (ஒரு சொற்ப நேரமே) தவிர (பூமியில்) தங்கியிருக்காதது போன்று (அவர்கள் உணர்வார்கள்)"

(அந் நாஸிஆத்:46)

இப்பூமியில் 950 வருடங்கள் வாழ்ந்த நூஹ் நபியிடம் மலகுல் மௌத் வந்து “நீர் இங்கு எவ்வளவு காலம் வாழ்ந்தீர்?” என்று கேட்டதற்கு,
“ஒரு வீட்டின் முன் வாயிலில் நுழைந்து பின் வாயிலின் வழியாக வெளியேறியது போன்ற கால அளவுதான்.” என்றார்கள்.
இதுபோன்று அல்குர்ஆன் இவ்வாறு கூறுகின்றது. “ஆண்டுகளின் எண்ணிக்கையால் எவ்வளவு காலம் நீங்கள் பூமியில் தங்கினீர்கள்? என்று அவன் கேட்பான்.
அதற்கவர்கள் ஒரு நாள் அல்லது ஒரு நாளின் சிறு பகுதியே தங்கியிருந்தோம்” என்பார்கள் (23:112,113)
ஆக மனிதன் என்பவன் இப்பூமியில் வெறுமனே உண்டு கழித்துவிட்டு இறந்துபோகக் கூடிய விலங்கினமோ அல்லது விரும்பியவாறு தனது மனோ இச்சையின் பிரகாரம் வாழ்ந்துவிட்டுப்போகும் சதைப்பிண்டமோ அல்ல. மாறாக அவன் வாழ்வு இறை வழிகாட்டலின்படி அமையவேண்டும். எனவே இவ்வுலகன் யதார்த்தத்தை விளங்கி நாளை நிரந்தர சுவனத்தை அனந்தரங்கொள்ள இறைவன் அருள்புரியட்டும்.

## செயல்களும் அதன் விளைவுகளும் 14

(உம்மத்தே முஹம்மதிய்யாவிற்கு மட்டுமே உள்ள சிறப்புகள் )
மனிதனுடைய வாழ்க்கையில் இறைவன் வழங்கிய உயர்ந்த பாக்கியங்களை, பாக்கியங்கள் என்று நினைத்துப் பார்ப்பதும் ஒரு பேரருள்தான்.
இந்த "உம்மத்தே முஹம்மதியா " என்று நம் சமுதாயத்திற்கு, நமக்கு வழங்கப்பட்டிருக்கும் உயர்வும், கண்ணியமும் சாதாரணமானதல்ல, எப்படி நபிமார்களுக்கெல்லாம் மிக மிக உயர்ந்த அந்தஸ்துள்ளவர்களாக கண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இருக்கிறார்களோ...
அதே போல அனைத்து நபிமார்களின் உம்மத்துமார்களில் மிகச்சிறந்த உம்மத்தாக அல்லாஹுத்தஆலா நம்மை ஆக்கி இருக்கிறான். இது ஒன்று போதாதா.. அல்ஹம்துலிலஹ் !
“மனிதர்களுக்காகத் தோற்றுவிக்கப்பட்ட சிறந்த சமுதாயாக நீங்கள் இருக்கின்றீர்கள்.(ஏனெனில்) நீங்கள் நன்மையை ஏவுகின்றீர்கள். தீமையைவிட்டும் தடுக்கின்றீர்கள்”
(குர்ஆன் 3: 110)
உம்மத்தே முஹம்மதியாவில் வருவதற்கு நபி மூஸா (அலை) அவர்களும், நபி ஈஸா (அலை) அவர்களும் ஆசைப்பட்டார்கள்.
நபி ஈஸா (அலை) அவர்கள் உலக இறுதி நாளின்போது, இரண்டாம் வானத்திலிருந்து இறங்கி நபியாக அல்லாமல், உம்மத்தே முஹம்மதிய்யாவின் ஒரு உம்மத்தாக செயல்பட்டு, தஜ்ஜாலை கொல்வார்கள். இதிலிருந்து உம்மத்தே முஹம்மதிய்யாவின் மாண்பும், சிறப்பும் நன்கு விளங்குகிறதா ?
ஓர் இரவை (லைலத்துல் கத்ரை ) 1000 மாதங்களை விட சிறப்பாக்கி வைத்தது உம்மத்தே முஹம்மதிய்யாவிற்கு மட்டுமே கிடைத்த பாக்கியம் .
மனிதனுடைய உடலில் 360 மூட்டுக்கள் எலும்பு இணைப்புக்கள் உள்ளன.அவை சரியாக இயங்குவதால், அதற்கு இறைவனுக்கு நன்றி செலுத்தும் பொருட்டு ஒவ்வொரு நாளும் 360 தடவை நன்றி செலுத்துவதற்கு பதிலாக,, லுஹா தொழுகையின் இரண்டு ரக்அத்துக்கள் போதுமானது" என்று நபி (ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: புரைதா (ரலி) நூல்: அஹ்மத் 21959. இதுவும் உம்மத்தே முஹம்மதிய்யாவிற்கு மட்டும் வழங்கிய பேருதவி .
என்னுடைய உம்மத்மார்கள் தொழுகையில் நிற்கின்ற ஸஃப் என்பது மலக்குமார்களின் ஸஃப்பைப் போன்றது .இது வேறு எந்த உம்மத்துகளுக்கும் கிடைக்காத பாக்கியம்.

" ஆமீன்" என்ற வார்த்தை யஹுதிகளுக்குப் பிடிக்காத வார்த்தை. கடும் எரிச்சலை தரக்கூடிய வார்த்தை. இந்த வார்த்தையை என் உம்மத்திற்கு இறைவன் வழங்கிருக்கிறான்.
கியாமத் நாளின்போது என் உம்மத்தார்கள் மட்டும் தனியாக இலங்குவார்கள். அவர்களுடைய சுஜூது செய்யும்போது பூமியில்படும் ஏழு அவயங்களும் , ஒலுகு செய்யும்போது சுத்தம் செய்யும் அவயங்களும் ஒளி பொருந்தியதாக இலங்கும் .
என் உம்மத்தார்கள் தண்ணீரைக் கொண்ட சுத்தம் செய்வதற்கு முடியாத நிலைக்குத் தள்ளப்படும் போது மண்ணைப் பயன்படுத்தி தயம்மம் செய்வதின் மூலம் தங்களை சுத்தம் செய்து கொள்ள அனுமதிக்கப்பட்டுள்ளனர்.
மேலும், அவர்களுக்கு தொழுவதற்கொன்று ஓர் இடம் கிடைக்கப்பெறாத போது பூமியில் தான் விரும்பிய இடத்தில் தொழுது கொள்ளவும் அனுமதியளிக்கப்பட்டுள்ளனர். ஆயினும், முன்னைய சமுதாயத்தினரைப் பொறுத்தளவில் அவர்களுக்கு தயம்மம் என்ற சுத்தம் செய்யும் முறை கடமையாக்கப்பட்டிருக்கவில்லை.
என் உம்மத்மார்கள் 70 ஆயிரம் பேர்கள் கேள்வி கணக்கு இல்லாமல் சுவனம் போவார்கள். இதுகுறித்து ஆய்வாளர்கள் கோடான கோடி பேரில் வெறும் 70 ஆயிரம்தானா ? இல்லை இல்லை 70 ஆயிரம் பேர்களும் ஒவ்வொருவரும் எழுபதாயிரம் பேரை கூட்டிக்கொண்டு சுவனம் செல்வார்கள்.
" ஷஹீத்கள் என்று நீங்கள் யாரை நினைக்கிறீர்கள்? என்று நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் கேட்டனர்.
அதற்கு நபித் தோழர்கள் யார் போருக்குச் சென்று கொல்லப்படுகிறாரோ அவர் தான் என்று கூறினார்கள்.
அதற்கு நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் அப்படியானால் என் சமுதாயத்தில் உயிர் தியாகிகள் மிகவும் குறைவாகவே இருப்பார்கள். அல்லாஹ்வின் பாதையில் கொல்லப்பட்டவர் ஷஹீத் ஆவார். வயிற்றுப் போக்கால் இறந்தவர் ஷஹீத் ஆவார். பிரசவத்தின் போது மரணிக்கும் பெண்ணும் ஷஹீத் ஆவார் என்று கூறினார்கள்.
உபாதா பின் ஸாமித் (ரலி) அஹ்மத் 17129, 21627,

இறைத்தூதர் (ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம்) அவர்கள் கூறினார்கள்: பிளேக் (போன்ற கொள்ளை) நோயால் இறக்கிற ஒவ்வொரு முஸ்லிமுக்கும் உயிர்த்தியாகியின் அந்தஸ்து கிடைக்கும்.அனஸ் இப்னு மாலிக் (ரலி) புகாரி 2830,

இறைத்தூதர் (ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம்) அவர்கள் கூறினார்கள்: உயிர்த் தியாகிகள் ஐந்து பேர்கள் ஆவர்:

1. பிளேக் நோயால் இறந்தவர்
2. வயிற்று(ப் போக்கு போன்ற) வியாதிகளால் இறந்தவர்
3. தண்ணீரில் மூழ்கி இறந்தவர்.
4. வீடு, கட்டிடம் ஆகியவை இடிந்து விழும் போது) இடிபாட்டில் சிக்கி இறந்தவர்
5. இறைவழியில் (அறப்போரில் ஈடுபட்டு) இறந்தவர்.

ஹழ்ரத் அபூ ஹுரைரா (ரலி) புகாரி 2829, 2830, 5732
இதுபோன்று நூற்றுக்கும் மேலான என் உம்மத்தார்களின் அகால மரணமடைந்தவர்களை உயிர்த்தியாகிகளாக கருதப்படுவார்கள்
சுவனத்தின் தலைமை தனத்தைப் பெற்றவர்கள் எல்லோருமே என் உம்மத்தை சார்ந்தவர்கள்தான் இருப்பார்கள்.
நடுத்தர வயதினருக்கு தலைவர்களாக அபூபக்கர் (ரலி) அவர்களும் உமர் ரலி அவர்களும் தலைவர்களாக இருப்பார்கள்

உலகத்தின் எல்லா வாலிபர்களுக்கும் அசன் (ரலி), உசேன் ( ரலி ) தலைவர்களாக இருப்பார்கள்.
எல்லா உம்மத்துக்களில் ஷூஹதாக்களுடைய தலைவராக ஹம்ஸா (ரலி) அவர்கள் இருப்பார்கள்.
சுவனத்தின் எல்லா பெண்களுக்கும் அன்னை பாத்திமா (ரலி) தலைமை தாங்குவார்கள் .
சொர்க்கத்தில் நுழையும் முதல் சமுதாயம் என்னுடைய சமுதாயம்தான் முதலில் நுழையும்.காலத்தால் பிந்தியவர்கள் ஆனால் சொர்க்கத்தில் நுழைவதில் முந்தியவர்கள்.
சொர்க்கவாசிகள் 120 ஸப்புகளாக இருப்பார்கள். ஒவ்வொரு ஸப்புகளிலும் எத்தனை ஆயிரம் கோடி பேர் இருப்பார்கள் என்பது அல்லாஹ் மட்டுமே அறிந்தவனாக இருக்கிறான். இந்த 120 ஸப்புகளில் 80 ஸப்புகள் என் சமூகத்தினரே இருப்பார்கள்.
கியாமத்து நாளில் சாட்சி சொல்லும் சமுதாயமாக என்னுடைய சமுதாயத்தைதான் அல்லாஹ் சாட்சியாளராக ஆக்கி இருக்கிறான்.
இந்த உலகத்திற்கு மூஸா (அலை ) வந்தார்கள் என்றும், ஈஸா (அலை) வந்தார்கள் என்றும், அவர்கள் தங்கள் தங்கள் சமுதாயத்திற்கு தீனை ஹயாத்தாக்கி வைத்தார்கள் என்றும்
என் உம்மத்தே அவர்களுக்காக சாட்சி அளிப்பார்கள்.
ஈமான் கொண்ட என் சமுதாயத்தார்கள் ஒருபோதும் வழிகேட்டில் ஒன்றுசேர்ந்து இருக்காது. மூமின்கள் எல்லோரும் சேர்ந்து ஒரு காரியத்தை செய்தால் அது வழிகேடாக இருக்காது.
என் உம்மத்திற்குத்தான் ஜும்மா தொழுகையை அல்லாஹ் கொடுத்துள்ளான். என் சமுதாயம் ஜும்மாவே கண்ணியப்படுத்தும் காலமெல்லாம் மிக கண்ணியமாகக் கருதப்படுவார்கள்.
ஜும்மாவிற்கு தாமதமாக வருவதுதான் உலகத்தின் முதல் பித்னாக இருக்கும் என்பதாக இமாம் கஸ்ஸாலி எழுதியுள்ளார்கள்.

## செயல்களும் அதன் விளைவுகளும் 15

(தரம் தாழ்ந்த பார்வை)

அன்றாடம் மூமின்கள் வாழ்வில் இருக்கவேண்டிய குறைகளைப் பற்றி அல்லாஹ் சொல்லிக் காட்டுகிறான் யாரும் யாரைப் பார்த்தும் பரிகாசம் செய்யாதீர்கள். யாரையும் தரம் குறைந்து பார்க்காதீர்கள். பணம், அழகு, தோற்றம் இவைகளைப் பார்த்து எடை போடாதீர்கள்.

ஒரு மனிதனுடைய கோலத்தை வைத்து முடிவு செய்யக்கூடாது பெரிய ஆபிதீனுடைய கோலத்தில் இருப்பவனின் உள்ளம் அல்லாஹ்வுக்கு பிடித்தம் இல்லாமல் இருக்கலாம்.

வெளியில் ஒருவர் பாவங்கள் செய்யக் கூடியவராக இருக்கலாம். அவரது உள்ளம் பதறி போய் பாவம் செய்வதைப்பற்றி அல்லாஹ்விடம் தவ்பா செய்பவராக இருக்கலாம். இதனால் அல்லாஹ் மிக அவரை உயர்வான அந்தஸ்தில் வைத்திருக்கலாம். இது பற்றி குர்ஆனில்

"முஃமின்களே! ஒரு சமூகத்தார் பிறியதொரு சமூகத்தாரைப் பரிகாசம் செய்ய வேண்டாம். ஏனெனில் (பரிகசிக்கப்படுவோர்) அவர்களைவிட மேலானவர்களாக இருக்கலாம்; (அவ்வாறே) எந்தப் பெண்களும்,

மற்றெந்தப் பெண்களையும் (பரிகாசம் செய்ய வேண்டாம்) - ஏனெனில் இவர்கள் அவர்களை விட மேலானவர்களாக இருக்கலாம்" (அல்குர்ஆன் : 49:11)

நீண்ட ஆயுளுடன் இபாதத் செய்து வாழ்ந்த ஒரு இறை நேசரைப் பற்றி குர்ஆன் கூறுகிறது .பல்ஆம் என்பவர் மூஸா (அலை) அவர்களது இறுதி காலத்தில் வாழ்ந்த ஒரு துறவி. ஈராக் அல்லது கன்ஆன் பகுதியை சேர்ந்தவர். வணக்க வழிபாடுகளில் அதிகமாக ஈடுபட்டிருந்தார். அவர் பெற்றிருந்த ஞானங்கள் அனைத்தையும் அல்லாஹ் பறித்துக் கொண்டான்.

" நாம் நாடியிருந்தால், நம் அத்தாட்சிகளைக் கொண்டு அவனை உயர்த்தியிருப்போம்; எனினும் அவன் இவ்வுலக வாழ்வை(யே சதமென) மதித்து, தன்னுடைய இச்சைகளையே பின்பற்றினான்; அவனுக்கு உதாரணம் நாயைப் போன்று, அதை நீர் விரட்டினாலும் நாக்கைத் தொங்க விடுகிறது, அல்லது அதை நீர் விட்டு விட்டாலும் நாக்கைத் தொங்க விடுகிறது - இதுவே நம் வசனங்களைப் பொய்யெனக் கூறும் கூட்டத்தாருக்கும் உதாரணமாகும் (குர்ஆன் : 7:176) .

அவன் மனோ இச்சை பின்பற்றிய வரலாற்றை பார்க்கவும்

https://m.facebook.com/story.php?story_fbid=2913571698902166&id=100007480923921

எப்போதுமே மஸ்ஜித்திலேயே இருக்கும் 'பள்ளிப் புறா ' என்றழைக்கப்படும் அன்சாரிகளைச் சேர்ந்த "ஸஅலபா பின் ஹாத்திப் " என்பவர் "அல்லாஹ்வின் தூதரே ! எனக்கு அல்லாஹ் மிகுந்த பொருட் செல்வங்களைத் தருவதற்கு நீங்கள் அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்"

" ஸஅலபா..! உனக்கு என்ன கேடு பிடித்தது ? குறைந்த அளவு இருந்து, அதற்கு நன்றியுடன் நடந்து கொள்வதானது, அதிக அளவு இருந்தும்,அதை நிறைவேற்ற முடியாமல் இருப்பதே விடச் சிறந்தது அல்லவா ?" என்று நபிகளார் கூறினார்கள்.

மீண்டும் மீண்டும் ஸஅலபா "எனக்கு இறைவன் செல்வத்தை தந்தால், சத்தியமாக ஏழை எளியவர்களுக்கு வாரி வழங்குவேன்.தானதர்மங்கள் அதிகம் செய்வேன்" என்று உறுதிபடக் கூறினார் .

"இறைவா ! ஸஅலபாவுக்கு செல்வத்தைக் கொடு" என்று பிரார்த்தித்தார்கள்

ஸஅலபா ஓர் ஆட்டை வாங்கினார். அது வளர்ந்து பெருகியது அவருக்கு மதினாவே போதாமல் போய்விட்டது. லுஹர், அஸர் மட்டுமே வருவார். மேன்மேலும் அவருடைய கால்நடைகள் பெருகிக் கொண்டே போனதால், இடப்பற்றாக்குறை ஏற்பட்டு, மதீனாவிலிருந்து வெகுதூரம் சென்று ஓர் இடத்தை பிடித்துக் கொண்டார். இப்பொழுது அவர் ஜும்மா தொழுகைக்கு கூட மதீனா வருவதில்லை.

இந்த தருணத்தில் இஸ்லாத்தில் ஜக்காத்துக் கடமையாக்கப்பட்டது.ஸஅலபாவிடம் ஜக்காத் கேட்டு, ஒரு கடிதத்தையும் கொடுத்து, நபிகளார் கேட்க, ஜக்காத் கொடுக்க மனமில்லாமல் ஸஅலபா ஏதேதோ காரணம் கூறி மறுத்து விட்டார்.

பின் ஸஅலபாவைப் பற்றி குர்ஆன் வசனமும் இறங்கிற்று :

" அவர்களில் சிலர், "அல்லாஹ் தன் அருட்கொடையிலிருந்து நமக்கு(ச் செல்வத்தை) அளித்தால் மெய்யாகவே நாம் (தாராளமான தான) தர்மங்கள் செய்து, நல்லடியார்களாகவும் ஆகிவிடுவோம்" என்று அல்லாஹ்விடம் வாக்குறுதி செய்தார்கள். (அவ்வாறே) அவன் அவர்களுக்குத் தன் அருட்கொடையிலிருந்து வழங்கியபோது, அதில் அவர்கள் உலோபித்தனம் செய்து, அவர்கள் புறக்கணித்தவர்களாக பின் வாங்கிவிட்டனர் ". (குர்ஆன் : 9:75, 76)

"ஸஅலபா ! உமக்கு கேடு பிடித்துவிட்டது. இது சம்பந்தமாக இறைவன் இந்த வசனத்தை இறக்கிறான் என்று கூறி நபித்தோழர்கள் ஓதிக் காண்பித்தார்கள்.

ஸஅலபா ஜக்காத் பணத்தை எடுத்துக்கொண்டு நபிகளாரிடம் கொடுக்க, நபிகளார், " அல்லாஹ் மறுத்துவிட்டான் " என்று கூற, பின் அபூபக்கர் (ரலி ) அவர்கள் காலத்தில் கொடுக்க, "நபியவர்கள் மறுத்ததால், நானும் வாங்க மறுக்கிறேன். பின் உமர் (ரலி) அவர்களின் காலத்தில் கொடுக்க, அவர்களும் மறுத்து விடுகிறார்கள்.

இறுதியாக உஸ்மான் (ரலி) காலத்தில் ஸஅலபா செல்வங்களையெல்லாம் இழந்து, ஏழையாகி இறந்தும் போகிறார்.

இஸ்லாத்தின் பயங்கர விரோதி அபூலஹப் பற்றி குர்ஆனில் அபூலஹபின் இரண்டு கைகளும் நாசமடைக; அவனும் நாசமாகட்டும் (குர்ஆன் : 111:1) என்று சபிக்கப்படுவனுடைய மகள் துர்ரா (ரலி) அவர்களும் , மகன் இக்ரிமா (ரலி) அவர்களும் இஸ்லாத்தை ஏற்று ஹிதாயத்தைப் பெறுகிறார்கள்.

அகம்பாவமும். அடக்கியாளும் தன்மைகொண்ட வலீது பற்றி இறைவன் குர்ஆன் (74 :11 முதல் 74: 29 ) அவனை சபித்தான்

குர்ஆனில் சபிக்கப்பட்ட அந்த வசனங்களை ஒரு தாளில் எழுதி, "அகம்பாவம் கொண்ட என்னையா நீ எச்சரிக்கிறாய் ? என்று கூறி அதை கிழித்தெறிந்தான். அதோடு "அந்த ஜப்பார் நான்தான் - குர்ஆனே ! நாளை மறுமை விசாரணையில் சொல் .என்னை வலீது சுக்குநூறாக கிழித்து எறிந்தான் என்று. உன் ரப்பு என்ன செய்கிறான் ? பார்த்துக்கொள்ளலாம்.

அவ்வளவு திமிர் பிடித்தவன். உலகத்தில் அவன் எப்படி கிழிந்தான் என்பது வேறு விஷயம்.

ஆனால் அந்த வலீதுடைய மகன்தான் காலித் இப்னு வலீத் (ரலி) அவர்கள். சேற்றில் முளைத்த செந்தாமரை போல், நாற்றம் பிடித்த சிப்பிக்குள் முத்தாய் எவ்வளவு அழகான பிள்ளையை " சைபுல்லாஹ்" அல்லாஹ்வின் போர்வாள் என்று அடையாளப்படுத்தினான்.

யாரையும் பார்த்ததும் எடை போடக்கூடாது அவரது உள்ளத்தை அல்லாஹ்தான் அறிவான்.

பத்ரி யுத்தகளத்தில் 14 பேரை கொலை செய்தவர்களுக்கு, இஸ்லாமிய இறைச் சட்டம் கொலைக்கு கொலைத்தான் பகரம். ஆனால் அல்லாஹ் அவர்களுக்கு இஸ்லாமிய ஈமானியத்தைக் கொடுத்தான்.

உலகின் அழகான கோலத்தில் உள்ளவர்களில் ஒருவன்தான் அபூலஹப். ஆனால் ஈமான் உடைய பாக்கியத்தை அவனுக்கு கொடுக்கவில்லை.

ஆனால் அழகு இல்லாத, கருத்த உடலையும், தடித்த உதடுகளையும் கொண்ட ஓர் ஆப்பிரிக்க அடிமையான பிலால் (ரலி) அவர்களுக்கு ஈமானுடைய பாக்கியத்தை விசாலமாக கொடுத்தான்.

அல்லாஹ் கோலத்தை பார்ப்பதில்லை. தோற்றத்திற்கு முக்கியத்துவம் கொடுப்பதில்லை. இறையச்சம் உடையவர்களின் உள்ளத்தைப் பார்க்கிறான்.

அமல்கள் அல்லாஹ்விடத்தில் எண்ணிக்கையில் எண்ணப்படாது. ஆனால் நிறுக்கப்படும். எண்ணிக்கை 100, 1000 என்றெல்லாம் எண்ணப்படாது; அது ஒன்றே ஒன்றாக இருந்தாலும் அந்த ஒன்றின் தரம்தான் என்ன என்பதுதான் அல்லாஹ்விற்கு முக்கியம்

அசல் பஸரி (ரஹ்) அவர்கள் : " உலகில் சில மனிதர்களை பார்த்தேன். அவர்களிடம் எந்த குறையுமில்லை. பரிசுத்தமானவர்கள். நல்லவர்கள். ஆனால், உலகில் எல்லா மனிதர்களைப் பற்றியும், குறை சொல்லி, விமர்சனம் செய்துகொண்டே இருப்பார்கள். தரம் நிர்ணயித்தார்கள். இதனால் அவர்கள் குறிப்பிட்ட நபர்களின் குறைகளையெல்லாம், இவரிடம் ஏற்பட அல்லாஹ் ஏற்பாடு செய்து விட்டான்.

மேலும் உலகில் இப்படிப்பட்ட சில மனிதர்களையும் பார்த்திருக்கிறேன். அவர்களிடம் வெளிப்படையாக நிறைய குறை இருந்தது. ஆனால் யாரைப் பற்றியும் அவர்கள் பேசமாட்டார்கள். நம்ம என்ன செய்ய..? நம்மிடமே ஆயிரம் குறை இருக்கும் போது யாருடைய குறையைப் பற்றி நாம என்ன சொல்றதுக்கு இருக்கு. குறை சொல்றதிலிருந்து ஒதுங்கி இருந்தார்கள்.

இவர்களுடைய குறைகளை அல்லாஹ் மறைத்து அவர்களை மேன்மேலும் மேன்மைப்படுத்தி விட்டான்.

நாம் சில காரியங்களை சில இபாத்துக்களை செய்து, நம்மைப் பற்றி உயர்வாக நினைத்து மற்றவர்களை குறைவாக எண்ணாதீர்கள்.

அசன் (ரலி) அவர்கள் தன்னை விட மற்றவர்களை எப்போதுமே உயர்வாகவே எண்ணிக் கொள்வார்களாம்.

கண் பார்வையற்ற ஊனமுற்றவராகதான் அப்துல்லாஹ் இப்னு மக்தூம் (ரலி) அவர்கள் இருந்தார்கள். ஆனால் நபி (ஸல்) அவர்களை, " யாருடைய விஷயத்தில் என் ரப்பு என்னை கண்டித்தானோ, அந்த தோழரே நீர் வருக ! வருக ! " என்று அவர்களை வரவேற்பார்களாம் நபிகளார் .

குறிப்பு :- இத்துடன் '' செயல்களும் அதன் விளைவுகளும் " தொடர் பதிவு நிறைவடைகிறது.

